உ

கணபதி துணை.

# சேதுபுராணம்.

---

சைவாசாரியராகிய

## நிரம்பவழகியதேசிகர்

அருளிச்செய்தது.

---

இஃது

இராமநாதபுரசமஸ்தானம்

ம. ள. ள. ஸ்ரீ

**பொன்னுச்சாமித்தேவரவர்கள்**

வேண்டுகோளின்படி,

யாழ்ப்பாணத்து நல்லூர்

**ஆறுமுகநாவலரால்**

பலபிரதிரூபங்களைக்கொண்டு

பரிசோதித்து,

சென்னபட்டணம்

கலாரத்நாகரம்

என்னும்

அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டது.

---

அக்ஷய௵ புரட்டாசிமீ.

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

---

சோணாட்டிலுள்ள வேதாரணியத்தைச் சார்ந்த
குறுக்கை வித்துவான்
குமாரசுவாமிப்பிள்ளை
இயற்றியது.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கங்கையிலகியசடிலமுடியிறைவன் றனையிமவான்களிக்கவீன்ற
நங்கைபுணர்தலைவனைப்பூசித்துமன நெக்குருகிநாடிக்கூப்புஞ்
செங்கையிராகவனிலங்கைக்கிறைவனுயிர்செகுத்தபழிதீர்த்தஞால
மங்கையணியெனவிளங்கு சேதுமான்மியமானவடநூறன்னை.

பொருவருஞ்சைவாகமந்தேர்ந் தாசிரியத்தன்மையினைப்பூண்டுநல்லோர்
கருதுறுநற்கலைக்கடலைநீந்திமதி புனையமலன்கழற்காற்கன்பு
மருவுறுசீர்நிரம்பவழகியமுனிவன் றென்மொழியால்வகுத்துச்சொன்ன
திருவுறுமப்புராணமதையேட்டில்வரைந் திடுதலினூற்சிதைவுற்றுங்கு. (உ)

சீருறுமக்கரங்கண்மிகுந்துங்குறைந்தும் பிறழும்வழுத்தீரவாய்ந்து
பேருறுமவ்வரைத்லிலாவரியினமை விக்கவெனப்பிரசமார்செய்
நீருறுவெண்சுரிமுகஞ்சென் றுலவுசெம்பி நாடாளுநிருபன்முல்லைத்
தாருறுவண்புயனினியதமிழுததிபுகலுமெழிற்சதுரான்மிக்கோன். (ங)

மதிமேவுசிகரமணி மாடமோங் கியபுதுவைவளர்வோன்சேது
பதிமேவுதுணைவனுலகுயிரோம்பி வளமுதவுபண்பார்சங்க
நிதிமேவுபுலவருக்குநிதிமாரி பொழிகருணை நிறைநீர்மேகந்
துதிமேவுமரசர்பணிபாதனில வியவடிவோன்றுகடீர்செல்வன். (ச)

வனத்தூடுமருவலரைமேவவிடு தலினுனுமானமார்வெஞ்
சினத்தானையொடுமுலகமுய்யவளித் திடலானுந்திருவார்செல்வத்
தனத்தானைவிழைந்திடுதலானுமலர்ச் சேக்கையினிற்றங்கும்வெள்ளை
யனத்தானைத்தர்தமாலனையபொன்னுச் சாமியெனுமரசன்சொல்ல. (ரு)

தேறுகலைமதிவிளங்கு புலவர்சிகாமணி புடைசூழ்தெண்ணீர்வைப்பி
னேறுபுகழ்யாழ்ப்பாணத்திலகியநல்லூரன்மனத்திசைகொள்வேதங்
கூறுசிவபரஞ்சுடராக்கொண்டடைந்தார்தமைத்தெருட்டுங்குணமார்ஞான
வாறுமுக நாவலனற்றெளிவுறவச் சிற்பதிப்பித்தருளினானே. (சு)

---

மகாவித்துவானாகிய
ம. ள. ள. ஸ்ரீ திரிசிரபுரம்
மீனாட்சி சுந்தரப்பிள்ளை மாணாக்கராகிய
சோடசாவதானம்
**சுப்பராயச்செட்டியார்**
இயற்றியது.

---

## நேரிசையாசிரியப்பா.

திருவளர் மருமத் தருவளர் செங்கேழ்ப்—பரிதியி னவிர்மணிப் பிரபையா லென்றுங்—குவிதர லின்றி விரிதரு முந்திப்—பாயிருள் பருகு மாயிரந் தோட்டுப்—பூமலி கமலத் தேமலி பொகுட்டி—னான்முகத் தேவைப் பான்மையி னுதவி—நல்கெனப் பணித்து மல்குறக் காக்கும்—பெரும்பெயர்க் கடவுள் வரம்பில்பல் லுயிர்களி—னிடர்த்தொகை களைவா னெடுத்த வுருத்தொறூஉஞ்—சிவமே யென்றுந் தவலில் பொருளெனாப்—பேருல கோர்ந்து தேருறத் தேர்ந்து—நேசித் தொழுகிப் பூசித் தாங்குக்—கயரத பதாதித் தயரதன் மகவாய்த்—தோன்றிய ஞான்று மான்றபே ரன்பால்—விதிவழி வழாம லதிர்வறப் பூசித்—துளநெகிழ்ந் துடலம் புளகமுற் றிருநோக்—கன்பினீர் வார வின்பந் தேக்கி-வேண்டிய நல்வரங் காண்டக வீண்டப்—பெற்றமை முதலிய துற்றபல் காதையுந்—தீதற வோதுஞ் சேதுமான் மியத்தைப்—பொதியிற் பொதிந்த கதிர்பொதி மணியை—வெளிப்படுத் தென்னப் பழிப்பில்வட மொழியி—னின்றுமொழி பெயர்த்துக் குன்றுத லில்லாப்—புலமையி னிறைந்த தலைமையின் மிக்கோன்—வரம்பில்புகழ் சான்ற நிரம்ப வழகிய—தேசிக னென்போ னாசிறென் மொழியிற்—சுவைகனிந் தொழுகித் தூங்குசொற் பொருளா—னவையறப் புகன்ற நலங்கெழு புராணங்—கற்றோ ரன்றியு மற்றோர் வலைதலிற்—றுன்னிய வழுவொரீஇ மன்னிய நிலமிசைப்—பரவிப் பொலியப் பதித்துத் தருகென—வரியளி துதைதலிற் புரிமுறுக் கவிழ்ந்து—புதுமது வாக்கும் பதுமப் படுகரிற்—பிணர்மருப் பெருமை துணையொடு மிரியச்—சினந்துமீ தெழுந்து முனைந்தவெள் வாளைகள்—செருமுகத் துடன்று பொருதுயிர் விடுத்து—விரியொளி பரப்பும் பரிதியினுடல்கீண்—டுலவாப் பொன்னிறங் குலவாப் புகுந்து—சுவர்க்க மகளிர்தஞ் சுவர்க்கங் கிடக்கு—மடங்கா வென்றி விடங்கர் போலக்—கதுமெனப் பலவின் முதுசுளை தூங்குந்—தேனடை கிழித்து வானிறந் திரிந்து—சுரநதி புகுந்து தெருமர லொழிந்து—பெடையிள வாளைக ளொடுபுணர்ந் துவக்கும்—வம்பியல் விழவுருச் செம்பிநா டுடையோன்—கனகக் கொல்லர் கனற்கண்வைத் துருக்கிய—வசும்பொளி காலும் பசும்பொற் பிழம்பை—யொடிதலி லச்சிற் படியவாக் கியதெனக்—கருப்புவின் மதவேள் விருப்புறு மைந்தர்—பொங்கிருள் சீக்குஞ் செங்கதிர்ப் புத்தேள்—கொய்யுளைப் புரவி வையமும் பெட்ப—நறுமணங் கமழு மறுகினிற் கடவும்—விண்முக டுரிஞ்சும் பொன்னெடுங் கொடிஞ்சி—நவ

மணி குயின்ற சுவணத் தடந்தேர்ப்—பைங்காற் சுவட்டிற் கொங்கா ரன்னவர்—
திண்டோள் புரளுந் தண்டொடை யுகுத்த—பூந்துகள் பொதியுங் காந்திசேர்
புதுவைப்—பொன்னக ரொன்னு நன்னக ராளி—குலவளைக் கரசாம் பொலன்வ
ளை சமனு—நிலைதரப் புரிந்த மலையவெற் புடையோன்—றவஞா னத்திற் றவ
வலி பொருந்தி—யவஞா னந்தெறு சிவஞான தேவன்—றவமொரு வடிவாய்ப்
புவிமிசை வந்தெனச்—சான்றோர் புகலத் தோன்றிய திறலோன்—மறைவழி
கிளைத்த நிறைபொருட் கலைக—டிரிபற வுணர்ந்த பொருவில்பே ரறிவா—லெவ்
வகைப் பொருட்கு மிறைவனு நிறைதலிற்—பசுபதி தானே பரமெனத் தேர்ந்
து—சிவபுண் ணியப்பயிர் நவமுற வளர்ப்பா—னருட்கொழுந் தாய சிவக்கொ
ழுந் துறையுந்—திருத்தகு கோயிலு ணிறுத்தமூன் றுறுப்புங்—குறைவிலா திய
ன்று நிறைதர நடத்துவோ—னுமினிப் பிறர்பா லணுகி யிரக்குந்—தோமினி
நணுகோ மெனவுளங் கூர்ந்து—சாமியென் பார்க்குச் சாமியே யனைய—பொன்
னுச் சாமிப் புரவலன் புகல—மன்னிய பிறப்பின் வண்பய னிதுவெனுத்—திட
முற வுணர்ந்து வடமொழி யோடு—பொருந்தத் தெரிந்து திருந்தப் பதித்தன
ன்—பொற்பலர் பசுந்துணர்க் கற்பகப் பொழிலொடு—தோழமை கொள்ள
வானளா யோங்கு—மிளமரப் பொதும்பர் வளமனை வாழ்க்கையர்—விருந்தினர்
தம்மைத் திருந்திய முகத்தோ—டெதிர்தழீஇ யின்சுவை பொதிதரு மடிசி—
லூட்டி யுவக்குங் காட்சியை நிகர்ப்ப—வண்டின முவப்ப மலர்ந்த மலர்முகங்—
கொண்டெதிர் தழுவிக் கொழுமது வூட்டு—மூழியல் வளஞ்சா லீழநன் னாட்
டின்—மாச்சீர் காய்ச்சீர் கனிச்சீர் விளச்சீர்—பூச்சீர் நிழற்சீர் பொதுளியைந்
திணைப்பொரு—ளகமும் புறமுந் தகவுறத் தழுவி—யணியியல் விளக்க மணிதரப்
பொருந்திக்—குலவிய நுண்பொருட் புலமை யான்றோர்—நுவன்ற கவின்ற கவி
த்திறங் கடுக்கும்—பீடுயர் செல்வ நீடும்யாழ்ப் பாணத்—திருநில மீமிசை யிய
ங்கு நலனெலா—மொருங்கு திரண்டம் மருங்கி னிலவலா—லனைவரும் வியந்
து வனைதரப் புகழ்ந்து—நல்லூ ரொன்னு நல்லூ ராளி—யலகில்பல் சமயக் கல
கனூ லென்னுங்—கான்யா றடைகளை கண்டுளந் தெளிந்து—தானிக ரதுல சை
வநூ லென்னும்—பெருநதி யுவட்டி னொருவழிச் சென்று—சைவசித் தாந்தத்
தெய்வமாக் கடலை—நணுகியாங் கதனுட் டுணிவொடு திளைத்துச்—சிவபோக
மென்னுந் தெள்ளமு தருந்தித்—தேக்கெறிந் தென்றுஞ் செருக்கும் பெரியோ
ன்—கனவினு நன்னடை தணவாச் சீலன்—மனமொழி சிறிது மயல்வழி புகுத்
தா—தனகன தடிக்கீ ழமைதர வொடுக்கியோன்—கண்ணக னிலத்தி னண்ணிய
மன்பதை—யுள்ளத் தளவிற் கொள்ளக் கொடுக்குங்—கல்வியிற் பெரிய சொல்
வன் மையினே—னென்னொரு நாவாற் பன்ன வமையா—தெனப்புவ னத்தார்
தனித்தனிப் புகல—வுரவுநீர் வளைப்பிற் பரவிய புகழோ—னென்னுள நோக்க
மிலங்கச் செய்வோன்—மன்னிய சிறப்பின் வர்ந்தி குலத்தோன்—கடிதலில்
வாய்மை கனிந்த—முடிவில்சீரா று முகநா வலனே.

---

சிறப்புப்பாயிரம்.

மதுரை

## ஆறுமுகப்பிள்ளை

இயற்றியது.

---

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மணிதிகழன் மிடற்றிறையை யிராகவன்பூ சித்து
வாழ்த்திடுஞ்சீர்ச் சேதுமான் மியத்தின்வரி வழுவைத்
துணிவுறத்தீர்த் தெழுதலிலக் கரத்தினியை விக்க
தோமறவென் றெழிற்புதுவை வளருமதி பதிபொற்
பணிதிகழும் புயப்பொன்னுச் சாமிநர பதிதான்
பகரவா ரிதிபுடைசூழ் யாழ்ப்பாண மதனி
லணிதிகழ்நல் லூர்மேவு புலவர்குல திலக
னாறுமுக நாவலனச் சிற்பதிப்பித் தானே.

---

# சருக்கவகராதி.



## பிழைதிருத்தல்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|
| ௨௧௩ | ௨௪ | பின்னர்கொண்மாதாப்பிர பிதாமகர்மாதாப் | பின்னர்கொண்மாதுப்பிதா மகர்மாதுப்பிர |
| ௨௨௨ | ௨௧ | போகியண்ணலே | போகிலண்ணலே |

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# சேதுபுராணம்.

## காப்பு.

திங்களங்குழவியென்னத்திகழொருமருப்பிற்சோதி
தங்குகிம்புரிவயங்கத்தடாமணிமகுடந்தாங்கித்
துங்கநல்வரங்கணல்குந்தூயசீரிராமசேதுப்
புங்கவர்வணங்கும்யானைமுகத்தனைப்போற்றல்செய்வாம். (௧)

தொடர்கின்றவிடுக்கண்வெற்புத்துகள்படத்துளைக்குமேலோ
னடர்கின்றவதற்குநாதனாகியவைங்கைமுக்கட்
படர்வென்றிப்பகவன்முன்னைப்பவமுதற்படியினெல்லா
விடர்நின்றும்புரக்கவெம்மையெங்கணாமெந்தஞான்றும். (௨)

## கடவுள்வாழ்த்து.

### சபாபதி.

பூமாதுபொலிவெய்தமுகுந்தன்காக்கும்புவிமாதுவளம்பெருகப்புலமைசான்ற, நாமாதுநலந்தழைப்பவிருள்கால்சீக்குநகைநிலவுதவழ்மவுலிநன்னீர்க்கங்கை, மாமாதுபுனறுளிப்பமறைகள்வாழ்த்த வளர்தில்லையம்பலத்துள்வாமநீங்காத், தேமாதுவிழிகுளிர்ப்ப வமரர்போற்றத் திருநடஞ்செய்நூபுரத்தாள் சென்னிசேர்ப்பாம். (௧)

### இராமநாதசுவாமி.

பூந்தவிசினிருந்தபிரான்முதலோர்காணப் புண்டரிகமகள்கொழுநன்புகழிலங்கை, வேந்தனுயிர்ப்பழிகழுவுமுகத்தால்யார்க்கும்விடையவனேயுடையவனாம்வேதவாய்மை, யாந்தரங்கம்வெளிசெய்வானனைவரோடுமணைந்துகந்தமாதனத்திலருச்சித்தேத்து, மேந்துபுனற்சடிலமுடியிராமநாதனிணையடிச்செந்தாமரைகளிறைஞ்சிவாழ்வாம். (௨)

## பர்வதவர்த்தனியம்மை.

தண்ணெனவும்வெச்செனவுந் துசாயாத்தகைபயின்றுவிடாநீக்கித்தலைவற்கெ ன்று, முண்ணமுதந்தனையுதவியிமையமேருவுயர்சிகரமந்தரத்தையொருவிச்சேர் ந்தூங், கண்ணுதலைவிளர்ப்புறலாற்கயிலையெள்ளிக்கௌணியர்க்குத்* தமிழ்சுரக்கு ங்காட்சியாலே, வண்ணமுலைமலயமலைமானுங்கன்னிமலைவளர்காதலிமலர்த்தாண் மனத்துள்வைப்பாம். (ரு)

## விநாயகக்கடவுள்.

வேணிமுடிப்பகீரதிநீர்புழைக்கைவாங்கிவிடுத்தயன்வெண்டலையுருட்டிமிளிர்வெ ண்கோட்டாற், கோணிளையமதிக்குழவியுழுதுமேருக்கொடுமுடியிற்கிளைத்தவெ ண்டோள்குழையத்தாக்கித், தாணெடியவிடைமுனிந்துகயிலைமுக்கட்டாதையொ டும்விளையாடித்தன்பாலன்பர், மாணிலவுமனத்தறிநின்றுலாவுந்தெய்வவாரணத் தைநினைந்திறைஞ்சிவழுத்தல்செய்வாம். (சு)

## சுப்பிரமணியக்கடவுள்.

குலவுமலைமகள்கலசமுலைப்பால்வாசக்குமுதமவள்கொழுநர்மறைகொழிக்குஞ் செவ்வி, நிலவுமுகமலர்கமழச்செய்துமுன்னேனெடுந்துளைக்கைபிடித்தேறிநெற் றிப்பட்டத், துலவியிவரொருமூவருவப்பமாலோடும்பர்கணங்களிதூங்கவுலகமூ டுங்,கலபமரகதமயிலூர்கழற்கால்வென்றிக்கந்தனைவந்தனைசெய்து கருத்துள்வை ப்பாம். (எ)

## சரசுவதி.

கவளமதகரியுரிவைப்போர்வைமூடுங்கண்ணுதலோன்புகழ்விரிக்குங்கலைகள்யா வும், பவளவிதழ்ப்பசுங்குதலைமொழியிற்காட்டும்பைந்தொடியையந்தணன்றேய் பருமவல்குற், றுவளுமணிமருங்குலிளநிலவெண்மூரற் சுந்தரியை வெண்கமலத் தோட்டுவட்டத், தவளமதிநடுவமர்வாலெகினம்போலுந்தையலைமையலையகற்றித் தாளிற்றாழ்வாம். (சு)

## திருநந்திதேவர்.

போதனுறைமலர்முகிழாதமரர்கோமான்புரநிலைமைகுலையாதுமருதுபோழ்ந்த
பாதனுறைகடல்சுருங்காதரிணஞ்சூரல்படைமழுவண்சரிகைகரம்பரித்துப்பாந்தட்
காதனுறைசிதறுபுனற்கங்கைசூடுங்கண்ணுதலெம்பரன்மதியுங்கதியுநல்கு
நாதனுறைதிருக்கயிலைகாவல்பூண்டநந்தியைநம்புந்தியின்கணயந்துவாழ்வாம். (எ)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனர்.

சங்கமணிக்குழைதயங்கத்தழைந்தகாதுந்தனிவிடையுமுதலபலதணப்பில்காட்சி, பொங்குமடையாளங்கள்புகன்றுபோற்றிப்பொருவிறந்தபரஞ்சுடாைப்புந்திக்கெட் டா, வங்கணனைவழுதியுடல்வெப்புநீங்கவணிதிகழ்வெண்டிருநுண்ளேள்ளிச்சாத் தின், செங்கைவிரல்கொடுகுறித்துத்தெரிக்குந்தோன்றல்சிற்றடியின்பெருந்தகை மைசிந்தைசெய்வாம். (அ)

---

* 'கௌணியர்க்குத் தமிழ்சுரக்குங்காட்சி' என்பது பொதியமலைமேற்செல்லு ங்கால், கௌணியர் என்பதற்குப் பூமியிலுள்ளோர் எனப்பொருள் கூறுக. கௌ ணி பூமி. க்ஷௌணி என்னும் வடமொழி கௌணி எனத் தற்பவமாயிற்று.

## திருநாவுக்கரசுநாயனார்.

தேவரையுமுனிவரையுந்துளவமார்பிற்றிருவரையுங்குரவரையுஞ்செல்வமிக்கோர், யாவரையுமேவல்கொளுநெற்றிநாட்டத் திறைவரைமுன்னிகந்திருந்த வெண்ணந் தோன்றச், சேவரையுநெடுங்கொடியின்றகைமையெல்லாத்திசைவரையுஞ்செலத்த மிழின்செய்யுள்பாடு, நாவரையர்புகழ்மொழிகள்வரைந்துகூறிநயந்தவர்செய்திரு த்தொண்டுவியந்துவாழ்வாம். (௯)

## சுந்தரமூர்த்திநாயனார்.

தாதுகொண்டமலர்ச்சுரியற்பரவையென்பாடனத்துணைமேன்மயற்குளிரின்றளர்வுதீர, வேதுகொண்டுவிழையுநெறிவிரும்பிமாலும்விரிஞ்சனுமுன்றேடராதவெளியையாரும், யாதுகொண்டுமறிவரிதாயெங்குமானவிரும்பொருளைநெருங்குமிருளிரவின்மீளத், தூதுகொண்டார்தமையெமையாட்கொள்வீரொன்றுசொல்லியவர்பதம்புல்லித்தொழுதல்செய்வாம். (௧௦)

## மாணிக்கவாசகசுவாமிகள்.

செழியர்குலபதிகொடுத்தமாடுகொண்டுசென்றுதிருப்பெருந்துறையிற்செறிந்தசம்புப், பழிவிரவுபரித்திரள்கொண்டணைந்துமாறன்பணித்தவிடர்க்கிரங்கியருள்பாடிப்போற்றி, வழியமுதகிரணநிலாமகுடமீதேமதுரையமர்பரம்பரனைவந்திக்காகச், சுழிபெருகுபுனற்றரங்கவைகைவாய்மண்சுமப்பித்தார்பதந்தலைமேற்சுமத்தல்செய்வாம். (௧௧)

## சண்டேசுரநாயனார்.

மனுதிகளுக்கெட்டாதபரமானந்தவாழ்வினையங்கோரிலிங்கமணலாற்கூப்பித், தனுதிதயர்தனினின்றுந்தாபித்தான்பாறழைத்த வன்பாலாட்டவந்துதடுக்கத்தாதையெனுதவன்றனிருபதமுமழுவாற்றுண்டித் திகழ்ந்தவனைப்பரபதத்துளிருத்தித்தானும்,பினுகியருளடைந்தவிறற்சண்டேசன்றாள்பிரசமலரிறைத்திறைஞ்சிப்பரசுவாமே. (௧௨)

## மெய்கண்டதேவநாயனார்.

அல்லாதபரசமயவலகைத்தேர்விண்டகலவகல்புனற்பெண்ணையயல்சூழ்வெண்ணெய்ப், பொல்லாதவிபமுகத்துப்புத்தேடன் பாற்புனிதசிவாகமப்பொருண்மைபொருந்தவாய்ந்து, நில்லாதநிலையிதுமற்றென்றுமொன்றாய்நிற்குநிலையிதுவெனமெய்ந்நெறிதேர்ந்தியாரும், வெல்லாதசிவஞானபோதஞ்சொன்னமெய்கண்டான்சரணமுடிமீதுகொள்வாம். (௧௩)

## திருத்தொண்டர்.

முன்னடையவரியசிவமுத்திபெற்றோர்முதலகிலதுவிரும்பிமுயலாநின்றோர், பின்னடையவருமவர்கண்முதலாயுள்ளபிள்ளைமிளவெள்ளைமதிபிறங்குவேணி,மின்னடையுமணிமௌலிவேதகீதன்வெண்ணீறுங்கண்டிகையுமெய்விடாமற், றன்னடைநன்னெறிதம்மையடைந்துளார்க்குந் தருந்தொண்டர்பெருந்தொண்டுதலைமேற்கொள்வாம். (௧௪)

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௧௪.

---

# அவையடக்கம்.

---

வெறியவென்பேதைமைவெளிப்படுத்துவா
னறிஞர்தொக்கிருந்தெனையழைத்திராகவ
னெறிகடற்சேதுவினிராமநாதனை
மிறுவியகாதையைநிகழ்த்துகென்னவே. (க)

தொடங்கினன்மற்றவர்சொல்வழாதரு
ளிடங்கொளுந்தாதையரிட்டகாரிய
மடங்கலின்றுயினுமமையுமாயினு
மடங்கெழுமைந்தர்தாமறுக்கற்பாலரோ. (உ)

வேறு.

நதிமதிச்சடைநம்பனவின்றிடு
முதியவப்பழங்காதைமூவாறினு
ளதிகமெய்க்கதையாமுழக்காகுநற்
கதிர்மணிக்கடலாம்பெருங்காந்தத்துள். (ஙு)

சிற்பரன்திகழ்சேதுக்கதைவட
சொற்பரப்பைத்தமிழினுன்சொல்லுத
லொற்கமின்றியுறவியொன்றுடகக்
கற்குழித்துநெறிசெய்யுங்காட்சியே. (ச)

வானளக்கபறவைகண்மாநிலந்
தானளக்கவிங்கூர்வனதாழையங்
கானளக்கர்வண்சேதுவின்காதையை
யானளக்கவென்றெண்ணியபின்னரோ. (ரு)

பேயொடாடும்பிரான்திறங்கூறுதற்
கேயுமென்னுரையென்னும்வழக்கினு
லாயுறுண்புலவர்க்கிலையாகுமாற்
றீயதென்றுமறுத்துரைசெய்வதே. (சு)

குவிபுயத்துணைக்கோசலனேவலாற்
கவியுமொன்றுகடற்கரைகண்டதா
னவியமேந்தரனல்லருளாலிது
புவியில்யானும்புகலுதற்பாலனே. (எ)

ஆதிவெற்புமணுவுமுண்டாழியுங்
கோதிலானின்குளப்படிநீருமுண்
டோதிமுற்றுணர்ந்தோருமுண்டோதிடாப்
பேதையேனுமுண்டென்செயும்பெற்றியே. (அ)

சொல்வகுத்தலருமையெற்சூழ்ந்திடா
சொல்வகுத்துப்பொருணிலைதோற்றியச்
சொல்வகுப்புக்கடந்தவன்றொல்புகழ்
சொல்வகுத்தல்சுருதியுமில்லையே. (கூ)

திகழுமாக்கதைசெய்திடுஞ்செய்யுடான்
பகர்விருத்தமதாகும்படியின்மே
னிகரிலாதென்றுநின்றுசிலவிடப்
புகலுநூற்பெயர்சேதுபுராணமே. (கo)

வாழிமாரிவழங்குமணிமுகில்
வாழியந்தணர்மன்னவர்வாழிய
வாழிவெண்டிருநீற்றெளிவையகம்
வாழிவாழியவைதிகசைவமே. (கக)

வேறு.

விரிதருபைங்கடலுலகம்புரந்ததனிவேந்தரெல்லாம்வியந்துபோற்ற
வரியமறைமுனிவர்தமிழ்ப்பாவாணர்செவிநுகர்பேரமுதமாகத்
தெரிதரமுத்தமிழ்வடிக்குமுனிசிரம்பவழகியதேசிகனுஞ்செம்மல்
வரிசைபெறுவடமொழியின்சேதுமாக்கதைதமிழால்வகுத்திட்டானே. (கஉ)

அவையடக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் உஅ.

---

# திருநாட்டுச்சிறப்பு.

---

தலைமைவளர்தமிழ்நாடவையெல்லையிரண்டினிலொன்றுதன்கணுக
நிலைமையுறுமற்றையதாய்நின்றவடவேங்கடத்திநீடுதென்பா
லலைவகலும்படிபடிநேர்நிறுவவருகுறுமுனிவனமர்ந்ததென்றன்
மலையமலைதருபொருநைவளமலிசால்புடையதொருவழுதிநாடு. (க)

அனையதிருநாடுடையதருண்மிகையாற்றருங்கலைகொளளவையாட
னினைவரியபரம்பரனைக்கயனயனவல்லியொடுநெருங்கிச்சூழ்ந்து
புனையுமலரிறைத்திறைஞ்சியமரர்புகவிடமின்றிப்புறத்துநிற்ப
வனைதரளமணிக்கொங்கைமாதருடன்மைந்தர்தொழுமதுரைமூதூர். (உ)

உந்துசுடர்ஞானத்தையொருமூன்றுமுலையணங்காவுதவிப்போற்றி
யந்தமிலாவானந்தமருள்வடிவாய்மௌலிதரித்தரசுநல்கிச்
சந்தமலிதமிழ்ச்சங்கப்புலவரொதிர்நின்றுவிடைசாற்றத்தந்த
விந்தமதிற்கூடலுயர்பென்னுலும்பிறராலுமியம்பலாமோ. (ந)

பணியாப்புன்சமணீசர்பணியதனாற்பாண்டியன்மேற்படர்ந்தவெந்தீப்
பிணியாற்றவரும்புகலிப்பிள்ளையாரிருந்தமடம்பிறங்குகாட்சித்
தணியாப்பொன்கொழித்தெறியுந்தரங்கநதிவைகைவடசாரின்மேய
வணியாப்பனூருமுடைத்தடல்வழுதிவழிவளர்க்குமந்தநாடு. (ச)

பாடகக்காலுமைநகிலப்பாலருவிதழ்ப்பவளப்பாலனோடு
கோடகப்பொய்யமண்வாதுகுறித்தபொழுதெதிரோற்றங்கொண்டபாடற்
சூடகக்கைம்மடமகளிர்அணைவரொடுங்குடைந்தாடுந்துறைநீர்வைகை
யேடகப்பொற்சிவபுரியுமியம்புதமிழ்த்திருநாட்டினிடத்ததாகும். (ரு)

வளம்படியும்வயற்பாண்டிமண்டலத்துண்டலர்கமலவாவிமாடுந்
தளம்படிதண்டலைமருங்கும்பளிக்கறைசூழ்தலங்களினுந்தையலாரு
முளம்படியுமகிழ்நரும்போற்றுதிக்கைதழீஇமதக்களுழியுவட்டக்காம
ரிளம்பிடியுங்களிறுமுடன்விளையாடுங்கொடுங்குன்றமென்னும்வெற்பும். (௬)

முத்தூருஞ்சரிமுகவெள்வளைதவழ்ந்துதிரண்டுமனைமுன்றிலெங்குங்
கொத்தூருங்குழன்மடவாரடிபெயர்க்கவிடமின்றிக்குலாவுமோங்கன்
மத்தூரும்பெருங்கடலின்மலர்ந்தமலர்ச்சீதளநீர்வாவிசூழ்ந்த
புத்தூரும்புயறுளிக்கும்பொதியவரைத்தமிழ்நாட்டிற்பொலிந்துமன்னும். (௭)

வீடானைப்பிறவானைநினையானைமறவானைவேறுன்றேநுங்
கூடானைப்பிரியானைக்குணங்குறியொன்றில்லானைக்குகப்பிரானை
நீடானைமுகத்தானைப்பயந்தானைத்தொழுதமரர்நிரப்புநீங்கு
மாடானைகருமுடைத்தன்னதமிழ்நாடதன்சீரளவிற்றுமோ. (௮)

மனவாயில்கடந்தகண்டவளரொளியாய்ப்பேரின்பமயமாயாரு
முனவாயிலகன்றகலாதொழியநினைவகம்புகுதுமொன்றைத்தொண்ட
ரினவாயில்பெறுமவர்கள்பெறவழங்கும்பெருந்தகையாலெவரும்போற்றும்
புனவாயிலுடையதவம்புரிந்ததுமுன்றமிழ்மலயப்பொருநைநாடு. (௯)

வானப்பேரமரருயர்மாளிகைச்சோபானவழிவந்துவேலைத்
தானப்பேர்நிலங்கெழுமித்தந்திமடுப்புகுந்தாடித்தலைவணங்கு
ஞானப்பேர்முனிவர்மனத்திருக்கோயில்வீற்றிருக்குநம்பன்மேய
கானப்பேர்கைதவனுட்டதுவாயிற்பிறநாட்டிற்கவினியாதோ. (௧௦)

கோவணமுங்கீளுடையுங்குலவுதிருநீற்றன்பர்குழாங்குழாமா
யாவணமுந்திருமடமுமாலயமுமிகநெருங்கியளப்பில்காட்சித்
தீவணங்கொள்சடைமுடியார்புகழ்விளம்புமொலியமரர்செவியிற்றுக்கும்
பூவணமுந்தமிழ்நாட்டிற்புரமென்றுலதற்குரைசால்புனையுமுண்டோ. (௧௧)

பருச்சுழியின்மிதக்குமதகரிபலத்திற்புகப்பாய்ந்துபடருங்குண்டாற்
றுருச்சுழிமுன்னிரைக்கொள்சுரும்பொளிவளையாருந்திமிசையுரோமங்காட்டு
மருச்சுழிவெண்டிரைய்மலவான்யாறுபுனைமௌலிவள்ளல்வாழுந்
திருச்சுழியல்வளவர்திறற்சேரர்திருநாட்டுளதோதென்னனுட்டில். (௧௨)

கரங்குன்றம்படைத்தனையதாரகனுமுன்னவனுங்கருதிப்பெற்ற
வரங்குன்றவடிசுடர்வேல்பணிகொண்டமயிற்பெருமான்வள்ளிமுன்னர்ச்
சரங்குன்றமெனத்தகையவரிவிழிப்பூண்முலைக்கயமான்றனைமணந்த
பரங்குன்றமுள்ளதுமற்றேதிலதோகயற்றுவசன்பாண்டிநாட்டில். (௧௩)

பொற்றுலத்தமரர்கடல்கடைந்தமுதமெழுப்பவெழுபுவனமுற்று
முற்றுலமெழுந்ததுகண்டிரிதரலுமததுநுகர்ந்தமூர்த்திவேதஞ்
சொற்றுலநிழலிருந்தோன்சொரியருவியுடன்றுயில்கூர்தம்பிவீழுங்
குற்றுலங்குறும்பலவென்றிரண்டுமொருங்குளவழுதிகொற்றநாட்டில். (௧௪)

தீயீன்றதெனத்தளிர்த்ததேமாந்தண்கனியுடைந்தசெந்தேனூறுங்
காயீன்றகதலிபயில்கௌரியனுட்டணிதெரிக்குங்காமர்வேதம்
வாயீன்றமறையவனுமதிப்பரிதாயலகினிலைமாண்பிற்றுகி
வேயீன்றதனித்தாளமணிநிலவுவிட்டெறிப்பவிளங்குநெல்லை. (௧௫)

இந்நாடுதனிற்சங்கமொருமூன்றுமிருந்தனவெம்மீசன்றானே
மின்னாடுகதிரிலைவேன்மீனவனாய்மௌலிபுனைவேட்கையுற்றான்
றென்னாடென்றழகுடையநாட்டினையுந்தென்றிசைநாட்டினையுஞ்செப்புஞ்
சொன்னாடுநெறியதனாற்றமிழ்நாடுதனதுவளஞ்சொல்லுந்தானே. (கசு)

வேறு.

கூம்புடைக்கலன்குலாவுங்குணகடலுடுத்தபாரில்
யாம்புகழ்மதுரைமுன்னாவியலுடைப்பதிகணீடு
தீம்புனற்பொருநைசூழ்ந்ததென்றமிழ்நாட்டிலெம்மா
லாம்படிதொகுத்துச்சொன்னவணியினைவகுத்துச்சொல்வாம். (கஎ)

கொள்ளுமாதரவின்றேனுங்கொடைக்குணம்விடாமையாலே
வள்ளியர்தம்பாற்கொண்டுவழங்கிடும்வண்மையார்போல்
வெள்ளியமுகிலினீட்டம்வீழ்ந்துவாய்வைத்துவேலை
யள்ளலம்பெருநீர்மாந்தியம்பரத்தெழுந்ததன்றே. (கஅ)

இன்னுயிர்க்கூட்டம்வாட்டமிசைந்தனகாணுமாபோன்
மின்னுவாள்விளக்கமேந்திவெங்கதிர்விரிக்கும்வேனின்
மன்னனையுரப்பிச்சீறிவைதல்போலிடிவழங்கிப்
பன்னிறப்படைவிற்கோலிப்பரந்தனதிசைகளெங்கும். (ககூ)

நீர்முகந்தெழுந்தகொண்மூநெடுவிசும்படங்கமூடிப்
பார்முகம்வெயர்ப்புற்றென்னப்பஃறுளிசிந்திச்சந்தக்
கூர்முனைக்கோட்டுத்தென்றற்கொழுங்கிரிக்கரிமேற்றூவும்
போர்முனைச்சரங்களேய்ப்பப்பொழிந்தனபுயலின்றானை. (உ0)

நிலையிலாநீர்மையாக்கநேர்ந்துழிநேர்ந்தவாங்கே
தலைமையோருதவுமாபோற்றண்டமிழ்முனிவன்வைகு
மலையமாசயிலமெங்கும்வழங்கியதருவிவெள்ளம்
விலையிலாமணிவெண்முத்தும்வெறுக்கையினோடுமன்னோ. (உக)

பொதியமேன்மிடைந்தசந்தின்பொங்கர்வேரகழ்ந்துபார்மேற்
குதிகொளுமருவித்தெண்ணீர்கோடியர்பொருநைக்கோல
நதியிடங்கொளாமற்பொங்கிஞாங்கரிற்புரட்டிநார
நிதியினைநோக்கிச்செல்லுநெட்டணையுடைத்துநீங்கி. (உஉ)

வெஞ்சினமாறுகொண்டவிலங்கினம்வேறுவேறாங்
கெஞ்சலின்றொழுகியாற்றினிடையிடையெதிர்ந்துசீறு
மஞ்சரிப்படலைநீங்காவண்டினம்புதுநீராடு
மஞ்சொலாரளகம்பற்றியணிநெடுங்கரையிலேறும். (உங)

பூங்குலைக்காந்தடன்னைப்பொன்னவிழ்கணிமேலாக்கி
வேங்கையந்துணைக்கோடன்மென்கொடிமீதுசேர்த்தி
யீங்கிவைபலவுமாறாவீர்த்தெழீஇக்கும்பயோனி
யாங்கமர்மலயவெற்பினற்புதங்காட்டுமந்நீர். (உச)

முறிபயில்கொடிகள்சுற்றிமுரணெடுங்கோடுதெற்றிச்
செறியுடைப்பொதும்பர்கல்லிச்சென்றிடும்பொருநைத்தீநீ
ருறுமலர்த்தருக்கள்சாயாதொழுகலாலுறையுங்கூட்டிற்
பறவைகளென்றும்போலப்பயில்வனபறந்திடாமல். (உரு)

செழுமலைக்குறடுரிஞ்சிச்செய்யசந்தனத்தின்சேற்ருல்
வழிபுனற்பொருநையாடுமாந்தர்தம்வடிவிற்சாந்தங்
கழியுமாறழுந்தத்தேய்த்துங்கழீஇயினமில்லையென்று
வழிவுருக்கரையிலேறுராடுவர்மீளமீள. (உசு)

இரைதிரைக்கடலிற்றன்றேய்ந்தின்றிடுந்தரளந்தன்னை
நிரைகெழுகிகிரியீன்றநித்திலமெனவுநேரு
முரையுளங்கொண்டாற்போலவொலிகொணீர்ப்பொருநைதென்றல்
வரைதருமாரமெல்லாமருங்குறவொதுக்குமாதோ. (உஎ)

அடைகடலடையும்போதிலதனுடுமுல்லையாதி
யிடைநிலப்பொருள்களெல்லாமேய்ந்தனவினத்தாலீன்ற
குடைபுனற்பொருநைமாதைக்குறிஞ்சிதான்வருணற்கீயு
நடைகெழுமணத்தின்காட்சிநாடுறுநயப்புற்றென்ன. (உஅ)

பெருகுமோராற்றிற்செல்வோர்பிரிவுழிப்பிரியுமாபோற்
றிருகுசால்கடுப்பினேடித்திசைதிசைகால்வாய்முட்டிப்
பருகுநீர்பரந்ததெங்கும்பற்பலமுகத்தான்மள்ள
ருருகுசான்மகிழ்வினீண்டியுய்த்தனர்பழனந்தோறும். (உகூ)

ஊற்றமார்குடதிக்கென்னுமொருகுடிப்பிறப்பைநாடி
மாற்றிலாவருணன்றிண்டோண்மணந்திடாவைகைஞாங்கர்க்
காற்றலைநிறைத்துப்பொங்கிக்கலந்ததுகழனியெங்கு
மேற்றனருழவர்நேர்வந்தெழுகடலெனமுழங்கி. (௩0)

கிளைத்தெழுபொருநையோடுங்கேடிலாவைகையோடுந்
திளைத்தணிபடைத்ததந்தத்தென்றிசைப்பொன்னிநாடு
அளைத்தமுள்ளாக்காற்கஞ்சத்துநிதியோடுந்துங்க
வளைத்தணிநிதிபெற்றோங்கும்வடதிசைத்தலைவன்போல. (௩க)

வேறு.

வெள்ளவோதையும்வெள்வளையோதையு
மள்ளரோதையும்வன்பகட்டோதையும்
புள்ளினோதையும்பொங்கிப்பொலிந்தன
வள்ளலார்கலியோதையடங்கவே. (௩உ)

மின்னுவொன்றிருமேகப்பிடர்த்தலந்
துன்னியென்னத்துணைக்கருமேதிமேற்
பொன்னின்மாநுகம்பூட்டிவயிரத்தின்
மன்னுஞாஞ்சிறெடுத்தனர்மள்ளரோ. (௩௩)

நெகிழ்ந்துசேறுறநீரினிரப்பியே
திகழ்ந்தவேருழுஞ்செய்கையின்மேயினூர்
மகிழ்ந்துமண்டிக்களமர்முன்வையக
மகழ்ந்தகேழலுமற்புதமெய்தவே. (௩ச)

மூண்டஞாஞ்சின்முனைக்கொழுநாவினாற்
கீண்டெடுத்தகிளரொளிமாழையு
மாண்டவேர்ப்படைச்சாலின்வழிமறித்
தீண்டுசங்குமெடுத்தெறிவார்சிலர். (௩ரு)

காரின்மேதிகழனிபுகும்பொழில்
வேரியுண்டுவெறித்துநுகத்தலை
மூரிபோக்கலுமுன்சென்றுபற்றியவ்
வேரின்மீளவிணக்கிடுவார்சிலர். (நகு)

வயலிற்றுக்கும்வராற்கொதுங்குற்றயற்
கயல்களெற்றக்கலங்கிநிற்பார்சில
ரியலுமின்னிசையேரொலிப்பாட்டினூற்
புயலினூர்திபுகழிசைப்பார்சிலர். (நஎ)

வீறுமாக்கொடைவித்தகர்மெய்த்தவத்
தேறுபாத்திரமெண்ணுதல்போற்பழஞ்
சேறுபார்ப்பனசெந்நெலின்வான்முளை
நாறுபார்ப்பனவாயினநாடெலாம். (நஅ)

பாலர்வேண்டுவபாலித்தவர்க்கவை
சாலுநாளிற்றரக்கொளுந்தாயர்போற்
சேலுலாவுந்தெளிவயனீரொலா
மாலின்மள்ளர்வடியச்செலுத்தினர். (நகூ)

நல்வளங்கொளநாடொறுநாடொறு
மல்வளங்கொளுமள்ளர்வளர்த்திட்ப்
பல்வகைப்பயமுண்டெழில்பல்கிடுஞ்
செல்வமைந்தரினூறுசிறந்தவே. (சு0)

வெண்மைசான்முளைவீங்கிவிரிந்தெழீஇத்
தண்ணநாறுபசச்சென்றுதளிர்த்தன
கண்ணினூடுங்கடையர்விதைத்தநா
ளெண்ணியெண்ணியிரட்டியுண்டென்னவே. (சுக)

மாற்றிலாமுதல்கைக்கொண்டுவாணிகர்
வீற்றிலாபம்விளைவுழிச்சேறல்போ
னூற்றைவேறுபழனத்தினட்டுவா
ரூற்றமோடுபறித்தாருழவரோ. (சுஉ)

மா[illegible]ர்ந்தெழுமன்னர்முடித்திரள்
கூ[illegible]ன்னன்கொணர்ந்துகுவித்தல்போ
னூறு[illegible]ர்முடிநன்குறச்சேர்த்தினூ
ரோறுசெய்யுள்வரம்பிடமின்றியே. (சுந)

பாயுநீர்விட்டுழுதுபரம்புமேற்
போயசெய்யுட்புகுந்தெழுகஞ்சத்திற்
சேயதாள்வைத்துச்சென்றுகடைசியர்
தூயநாற்றுநடுவார்தொடங்கினர். (சுச)

பண்டுதாமவர்பாலிகையாரமு
தண்டதற்கெதிர்நல்குமுதவிபோற்
கொண்டுகாதற்கொழுநர்கொடுத்திட்
வண்டுரோக்கியர்வார்மதுமாந்துவார். (சுரு)

மள்ளர்மாந்துவார்மங்கையர்வாய்ப்புகக்
கள்ளுவாரித்தங்கைகொடுபெய்குதன்
முள்ளுலாவவாமுண்டகப்பூமது
விள்ளுமாம்பலின்வீழ்க்கின்றபோலுமே. (௪௬)

வேரியுண்டிவியந்திருகைகளால்
வாரியுண்டுழிமாதர்மதர்விழி
சோரியுண்டெரிதூவழற்காய்ந்தவேல்
காரியுண்டிடுகாட்சியிற்றேன்றுமே. (௪எ)

வருவரோகுமினென்னமயங்கிவாய்
வெருவிவேறுவினுவிடைகூறுவார்
முருகுவேரிமுகந்துண்பர்மீளவுந்
திருகுசிந்தைதெளிவடையாமலே. (௪அ)

கலைகுலைந்தமைகாண்கிலர்காழகத்
தலைகுலைந்தெனத்தாம்பிறர்க்கோதுவார்
நிலைகுலைந்துநெடிதுநின்றேடுவார்
வலைகுலைந்திடவாம்பிணைமானவே. (௪௯)

வெங்கண்மொண்டுமிசைந்தவெறியினு
லங்கமுற்றுமருங்கிற்றள்ளாடுவார்
செங்கைகொட்டித்திரிந்தயலார்கள்போற்
றங்கள்செய்கையைத்தாம்பழித்தோதுவார். (௫0)

காடுசேர்மலர்க்காமதுவண்டுடன்
கூடவுண்டுகுமட்டியெடுத்தவ
ணீடுமெய்க்களைகொண்டுநெடுவரம்
பூடுசாயுமுழத்தியர்தாஞ்சிலர். (௫௧)

துன்றுகள்வெறியாலிவர்சோர்ந்தன
ரென்றுதாங்கிச்சிலவாயெடுத்தவர்
நின்றிடாமனிலத்திடைவீழுமுன்
சென்றுதாம்விழுஞ்சேயிழையார்சிலர். (௫௨)

பாடுவார்தமைப்பார்த்துப்பரதத்தி
னூடுமாறிங்கழகிதென்பார்சில
ரோடுவார்பின்றெடர்வதையுற்றெதிர்
நாடுதிக்கினடந்திடுவார்சிலர். (௫௩)

உணர்ச்சிமேலவருண்கினுமம்மமோ
யணைக்குங்கள்ளுக்குமற்புதமாகுமோ
பிணைக்கட்பேதைமைபெற்றகடைசியர்
துணைப்பினெஞ்சகந்தன்னைமயக்கலே. (௫௪)

நன்னர்நாறுநடுகின்றமாதரோ
டன்னம்போவதறியாருழவர்கள்
சென்னெறுசிலமடவார்நடா
தென்னையோவறிதேகலென்றெண்ணுவார் (௫௫)

ஆன்றநீரினவரிதழம்பகந்
தோன்றுநீழலைச்சூழார்நடுந்திற
மேன்றுகாண்பவனொன்னிந்தநாறெல்லா
மூன்றுவீரிக்கயத்துளென்றோதுவார். (௪௬)

அளையுஞ்சேதகத்தம்புயக்கைபுக
முளைகொணூறுநடுஞ்சிறுமூரலார்
தளையுருவகைகட்டிடுந்தாங்களே
களையுங்கூடநடுஞ்செயல்காட்டுவார். (௪௭)

தளர்வுருமுடிச்சாலியினுறெலாங்
களமர்மாதர்கழனிகளெங்கணும்
வளாநட்டுவரம்பினிலேறினு
ரளறுதீர்ந்திளைப்பாறும்பிணைகள்போல். (௪௮)

இந்தவாறுநட்டேறியசாலிகள்
பைந்தளிர்க்கொண்டெழுந்துபடர்மழை
தந்தளித்ததகைமையுணர்ந்தபோன்
முந்திமேகமுகத்தினைமோந்தவே. (௪௯)

விழைத்தகொண்கர்விழிக்கடையேவலா
லுழத்திமாதரொருங்குதிரண்டுறீஇத்
தழைத்தவுற்பலந்தாமரையாம்பலென்
றிழைத்தசாலியெழுங்களைநீக்குவார். (௫௰)

வேறு.

செங்கமலமலர்களையார்தெரிந்துதெரிந்தவிழ்வாசப்
பொங்கமலவெண்கமலப்போதுபலகளைந்திடுவார்
கொங்குவிரிசேதாம்பல்குறையாமல்வெண்குமுத
மங்கைகொடுபறித்தெறிவாரகம்பொருந்தாரவைகளைய. (௫௧)

மைந்நீலங்கடுமடவார்வயனீருண்மதர்விழிசே
ரந்நீழலஃதுணரார்களைந்துகளைந்தயர்வுறுவார்
சொய்ந்நீரின்மலரொடுத்துக்குவித்திடுவார்கோகனதங்
கைந்நீங்காதிருந்ததெனக்காமுதறிக்கணைந்திடுவார். (௫௨)

நின்றெரியுஞ்சுடர்க்கமலநிரையிரண்டுமருங்கினொடு
முன்றெரிந்துகளைந்திடுவார்முயன்றெழுந்தவடிப்பெயர்ப்பைப்
பின்றெரிந்துசிலநளினம்பிழைத்தவெனக்காணூராய்
மின்றெரிவதெனமூரல்விளைக்கவவர்வெள்கிடுவார். (௫௩)

உறுமினத்தாலுடனெருங்கியொண்மலரின்களையெடுப்பார்
சிறுமலர்த்தாள்கமடமிசைச்செலவைத்துச்சேயிழையீர்
புறவடியான்மிதித்தபிழைபொறுத்திரென்புகன்றிரங்கி
யிறுமிடையார்கால்பிடிப்பாரிளவராலினைப்பிடிப்பார். (௫௪)

ஆடுறுசீர்விளையாட்டினுனைமேற்கண்புதைப்பார்
பீடுறுதாட்டாமரையிற்பிறழும்வரிக்கயல்புதைத்து
மாடலர்சேதாம்பலின்கண்வண்டுமுரலொலிகேட்டு
மூடுகரந்தனைவெகுண்டுமொழிந்திடுவாரொனப்பெயர்ப்பார். (௫௫)

கங்குபயில்வயற்சாலிக்களைமுழுதுங்களைந்திடுமுன்
றங்களுடற்களைகளைவார்தடங்குலைமேற்சென்றிடுவா
ரங்கணிணையணிவதனமவிரிதழ்சூழ்ந்தகலாமற்
பொங்களியால்வழிமயங்கிப்போக்கின்றிநின்றிடுவார். (௬௬)

மணிநீலஞ்சிலர்களையமலர்க்குமுதஞ்சிலர்களையப்
பிணியவிழ்வாரிசங்களையும்பெய்வளையார்கமலநடுப்
பணிலமுறங்குவகாணாஉப்பங்கயச்செந்தோட்டின்மிசை
யணிமலர்வெண்டாமரைப்போததிசயமென்றவைகளையார். (௬௭)

போதுபயில்களைகளைந்துபோக்குதலும்புணர்ந்தபெரும்
பாதகம்போயகன்றவழிப்பயனுதவுநல்வினைபோற்
கோதில்பசுஞ்சுருள்விரித்துக்கொண்டகருவெளிப்படுத்தி
யேதமில்சீர்வயற்பைங்கூழீன்றசெழுங்கதிரீட்டம். (௬௮)

தந்நிறத்தைக்காரியத்திற்றந்தமுதறருவனபோ
லெந்நிறத்தவித்தெறிநீரிரும்பழனத்திட்டவைதா
மந்நிறத்தவான்கதிர்களவையலர்ந்தவாங்குழவர்
செந்நிறத்தசாலியிவைசெழுங்கரும்பன்றெனத்தெருண்டார். (௬௯)

தனையைவளந்தருகெனவோர்சயவேந்தன்முன்றுரந்த
மரகதக்கோல்வயிரமுனைவாளியெலாமுடன்வாங்கி
நிரைதரவோர்பாற்குவித்துநிறுத்தினபோனீண்டெழுந்த
குரல்விரவுகொழுஞ்செந்நெற்குலவிநிலவினவெங்கும். (௭௦)

உவந்தெதிர்ந்தமொழிப்போரிலுற்றபொருளுணைசெய்யுந்
தவந்திரிந்தபொதிமங்கைச்சாக்கியர்போற்றலைநிறுவி
யவந்தருசொல்லவர்வாதிலழிந்ததற்பின்றமிழ்விரகர்
சிவந்தகழல்பணிந்தமைபோற்செந்நெல்விளைகதிர்வளைந்த. (௭௧)

கைதவன்பூந்தொடையடைவாய்க்கதிரரிவாள்கொண்டுழவர்
மொய்தவளவளைகுளிறமுழங்கொலிவாய்க்கிணையிரட்டச்
செய்திரிசேல்கயல்பாயச்செந்நெலரிந்தரிபரப்பி
மைதவழ்கந்தரன்வணக்காவடசிகரிபலவமைத்தார். (௭௨)

மெய்த்தவனைச்சிறகரிந்துவிண்ணவர்கோன்வீழ்த்தியபோ
லுய்த்தநெடும்போர்சாயவுடங்கிருபாலினுஞ்சரித்து
முத்தமிழ்க்கொற்கையர்பெருமான்முகிலைவிலங்கிட்டதுபோன்
மைத்தகடாவினம்பிணித்துவளைவித்தார்வயமள்ளர். (௭௩)

அற்றபலாலத்தொகுதிதொடுத்துதறிச்சூழ்போக்கிக்
குற்றமொடுகுணம்வேறுகுறித்துணருங்கொள்கையர்போ
லுற்றெழுங்கால்வரத்தூற்றியும்பருறவுயர்த்திட்ட
நெற்றிரளின்பொலியீட்டநெருங்கிநிறைந்தனவெங்கும். (௭௪)

ஆறிலொருபங்குலகமளிக்குமிறைக்களித்தைந்து
கூறுகொடுபணிதெய்வங்குலப்பிதிர்கள்விருந்துறவின்
பேறுதவியொன்றுகொடுபெருகுதிருப்பெருங்குடிமை
வீறுபதிபலவுளதம்மேதகுதென்றமிழ்நாடு. (௭௫)

வேறு.

வருக்கையுங்கமுகுமாவும்வாழையும்வழையும்வாசத்
துருக்கமுமராமுங்கோங்குந்தூங்குபைங்குலையதெங்கு
நெருக்குசம்பகமந்தாரநீடுபாடலஞ்சூழ்புன்னைத்
தருக்களும்பிறவும்விண்டோய்தண்டலையிடங்களெங்கும். (௭௬)

கொம்பர்தாழ்பொங்கரெங்குங்கூவுவகுயிற்குழாங்க
ளம்புயப்பொய்கையெங்குமாடுவவன்னக்கூட்டஞ்
செம்பொனார்ஞெள்ளலெங்குஞ்செறிவனதேர்க்குலங்கள்
பைம்புனற்பழனமெங்கும்படர்வனபணிலக்கொள்ளை. (௭௭)

தண்கழைநெரித்துவீழ்த்தசாறடுபாகின்கந்தந்
திண்கவைப்பொழிலிற்பல்லதேமலர்முருகுபூகக்
கண்கவர்பாளைவாசங்கஞலியோரொருகாற்காமர்
விண்கிளர்தருப்பூநாற்றம்வேறுவேறாகநாறும். (௭௮)

ஏர்கெழுபொருண்மைவேட்டவிருநிலத்தவர்கடம்மிற்
பார்கவர்முறையிற்கொள்ளும்பரிவருத்தனம்போற்*பாடுங்
கார்கெழுசுரும்பினீட்டங்கன்னியர்கோட்டுப்போதார்
வார்குழலேலமன்றல்வாங்குவதேங்காநீங்கி. (௭௯)

வாவியிற்றும்பிநீங்காவாவியைவானளாவுங்
காவினிற்சுரும்புகாவின்கண்ணதேகாதன்மாதர்
பூவியற்சுரியல்வண்டுபுறஞ்செலாதொன்றுக்கொன்று
மேவியற்கந்தந்தாழ்வுமிகுதியுமின்மையாலே. (௮௦)

பாயுறைப்பட்டநாப்பண்பாட்டிசைவண்டவிழ்த்த
வாயிதழ்வனசப்பள்ளியகந்துயிலன்னங்காட்டுங்
காயழற்றூணத்துச்சிக்கண்ணுறான்கலக்கமீக்கொண்
டோயுமாலுடனுறங்குமுலகுதந்தவனுறக்கம். (௮௧)

ஆடுறுமஞ்ஞைகார்கண்டரிவையரொளித்தல்காணூஉ
நீடுநம்மினங்களாடாநெறியெனாவென்றுநீங்குந்
தோடுறுசோலைநாளுந்தோகையர்துதைதலாலே
கூடுறுபருவமாறுங்குயிலினங்கூவல்காட்டும். (௮௨)

கடலெழுமிரவிபோலுங்கடிகொள்செங்கமலங்காமர்
மடலவிழ்வனசம்போலும்வனிதையர்வதனமன்னார்
படரொளிவதனம்போலும்பனிமதிபரந்தவானிற்
சுடருமிழ்திங்கள்போலுஞ்சுரிமுகச்சங்கமாதோ. (௮௩)

வாலொளிப்பணிலம்போலும்வல்லியர்கண்டங்கொல்லுங்
காலவேலன்னகண்ணார்கந்தரம்போலுங்கந்தி
கோலவண்கமுகுபோலுங்கொழுங்கரும்பினியகன்னல்
போலுமாற்கிள்ளையன்னார்புகன்றிடுங்கிளவிதானே. (௮௪)

மெல்லியர்கூற்றுப்போலும்விளம்பிசைவீணைமிக்க
வல்லகிபோலும்பாடும்வண்டினம்விண்டபோதிற்
புல்லிசைத்தும்பிபோலும்பூவையர்நாட்டங்கூந்த
லல்லனார்நயனம்போலுமாடவரங்கைவாளே. (௮௫)

---

* பரிவருத்தனம் — பண்டமாற்று.

துளங்குவாள்போலுமிஞ்சித்துஞ்சிடுமஞ்சிற்றோன்றும்
விளங்கொளிமின்னுவன்னவித்துத்துப்போலுங்காவி
விளங்குயிலன்னார்தங்களிடுகிடையேழைநல்லார்
வளங்கொணுண்மருங்குபோலும்வாளரியேறுதானே. (அசு)

அரிவயவேறுபோலுமாடவர்கூட்டமன்னோர்
புரிதருங்குழுவைப்போலும்பொருகடல்புரண்டுவீசும்
விரிதிரைநரலைபோலும்விரைமலர்ச்சோலைவேரி
சொரிமலர்ப்பொதும்பர்போலுந்தோகையர்சுருண்டவோதி. (அஎ)

சிலைநுதலார்கள்வாரிச்செருகுபூங்கோதைபோலு
மலைகொணீருந்துமேகமறல்பொழிமஞ்சுபோலுங்
கொலையிபங்களிறுபோலுங்குறுமுனிபொதியக்கூட
மலையமாசிகரம்போலும்வளர்புயவழுதிநாட்டில். (அஅ)

மேகநேர்குழலார்செம்பொன்மிளிரொளிவதனம்போலு
மாகமார்சசிநீள்வானில்வருஞ்சசிபோல்வார்மாதர்
தோகையர்குறங்குபோலுந்துடவைசேரரம்பைதுங்க
நாகமேலரம்பையன்னார்நன்னுதலார்கடாமே. (அகூ)

துணையிபமருப்புநேருந்துடியிடைமடவார்சொற்க
மணைதருசொற்கம்போலுமன்னநாட்டோர்களெல்லாம்
பணைகொள்சம்பகப்பூமானும்பாவையரவர்தநாசி
புணரிசைத்தநாசிபாடும்பூவையரோதிவண்டே. (கூ௦)

கந்திமாணிழைசேர்மாதர்கந்தரங்காட்டக்கந்திப்
பைந்தலையுறங்குநீலப்பனிமுகிலளகங்காட்ட
வந்தநீண்முகிலிற்றோன்றுமலங்கொளிமின்னுவன்னார்
சிந்துரநுதல்சேர்கூந்தற்சீமந்தரோகைகாட்டும். (கூக)

கிடங்குநீள்கடலிற்றோன்றக்கிடங்கருகுடுத்தஞாயிற்
றடங்கெழுபுரிசையோடாச்சலதிமேற்கலங்கண்மான
விடங்கெழுநாப்பண்வாழ்வாரோறியநாய்கரேய்ப்ப
வுடங்கமர்தலைவனீகானொத்துளவூர்களெங்கும். (கூஉ)

ஆலைபாயோதையன்றியந்தநாட்டகத்தின்வேறு
வேலைவாயோதைகேளாவிளங்குதாழ்காதிற்செம்பொன்
னோலைபாய்கண்ணார்மேனியொளியலாதும்பர்நீடுஞ்
சோலைபாய்முகில்கண்மின்னுத்துளங்கொளிதோன்றிடாதே. (கூங)

மருங்குயர்மாடத்தேறிமலர்க்குழல்விரித்துக்கோது
மருங்கவின்மடவாரன்றியடுக்கன்மேன்மயில்கள்காணா
நெருங்குபூஞ்சோலையெங்குநிரைவளையார்சொல்லன்றிக்
கருங்குயிலோசைகேளாகைதவன்கன்னிநாட்டில். (கூச)

சேட்படுகனகமாடச்சென்னியிற்செழும்பந்தாடல்
வேட்கையிலொருசாரோணிமீதிளமாதர்போத
றூட்புறங்கொளாதசெங்கேழ்ச்சுடருருத்தம்பத்தும்பர்
நாட்பனிமலர்மேலன்னநாடிவிண்ணடத்தன்மானும். (கூரு)

கன்னியர்வாணிபோலக்கழனியும்வள்ளைகாட்டு
மன்னவர்பாணிபோலவலந்தையுங்குருகுகாட்டு
மின்னிடையார்மனம்போல்வேலியுமுல்லைசேரும்
பொன்னனையார்தனம்போற்பொதும்பருமாரஞ்சேரும். (௯௬)

கொழுநர்தம்மார்புமாதர்கொங்கையும்பொறியின்மல்கும்
பழிதவிர்மனமுமல்குற்பரப்புமொண்கலையின்மன்னும்
விழிகளுஞ்சுருண்டுநெய்த்தவிலோதமுமளிபடைக்கு
மழிவிறிண்டோளுங்காதுமலங்கல்வண்டோடுதாங்கும். (௯௭)

மாதர்தங்கண்ணுஞ்செப்பும்வார்த்தையுமுழையைமானுங்
கோதையர்மணிக்கழுத்துங்கொங்கையுங்கோடுபோலு
மேதமிலவனாம்பாலுமிடையுநீள்விசும்பையேய்க்கும்
பேதையரெயிறுந்தோளும்பிறங்கெழின்முளையைநேரும். (௯௮)

குற்றிடைமடவார்நாட்டங்குழலொடுகளவுகூரு
முற்றவரதரத்தோடுமொருவிசைகோபமூருஞ்
சுற்றுவாரணிந்தகொங்கைத்துணையொடுஞூதுசாரு
மற்றவர்தளிரகட்டின்வனையொடந்தரங்கநேரும். (௯௯)

சுருள்பயில்கூந்தனல்லார்தோணிகராம்பணைக்குங்
குருமணித்தாளமாலைக்கொங்கையுமிகப்பணைக்கு
மருமலராம்பற்செவ்வாய்வாணகைதளவினீடுங்
கருமைசேரரிபரந்தகண்ணுங்காதளவினீடும். (௧௦௦)

சூழிமால்யானையோதைதுரகதவோதைவீணை
யேழிசையோதையெங்குமியம்பியவோதைமாதர்
வாழியலரங்கிஞேதைமறைக்கிடையோதைமல்கி
யாழிவாயரற்றுமோதையடங்கினுமடங்கிடாவே. (௧௦௧)

சுற்றுறுநகர்களெங்குஞ்சுடர்மதிலரமியங்க
டெற்றிகள்கோபுரங்கடெளிபளிக்களிந்தம்வேள்வி
பற்றியசாலைகூடம்பயின்மடமரங்கமாதி
வெற்றிடமாகியொன்றுய்விளங்கொளிவிண்ணளாவும். (௧௦௨)

மருத்துறழ்வாசியூர்வார்மதகயமுகைப்பார்மாலைப்
பருத்தகாற்றேர்நடாத்திப்படருவார்பயின்றமாடத்
தெருத்துகளிரவிவீசுஞ்சேயொளியுண்டுசேண்போய்த்
தருத்திகழ்செம்பொனாட்டைத்தாரணியாக்குமாதோ. (௧௦௩)

ஆனகண்ணிமைத்தலென்னென்றன்னநாட்டவரைத்தேவர்
மேனிலைநமரொன்றேடிமேவியும்விழித்தேநிற்ற
லூனமில்விளையாட்டென்னவும்பரையுவர்தழீஇயும்
வானவர்நரரொன்றிந்தமண்டலக்கிருமையின்றுல். (௧௦௪)

ஆண்மகச்செய்கைமுற்றுமன்னநாட்டாடவர்க்கே
மாணிழைத்தெரிவைமார்சீர்மருவினரவண்சேர்மாதர்
பூணுமில்லொழுக்கம்பூண்டபுண்ணியரங்கண்வாழ்வார்
காணிலந்நாட்டிஞேரேகற்றவர்கலைகண்முற்றும். (௧௦௫)

பதிநிலைமரபுமெண்ணில்பசுக்களதியல்பும்பாசம்
பொதிநிலைமுறையுமேனைப்புறநெறிவழக்கும்பொய்யா
விதிநிலைவிலக்குமின்பமெய்ப்பொருட்டுணிவுமாகுங்
கதிநிலைதெரிக்குந்தொன்னூற்கவிஞர்சேர்கழகமெங்கும். (௧௦௬)

பன்னுசீர்க்கிள்ளிநாடும்பைந்தமிழ்நாடதேனு
மின்னிசைத்தமிழினாசானிருப்பதுமலயவெற்பிற்
பொன்னிபோற்பொருநைதானும்பூம்பணைவளங்களீனுங்
கன்னிநாட்டிதுபோன்முத்தங்காவிரிகான்றிடாதே. (௧௦௭)

பங்கயங்கழுநீராம்பல்பசுங்கொடிப்பாசிவள்ளை
சங்கெழின்ஞெண்டியாமைதடவராலிவைதயங்கிக்
கொங்கியல்வாவிமானுங்கோதையர்குழாம்பின்பற்றி
யங்குழலளியராகுமாடவர்கணங்களெங்கும். (௧௦௮)

இல்லமென்கிளவியந்நாட்டிருப்பவரிசைக்குங்காலை
வெல்லருங்கேள்விமேலோர்விதித்திடுமிலக்கணத்துட்
சொல்லிடும்பெயரோயேனைத்தொழிற்குறிப்பிரண்டினுள்ளு
நல்லதோர்பெயரோயன்றிநவின்றிடநாடிடாரோ. (௧௦௯)

அருள்கொளாக்கடியகூற்றோடாம்பயனடையாமாற்ற
மருள்கொளுங்கிளவிதீயவஞ்சமார்குறளையென்னுந்
தெருள்கொளாவிழிசொன்னான்குஞ்செப்பிடார்தென்னனாட்டார்
பொருள்கொளாருருச்சொலாயும்போதினுமிறிஞ்சிபோல. (௧௧௦)

இன்கொடைப்பண்புதம்பாலில்லரோவுளரோவென்னி
னன்கொடைப்பொருளன்றுவிநயக்கினுநயந்தோர்கேட்கு
முன்கொடைப்பாலராவார்முழுதுநின்றிரந்திட்டாலும்
பின்கொடைப்பாலராகார்பெருவிறல்வழுதிநாட்டார். (௧௧௧)

மாரவேள்கவிகைமாறன்வழிமுதன்மந்தக்காலு
மாரமும்பொதியநல்குமாதலாலணிசேர்கன்னிப்
பேருறுநாட்டதின்பம்பேசிலந்நாட்டினோரோ
சேருவர்வீடும்போகந்தீர்ந்துழிச்சேர்தலாலே. (௧௧௨)

தரும்பயமாற்றலாலேதந்தையைநிகர்க்குந்தம்பா
லிருந்தனமீகையாலேயீன்றவளேய்க்குமெண்ணில்
வரும்படியளித்தலாலேமன்னவன்மானுமாட்சித்
திருந்துவீடுதவலாலேதேசிகனாந்தென்னாடு. (௧௧௩)

வேறு.

மாதரோதிபுனைவதுமாலையேமாலைநல்கவருவதுமாலையே
கோதைமாரிடையொப்பதுநூலையேகூறுகின்றதுமுத்தமிழ்நூலையே
வேதவேள்விபுரிகடன்வேலையேவீணிழைப்பதின்றாயிடும்வேலையே
காதலர்க்கியமீவதுகாலையேகருதுகின்றதுகண்ணுதல்காலையே. (௧௧௪)

மானனார்முலைவாரணகும்பமேவாயின்மேயதுபூரணகும்பமே
தானம்யாவையுநந்தவனங்களேதணிவர்வந்தவர்தந்தவனங்களே
பானமேயதுவாசநளினமேபயிலுமானவர்பேசநளினமே
யானகேணியுறுமுற்பலங்களேயன்பர்கூட்டம்பெறுமுற்பலங்களே. (௧௧௫)

வேறு.

வடிவமாதர்கழுத்தும்வளைகளே
கடியகண்ணுங்கருங்குவளைகளே
நெடியகாதுநிரந்தவளைகளே
யொடிவிலாதவுளையும்வளைகளே. (௧௪௬)

மருவுமாதர்கண்மானுவவாளியே
தெரிவைமார்குழைசேர்வதும்வாளியே
பொருவராடவர்பூந்தனுவாளியே
வெருவுநேரவர்மேவிடவாளியே. (௧௪௭)

வங்கவேலைவரும்வாரணங்களே
பொங்குவீதிபொரும்வாரணங்களே
யங்கணேறுவதாமாரணங்களே
தங்குவாரிலர்தாமாரணங்களே. (௧௪௮)

கொண்டசெய்கைவிடாதகொடிறுகள்
விண்டுயிர்ப்பனவேரியம்போதுகள்
கண்டிகைப்பனகாணுறுமானினந்
தண்டமேவுவதந்தியினங்களே. (௧௪௯)

வல்லிசேர்வனவண்டிமிர்முல்லைகள்
கொல்லிபாடுவகோமளவண்டினம்
புல்லிநீப்பனபூவிரிகோரகை
யல்லியத்கையவாயிழையார்குழல். (௧௫௦)

ஆயிரங்கவைநாவரவஞ்சொல
வாயிரங்கரவாணன்பொறிக்கினும்
பாயிரும்புகழ்ப்பாண்டிநன்னாட்டணிப்
பாயிரங்குறைவுற்றிடும்பாலதோ. (௧௫௧)

திருநாட்டுச்சிறப்பு முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௭௧.

---

# கந்தமாதனச்சிறப்பு.

---

யாம்பகர்தென்னனாட்டிலிமையவரமுதமின்றித்
தாம்பசித்தடைந்தபோதுந்தாங்குமெய்த்திருவினோங்கி
மேம்படுசேதுவின்கண்விரிதருதரங்கவேலை
வாம்புனலுடுத்தகந்தமாதனச்சிறப்புச்சொல்வாம். (௧)

வேறு.

ஏர்பயிலிராமனன்றிராமநாதனும்
பேர்பயிலீசனைப்பிரதிட்டையாற்றியே
சீர்பயிலருச்சனைசெய்தவெல்லையாங்
கார்பயில்சாரல்சூழ்கந்தமாதனம். (௨)

அருவருளன்றியேயம்பிகாபதி
யுருவருளெனச்சிறந்துததிருழ்ந்திடும்
கருவருளாநெடுங்கந்தமாதனத்
திருவருளாற்சிலசெப்புவாமரோ. (௩)

வெண்ணதிதவழ்மதிவேணிதாங்கலாற்
பண்ணமர்பசுங்கொடிபடரும்பாங்கினாற்
திண்ணவெங்கூற்றுவன்சேர்கிலாமையாற்
கண்ணுதலனையதுகந்தமாதனம். (௪)

விரியுமாலாழிவெண்கோடுமேவலா
லரியதன்னடிவரையுலகடங்கலாற்
புரிமலரிலஞ்சியாற்புவனம்போற்றலாற்
கரியவனேருமாற்கந்தமாதனம். (௫)

உருப்பயில்குவலயமுதவுபட்டமுற்
திருப்புறுகமலமேய்ந்திலங்கரான்முகம்
விருப்பினுன்மான்கலைமேவியாடக
கருப்பனைநிகர்வதுகந்தமாதனம். (௬)

அணைப்பருமுந்தியாலாரக்கோட்டினு
லிணக்கிநீள்பொன்வரையெழுதன்மாண்பினால்
வணக்கவினுன்றவாய்மருவுங்காப்பினாற்
கணப்பிரானனையதுகந்தமாதனம். (௭)

சந்தனமிசைமுலைவள்ளிசார்தலா
லந்தமில்சூர்க்கணமறநெருங்கலாற்
சுந்தரமயின்மிசைத்தோன்றுங்காட்சியாற்
கந்தனையனையதுகந்தமாதனம். (௮)

விண்டகைநாகமேலாகுமேன்மையாற்
கொண்டலூர்சசிதலைக்கூடுங்கொள்கையான்
மண்டுகட்பலவினுல்வயங்கிவானிலா
கண்டலன்போல்வதுகந்தமாதனம். (௯)

மன்னுநீடாவிதன்வயினிடைப்பல
துன்னலாற்றுளைக்கைநீள்வேழந்தோன்றலா
லுன்னருமரனிடத்தோங்கலால்வாக்
கன்னியையுறழுமாற்கந்தமாதனம். (௧௦)

அஞ்சனமாலணையரவப்பள்ளியால்
விஞ்சுநற்செங்கனகங்கொண்மேனியா
லெஞ்சலின்மதனனையும்பலெய்தலாற்
கஞ்சமின்னிகர்வதுகந்தமாதனம். (௧௧)

அலர்கொள்வாற்குமரையதன்கண்வாழ்வதாய்
நிலவுமெய்த்தவளமுநீடிநித்தனு
முலகுணர்வுறல்சிறந்தோதியாதியாய்க்
தலைமகட்புரைவதுகந்தமாதனம். (௧௨)

முயறவமுனிவரான்முழங்குவெண்ணிறப்
புயறவழ்ந்தெங்கணும்போர்த்தபொற்பினு
லயில்விழியுமையுடனரனிருத்தலாற்
கயிலேயையனேய துகந்தமாதனம். (கரு)

மனசிகர்வானரமலேத்தகோடுறீஇப்
புனிதவிண்ணுகுத்திடும்பொன்னின்மாண்டுக
ளனிலமுற்றெடுத்திறைத்தடங்கழூடலாற்
கனகவெற்பனேய துகந்தமாதனம். (கசு)

சுந்தரவருவிவாசுகிவளேத்திடச்
சிந்துவினருகுறீஇத்திகழுங்கூலமே
லந்தரரமுதெழுந்ததற்பினேற்றிய
மந்தரமனேய துகந்தமாதனம். (கடு)

கழைநிரைமுனேத்தலேககனநாட்டினேப்
புழைபடச்செருகியேபொருதுநிற்றலா
லுழைபயில்வோர்சிரத்துரிஞ்சிடாதுவா
னெழவிசைத்தூன்றியகால்களேய்க்குமால். (கசு)

ஆதிமீன்ஞேணியீறவற்றின்வண்ணமாய்
வேய்தருசித்திலம்விளங்கித்தோன்றலால்
யாதுநாள்பல்குதற்கேதுவீங்கெனுச்
சோதிநூலறிஞருந்துணுக்கமெய்துவார். (கஎ)

தள்ளுறவெடித்தவாய்த்தரளம்வீழ்த்திடா
வள்ளியற்றிகிரிகள்வானரக்குழா
மொள்ளிகலரக்கர்போட்டோடுநாட்கவர்
வெள்ளியீட்டி கணிறீஇவிட்டபோலுமால். (கஅ)

கோளுறுகுனிதலேக்கோட்டின்மின்னுெடு
காளமாமுகிற்கணங்கவ்விநாலுவ
தாளுறுகவிப்படைதடிந்தரக்கர்கை
வாளொடுதூக்குகார்வட்டணங்கள்போல். (கசு)

காலமாமழைக்குலங்கடியவாடையாற்
கோலமார்குவடொரீஇக்குமுறிச்சேண்செல்வ
வாலவூணரனருளாலிராகவன்
பாலிராவணன்பழிபாறல்போலுமே. (உ0)

விள்ளுறுபாழிவாய்மின்னியேயுட
னுள்ளுறமூடியங்கொடுங்குகார்க்குல
நள்ளுறையோகினிநலங்கொண்முன்றில்வாய்க்
கொள்ளிவாயலகையின்கூட்டம்போலுமே. (உக)

துறுமுதிண்காம்பினத்தூணமெங்கணு
நிறைகிரிமுழுவதுநிரந்தநீன்முகி
லிறையுருவெயில்படாதிராமனன்றுகா
ணுறுவையினமைத்தகூடாரமொக்குமே. (உஉ)

விற்பயின்மின்னுடன்வேறுவேறுநீஇப்
பற்பலமழைத்திரள்பரவித்தோன்றுத
லுற்பவந்தொறுமரனுருவம்போற்றிய
சொற்புகழிராகவர்தொகுதிபோலுமே. (௨௩)

ஒளிர்நிழலெதிர்படவுருத்துமண்டியொண்
குளிர்பளிக்கறைநிலங்குழியக்குத்தியே
மிளிர்நிழல்கீழுறமீளும்வீழ்ந்ததென்
றுளியறைநனைகவுளடுக்கன்மாடெலாம். (௨௪)

இடித்திடுமாலிகளிறைக்குமெங்கணும்
பொடித்திடுதுளிமழைபொழிந்துலாவிடுந்
தடித்துருதிதமுகிற்சாதிபேதமென்
றடித்தலையவர்சொலற்கமையும்வேழமே. (௨௫)

திறங்கெழுவரைப்புனல்சேரவெள்ளராப்
பிறங்கலிற்பற்றிநால்பெற்றிகண்டவர்
கறங்கருவியிற்சிலககனத்தங்ஙனே
யிறங்கிடாதொழிவதென்னென்னமன்னுமே. (௨௬)

ஞாற்சியிற்றிரண்டவந்நாகநல்லிளங்
காற்செறிபொதும்பர்சூழ்கந்தமாதன
மேற்செறிமாதவர்விரித்துலர்த்திய
பாற்செறிபின்னலின்படலைபோலுமே. (௨௭)

கடன்முகந்தேறியகாளமேகமு
முடனிவரும்பலுமுருண்டுவீழ்வன
படரொலியருவியிற்படியுமாந்தரைத்
தொடரிருட்பிழம்பினிற்றுணிகள்போலுமே. (௨௮)

வெண்டுகில்விரித்தபோல்வெற்புரிஞ்சிட
வண்டமார்மதியுமிழமுததாரைபோற்
றெண்டர்மெய்ஞ்ஞானவெண்சுடரின்கற்றைபோற்
றண்டலிலருவிகடயங்குமெங்கணும். (௨௯)

நிச்சயமிந்துவினீன்மையன்றிஃ
தச்சமினிறைமதிக்காசுண்டாகுமோ
வுச்சியிலவ்வரையோங்குதண்டலைப்
பச்சிலையுரைப்புறும்பசுமையாகுமே. (௩0)

இனியமுட்பழங்கவியினங்குடைந்திட
வனிபுரையரவுமிழ்மணியின்வீழ்மது
முனிவரர்சாலைமுன்முளைக்குமாதுள
நனிவிரைப்பெய்குடநாரம்போலுமே. (௩௧)

தலைமுகிலளகமாத்தவளத்தாரகை
யலைகுழன்மல்லிகையலரின்சூழலா
வுலையிடைகொம்பராவுயர்தருக்குலஞ்
சிலைநுதன்மாதரிற்சேணிற்றோன்றுமே. (௩௨)

கற்பகமரனெனக்கந்தமாதனத்
திற்கிளர்தருக்களையிரந்தியாசகர்
நற்பொருள்வழங்கிலநம்மைப்போலவே
யொற்கமுற்றனகொலோவுவையுமென்பரால். (௩௩)

தணிப்பருமிருபுறத்தருவினீள்கவை
பிணிப்புறுகொடிகளிற்பிச்சமேல்விரித்
தணிக்குலமஞ்ஞைகளகவியாலுவ
மணிக்கயிற்றூடும்வேழம்பமாதர்போல். (௩௪)

நண்ணியவானரங்குனிப்பநாப்பணே
மண்ணுறுநூழிலான்மருங்குமீப்படர்
தண்ணடைகோடிலாத்தருக்கடோன்றுமாற்
கண்ணுளர்சிறுவியகம்பமென்னவே. (௩௫)

கொய்யலர்குளிர்சுனைகுளித்துநாடொறுஞ்
செய்யவெங்கதிரொனத்திரிவன்சூரியன்
றுய்யநீரவருடன்றொடர்புண்டாயினும்
வெய்யவர்விடுவரோமிக்கதன்மையே. (௩௬)

குயில்களுமளிகளுங்கொழும்பைங்கிள்ளையு
மயில்களுநெருங்கலால்வாசவண்பொழில்
பயிலும்வேண்முனிவர்மேற்படையிறங்கிய
வெயிலுறுபாசறையேர்படைக்குமே. (௩௭)

கால்வளர்முண்டகக்காமர்பூஞ்சுனைச்
சேல்வகைதிரிவனதிரண்டுசேணிடை
யேல்வைகண்டுவந்திடுமிலேகமாதரார்
நீல்வரிமதர்விழிநீழலொக்குமே. (௩௮)

பரவுநீர்ச்சுனைதனைப்பொதிந்தபாசடை
கரவிலாமுண்டகக்கன்னிகாந்தனு
மிரவிமாமருகுநேரொய்திடாமலே
மரகதவாடையான்மறைத்தல்போலுமே. (௩௯)

விரைக்கயமதனிடைவேந்தன்வைகிடு
நிரைக்கொள்விண்ணுலகெலாநிழலிற்றோன்றுதல்
வரைக்கருந்தவத்துருவாசனுணையாற்
றிரைக்கடலுள்விழுஞ்செய்கைபோலுமே. (௪0)

அலர்க்கதிரிரதமேலாடுங்கேதனங்
கலர்க்கிடங்கொடுத்திடாக்கந்தமாதன
மலர்க்கயத்தமிழ்ந்தியேநனைந்தவான்றுகி
லுலர்த்தியவெடுத்தெடுத்துதறல்போலுமே. (௪௧)

இவரிமைக்கணிற்சிலவிமைத்திடாவென
நவிலுதற்குடன்படநாளுஞ்செய்வதோ
தவருறைகந்தமாதனத்தின்சால்பினை
புவகையாலும்பர்தாமுற்றுநோக்கலே. (௪௨)

மேவினரின்புறீஇமீள்கிலாமையாற்
றுவறுகந்தமாதனமரன்பதம்
யாவரும்புகுவறென்றெண்ணிவெற்பென
நாவலர்மறைத்தனர்நவின்றதாகுமே. (சங)

கதலியங்கனிநறுக்கால்கொண்மாங்கனி
மதுமரீஇயியவையின்மல்கியுந்தியே
முதிர்பலாப்பழங்கொடேன்முகப்பமாதிர
மதிர்வுறவரும்பெருநதிகளாகுமே. (சச)

பாங்குறீஇயுலத்தின்மேற்பயிறருக்களிற்
றூங்கிருன்மதுத்துளியதனிற்றூவுத
லோங்கல்வாழ்சிவபிரானுருவத்துச்சிமேற்
றுங்குபொற்சிதளத்தசும்பினீடுமே. (சரு)

நிரைதரமாடுசூழ்நெடுந்தருக்களின்
விரைதருபன்மலர்மெய்ந்நிறங்கொளும்
வரைசெய்வெண்பளிக்கறைவட்டம்வைத்திடு
மிரசதகோடிகத்திலங்கித்தோன்றுமே. (சசு)

தேவரூரணித்துறச்சென்றுங்கற்பகக்
காவினில்வீழ்ந்திடாகந்தமாதன
மேவுதண்டலையளிவெறிமிக்கில்லையாம்
பூவினில்வண்டுருதென்கைபொய்மையே. (சஎ)

நாடுவின்மாதரைநகமடந்தையர்
கூடுழியோதியிற்குரைக்கும்வண்டினங்
தோடுறுகுழன்மதுத்துய்க்கலாவவ
ரோடிவர்சுருணலமுரைப்பதொக்குமே. (சஅ)

முந்துநங்குறைகளான்முனிந்துரித்தனை
யெந்தையிங்கருளினியென்றபோலரன்
கந்தமாதனந்தனைக்கலையிபம்புலி
யைந்துவாய்விலங்கிவையடைந்துசூழுமால். (சகு)

தேடுபொன்வரைமுதற்சிலம்பியாவையுங்
கேடுறுதிதனொடுசேண்மைகொண்டபோற்
கோடுறுமருவிகள்கொழித்தபொற்குவை
மாடுநின்றிலங்கிடுமணிக்குவால்களே. (ரு௦)

அந்தரத்துறையுமோவண்டஞ்சேய்மையாற்
றந்தனவிழிக்குவைதஞ்சமில்லபோற்
கந்தமாதனமெனக்கட்டுரைத்திடு
மிந்தமால்வரைத்தலையிருப்பதுண்மையே. (ருக)

வரிமுலையுண்டிடுமான்மறிக்குழா
மரியுடன்கண்படுமானைக்கன்றுக
ளெரிவெயிற்கிளவராவிப்பொருப்பின்மால்
பரிவிரிசிறைநிழற்பரப்பொதுங்குமே. (ருஉ)

மாணிமையோர்முனிவரர்கள்யாவருங்
காணருமூவருமிதன்கட்காணலாற்
ருணுவாங்கந்தமாதனம்புக்கார்கள்போற்
சேணிலாருளனொனவையஞ்செப்புமே. (ருங)

பொருவிறண்பளிக்கறைபோலத்தோன்றியே
மருவுறவமிழ்த்திடும்வாசப்பூஞ்சுனை
திருமுனிவேடமாய்ச்செல்லுமாதவ
ருருவுயிர்கவரும்வில்வலனையொக்குமே. (ருச)

புல்லனைபுதலினுற்பொதிந்துமேலெழாப்
பல்லனைவிடவராப்பாதலம்புகுங்
கல்லனையுணர்விலாக்கடைப்பிறப்பினே
ரல்லனெஞ்சகமென்னலாயதே. (ருரு)

கரியனவெளியனகாமர்பொன்மைய
வரியனபுகரனவரத்தமெய்யன
பெரியனசிறியனபிறங்கற்பஞ்சர
முரியனபுள்ளினமுலாவுமெங்கணும். (ருசு)

எண்கொடுகேசரியிணங்கியோருழைக்
கண்கவர்கங்குலும்பகலுங்காட்டுவ
வண்களிமடமயின்மாதர்மாட்டுறீஇப்
பெண்களோரிருவர்சேர்பெற்றிகாட்டுமே. (ருஎ)

மட்டறப்பகைத்துவால்வளைத்தகோம்பிநேர்
பட்டிடக்களிமயில்பரதஞ்செய்வன
வெட்டடிப்பறவைமூக்கிடையுரிஞ்சிடுங்
கட்டுடைற்றினவுதீர்காதலாளியே. (ருஅ)

எயினராவெரீஇச்செலுமேணமக்குலம்
பயின்மடவாரவைபாறும்வட்டையின்
வயினுறீஇக்கிளையெனவைகச்செய்கையா
லயனிலையவர்விடும்பார்வையன்னதே. (ருகூ)

கூனுடைவெஞ்சிலைக்குன்றவாணர்தா
மானுடன்புலிபடவளைத்தவார்வலை
யீன்மார்வலியரோடெளியர்க்கிறைசெய்
கோனுடைவன்கொடுங்கோலைப்போலுமே. (சுO)

அருள்விடாமுனிவர்போலவர்செய்வேள்வியைப்
பொருள்விடாமைந்தரும்புரிவுற்றுடுவார்
தெருள்விடாவமுதவான்றிங்கள்போலலா
திருள்விடங்காலுமோவிளையதிங்களே. (சுக)

கறுவுநெஞ்சவருருக்கந்தமாதனத்
துறுநரருயிர்ச்சுவையுணர்ந்தகூற்றமும்
பெறுதவமுனிவர்மேற்பிரசவாளினுய்
மறுவுருதேகியமதனுமில்லையே. (சுஉ)

விலங்கன்மற்றதனிடைவெயிலின்வாடிய
வலங்கிளமென்றளிராடல்வல்லியும்
வலங்கெழுமறைத்தழல்வல்லமாதவக்
கலங்கழிவல்லியுங்கண்டதில்லையே. (சுங)

மகங்கெழுபண்ணவர்மகார்மருங்குறீஇச்
சுகங்களும்பூவையுஞ்சுருதிகற்பன
விகம்பரமிரண்டினுமிவ்வென்றுள்ளவோ
வகங்கொணற்சார்பினோர்க்கடைந்திடாதவே. (சுச)

ஆனியந்தொறுங்கதிரடையச்சேந்துவிண்
மேனிபின்கருகலால்விளம்புமம்மலைத்
தானமாதவர்மகத்தழற்கொளுந்தியே
வானகம்வெந்ததாமாலையென்பதே. (சுரு)

குரவர்சூழ்கிரியநல்குதிக்குமோதையுங்
கரவனைமுழக்கமுங்களுலிவிம்முறும்
விரவுமிட்டியினழல்விடுஞ்சுவாலையு
மிரவெரிமரங்களுமிடைமயங்குமே. (சுசு)

கற்கெழுசிகரமார்கந்தமாதனக்
குற்குலூத்தாவமுற்றெழுந்தகுய்யுறு
நற்கனம்படிதலானரலைசேர்புலால்
வற்கமுங்கமழ்ந்திடும்புலவுமாற்றியே. (சுஎ)

கொம்பொடுதூங்குதேன்கூட்டிலீக்கணம்
பம்புபேரரவமும்பரவையோதையு
மிம்பரிலக்கிரியிருக்கின்றோர்க்கலால்
வம்பலர்வகுப்புருமாண்பிற்றோரிடம். (சுஅ)

அடைபயிறருமிடைந்தாதபம்புகற்
கிடைவெளியின்மையாலென்றுங்கங்குலா
நடையதோரிடமணிநாகம்வைகலா
லுடையதுபகற்பொழுதென்றுமோரிடம். (சுகூ)

நனிமிகுசராசரநாமங்கொள்ளுயிர்
முனிவறவாக்கலான்முழுதுங்காக்கலாற்
பனிமலர்க்கண்ணிருபகவரன்றியுந்
தனியுலகளித்திடுந்தகையதவ்வனா. (எ௦)

ஈங்கிதனுச்சிநீத்திலங்குவானமு
மீங்கிதன்சாரல்விட்டிருக்கும்வையமு
மீங்கிதன்றாளலாப்பிலமுமின்மையா
லீங்கிதன்கண்ணுயிரேகிமீள்வதே. (எக)

அதனிடையுணவெலாமாகுஞ்செய்கையா
லதனிடைமருந்தெலாமமருந்தன்மையா
லதனிடையீறுறுதாகலாலுயிர்க்
கதனிலையேநிலையாகவேண்டுமால். (எஉ)

இலைத்தடஞ்சூலினனே துவின்றெலா
நிலைத்திடல்வேண்டலனீண்டமேருவு
மலைத்திடலாலஃதன்றுவையக
முலைத்திடாதமைத்ததிவ்வோங்கல்போலுமே. (எ௩)

நண்ணிளமாதரார்நாடிநேரொலி
தண்ணுறுகந்தமாதனவிலங்கலின்
கண்ணுளாரொவரொனக்காண்டுமென்றுபுக்
குண்ணிறைமுழையிருட்கொல்கிமீளுவார். (எச)

ஓவறுநெடுங்கணக்கோதிடுஞ்சிறார்
வாவெனுவரையயல்வருவர்தேருவர்
போவெனுயாரெமைப்போகென்ருரொனுக்
கூவெனுவெங்ஙனேகூப்பிடென்பரால். (எ௫)

பொற்புவிமுதலியபுவனம்யாவினு
மற்புதமுடையதொன்றடையிலாங்கது
கற்பருமுழைபயில்கந்தமாதன
வெற்பினிலுள்ளதாம்விளம்புங்காலையே. (எசு)

சிந்தையின்மூவருந்தேடியெய்தரு
மந்தண்மாண்பொருள்களுமதன்கணுள்ளவாங்
கந்தமாதனவரைக்காண்கிலாப்பொரு
ளெந்தவானுலகினுமில்லையாகுமே. (எஎ)

அலங்கலையடிவரையறைதல்பேனமா
மிலங்கலரிட்டிசைமறையியம்பியே
கலங்கெழுகடற்பிரான்கந்தமாதன
விலங்கலாமரன்பதம்விளக்கல்போலுமே. (எஅ)

முறிபடுதுகிர்களின்மொய்த்தநித்திலங்
குறிகொள்விற்கோடியிற்குடைந்துளோர்பவங்
தெறிகெடவோடுதல்கண்டுதெண்டிரை
நறுநுதல்கொண்டபுன்னகையைமானுமே. (எகு)

ஊக்கமார்பலகலனுடையச்சில்லமேற்
ருக்கனுங்கந்தமாதனத்தைச்சாருத
லாக்குமன்னுயிருளகந்தைவேறப்
போக்கலுமரன்பதம்புணர்தல்போலுமே. (அ0)

மருவுழித்தெரிபலமாதிரக்கல
மொருமுகத்தோடிவந்துடனிறங்குதல்
கரவுடைப்படைக்குழாங்கருத்துநேர்ந்துழி
விரைவினிற்றிரண்டுடன்மேவல்போலுமே. (அக)

நாற்றிசைக்கலன்கொடுநண்ணியெண்ணிலா
வேற்றுளசாதிகள்விரவிநீங்குத
லீற்றினிலுயிரொலாமெய்தியோருழைத்
தோற்றுழிப்பிரிந்துபோந்தொடர்புகாட்டுமே. (அஉ)

தகையுறுபெண்ணைகடலைவிரித்தெழீஇ
நிகழுருவொன்றதாய்நீண்டுதம்மிசைப்
புகலுடையண்டமாருயிர்கள்போற்றியே
யகலிடந்தாங்கியவரவமேய்க்குமே. (அ௩)

வன்னமென்பாசடைவடிவமாகியே
புன்னைமேன்மரகதம்பொதுளிற்றென்றுதா
னன்னர்நித்திலமிசைநணியின்வண்ணமாய்த்
துன்னியபோலும்வெண்முகையின்றோற்றமே. (அச)

விரைமலர்ஞாழலின்வீழ்ந்ததாதுவாம்
புரிவுசால்சுண்ணமேற்புரண்டசங்கினஞ்
சுரிவளைசெய்யவீங்கென்னத்தோன்றியே
பெரியவர்தம்மையும்பேதையாக்குமே. (அரு)

கணிதமில்புகழுடைக்கந்தமாதனப்
பணிவரைப்புதுமையோபரவைப்பாங்கெலாம்
புணருமாதாரமும்புளினமாங்கதி
லணையுமாதேயமும்புளினமாகுமே. (அசு)

தழுவுசீர்நுளைச்சியர்தசும்பிற்சேலுடன்
விழிநிழலெண்ணியேவிற்கக்கொண்டவ
ரொழிவுறக்கடத்தினீரூற்றியோரிரண்
டெழில்கொண்மீன்காண்கிலமென்னென்றெண்ணுவார். (அஎ)

முள்ளுடைநெட்டிலைமுடங்கல்சூழ்துறைத்
துள்ளிவீழ்ந்தளகமேற்றுவக்குண்வெள்ளிறால்
பள்ளமார்கடற்பயில்பரத்திமார்புனை
வெள்ளியம்பிறையணிவிளக்கஞ்செய்யுமே. (அஅ)

மூள்புலனருகுருமுனியுமாதவர்
கேள்கிளர்வளையதன்சார்புகிட்டியே
சூள்கொளாநுளையருந்துவன்றிவாரியுள்
வேள்கொடியகப்படவலைகள்வீசுவார். (அக)

வந்துதோய்முகிறழீஇமரீஇயதீஞ்சுவை
யுந்திநீர்கடல்புகுந்தவர்படைத்தன
முந்திமேலவர்தொடர்முருக்கிமீளவுந்
தந்தொடருறுநரத்தவநிற்றீர்வரோ. (கo)

கானுறுகைதைமேற்கலவர்கார்க்கடன்
மீனெறிசாலநேர்விரித்துலர்த்தலும்
வானிறவண்முகைவலையிற்பட்டன
வானிறக்குருகெனத்தோற்றுவிக்குமே. (கக)

காயலின்கூலமுங்கண்டனீழலும்
பாயுநீருவளகப்பரப்புமெங்கணுஞ்
சாயலின்மஞ்ஞைநேர்திமிலத்தையலார்
வாயிலார்சிற்றில்செய்தாடன்மன்னுமே. (க௨)

சிலைபயிலிராகவன்செய்தசேதுவாங்
கலையொடுமான்பயில்கந்தமாதன
மலைவளமதனெடுமருவுமாண்புசா
லலைவளமளவையாலளக்கலாகுமோ. (௬௩)

மறைமுதற்கலைகளான்மருவுந்தன்னிலை
முறைதரக்கண்ணுதன்மொழிந்தவாறுபோற்
கறைமிறன்பெருமையைக்கந்தமாதன
மறையுமேல்வாய்படைத்தறியலாகுமே. (௬௪)

கந்தமாதனச்சிறப்புமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ௪௩.

---

# நைமிசாரணியச்சிறப்பு.

---

பெரியசூதனிச்சேதுவின்மாக்கதைபேச
வரியமாதவர்வினவியசூழலாமதனல்
விரியுமைம்புலவேதனையொருவினோர்மேவற்
குரியமாண்விளைநைமிசவளஞ்சிலவுரைப்பாம். (௧)

கொண்டநான்முகர்பிறப்புடனிறப்பொருகோடி
கண்டமாதவர்வாழ்வதுகருங்கடலமுத
முண்டுளோர்தொகைக்கவர்தொகையுயர்புடைத்தென்று
லண்டர்நாட்டினுமிக்கதாநைமிசவடவி. (௨)

உற்பவந்தனக்கஞ்சியேதன்கணுற்றோநா
யெற்படும்பகலிரவெனுமிரண்டிலாவகண்ட
சிற்பரம்பொருட்சிவத்துடன்சேர்த்திடுஞ்செயலாற்
கற்பமெண்ணிலகடந்ததுநைமிசக்கானம். (௩)

கறையடிக்குலமுதலிய கருவிலங்கொலியுந்
துறைகொள்கானியாறுகண்டெழுபெரும்புனற்றுவைப்பு
நிறைதருக்கண்மேற்றவழ்புயலரவமுநீங்கா
மறைமுழக்கினன்மறைப்பதுநைமிசவனமே. (௪)

முறுகவாமருள்வெகுளியாமும்மையுமொழியு
மிறுதிதோற்றமென்றிருமையுமெய்துநர்க்கியா
வுறுதிகூர்ந்திடுமொருமையாற்பொருமதனோடு
மறலிகண்டறியாததுநைமிசவனமே. (௫)

உவருலாங்கடல்சுவறினுமழைமுகிலுதவா
திவறல்கூரினுநல்குரவின்றியேமல்குந்
தவறிலாத்திருமாதவர்க்காயதோர்சார்பா
லவனிமாதிதியனையதுநைமிசாரணியம். (௬)

கொங்குதேரளிக்கொள்ளையுங்கிள்ளையுங்குயிலுந்
தங்குமாதவர்சாலைசூழ்ந்திசைத்திடுந்தமர
மங்கண்வேள்சிலைநாண்பரிகாளமாயலைந்த
வெங்கடீங்கொழித்தாண்மினென்றேத்துதலேய்க்கும். (எ).

முகமுனெய்திடுமயன்முதலோர்க்கவர்முதியோர்
தகையினேடுமுன்னிருந்தநடந்தநுந்தவத்தோர்
பகர்தல்கேட்டவைபடித்துடன்படித்தவப்படியே
புகல்செய்பூவையுமிறந்தநாளுணர்ந்தவாபோலும். (அ)

வரியராவினமயிலினேடாடியேமறைநூ
லரியவேதியர்சாலைமுன்னடைந்திடலவர்தாம்
புரியுநோன்பினாற்புலப்பகைபோக்கியபொருளைத்
தெரியகின்றெதிர்காட்டிடுஞ்செயலினைத்தெரிக்கும். (கூ)

கானமீதுசஞ்சரித்திடுங்கருங்கடாவினங்க
ளானகாரியமன்றெனுதருந்தவத்தவர்மே
லூனமார்படையெடுத்துவந்துடைந்துடைந்தோடிப்
போனகாலர்கள்விடுத்தபல்லூர்திகள்போலும். (கo)

மொட்டவிழ்ந்தெரிகாந்தளங்குலையின்மேன்முனிவர்
கட்டெழின்மகார்பனசமாண்கனிமதுச்சூத
நெட்டிலைக்கொடுசுருதிசூழ்தம்பிகின்றிசைப்ப
விட்டுவேள்விசெய்தாடிடமெங்கணும்விளங்கும். (கக)

ஓடவென்றவைம்புலத்தினருடசமேற்பட்ரு
மாடன்மென்கொடியவர்மகத்தழற்கொழுந்தாலும்
யாடலார்மறையோரருட்பார்வையினாலும்
வாடலுந்தளிர்த்திடுதலும்பன்முறைமருவும். (கஉ)

தண்டமார்கரியரியிவைதாபதமதன்கட்
பண்டைவான்பகைதீர்ந்தொருதுறையினீர்பருகும்
விண்டவெஞ்சினநெஞ்சுடைமெய்த்தவமேலோர்
கொண்டகொள்கைமூன்றுலகமுங்கொள்ளுமென்கூற்றால். (கஙு)

முகைகொள்பூமுதல்பிறவொடுமுல்லைநீண்முதற்குந்
திகழுநீர்சொரிந்துறுவர்தாம்வளர்த்திடுஞ்செய்கை
பகைவிருப்பெனுமிரண்டுமின்றாகியபான்மை
யகிலத்தமைபுறத்தினுந்தெரிக்குமாறனைய. (கச)

உடையின்வற்கலைமுனிவர்தம்முளத்துறையீசன்
சடையினிற்கிளர்சசிக்கலைசதுர்மறைநாவிற்
றொடைகொள்சொற்கலையளப்பிலவவற்றொடுந்துவன்றி
யடையுமாக்கலைபலவுளவதன்கணுச்சிரமம். (கரு)

பிரமசாரிகள்சங்கமோமனையறம்பிரியார்
பரவுகூட்டமோவனத்திடைப்பன்னியரோடும்
விரவுவாரவர்தொகுதியோநீத்திடுமேலோர்
திரள்கொலோபெரிதென்னவக்கானகஞ்சிறக்கும். (கசு)

யாகவேதிசேரிடமதாமில்லையேன்மல்லல்
யோகசாதனைமுயலிடமாமஃதொழிந்தா
லாகமாதிநூல்பயிலிடமாமலதருளோ
டேகமாமிடமாகுமவ்வனமிடமெல்லாம். (கஎ)

திருந்துதண்டகம்வதரிகாச்சிரமமுன்னாகிப்
பொருந்திடங்களினின்றுதம்புதல்வர்பன்னியரோ
டருந்தவப்பெருங்கிளைஞர்தாங்குழாங்குழாமாகி
விருந்துவந்துபோந்துழனியேவைகலுமிகுமால். (கஅ)

ஆணவத்தினிற்கரந்தவென்றருங்கிழங்ககழ்வார்
கோண்மனத்தினிற்கவர்த்தெனக்கொழுஞ்சமித்தொடிப்பார்
காணுமூழினிற்கனிந்தவென்றருங்கனிகவர்வார்
யாணர்நைமிசவனத்துவாழிருந்தவத்திறையோர். (கக)

வேறு.

நன்றுதீதுபகையுறவுதுன்புசுகநாடொருமுனிவர்நாகருஞ்
சென்றுகாணரியசிவபிரானையுயர்திருவருட்கதிதெரிக்கவே
யொன்றுகாதலொடுகண்டிரண்டறவுடன்கலந்திலகுமோவியத்
தென்றும்வாழுதலினைமிசத்துறுவரில்லையோவெனவுமியையுமே. (உ0)

ஒருநெஞ்சமொழியுருவமுற்றுமரனுடைமையாகவவருணரினுஞ்
சாருவாகன்முதலோர்மதங்கள்சிலர்சாற்றவேறுசிலர்சார்ந்தயற்
சேருமம்மதமறுக்குநூல்களுரைசெய்யவைதிகர்கள்சைவரான்
றூரும்வைகுவர்கொனைமிசாரணியமதனிலென்னவருமையமே. (உக)

ஆளுமாதவர்களாடுசீர்புலரவாவியங்கரையினிற்கவே
வாளுலாவுசடிலக்கொழுந்துநுனிவந்துதாழுறைகளுந்திவாய்
மூளுமாரழன்முடுக்கிமூடிசுழுமுனைதிறந்தவழிவிந்துவி
னீளுமாரமுதுபொங்கிமேல்வழியவீழுநுண்டுளிகணேருமே. (உஉ)

கட்டவிழ்ந்துபொலிகமலமென்னவெரிகாமர்வேள்வியழன்முன்னரோ
வட்டமாகிலம்வகுத்ததாதையெனமன்னுமாதவர்கண்மலரின்மே
லெட்டுவாள்விழிவிரிஞ்சன்வைகியிடுமென்றிடும்பொருளைமன்றவே
விட்டலக்கணையினாலுணர்த்திடுவர்வேறுகூறுவதென்மேன்மையே. (உ௩)

மாயனுன்முகவன்வாசவன்புலவர்வையமன்னவர்கள்வாழ்வினுக்
காயதோர்தவமிழைத்தொழிந்தவர்களவர்கள்சீர்பகரவரியதா
மேயமாதவமலாதுவேறுணர்வின்வெஃகுருமுனிவர்வெஃகியே
ஆயவாழ்வுபயினைமிசப்பெருமையாவர்வல்லவர்கள்சொல்லவே. (உச)

நைமிசாரணியச்சிறப்புமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் உசுஎ.

# சேதுசருக்கம்.

பூமலியிதழிசூடும்புதுநிலாமகுடவேணி
நாமலிசுருதிபோற்றுநம்பிரானிராமநாத
னேமலிசிலையிராமற்கிராவணப்பிரமகத்தித்
தீமலியிடுக்கண்டீர்த்தசேவடிசென்னிவைப்பாம். (௧)

அனையதோர்நைமிசப்பேரடவியிற்சௌனகாதி
முனிவரருறைவரன்னோர்முத்தியின்வேட்கைமிக்கோ
ரினையவர்கணிதமெண்ணிலிருபத்தாறிரட்டியைஞ்ஞூ
றனையவரருள்சேர்மைந்தரவர்மைந்தரளப்பிலாதார். (௨)

புலப்பகைமாற்றியன்பாற்புராந்தகன்முகுந்தன்கஞ்ச
மலர்ப்பதமருச்சித்தேத்திமாதவமிழைப்பாரங்கட்
கலப்புறக்குழுமியோர்நாட்கரிசுதீர்கதைகள்பேசி
யுலப்பிலொன்றதனுபாயமொருவருக்கொருவராய்ந்தார். (௩)

இனையமாண்பொருள்வினவியிணைதவிர்தவத்தின்மிக்கோ
ரனைவருமமருங்காலையளவறுவளமைசான்ற
நனையவிழ்பொதும்பர்மேயநைமிசவனமதன்கட்
டுனைவில்சீருறுவர்முன்னர்த்தொல்லுணர்ச்சூதனுற்றான். (௪)

விளங்கழலுருவிற்றோன்றும்வியாதன்மாணக்கற்காணூஉத்
துளங்கொளியிருக்கையேற்றித்தொன்முறைவழிபட்டுண்மை
யுளங்கெழுசூதற்போற்றியுததிசூழுலகமுய்ய
வளங்கொணல்வரவுசொன்னார்மாதவர்கணத்தர்யாரும். (௫)

அந்தணர்சென்றுதாமேயாடுநற்றீர்த்தந்தம்முன்
வந்தினிதாடப்பெற்றமாந்தர்போன்மகிழ்வினீடிப்
புந்தியாலங்கட்டேரும்பொருணிலைத்துணிவுசூதன்
சுந்தரவாயாற்கொள்வார்சூழ்ந்திவைசொல்லலுற்றார். (௬)

வாதராயணன்பாற்கொண்டாய்வரமிகுபுராணமுற்று
மாதலாலறிதியெல்லாமருந்தவச்சூதநீயே
பூதலத்தெவையோமேலாம்புரம்புனல்பொருந்துமுத்தி
யாதினாலெவ்வாறுண்டாமீசன்மாலிவர்மாட்டன்பு. (௭)

எற்றினான்மனத்தால்வாயால்யாக்கையாலியன்றசெய்கை
முற்றியபயனுமேவுமுடிவிலாவருளினாலே
சொற்றியாலெமக்குச்சூதஅதுகளிரிகுரவர்யாதும்
பற்றியபுதல்வர்தம்மேற்பரிவினாற்பகர்வான்றே. (௮)

வேறு.

என்றுகூறலுங்கேட்டினிதெனாத்
துன்றுவேதவியாதன்றுணைப்பத
மொன்றுமுள்ளத்துவப்புற்றுயிர்க்கெலா
நன்றுநாடிநவிலுதன்மேயினான். (௯)

போற்றுநீர்மைப்பொருளிதுமுன்னியான்
சாற்றினேனிலையார்க்குந்தவத்தினீ
ருற்றமிக்கவொருமையினீருமக்
கேற்றநண்பினியம்புவன்கேண்மினே. (௧௦)

உற்றஞாலத்தொருநகர்காகுத்த
னற்றமில்கவியாற்றந்ததாழிநீ
ரொற்றுஞ்சேதுவிராமேச்சரமதில்
வெற்றிசால்பலதீர்த்தங்கண்மேவுமால். (௧௧)

ஞானமாதவிர்நானிலமேற்பிற
வானவூர்களிலாடுநன்னீர்களிற்
றானுயர்ந்ததுதன்னொருகாட்சியான்
மோனவானந்தமுத்திவழங்குமே. (௧௨)

பொருவில்சங்கரன்பூமகனையக
னிருவர்பாலுமன்பெய்திடுமந்நிலை
யருவமூவகைச்செய்கையினாற்றலு
மருவும்வேறிலைமற்றிதற்கையமே. (௧௩)

இந்தவுற்பவத்தேவனிச்சேதுவை
வந்துகாணினுமோர்கற்பம்வள்ளல்பாற்
றந்தைதாய்வழிக்கோடிதமரொடு
முந்துவைகுவன்சேர்வன்பின்முத்தியே. (௧௪)

பூவினுண்டுகள்பொங்கொளித்தாரகை
மேவுமெண்ணினில்விண்ணில்விளங்கெலாத்
தேவுமானவிச்சேதுகண்டார்பிய
னேவனெண்ணுவன்சேடனுமெண்ணலான். (௧௫)

அண்ணல்காகுத்தனாழ்புனற்சேதுவைக்
கண்ணினாலொருகாற்கண்டமானவ
னெண்ணில்வேள்விதவம்புனல்யாத்திரை
பண்ணிமுற்றியபண்புடையானரோ. (௧௬)

மேதினிப்பிறவேறொருவன்றனைப்
போதிசேதுவிற்கென்னப்புகன்றவ
னோதுமிப்பயனெல்லாமுறுமெனில்
யாதுபற்பலயாம்பகர்கின்றதே. (௧௭)

மூழ்குமானுடன்மோதலைச்சேதுவி
னேழுகோடிகுலத்தொடுமேகுவா
னூழியானகரங்கணின்றேமுனஞ்
சூழுமாயத்தொடர்பினைநீக்குவான். (௧௮)

கந்தமாதனவோங்கலைக்கண்ணுத
லெந்தைதன்னையெறிதிரைச்சேதுவைச்
சிந்தைசெய்தவன்றீவினைப்பாலெலா
மந்தமாகுவதுண்மையதன்றியே. (௧௯)

ஈன்றதாய்தந்தையென் னுமிருவழிச்
சான்றகோடியிலக்கந்தமருடன்
மூன்றுகற்பஞ்சிவபதமுற்றிமே
லான்றமுத்தியவனின் றடைகுவான். (௨௦)

சேதுமூழ்கினன்றீமையைந்தாற்றினும்
வேதன்வாழ்தினமூன்றெழில்விண்டுவூர்
தாதைதாய்தன்றமர்சதகோடியோர்
காதல்செய்யக்கலந்தவண் கட்டறும். (௨௧)

விழுமவெங்குகைமேனின் றுருகிடான்
வழுவழுத்தவசைக்*கிணறுழ்ந்திடா
னிழுமென்வைதரணிக்குளிழிந்திடான்
றெழுதுசேதுவின்மூழ்கியதோமிலான். (௨௨)

வளைந்தவான்ஞமலித்தசை தின்றிடா
னுளைந்துதானுமுணவதற்காகிலான்
களைந்தமூத்திரபானங்கருதிடான்
விளைந்தகாதலிற்சேதுவின்மேவினோன். (௨௩)

காய்ந்தகுலினிற்கல்லிற் கரிந்திடான்
சாய்ந்தசோரியுடன்புழுத்தானுண
னேய்ந்தமுள்ளிலவேருன்மலமடுத்
தோய்ந்திடான்முன்னஞ்சேதுவிற்றோய்ந்துளான். (௨௪)

செருமித்தாழுஞ்சிலைமழைதீமழை
கருவிற்காய்புனல்காரவெந்நீர் கடுங்
குருதிக்கூவல்குளியான்கொடுந்தழல்
வெருவிப்பாய்கிலான்சேதுவின்மேவினோன். (௨௫)

சென்னிகீழ்ப்படத்தூங்கான்சிலைமரந்
துன்னுசெக்கிலனைப்புண்டுசோர்ந்திடான்
வன்னிமீதுபுரளான்மருத்தினு
வின்னல்வந்துறுன்சேதுவினேகினோன். (௨௬)

மண்டுகாமநீர்மாந்தான்மலத்திர
ளுண்டல்செய்யானுடலினும்பூசிடான்
றண்டமோதத்தபித்துப்பெருந்துயர்
கொண்டழுங்கான்குரம்பிற்குறுகினோன். (௨௭)

வைத்தகூரரிவாளினரிவுறுன்
பித்தங்கோழைபெருகுகைப்புண்டிடா
னத்திசேர்தசைவெஃகானறுப்புணன்
முத்தனுகுவன்சேதுவின்மூழ்கினோன். (௨௮)

துன்றுபாந்தட்டுளைப்பற்கதிப்புணன்
குன்றுநேர்கரிக்கோட்டாலறைபடா
னன்றிக்காய்சிலையெண்ணெயயின்றிடான்
சென்றுதெண்டிரைச்சேதுவிலாடினோன். (௨௯)

---

* வசை — நிணம்.

வெந்தநுண்மணலாழான்விழுந்தெழா
னுந்துதீமுனையூசியிருந்திடான்
முந்துகாரமுகத்தினுமூக்கினுஞ்
சிந்தமாழ்குருன்சேதுவின்மூழ்கினேன். (௩௦)

உருவிலென்புபிடுங்கவொடுங்கிடான்
றருவினின்றுமலத்திடைத்தாழ்ந்திடான்
வெருவுமூவிலைவேலால்விளிந்திடான்
பொருவில்சேதுவின்மூழ்கியபுண்ணியன். (௩௧)

தீயபாசத்திற்றேகம்பிணிப்புறான்
பாயும்வெம்புகைநுங்கான்படைமிசை
காயிருப்புப்பலகையிற்கண்படான்
றூயசேதுக்குடைந்தெழுந்தூயனே. (௩௨)

ஆக்குமுண்டையயத்திரளாண்குறி
தூக்கவாடிலன்சூசிமுகத்தினி
ஞெக்கிற்சந்திற்செருகநடங்கலான்
றேக்குவார்கடற்சேதுவிற்சேர்ந்தவன். (௩௩)

இனையதீநரகெண்ணிலவெண்ணினுந்
தனைவருத்துந்தகைமைமற்றென்றினு
மினையுமாறிலனீள்கடற்சேதுவி
னனையுமெய்யுடைநன்னலமானவன். (௩௪)

பாதகந்தவப்பண்ணினனாயினுங்
கோதுநீங்குநிரயங்குறுகிடான்
சேதுவீசுந்திரைப்புனலாடிடப்
போதுவேனென்றுநூறடிப்போதினும். (௩௫)

அணியிராமனணைமிசைக்கண்படும்
பணியர்காத்திரம்பற்றியநுண்மணற்
கணிதமந்தணர்க்கொன்றகரிசெலாந்
துணியுமின்றிதற்கையுறல்சூழ்ச்சியே. (௩௬)

கூறுகோசலநாடன்குரம்பினில்
வீறுசீதளமாருதமேற்படி
னூறுநூறுமதுவினுகர்ச்சியா
லேறுதீவினையீறுறுமக்கணம். (௩௭)

கொழித்தமுத்தக்குளிர்புனற்சேதுவின்
மழித்தசென்னிநவிருளைவைகினுற்
பழித்தகுங்குருதற்பம்*பயில்பவ
மொழித்தகற்றிடுமோர்பதினாயிரம். (௩௮)

பைம்பொனெற்றும்படரலைச்சேதுவின்
றம்பவுத்திரபுத்திரர்தங்களால்
விம்பவென்புதிலக்கணம்வீயுமா
லம்பொனின்கரவையிரண்டாயிரம். (௩௯)

* தற்பம்—மனைவி, சயனம்.

வணர்கொளுஞ்சிலைவள்ளலிராகவ
னணையினல்வகையாம்பெரும்பாதகர்ப்
புணருந்தீமையுமொல்லையிற்போயிடு
முணருநெஞ்சினுடன்புகுந்தாடிலே. (௪௦)

வழிதிரிப்பவன்மாதவர்வேதியர்ப்
பழுதுரைப்பவன்பாகந்தற்காக்குவான்
கழியுமூணன்கடிமறைவிற்பவ
னழிவிலந்தணர்க்கொன்றவனாவரும். (௪௧)

பூசுரர்க்குப்பொருடருவேனெனப்
பேசிப்பின்னரிலையெனும்பேதையுந்
தேசிகர்ப்பணியானுஞ்சினமுறு
மாசினனுமறையவர்க்கொன்றவர். (௪௨)

விப்பிரக்கொலைசெய்தவன்வேட்டுநீ
ரொப்பிலானினஞ்செல்வதையோட்டுவா
னிப்பவத்தினரின்னவர்தீங்கெலாஞ்
செப்புஞ்சேதுவிற்றீர்வதுதிண்ணமே. (௪௩)

தினமுமங்கியிற்செய்கடனீத்திடும்
பனவன்கூட்டம்பதிதன்கணிகையூண்
வினையிறேவருணுண்பவன்வேரியுண்
வனிதைகேள்வனிவர்மதுமாந்தினோர். (௪௪)

கந்தமூலங்கனிபழுக்காய்துகில்
சந்தமான்மதம்பாளிதந்தாமிரம்
வந்தகஞ்சமதுநெய்பால்கண்டிகை
தந்தகள்வன்றபனியக்கள்வனே. (௪௫)

தோற்றினனுடன்றோன்றியமங்கைமார்
மாற்றினண்பன்மகன்மடவார்மது
நாற்றவாயினள்பூத்தவணம்பினள்
பேற்றினீனமடந்தைபிறனிலாள். (௪௬)

கோவைவாயிதழுண்டார்குருமனை
மேவினர்பிறர்மெய்ந்நெறிக்கின்னவர்
பாவமுற்றவும்பற்றறுமற்றெனோ
தாவில்சேதுவிற்றாழ்ந்தவளவிலே. (௪௭)

சொல்லினருடன்றோழமைவந்திடப்
புல்லினர்பிறபுன்மையர்யாவருஞ்
செல்லினர்கடற்சேதுவினடலா
லல்லினடுமடிநிழல்சேர்வரே. (௪௮)

நாகம்வேட்டுறைநாகனாவன்னியைத்
தாகம்வேட்டதரணியைத்தாழ்தலும்
யாகம்வேட்டலுமின்றியரம்பையர்
போகம்வேட்டவர்போதுமின்சேதுவின். (௪௯)

மண்டலம்பொன்வழங்குநற்றுனியக்
தண்டுலந்தரனேன்பிற்றவிப்புடற்
கொண்டழுங்குறல்வேண்டாங்குரம்பினீர்
கண்டுமூழ்கிற்கடவுளராகலாம். (௫0)

சேமமிக்கபுராணஞ்சிறப்புடன்
றாமனந்தருசேதுவிற்றோய்தலை
யோமம்வேள்வியுதவிதவஞ்செப
மாமிவற்றினதிகமென்றோதுமே. (௫௧)

பூண்டுளத்திற்புரிவதொன்றின்றியே
சேண்டொடுந்திரைச்சேதுவினாடிடின்
மீண்டெழுச்சிவியனிலத்தில்லையா
மாண்டவந்தணிரிவ்வுரைவாய்மையே. (௫௨)

வளம்விரும்பினும்வான்மடவார்முலைத்
தளம்விரும்பினுமொன்றுடன்சார்பிலா
வுளம்விரும்பினும்வேண்டிற்றுதவுமா
லளம்விரும்புமலைகடற்சேதுவே. (௫௩)

தீங்குநீக்கித்திருவளர்நல்வினை
யோங்கநல்குமுயர்பினதாதலாற்
பாங்குசேர்கடற்சேதுபடிந்துளோர்
தாங்கள்காமுறுமின்பந்தருவதாம். (௫௪)

எச்சம்யாவினுந்தீர்த்தமெவற்றினு
மச்சநீங்குமளவையில்யோகினும்
விச்சைநோன்புபலவினுமிக்கதான்
முச்சகம்புகழ்சேதுவின்மூழ்கலே. (௫௫)

சேயவிந்திரனாட்டைச்செழுந்துழாய்
மாயனூரைமலரயன்வைப்பினை
மேயவீசன்கயிலையைவேண்டினோர்
தோயவாரிதிச்சேதுவிற்றோய்கவே. (௫௬)

செல்வமாயுள்சிறப்புத்திருமறைக்
கல்வியேனைக்கலைமனுக்கைவரு
லொல்வதேதுமற்றுண்மையிற்றந்திடு
மல்வருங்கடற்சேதுவினாடலே. (௫௭)

அன்பின்மூழ்கினுமன்றிப்படியினுந்
துன்பமிம்மையுமம்மையுஞ்சூழ்ந்திடா
வின்பிலொற்கமெனும்பணிசெற்றிடும்
வன்புள்வேந்தனும்வார்கடற்சேதுவே. (௫௮)

பொருவில்சீதப்புதுமதிபோலவு
மருவும்வாரிமணித்திரண்மானவுந்
தருமராசிதழைக்கும்பவத்திர
ளொருவுஞ்சேதுவைக்காணுமுயிர்க்கெலாம். (௫௯)

தேவரான்றருச்சிந்தாமணியிவை
யாவுமேற்பவர்க்கிதருந்தன்மைபோன்
மேவியாடினர்வெஃகியபேறெலா
மோவில்சேதுவுதகமுதவுமே. (௬௦)

தேடற்காம்பொருளின்மையிற்சேதுநீ
ராடற்கேகானதிஞர்பால்வாங்கியு
நாடிப்போயவண்மூழ்குகநல்கினேன்
கூடக்கொள்ளுங்குளித்தவன்கொள்பயன். (௬௧)

சொற்றசேதுவிஞடத்தொகும்பொரு
ளற்றதேற்கொள்கவந்தணர்பாலன்றி
மற்றுமன்னர்வணிகர்கைக்கொள்ளலாங்
குற்றம்வாழ்க்கைத்தொழிலர்கைக்கொள்வதே. (௬௨)

பட்டம்பொருண்முதற்பல்வகைத்தானிய
மிடங்கொணெஞ்சத்திசைந்தனநல்கியே
தடங்கொள்சேதுவிற்சார்கென்றொருவனைத்
தொடங்கலாற்றித்துணியச்செய்தேவினேன். (௬௩)

ஆசிலாரணபாராயணத்தினல்
வாசிமேதமுதலமகங்களா
லேசில்வான்றுலையாதியவீகையாற்
பேசுமாண்பயனெல்லாம்பெறுவனல். (௬௪)

பாரிலேகாப்பழிமுதற்பாவமும்
வேருடன்கெடும்வேண்டியவின்பெலா
மாருமென்கொலறைவதுபல்லயாஞ்
சேருமிப்பயன்வாங்கிச்சென்றுனுமே. (௬௫)

கோசலத்தவர்கோமகனுற்றிய
தேசுடைப்புனற்சேதுவின்மூழ்குறு
மாசைமேற்கொண்டிரக்குமவர்கள்பால்
யாசகத்தினிழிவரவில்லையே. (௬௬)

புஞ்சமார்புனற்சேதுவிற்போதுநீ
யெஞ்சலில்பொருளீவனென்றீந்திடா
வஞ்சன்றன்னைமறையவராருயி
ரஞ்சநீத்தவனென்பரறிந்துளோர். (௬௭)

செயிரில்சேதுவிற்செல்வதுசெப்பியே
பயில்பெரும்பொருள்கொண்டுபடர்கிலா
வயிரநெஞ்சனைமாநிலத்தேவர்க
ளுயிர்கவர்ந்தவனென்னுமுலகமே. (௬௮)

குடையப்போவன்குளக்குங்குரம்பினீ
ரடையுநன்பொருளீயுமென்றுக்கமிக்
குடையனுபுமொருவர்கையேற்றிடுங்
கடையனுடகக்கள்வனென்பாரரோ. (௬௯)

ஏகுமாறியற்சேதுவிற்கெவ்வகை
யாகுமவ்வகைசெய்மினசத்தரோ
லீகைவேண்டுவவீந்தும்விருப்பினாற்
போகவேவுமின்பூசுரர்தம்மையே. (௭௦)

ஓங்குவேள்வியுஞற்றற்பொருட்டினா
லீங்குவேண்டுவயாவர்கணேற்கினுந்
தீங்குறுதெனிற்சேதுவிற்போதுவான்
வாங்கலாம்பொருண்மற்றெவர்பாலினும். (௭௧)

வேறு.

முன்குலாயவுகத்தினின்முத்திதான்முந்தைஞானவுணர்ச்சிபுணர்ப்பதா
நன்குலாயவிடைக்கணுகத்திலேநம்புவேதமகத்திலுதிக்குமே
பின்குலாயவுகத்தினிரட்டிதான்பிந்திடாதகொடைக்கண்விளைக்குமான்
மன்குலாவுமுறைத்தவுகத்தெலாமன்றல்சேதுநனைத்தலளிக்குமே. (௭௨)

சேதுசருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩௩௧.

---

# சேதுவந்தசருக்கம்.

---

என்றுசூதனெறிகடற்சேதுவின்
றன்றுமேன்மைகள்சொற்றிடக்கேட்டுளத்
தொன்றுமன்பினராகியுயர்தவ
வென்றிமாதவர்பின்னும்வினவுவார். (௧)

வேறு.

எந்தவாறடல்சேரிராகவனிந்தவாழியடைத்தனன்
கந்தமாதனவெற்பினீடுயர்காமர்சேதுவினெவ்வள
வுந்துதண்புனலாடவுள்ளனதெள்ளுசூதவுளங்கொள்வான்
முந்துரைத்தருளென்றுபண்ணவர்மொழியமற்றவன்மொழிகுவான். (௨)

வரம்பின்மாதவிர்நீவிர்கேண்மினிர்மன்னுகாதலின்முன்னமே
குரம்புகண்டமைகூறுவன்கிளர்கோசலத்திருநாடர்கோ
னிரம்புகாதலிசீதைபின்வரநீடுதம்பிதன்னொடுநேர்
தரம்பெருவுயர்தாதைசொற்படிதண்டகாடவிமேவினான். (௩)

நலஞ்செய்பஞ்சவடிக்கண்வைகிடுநாளின்மாரிசன்மாயையாற்
பொலஞ்செய்தேவியைராவணன்கொடுபோகமோகிதபோதனாய்
நிலஞ்செய்கானகமெங்குமால்கொடுநேடியங்கெதிர்நேர்படப்
பலஞ்செய்வானரமொன்றுநின்றதுபம்பையின்கரைகண்டனன். (௪)

ஆவதோர்பொழுதனையவானரமங்கைவில்லொடுவந்திடுங்
காவலன்றனையிளவலோடெதிர்கண்டுவந்தெழுகாதலா
னீவிரன்னவரின்னகானிடைநேரவந்திலர்முந்திநீர்
யாவர்வைகுவதெங்ஙனும்பெயரோதணேந்ததெனென்றதே. (௫)

விற்கடப்பரும்விறலிராகவன்மேயதன்னிலைகேட்டிடு
மற்கடத்தொடுகூறிமுற்றவுமற்றதன்றிறம்வினவினான்
சொற்கடற்றுறைகண்டவக்கவிசொல்லுபேரனுமானெனக்
கற்கடற்சுடர்பானுமைந்தனமைச்சனாகுவனடியனேன். (௬)

எங்கண்மன்னவனுன்னுடன்றொடர்பெண்ணியிங்கெனையேவினா
னங்கண்மேவிடில்யாவுநன்மையவாகுமென்றிடவாதபன்
றங்கமைந்தனிருக்கையுற்றனனுற்றபோதிருதூயருந்
தங்கணண்புவிடாதழற்கரிதந்துகொண்டனர்தகவினால். (௭)

உறுதிபேசினன்வாலியாருயிருண்பனென்றுலகுண்டவ
னறுதிகூறினனவனுமாதினையாய்ந்துதந்திடுவேனெனாப்
பெறுதியின்னனசெய்கையாகியபின்றையொன்றியவிருவரு
மிறுதியின்றுயரன்பினாயிடையினிதிருந்தனரந்தநாள். (௮)

செய்யபானுவினீள்பிறங்கடைதேறிடும்படிசேவடித்
துய்யபேர்விரல்கொண்டளப்பருதூரமுந்தியெறிந்தனன்
வெய்யதுந்துபிகாயமன்றியுமிக்கசாலிகளேழையு
மையதீர்வுறவெய்தனன்மழைவண்ணனன்றொருவாளியால். (௯)

இச்சயச்செயல்கண்டுகோடரவேந்தனிந்திரனாலுமிங்
கச்சமெற்கிலையுனதுநண்பினரக்கனாற்றலழித்தியான்
கச்சறுத்தகல்வட்டவானகவெளியடைத்தெழுகதிர்முலை
மைச்சுருட்குழன்மாதைநல்குவன்மதிலயோத்தியர்மன்னனே. (௧௦)

விந்தைசேர்புயவாலிவன்மையின்மேவிவாழ்வுறுமிக்ககிட்
கிந்தைசேர்குதியென்னொடென்றுகிளர்ந்தனன்கிளர்சூரியன்
மைந்தன்வள்ளலுநன்றெனாமகவானளித்தவன்வைப்பினைத்
தந்தநேர்முலைமயில்சுமித்திரைதந்தசேயொடுசார்ந்தனன். (௧௧)

இன்னகாலையினெல்லைமைந்தனிகன்றுசென்றறைகூவினா
னன்னசெய்கைவலாரிமைந்தனகத்துணர்ந்துபுறத்தனா
யுன்னுபோர்செயமற்றவன்கையுரத்துடைந்துவெருக்கொளா
மன்னிராகவன்முன்னர்வந்தனன்வலியவாலிபின்வந்தவன். (௧௨)

அலையில்வல்லிமணாளனந்நிலையறிவுறும்படியாலவன்
றலையில்வல்லிபுனைந்துடற்றுதிதமையனோடினியென்னலு
முலையில்வல்லழல்போலமண்டியுரப்பினானஃதுணர்வுறு
மலையில்வல்லியதோளினீடமர்வாலிவந்தெதிர்கோலினான். (௧௩)

வாங்குவிற்படையண்ணன்மற்படைவாலியாவியைமாற்றினா
னோங்குபொற்சரமொன்றிலாதபனுதவுசேய்தனதூர்புகுந்
தாங்கண்மைத்தெழுகாரகன்றபினரியினத்தொடுமவருறும்
பாங்கிலுற்றனன்முண்டகாசனைபயிலிடந்தெரிபண்பினான். (௧௪)

இவர்மருங்கிலிருந்துவானரவீரர்தங்களையேவினா
னவரின்மாருதமைந்தன்முந்தியறிந்துவந்ததையன்றியுங்
கவரில்சூடைவிளங்குமாமணிகைக்கொணர்ந்ததுகண்ணுரு
வுவரிவண்ணனிடும்பைவாரிதியுவகைவாரியொடாடினான். (௧௫)

இளவல்வானரவேந்தன்மாருதியிநில்சாம்பவனளன்முத
லளவில்கோடரவணிகவாரிதியதனெடும்பணியணையொடுந்
தளபமாலைதுறந்தவன்சுடருச்சியிற்படர்தொல்வகுந்
தளபல்சும்மைகடந்துபோயினனுயர்மகேந்திரவோங்கலின். (௧௬)

ஆண்டிராகவனுழிதீர்த்தமடைந்திருந்துழியந்நாள்
வேண்டுமந்திரமுதல்வர்நால்வர்பின்மேவமேவியவீடணற்
காண்டல்செய்தவனேடுநண்புகலந்துகண்டுகவிப்பிரான்
பூண்டசங்கையவன்குணத்தியல்போற்றுசெய்கையின்மாற்றியே. (௧௭)

முரசமார்ப்பநிசாசரக்குலமுதன்மைசூட்டியவர்க்கெலா
மரசனுக்கியதன்றிவென்றியமைச்சனுக்கினனவனையு
நிரைசெயாயிரகிரணன்மைந்தனிகர்ப்பவப்பணிநேர்ந்தபி
னுரைசெய்கின்றனன்வள்ளலொன்றவருணர்வுறும்படியுன்னியே. (௧௮)

வேறு.

ஆய்ந்திப்பதாதியளப்பரிதாமகன்றபரப்பிற்றறன்மிகுதி
பாந்தட்குலத்திற்றிரைபுரளும்பகுவாய்மகரம்பலதிரியுங்
காந்திச்சுடருஞ்சுறமறியுங்கடுங்காலெறியுங்கடியகரா
நீந்தற்கரியநெடுஞ்சலதிநீந்திக்கடக்குநெறியாதோ. (௧௯)

காணவெருவுங்கண்மனமுங்கருதாச்சதயோசனைகணிதஞ்
சேணுமுடைத்துக்கரும்படலத்தியவுருமேற்றெலிப்பகுவாய்
மாணுமுகிலின்கணமிடைந்தவருணனிருக்குமறிகடலை
யேணென்றுதவியில்லாதேயேறுமுபாயம்வேறேதோ. (௨௦)

இடுக்கண்பெரிதுதானையுடனேறும்வகையுமிலைபுணையாய்
விடுக்குந்துணையுமிவண்காணேம்பிரிந்துமிதிலைவேந்தனருள்
வடுக்கண்மயிலையையனுடன்வையமிழந்துவனம்புகுந்துற்
றடுக்குந்துயரமாறுகினுமாழிகடக்குந்துயராறு. (௨௧)

யாதுவகையானீந்திடுவேமெறியுந்தரங்கக்கடலிதனை
வேதமுனிவர்கணம்புடைசூழ்மிக்கபொதியக்கடமுனிவன்
காதியிலங்கைகாவலனைக்கறைதீர்கந்தமாதனத்திற்
போதியெனுஞ்சொற்பொய்யாமோவென்றுபுகன்றுபுழுங்கினனால். (௨௨)

இவ்வாறிராமனிரங்குதலுமிருந்ததபனன்மகன்முதலோர்
கைவாய்புதைத்துத்தொழுதிசைப்பார்கலனும்புணையுங்கைக்கொணர்ந்து
மைவார்சலதிகடத்துமெனவகுத்தாரிலங்கைமனற்கிளையா
னெவ்வாமனத்தானவரவைமுன்னுறுவதுணர்வானுரைசெய்வான். (௨௩)

தரங்கநரலைதனைவணங்குந்தகையதிராமன்றன்வழியில்
வரங்கொள்சகரரகழந்தமையால்வந்தவினையுமுடிக்குமென
வுரங்கொள்புலமைவீடணன்சொலுளங்கொண்டுவந்துபுவியுயிர்கட்
கிரங்குங்கருணைக்கடலனையானிதனையிசையவிசைக்கின்றான். (௨௪)

அகலமொருநூறியோசனையுண்டாழம்பெரிதுவானரமா
மிக்லொன்றனிகமளப்பிலவுமேறுங்கலங்களரியனவா
மிகவும்வணிகர்க்கிடர்விளையும்வேண்டாரிடைப்புக்கடுவர்வெருஉ
மகரசலதிகடத்தலிந்தவகையாலரிதான்மனங்கொள்ளா. (௨௫)

ஓராவிளம்பும்வீடணன்சொலுள்ளம்விரும்புமாகையினாற்
பாராவாரந்தனைப்பணிவன்படருநடவைபணியாதேற்
கூரார்பகழியழல்வாயாற்குடிக்கப்பணிப்பனிதனையெனு
வாராவன்பினிலக்குமனோடணிநீர்கரந்தொட்டாசமித்தான். (௨௬)

துண்ணென்றெறியுந்திரைக்கடலைச்சுருதிவழியேதொழத்தொடங்கும்
வண்ணங்கரியானனந்தனிகர்வலத்தோண்மவுலிமலரணையாப்
பண்ணும்பசும்பொன்வேதிகைமேற்பயில்பாவகன்போன்முறைப்படுத்த
தண்ணந்தருப்பைச்சேக்கைமிசைத்தடந்தாமரைக்கட்டுணைதுயின்றான். (௨௭)

உருகும்பரிவின்முறைபிறழாதுனுற்றுநோன்பினுடன்குசைமே
லிருகண்டுயிலும்பெரியோனுக்கிறந்தவொருமூன்றிரவுகண்டுங்
கருகுஞ்சலதிகடுப்பினெறிகாட்டாதொழியக்கவுசலைசே
யருகிலிளையோற்குறித்ததுபோழ்தலர்க்கண்சிவப்பவறைகுற்றான். (௨௮)

எம்மைமதியாவிருங்கடலையிருதாள்வளையவெதிர்கோலி
வெம்மைவிசிகக்கடுங்காலால்விரையக்கலக்கிவிளிந்தசுருச்
சும்மையுயர்த்திவானரத்தின்றெருகுநிடப்பத்தொகுத்தமைப்பன்
செம்மையணையொன்றதுகாண்பாயெம்பிதருதிசிலையென்றான். (௨௯)

எளியாராவர்வலியவருமியல்பிலோர்கட்பொறைபுரிந்தாற்
றளியார்சலதிவணங்குதலாற்றகையிலோமென்றிகழ்ந்ததாற
களியார்மகரமிடங்கரினங்கலங்கவளையின்குலங்கதற
வொளியார்பகழிமழைபொழிவனுததிசுருங்கவுதுகாண்பாய். (௩0)

பொல்லாநிருதர்விலங்கல்பலபுணர்ந்தபுணரிக்கிதுகாறு
மில்லாவளவையுளதாக்கியிடுவனிளையோயினியென்று
வொல்லார்புரமூன்றெரித்தவன்போலொருவில்வாங்கியுறவளைத்துச்
செல்லார்பொதும்பர்க்கோசலர்கோன்சிந்தையழன்றுசினங்கொண்டான். (௩௧)

அதரந்துடிப்பவணிபுருவநிமிரவருட்கணழலிறைப்ப
முதிருஞ்சினத்தான்கார்முகத்தைமுறுகவாங்கிமுளரியுமிழ்
கதிர்வெஞ்சரங்கவேதலுங்கடிகொண்டொதுங்கிக்கலங்கனுருற்
றெதிரஞ்சலிசெய்தார்கலிநீரிலங்குபிலநின்றெழுந்ததால். (௩௨)

எழுந்துசரணம்புகன்றழியாவின்பமுதலாமிராகவனை
விழுந்துபணிந்துகௌசிகன்றன்வேள்வியளித்தோய்விண்ணவர்க
டொழுந்தண்கழற்காற்சுந்தரனேசுருதிமுதலேதுணைப்பொருளே
செழுந்தண்மலர்ப்பூங்கொம்பருறழ்சீதைபுணருந்திருமார்பா. (௩௩)

அன்பாற்செறிவாரிடர்களையுமருளின்கடலேயகலிகையா
டன்பாற்சாபமடித்துகளாற்றவிர்க்குந்தலைவாதாடகைமுன்
வன்பாற்றரக்கர்குலஞ்சுருங்கவானோர்தழைப்பவருமுகிலே
யென்பாற்குற்றம்பொறுத்தருளியானின்றிசைக்குமிதுகேண்மோ. (௩௪)

ஆதிநாளிற்புடவிமுதலைந்துமலர்மேலயன்வகுத்த
நீதிதிரியாவெனதியல்புநிலையாநிலைமையதுமாற்று
மீதுவிகாரமதற்கிசையேனியாதொன்றானுமெனவிறையோன்
கோதிலனிகமுடனிலங்கைகுறுகக்குறுகென்றுரைசெய்தான். (௩௫)

விற்ருேள்வலியானீயிதனைவேண்டிற்றனுவின்வென்றிவினை
கற்ருேர்பிறருமடல்புரியக்கடவராவார்காகுத்தா
மற்ருேருபாயம்வகுத்துரைப்பன்வளர்வானரரில்வான்றபதி
பெற்ருேனெருவன்மயவினையிற்பெரியோனளனும்பெயர்கொண்டோன். (௩௬)

உள்ளானவன்கைப்படுந்திருணமோங்கன்முதலாவுளவெவையு
மெள்ளாதெந்தமிசைநிறுப்பனிதனலணைசெய்தேகென்றே
தெள்ளார்சலதிமறைகுதலுந்தேவர்க்குறுதிசெயவந்தோன்
விள்ளாவிருப்பினளன்றன்னைவிளித்துநோக்கிவிளம்பிடுவான். (௩௭)

வருவாய்நளநீமயவினையின்மாண்புமதியும்படைத்தமையாற்
றருவாயலைநீர்க்கருங்கடலிற்றடந்திண்குரம்பொன்றியாமெல்லாம்
வெருவாவகையான்மதிலிலங்கைமேவும்படியென்றியம்புதலுந்
திருவாய்மொழிகேட்டதற்கிசைவான்றெய்வத்தச்சன்சிறுவனியான். (௩௮)

வரமொன்றளித்தாடனக்களித்தான்மாகப்புனைவன்மயவினையிற்
றரமொன்றிலையாமெனைப்போலோர்தனயற்பெறுதிநீயென்றே
யுரமொன்றுனதுகருணையினலுததியடைப்பேனெனவுரைப்பத்
திரமொன்றிராமன்கவிகளெல்லாஞ்சென்மின்குரம்புசெயவென்ருன். (௩௯)

கருடனெனவுங்காற்றெனவுங்கடியகவியின்கணமெழுந்தே
யருடங்கிராமன்றனைவிடைகொண்டவனியடங்கப்படர்ந்தெங்கு
மிருடங்கடவிமரங்கொடிபுல்லிருங்கல்லெவையுமெடுத்திடலும்
பொருடங்குலகிற்புனைவன்மகன்பொங்குமகராலயமடைத்தான். (௪௦)

இப்பான்மையினலிழைத்தகரைக்கிடம்யோசனைபத்தெழுபதொடு
முப்பானீளமிக்குரம்பின்மூலங்குளிக்குமுத்தர்பால்
வைப்பான்கருணைமதிமவுலிவண்மைவிரதமகந்தவஞ்செய்
மெய்ப்பான்மையினேரிடத்துறையும்வினைகள்யாவும்விளிந்திடுமால். (௪௧)

பயங்கொளிருளின்படங்கிழிக்கும்பரிதியொளிபோற்படியிலதாம்
வயங்கொளிராமன்வானரத்தால்வகுத்தசேதுவதன்மூல
நயங்கொடருப்பசயனமெனஞாலம்பகருநான்மறையீர்
கயங்கொள்கடலின்முன்சேதுக்கண்டமுறையின்கதையீதால். (௪௨)

கட்டுமிராமன்பேரணையிற்கணிப்பிறீர்த்தமுளவவற்றின்
மட்டும்பெயருமவன்றுறந்துவந்தவணைக்கும்வகுப்பரிதா
மெட்டுமூன்றுதீர்த்தமிவற்றெண்ணுந்தீர்த்தமிவற்ருடல்
கிட்டும்பரிசன்றவைநாமங்கேண்மினடைவிற்கிளக்கின்றேன். (௪௩)

பரிதியலகைவரதமுடன்பாவநாசஞ்சீதைமடு
பெருமங்கலமேயாரமுதம்பிரமனனுமன்பெயர்க்குண்ட
மிருடீர்மலயமுனியலந்தையிராமனிலஞ்சியிலக்குமன்பேர்ப்
பொருவிலோடைசடாதீர்த்தம்புண்டரீகமகள்பொய்கை. (௪௪)

அங்கிதீர்த்தமவற்றினுமோராழிதீர்த்தஞ்சிவதீர்த்தஞ்
சங்கதீர்த்தந்தாழ்யமுனைதனிநீர்க்கங்கைதயங்குகயைப்
பொங்குதீர்த்தம்புனற்கோடிபுணர்சாத்தியமேமானதமாந்
தங்கதீர்த்தந்தனுக்கோடிதொகைநீர்நாமமிவையாமே. (௪௫)

வேறு.

கோசலேசனிரந்தவினங்கொடுகோதிலாநெறிகண்டகுரம்பினில்
வாசமேவியதண்புனல்சென்றவைமாதரோடுபடிந்தவர்பண்டைய
பாசவேரறும்வென்றிமிகும்பகர்பாடல்சால்பழநன்கதையிங்கிது
பேசுவார்களிறந்துபிறந்துழல்பேதைவாழ்விலிணங்கிலரென்றுமே. (௬௬)

சேதுவந்தசருக்கமுற்றிற்று.

ஆ-திருவிருத்தம் ௩௮௫.

---

# சக்கரதீர்த்தச்சருக்கம்.

---

தேவியற்சூதனீதுசெப்பலுமவனைநோக்கி
மூவிருநான்குதீர்த்தமொழிந்தனைசேதுவின்கட்
டாவிரியாதிதீர்த்தஞ்சக்கரதீர்த்தமென்றே
யாவதென்னிமித்தங்கூறென்றறைந்தனரந்தணாளர். (௧)

செப்புவானதனைச்சூதன்றிரிபுவனத்துமில்லை
யொப்புயர்பிதனுக்கித்தையுள்ளுவாருருவங்கொள்ளார்
மெய்ப்படுமிலக்கந்தோற்றமேவியபாவம்யாவு
மப்பொழுதகற்றுமுண்மையாழிநற்றீர்த்தமம்மா. (௨)

கங்கைகாளிந்திபம்பைகமழ்மணிகன்னிகைப்பேர்
நங்கையேவாணிரேவைநருமதைபொன்னிநன்னீர்
பொங்குகொதாவரிப்பேர்ப்புண்ணியதீர்த்தமொன்பா
னிங்கிவையோடுமேலாம்யாறுகளினையவெல்லாம். (௩)

பாலவாங்கோடிகூற்றோர்பகுதியுமிதனுக்கொவ்வா
சாலவுமிதனைமிக்கோர்தருமபுட்கரிணியென்பர்
காலவமுனிவன்முன்னங்கமலமின்றழுவுங்காமர்
மாலவன்றன்னைநோக்கிமாதவம்புரிதல்செய்வான். (௪)

தெக்கிணதிக்கின்முந்நீர்த்தீரத்திலாலவாய்புல்
லக்கிராமம்பாலோடையாமிவைக்கருகுசேருந்
தக்கசீர்த்தருமவாவித்தடங்கரைப்பிரமன்றனுட்
புக்குலாயவாலுணின்றிப்பொறிபுறங்கொடுத்துப்போக. (௫)

சரதவாய்மையனுயாவுந்தானெனக்காணூஉமிக்க
விரதமேற்கொண்டுசாந்திமேவிவேறிடையூறின்றி
யிரதமில்சருகுநீர்காலிவைமுறையுண்டுவேழ
வரதனைநாடிநோற்றான்வருடமைம்பஃதுநூறு. (௬)

மீண்டுமக்கனிதயாண்டுமிசைவிலன்விழுமழைக்குச்
சேண்டெறுதீவேனிற்குத்தெளிபுனற்குளிர்க்குவீடாய்க்
காண்டகுகாற்றடக்கிக்கண்ணனெட்டெழுத்துமெண்ணி
மாண்டகுகாலவன்றான்வானவர்வியப்பநோற்றான். (௭)

அதுபொழுதைம்படைக்கையம்புயமடந்தைகேள்வன்
கதுமெனவெழுந்துவிண்மேற் கருடவாகனத்தணுகிப்
புதுமலரிறைப்பவானோர்பொங்கொளிபுவனங்காப்ப
மதியுறழ்குடைநிழற்றமருங்குசாமரையிரட்ட. (௮)
பாசடைநடுவட்பூத்தபதுமமொன்றென்னமார்பிற்
றேசுடைத்திருவயங்கச்செங்கையோர்வனசஞ்சுற்றக்
காசுடைவலயமாரமாலிகைகவினக்கண்டோர்
மாசுடைசிறுபுன்மூரல்வையகமயக்கல்செய்ய. (௯)
புனைந்தபொன்மவுலிமின்னப்பூரியங்கலைதழைப்பச்
சுனந்தரன்முதலோர்சூழத்தொடர்ந்துகந்தருவர்பாடச்
சனந்தரன்சனகன்முன்னுந்தாபதர்தழுவியேத்த
வனைந்தபொற்குரலங்கைமாகதர்வாழ்த்தவந்தான். (௧௦)
வந்தமாதவனைநின்றமாதவன்மலர்க்கைகூப்பிச்
சிந்தைமேன்மகிழ்ச்சிபொங்கச்சென்னியாலுறவணங்கி
யிந்திரைமணாளவென்றுமீறிலாவிறைவயாவுந்
தந்துவைத்தழிக்கும்வானோர்தலைவனே*போற்றியென்றான். (௧௧)
போற்றலுந்துளவமாலைப்புங்கவன்பொருப்பினீண்ட
நாற்றடந்தோள்களாலுநற்றவற்புல்லிநல்லோ
யேற்றனவரங்கள்வேண்டுகென்றலுமிறைவநீயே
தோற்றினைவரம்வேறுண்டோசுருதியுந்தொடரொணாதோய். (௧௨)
அடியனேன்றனக்குநின்பாலன்பருளென்னநல்கிப்
படியின்மேல்வண்டெடுத்தபச்சைமென்புழுவிற்பாருண்
ணெடியகார்வடிவங்கொள்வார்நினைந்தவொம்மைநீயு
மொடிவிலாதுணர்ந்துகோடியிவணுறைந்திருத்தியென்றும். (௧௩)
தருமதேவதைதானுடத்தருதலாற்றருமதீர்த்த
மிருமைசேரிதனின்பாங்கர்யார்தவமிழைத்திட்டாலும்
பெருமிதம்பெறுவர்முன்னம்பிறைமுடிப்பிரானையுன்னி
யருமைசால்விரதநோன்பொன்றாற்றியதறத்தின்றெய்வம். (௧௪)
அன்றறக்கடவுள்காணவழல்கொண்மூவிலைவேலண்ண
லின்றனனுலகநாதாநீலகந்தரனேயெங்குந்
அன்றியபசுக்கட்கெல்லாந்தொன்னெடும்பதியேபோற்றி
யென்றதுமகிழ்ந்தெம்பெம்மானென்னநீவேட்டதென்றான். (௧௫)
வேட்டதுபிறிதின்றென்னுவேணிமேன்மிளிரும்வெள்ளைக்
கோட்டிளங்குழவித்திங்கட்குழகனைக்கோடறன்மேற்
கேட்டதுகொடுத்தானெந்தைகிடைத்ததவ்வாறுமாங்கே
மோட்டிளவானேறாகிமுக்கணற்பொறுத்ததென்றும். (௧௬)

---

* திரிமூர்த்திபரன் சிவபிரானேயாக ஈண்டு விட்டுணுவைக் கூறியது என்னையெனின், அநிருத்தன் முதலிய மூவர்க்கும் அதிபதியென்பதே இதன்கருத்தென்க. சிவனுக்கு உருத்திர விட்டுணு பிரமர்போல அவர்களுக்கும் அழித்தல் காத்தல் படைத்தல்களில் அதிகாரம் பெற்ற வியூகர்கள் உண்டென்று வாயுசங்கிதை முதலியவற்றிற் கூறப்பட்டது. பிரமாவுக்கு விராட்டு, காலன், புருஷன் என்னுமூவரும், விட்டுணுவுக்குச் சங்கரிடணன், பிரத்தியும்நன், அநிருத்தன் என்னுமூவரும், உருத்திரனுக்கு அரன், மிருடன், பவன் என்னுமூவரும், வியூகர்களென்றறிக.

பின்னரும்பிநாகபாணிப்பிஞ்ஞகன்றருமதீர்த்த
மென்னவின்பேரிஞகவித்தடமிதன்கூலத்து
நன்னெறியுழப்போர்க்கெல்லாநலமிகநல்குமென்று
மன்னருங்கயிலைவெள்ளிமால்வரையேகினுனல். (கஎ)

ஆகலினீண்டிருத்தியாயுவுள்ளளவுமென்னை
யூகமாருளத்தினுடிலுனக்கெனதருவமுண்டா
மோகமாரச்சநின்பான்முற்றியகாலைநந்தம்
வேகமார்நேமிவல்லேமேவியவ்வினையைவீட்டும். (கஅ)

எனநவின்றருள்வழங்கியிந்திரைகொண்கன்போனுன்
முனிவரன்காலவன்ருன்மூன்றெனுமமையந்தோறு
நனிகொள்சாளக்கிராமநற்சிலையருச்சித்தங்கண்
மனவிசைநிறுத்திவாயில்வருபயன்மாற்றிநோற்ருன். (கக)

ஈங்கிவன்மாகத்திங்களிலங்குவெண்பக்கநந்தை
தாங்குணவின்றிப்பின்னுட்டருங்கடனுற்றிமாலைப்
பூங்கமழ்துல்லையிட்டுப்போற்றியங்குறையும்போதி
லோங்கழல்வயிற்றரக்கனெருவன்வந்துறவன்றன்னை. (உ0)

அயிலுவான்பற்றலோடுமெருந்தவனினைந்துமாலை
யெயிலதாய்க்கனகன்சேயிலெனக்கருளென்றினைந்தான்
றுயிலராப்பள்ளிவள்ளல்சுதரிசனத்தைவிட்டான்
வெயிலவன்வழுவிப்பார்மேல்வீழ்ந்தெனமேவிற்றங்கண். (உக)

தற்றெரிந்தோடரக்கன்றலையினைத்தடிந்ததாழி
நற்றவனதனையிந்தநறும்புனற்றடத்தினுனிங்
குற்றதீங்கொழியவென்றுமுறைந்தருளென்றுபோற்ற
மற்றதுபுரிவனென்னுமாலவனேமிகூறும். (உஉ)

உன்றனையளிக்கமாயோனுதவலாலரக்கற்கொன்றே
னென்றுநின்பொருட்டிருக்கேனித்தடத்தாடினேர்பா
னின்றிடாவலகைபூதநீடுசேய்மதிவீடுண்டாந்
தென்றிசையவர்க்குப்பூசைசெய்திடிற்றேவராவார். (உ௩)

படர்ந்திடுமளவுதேவிபட்டணங்காறுமுண்டித்
தடந்தனக்கெனதுபேராற்சக்கரதீர்த்தமென்க
விடந்தருமிதனையென்னுவிரவிமுன்னுவரியாழ்ந்த
வுடம்புவர்கழிப்பான்போலவுவளகம்புக்கதாழி. (உச)

வேறு.

வாழிருந்தவமாமுனிகண்டிடவாசமுண்டகநீரிலமிழ்ந்திய
வாழியின்றிருநாமமடைந்திடுமாவியங்குறைகாலவனென்பவன்
வீழுநெஞ்சினின்மேவநினைந்தவர்வேறுதுன்பிலர்கூறுமிருங்கதை
சூழுமஞ்செவியேதினரொன்றுவர்தூயதண்புனலாடினரின்பமே. (உரு)

சக்கரதீர்த்தச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சுக0.

# துத்தமச்சருக்கம்.

சூதன்கூறுந்தொன்மொழிவண்ணச்சுதைமாந்தி
யேதந்தீருமாதவர்பின்னுமிசைக்கின்று
ரோதுங்காலவன்றனையந்நாளுமிருண்ணப்
போதுந்தீயவிராக்கதனாரோபுகலென்றார். (க)

உள்ளுமினன்னுண்மையுரைப்பேனொருகாலத்
தெள்ளலினீத்தோர்சாபவசத்தாலிவன்வீரங்
கொள்ளுநிசாசரனாயினன்வெள்ளிக்குன்றம்போல்
வள்ளறனுலவாயெனவுண்டோர்வளர்கோயில். (உ)

மாசறுமின்பக்காதன்மனத்தான்மதுரோசன்
பூசையிழைப்பார்கண்டியுநீறும்புனைமெய்ய
ரோசில்வசிட்டனுதியவொண்ணுயிரமும்மைத்
தேசுறுதக்கோர்மாதவமங்கட்செயுநாளின். (௩)

ஒண்கந்தருவன்விசுவாவசுவினொருமைந்தன்
விண்கந்தரநேர்குழன்முத்தணியாம்வெண்பாளைத்
தண்கந்தரபூகதமடவார்கட்டளைநீங்கா
வண்கந்திடறுங்கரியிற்றிரிவான்வலிமிக்கான். (௪)

மானிலைமேவுங்கலையொன்றெனவும்வழிதீம்பா
லானிலைசேரும்விடையொன்றெனவுமலர்நீபக்
கானிலைமன்னுங்கயல்விழிபாகன்கமழ்கஞ்சப்
பூநிலைவாவிப்புனல்விளையாடல்புரிகுற்றான். (௫)

துத்தமனென்பான்றூர்த்தர்குழாத்துட்சுடர்போல்வான்
பைத்தநிதம்பப்பான்மொழிநல்லார்பலரோடு
மெய்த்துகிலில்லாதாடலுமுச்சிவினைசெய்தற்
குத்தரமீனின்கொண்கனைமுன்னோருடன்வந்தார். (௬)

வந்தவர்தம்மைக்காணலுநாணுமடமின்னார்
தந்தமருங்குற்காடைபுனைந்தார்தகையில்லா
வந்தரில்வாளாதுத்தமனின்றானதுகாணூஉ
முந்தைவசிட்டன்சிந்தைவெகுண்டான்மொழிகின்றான். (எ)

அறுவையுடுத்திலையஞ்சிலைதுத்தமவதனாலே
பெறுவையிராக்கதமேனியையின்னேபெறுகென்னா
மறுவையொழிக்குந்திங்கண்முகத்தம்மயில்போலுஞ்
செறுவையயிற்கண்மாதரையும்பார்ச்செலுமென்றான். (அ)

நீன்முகிலோதிமாதருரைப்பார்நிகழ்வேதன்
கான்முளைதாளில்வீழ்ந்தருள்வேலாய்கதிகண்டோய்
வான்முளைதிங்களின்மக்கள்பயக்கினும்வந்தைக்கும்
பான்முளைமூரலவர்க்குமிரண்டிலைபதியின்றேல். (௯)

இற்றிடனன்றிதிலெங்கள்பொருட்டாலிவனாற்றுங்
குற்றமமைத்தருளாளுடையார்குறைகொள்வாரோன்
மற்றெவர்காப்பவரொன்றலுநஞ்சொல்வழுவாகா
பற்றியவாண்டொருபத்துடனாறுபடுங்காறும். (௧0.)

சாலகடங்கடனாயிவனெங்குந்தடுமாறிக்
காலவர்தம்மைச்சக்கரதீர்த்தக்கரைகாணாக்
கோலவுணாவிற்பற்றிவிழுங்கக்குறுகுங்கால்
மாலவனெஃகஞ்சென்னியறுக்கும்வந்தங்கண். (௧௧)

பின்பிவனிந்தச்சாபமுநீங்கிப்பிடியன்னீர்
முன்பெனநம்பான்மேவுவனென்னாமுனிவோர்க
டன்புறனாகவசிட்டனடந்தான்றலைவன்பா
லன்பிலலைப்புண்டன்னவர்தழுவினரழுதாரால். (௧௨)

சாயமிளம்பிறையோடமர்நள்ளிருடனைமானத்
தீயவிர்குஞ்சியும்வெள்ளெயிறுங்கொடுதிரணீல்க்
காயமுமேவினனன்னவன்வஞ்சியர்கண்டஞ்சிப்
போயினர்விண்மிசைபொன்னிறமஞ்ஞைகள்போமாபோல். (௧௩)

பூண்டவிராக்கதன்வாளரிமான்கரிபுரிகானில்
வேண்டுகொலைத்தொழில்செய்துழல்காலையில்விதிநன்கா
னீண்டவனேமிதடத்துறைகாலவனோர்சென்றா
னாண்டொருபத்துடனாறுநிரம்பியதந்நேரம். (௧௪)

கோமுனிகாலவனாவியையுண்டிகொளும்போழ்தி
னேமிதடிந்ததவன்றலைசாபமுநீங்குற்றே
மாமகள்கோன்படைதன்னைவழுத்தினன்வானோர்கள்
பூமழைசிந்திடமுன்னமர்பொன்னகர்போயுற்றான். (௧௫)

ஆழியையேத்தியகன்றதுசாபநின்னருளாலே
வாழியவென்றுயர்காலவர்காலில்வணக்கஞ்செய்
தேழிசைவல்லவனேகியபின்முனியிந்நீரிற்
சூழொளிநேமியைவைகெனவேண்டுபுசொன்னால். (௧௬)

அப்படியாகுகவென்றதுநேமியுமறவீர்கா
ளிப்படியாகுஞ்சக்கரதீர்த்தத்தியல்பென்றான்
மெய்ப்படுசூதன்கேட்பவர்பின்னுமியலிந்நீர்
மைப்படிகூந்தற்றேவிபுரத்தின்மட்டுண்டேல். (௧௭)

கிடைகொள்குசைப்புற்பள்ளியுளன்றிக்கிளர்வாவிக்
கிடைநடுவிற்றதெனென்றனர்சூதனிசைக்கின்றான்
புடைவிரிநீள்சிறைகொண்டுபொருப்புகள்புயல்சூழ்வா
னடைவழிபோகியிருந்தனபார்மேனகரொங்கும். (௧௮)

தொழுகுலவந்தணர்வேள்விசிதைந்தனதொன்னீதி
வழுவினவிந்திரனாடுபுவச்சிரவயிர்வாயாற்
குழுவுறுகுன்றின்சிறகவைபற்றிக்கொய்திட்டான்
முழுதும்விலங்கல்கலங்கிவிழுந்தனமுந்நீரில். (௧௯)

வேறு.

விரிசிறையரிபடுமென்றுகன்றியவிசையொடுபடர்சிலவென்றியொன்றிய
கிரியினமிதனையுமண்டுதெண்டிரைகிளரொலிநரலையினெஞ்சுகொண்டிதி
லரிமையினிருதலையுந்தணந்தலருவளகவகவையினன்றுதுன்றலி
னெரியுமிழ்பரிதியலந்தையென்றிடுமிணைதவிரிஃதிடையின்றின்றதே. (௨௦)

துத்தமச்சருக்கமுற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் ௪௩௦.

---

# விதூமச்சருக்கம்.

---

நீன்மைமேனியனேமியந்தடத்துறைநிறைநீர்
மேன்மையுள்ளதுவிளம்புவதின்னமுமெய்ந்நூற்
பான்மைநாடியபடிமையீர்கேண்மினீர்பரிவால்
யான்மைதீர்புகழ்வியாதனதருளினுலிசைக்கேன். (௧)

மேலைநாடுறைவசுக்களில்விதூமனென்பவனு
மாலநேர்விழியலம்புசையென்னுமோரணங்கு
ஞாலமீன்றவன்வாய்மையானரர்களாய்ப்பிறந்தார்
தாலமீதவர்சாபநீங்குற்றதித்தடத்தில். (௨)

வேதநான்முகனிங்கிவர்தங்களைவெகுளற்
கேதுகாரணம்யார்வயிற்றுதித்தனரிவர்பாற்
கேதமோடியதெவ்வகைகிளக்கெனக்கேட்ட
ராதலாலஃதறைகுவன்றெளிமினீரடைவால். (௩)

முன்னைநாளுலகுதவியமுண்டகமூர்த்தி
மன்னுநாமகண்மருங்குசாவித்திரிவயங்கப்
பொன்னினாடுடைவேந்தனும்புலவரும்போற்றப்
பன்னுமேழிசையாணருஞ்சித்தரும்பரவ. (௪)

பதமகன்றடைந்திடுமவர்பதத்திருவோடு
மிதமுடன்றொழுவெய்துநரிவர்களைவேறு
விதமுறத்தெரித்தவரவர்மெய்ப்பெயர்விளம்பிக்
கதமில்கட்டியங்காரர்பல்லோரெதிர்காட்ட. (௫)

ஆதிவானவக்கதிவிடுத்தவனிமேற்பிறக்கப்
போதுவார்தமைக்கண்டவனேனையபுலவ
ரோதமார்புவிமக்களோடிங்கெமக்கென்ன
பேதமென்றுளம்பேதுறீஇத்தமிற்சிலபேச. (௬)

மெய்த்தநன்றயன்வினவலுமேவியதேவ
ரித்துணைப்பொழுதருளினுலிருந்தனமென்கை
வைத்தநற்பதத்திருத்தினுமாற்றினுமுனது
சித்தமேயினியென்றிடுங்குறிப்பினைத்தெரிப்ப. (௭)

இந்திரத்திருநீங்கிவந்திருப்பவர்மகவான்
வந்திடச்சசிவருதலுமருவிவாழ்நாளிற்
றந்தருளுறவெண்ணியேதையலார்தம்மைப்
புந்திநம்பிடலாகுமோவென்றுளம்புழுங்க. (அ)

கடிகொளாருயிர்க்கமைத்திடுங்கதியளவுணர்த்தும்
படிவநான்முகமெண்டிசாமுகத்திருள்பருக
முடிவிலாவிழியருட்புனன்முனிக்கணமுகப்பச்
சுடர்கொண்மார்பினுன்மேருவெள்ளருவிபோற்றுளங்க. (கூ)

குழுவிஞேயர்பற்பலபகிரண்டகோடி
முழுதுமீண்டியசராசரவணுக்களின்முடிமேற்
பழுதுறுவினைப்பயன்படப்பற்றிகலின்றி
யெழுதுசெங்கைசேரங்குலியாழிநின்றிலங்க. (க0)

பானிறத்தெகின்வாகனம்பவுரிகொள்வதுபோல்
வானிறப்பெருஞ்சாமரையலமருமருத்திற்
றூநிறச்சிறுகுடுமியின்சுருக்கவிழ்ந்தலையப்
பூநிறத்தொடைமிலைந்ததோள்வலயங்கள்பொலிய. (கக)

முனிவராதியர்முறைமுறைவணங்கிடமொழியும்
புனிதவாசகமிறுதிநீத்தவர்கள்பாற்பொருப்பில்
வனிதைநாயகன்பேரருள்வழங்கிடவாஞே
ரினியவாரமுதெழுந்தவஞ்ஞான்றுபோலீண்ட. (கஉ)

ஈன்றதேவருமுனிவருமித்துணையென்று
தோன்றவெண்ணியதொகுத்தபோற்றிரண்டதொல்லவைக்கட்
சான்றவந்தணன்சத்தியவுலகின்மேற்றலைநா
ளுன்றவார்குழலரம்பையர்நாட்டியங்கண்டான். (கங)

பாதநூபுரப்பரலொலிபரதநூல்பகரச்
சோதிமேகலைபொன்மயிற்றேகையிற்றுளங்கக்
காதல்வானவர்விலையமோகாமரொண்கவிஞே
யாதுகண்களாற்பருகுவம்யாமெலாமென்ன. (கச)

வீணையுட்டுளைவேயிசைபல்லியவிதங்கள்
யாணர்பேரவையிருந்தவர்செவிக்கமுதிறைப்பச்
சேணதிச்சிறுசிகரந்தென்றன்மேற்சிதற
மாணிழைச்சுடர்மடந்தையர்நடித்தனர்மரபால். (கரு)

அவர்தமிற்சிலர்நடித்தபினலம்புசைநாமத்
துவரிதழ்க்கொடியாடினளவளுடைத்துகிலைப்
பவனனீக்கினன்மீதெழப்பயில்விளையாட்டாற்
சவையில்வெள்கினரயன்முதலோர்தலைதாழ்த்தார். (கசு)

வளைத்தவின்மதன்வசுக்களில்விதூமனைமார்பந்
துளைத்தலான்முகங்கவிழ்த்திலனவள்குறித்தோற்றந்
திளைத்தகாதலிற்பார்த்தனன்கேசவனிலஞ்சி
முளைத்ததாமரைமகனதுதெரிகுறீஇமொழிவான். (கஎ)

வென்றிசால்புகழ்மேதகுவிதூமனீகேண்மோ
நன்றுநாமவையோருடன்முகிழ்த்திடநயன
மொன்றுகாதலினலம்புசையூருவின்மூல
மின்றுகண்டனைவெள்குருதிதுனினக்கியல்போ. (௧௮)

தன்னைநேரொழிலலம்புசைதானுமற்றங்க
ணுன்னைநோக்கினுள்வேணவாவுததியூடிற்றாள்
பின்னையென்கொலோபேசுவதீங்கெனுப்பிரமன்
மன்னுசாபமன்றவர்பெறுமாற்றினால்வகுப்பான். (௧௯)

மண்டலத்தினீர்மனைவியுமணாளனுமாகி
விண்டலத்தைவிட்டுதித்திராலென்றனன்விரிஞ்ச
னண்டமெத்துயிருணர்வுசேர்வினையறிந்தமைப்போன்
கண்டதற்கமைத்திடுவதோர்புகழ்மையோகழறில். (௨௦)

வெய்யசாபமீதடைந்துழிவிதூமனவ்வேதன்
செய்யதாள்பணிந்தடியனேனித்துணைத்தீமைக்
கையவாற்றலனளியனேனருள்புரியென்றான்
வையமீன்றவன்விளம்புவானவற்கெதிர்மாற்றம். (௨௧)

இட்டசாபமீதகன்றிடாதிவளொடுமினிநீ
வட்டமாநிலந்தோன்றியேவசுந்தராபுரந்து
மட்டகன்றநாளின்பமுற்றிருந்தபின்மணிப்பொற்
சுட்டிசேர்நுதலலம்புசைதருவளோர்சுதனை. (௨௨)

காளையன்னவன்றன்னையக்கருங்கடற்புடவி
யாளவைத்ததன்பின்னர்நீதென்றிசையாழி
நீளமார்கரையூடுசேர்நெடியவனுழிக்
கோளிலாப்பெயர்கொண்டநீர்வாவியிற்குறுகி. (௨௩)

நானமாற்றியேயிவளொடுநண்ணியமக்கண்
மேனிபாப்புரிதோலெனவீட்டியேவிண்மே
லானநின்பதமடைகுவாய்சாபமீதந்தத்
தேனறுந்தடத்தன்றியேதீர்ந்திடாதென்றான். (௨௪)

நாற்றலைப்பெருமானிதுநவின்றிடக்கேட்டு
வேற்றுவாசகம்விளம்பிடான்விதூமனும்வெள்கி
யேற்றதன்புரத்தெய்தியேயிருந்தபினிந்த
மாற்றமோதியவிரிஞ்சனைநினைந்துதன்மனத்தில். (௨௫)

தாதையார்நமைப்பயந்துபாற்றடமுலையூட்டுங்
கோதையார்நிலத்தெனக்குறித்துணருவான்குலவு
மோதையார்கவுசாம்பியென்றுள்ளமாநகரின்
மேதையார்சதானீகனென்றுரைத்திடும்வேந்தன். (௨௬)

முன்னமாரணையுதவியமுகுந்தனேபோல
வென்னைஞாலமேலீன்றிடுந்தாதையவ்வேந்தல்
பன்னிவிண்டுமாமதிப்பெயர்படைத்திடும்பாவை
யன்னையென்றெடுத்தாய்ந்துளத்தொருதலையாக்கி. (௨௭)

விட்புலத்துறைவிதூமனிம்முறையலைவேலை
மட்புலம்புகமதித்தபின்மாலியவானைப்
புட்பதந்தனையிவரொடும்புகழ்ப்பலோற்கடனைக்
கட்புலத்தெதிரழைத்தனன்புகுந்தவாகரைவான். (௨௮)

யானுடைப்பெருந்துணைவிர்காள்கேண்மினோயானோர்
தேனுடைக்கமலாசனன்செப்பியசாபம்
வானுடைத்திருநீக்கியேமண்மிசைநூக்க
ஊனுடைப்பிணிமாந்தர்தம்பிறந்தையின்றுறுகேன். (௨௯)

ஒன்றுமுள்ளலீரொன்றனனுரைசெவிப்புகுமு
னன்றுமூவரும்பதைப்பதைத்தழல்விழுந்தவர்போ
னின்றுகண்கணீர்சொரிந்திடநின்னையாநீங்கி
யின்றுவாழ்கலமுடனணைந்திடுகுதுமென்றார். (௩௦)

காதலாருரைகேட்டெதிர்விதூமனுங்கரைவுற்
றோதுவான்மிகுநேயமென்னிடத்துநீருடையீர்
பேதைமானுடயோனியான்பெறுகுவன்பிறழா
வேதனாணையானீவிரொன்வேண்டுதிர்வெறிதே. (௩௧)

மதாணிமார்பகன்மதிற்கவுசாம்பியர்மன்னன்
சதானிகன்மனைவிண்டுமாமதியவடன்பா
விதாகிதம்பகையுறவுவிட்டுயிர்முறையினும்
பிதாமகன்புரிபெரியசாபத்தினாற்பிறந்தே. (௩௨)

வேறுசூழ்வினையுள்ளனமண்மிசைமிசைந்து
கூறுசாபநீத்தும்மையான்கூடுறுந்துணையு
மாறுவீர்துயரமர்விரிங்கென்றனனவரிப்
பேறுநன்றெனாமறுத்தெதிர்பேசுவர்பின்னும். (௩௩)

தாழ்விலாதெமையளித்திடுந்தலைவநிற்பிரிந்து
வாழ்வதின்மிகக்கொடியதோமக்கடம்பிறவி
யாழ்கடற்புவியன்றதுநிரயமேயானுஞ்
சூழ்வதன்னுடனாமெனிலெமக்கருந்துறக்கம். (௩௪)

இங்குநின்பணியிழைத்தபோல்யாங்களும்பிறந்தே
யங்குநின்பணியாற்றிடவருளெனப்பணிந்தார்
துங்கமூவருமன்பினாற்றடுத்தெதிர்சொல்லான்
பங்கமில்புகழ்விதூமனுமதற்குடன்பட்டான். (௩௫)

உரைசெய்மூவரும்விதூமனுமுளங்கொளும்போழ்திற்
றரைசெயுற்பவமதிக்குலந்தனிலருச்சுனனும்
வரைசெய்மார்பினன்வழிச்சனமேசயன்மைந்த
னிரைசெய்பொற்றொடிப்புயன்சதானீகனாகிருபன். (௩௬)

அருணலங்கொடையறிவுசீராண்டகையமைந்த
தருணநீதியன்றடங்கவுசாம்பியிற்றகைசா
றெருணயங்கொணான்முறையினாற்புரந்தனன்றேய
மருணினைந்திடாயுகந்தரன்மற்றவனமைச்சன். (௩௭)

சேனகாவலன்விப்பிரதீகனந்தணரின்
ஞானவல்லபன்புரோகிதனரபதியொருநாண்
மானவேல்விழிமனைவியோடிருந்துழிமருவு
மேனமூவரில்யுகந்தரன்முகந்தெரிந்திசைப்பான். (௩௮)

சுந்தரத்தடமுலையிவளகட்டிடைத்தோன்றல்
வந்துதித்திலனின்னமுஞ்செய்வதென்மதியோய்
சந்ததிக்கினியென்றலுமகிழ்வுறத்தலைவன்
சிந்தைவைத்திதுநுவலுவான்றேர்ச்சியின்செல்வன். (௩௯)

மறுவில்சாண்டிலியப்பெயர்மாதவத்தொருபே
ருறுவனுண்டுமெய்யொழுக்கநூலுணர்வருளுடையோன்
செறுதல்வேண்டுதறீதுநன்றென்பவைசேரப்
பெறுகிலானவன்பெருமகத்தருந்திறல்பெற்றோன். (௪0)

நற்றவன்றனைநணுகெனநகைமுகமகவைப்
பெற்றவன்றையிற்களித்தனனவனெடும்பிரிந்த
பற்றவன்றனையடைந்தனன்பண்ணவன்படியாள்
கொற்றவன்றனக்குரிமைசேரிருக்கைமுன்கொடுத்தான்: (௪௧)

ஆதனத்தமரரசனையருந்தவனோக்கி
யாதுநச்சினையாஞ்செயவேண்டியதெவனோ
வோதெனத்தகையுகந்தரனுனைப்புகலுவந்தான்
காதலற்பெறுங்காதலான்காவலனென்றான். (௪௨)

நீவிரும்பியதுதவுதுநிகழ்சதானீக
வாவிசூழ்கவுசாம்பியில்வந்தெனுமுனிவ
னுவிபோலுலகளித்திடுமரசனோடதன்கண்
மேவியாற்றினன்புத்திரகாமமாம்வேள்வி. (௪௩)

நீங்கிவானினைத்தசரதராமனேனெனவே
யோங்குதன்பெயர்சகத்திரானீகனென்றுரைப்பப்
பாங்குசான்முனியருளினாற்பகர்சதானீகற்
காங்கண்மைந்தனாய்விதூமனன்றவதரித்தனனால். (௪௪)

ஏயசீர்யவுகந்தராயணனெனுந்தோன்ற
லாயினனமைச்சன்றனக்கனையமாலியவான்
மாய்விலாருமண்வானெனும்பெயர்மகவானான்
பாய்பதாகினிநாயகற்குரியபுட்பதந்தன். (௪௫)

மாமறைச்செயல்வல்லபன்மைந்தனாய்வசந்த
நாமமெய்தினன்பலொற்கடனிங்கிவர்நாளுந்
தாமுயர்ந்தனர்தத்தமநெறிகளிற்றணவா
வேமமன்னவன்சேய்சகத்திரானிகற்கென்ன. (௪௬)

ஐந்துவற்சரஞ்சகத்திரானீகனுக்காக
வந்தயோத்தியிற்கிருதவன்மாமனையாள்பா
லுந்துசீர்மிருகாவதிப்பெயரினாலுதித்தாள்
கந்தமார்சுருளலம்புசையென்னுமக்கன்னி. (௪௭)

ஐவர்தாமிவரம்புவிமேற்பிறந்தமர்நாட்
பைவிடப்பணிப்பற்பெயர்*படைத்தவாளரக்கன்
றெய்வநாட்டினைத்தூலசென்னிய†னென்ச்சிறந்த
வைவயப்படைத்துணைவனோடெய்தியேமலைந்தான். (௪௮)

பாந்தண்மூரலான்படைக்கெதிர்பைந்தருநாட்டு
வேந்தனிற்கலான்விறற்சதானிகனைவிளித்தா
னேந்தலிந்திரனாணையென்றிகற்படையோடும்
போந்ததூதரோடும்பரின்மீமிசைப்போவான். (௪௯)

வேள்விநாயகனாணையால்விண்மிசைப்போவா
னாள்வினைத்திறலமைச்சன்மூவரோடங்க
ணீள்சகத்திரானீகனைநெடுநிலங்காவற்
கேள்விசாலிளங்கோவெனக்கிளர்முடியணிந்தான். (௫௦)

ஏற்றம்வேறெவனிந்திரற்கிருந்துணையாகி
யாற்றலோடுசென்றும்பர்மேலரவெயிற்றரக்க
னூற்றமாரணிமுனையுறீஇயுடன்றமர்புரிந்தான்
கூற்றமோவெனமதிற்கவுசாம்பியர்கோமான். (௫௧)

கார்முகங்கொடுசேணெறிக்கடியதேர்கடவி
யீர்முகம்பயில்பல்லமெண்ணில்லனவேவிப்
போர்முகந்தனிற்பகைஞராருயிர்பலபோக்கி
யார்முகந்தருவாரெனப்பொருதிளைத்ததன்பின். (௫௨)

நெட்டுயிர்ப்பெறிபாந்தளம்பற்பெயர்நிருதன்
பட்டிடப்பொருதங்ஙனமவனுயிர்பருகி
மட்டலர்ப்பொதிகற்பகநாடர்கண்மதிப்ப
விட்டனன்றனதாவியுஞ்சதானிகவேந்தன். (௫௩)

துன்னலாரைவென்றவனிமேற்போகினுந்துறக்கந்
தன்னின்மீண்டுறவேண்டுமாற்சாவுவந்திடுநா
ளென்னபேறிதிலெனக்கவுசாம்பியரிறைவ
னுன்னுமாகவத்தாகநீத்துவணைமேலுறைந்தான். (௫௪)

வலவனிந்திரனாணையான்மன்னுடல்கொண்டு
நிலனிறங்கினன்சகத்திரானீகனேர்காணூஉ
வலமருந்துயரளக்கர்வீழ்ந்தையனைத்தழுவிப்
புலரவாயினிர்புலம்பினன்விழியினீர்பொழிந்தான். (௫௫)

தண்ணறுந்தொடைச்சகத்திரானீகனத்தந்தைக்
கெண்ணருங்கடனிழைத்தனனிறைவனோடேகாள்
வண்ணவொண்புகழ்மடந்தைவீற்றிருந்தனண்மண்மே
லண்ணலில்லவளுடனுயிரில்லவளானாள். (௫௬)

இறையிறந்தபின்யுகந்தரன்விப்பிரதீகன்
மறையிறந்திடாவல்லபன்வாய்மையான்மறையின்
முறையிறந்திடாமுறையினன்முதுகடலாடைத்
தறையிறந்திடாதளித்தனன்சகத்திரானீகன். (௫௭)

---

* அகிதம்ஷ்டிரன். † தூலசிரன்.

அந்தமூவருமாய்ந்தனரதன்பினரவர்பால்
வந்தமூவருமரசியலாற்றிடமைந்தன்
றந்தையிற்பதின்மடங்குறுதானைதற்சூழ
விந்தமண்மகள்கலன்கழியாதரசிருந்தான். (௫௮)

காமரிந்திரனந்தநாட்கடியதூதுவனை
நாமிழைத்திடுநந்தனவிழவுகண்டுவப்ப
நேமிசூழ்புவிச்சகத்திரானீகனைக்கொணர்மின்
போமினென்றனனவர்கவுசாம்பியிற்புகுந்தார். (௫௯)

புகுந்தசாரணர்தமக்குமுன்புகுஞ்சதமகன்போற்
சகந்தொழுங்கழற்சகத்திரானீகனைச்சார்ந்து
மிகுந்தவானவர்வேந்தனைவருகெனவிளித்தா
னிகந்திடாதணையெங்களோடென்றுநின்றிசைத்தார். (௬௦)

அண்டர்கோன்பணியென்றலுமாடகச்சில்லிக்
கொண்டமேய்கொடிக்கொடிஞ்சிமான்றேர்மிசைக்கொண்டு
விண்டலந்தருநடவைபோய்மேனிலத்திறையா
கண்டலன்றனைக்கண்டயலிருந்தவக்காலை. (௬௧)

வச்சிரக்கரனொருகதைவருகதையாக
மெய்ச்சிரத்தையிற்சகத்திரானீகனோர்விரிப்பா
னச்சநுண்ணிடையலம்புசைபிறந்தனளயோத்தி
யிச்சைகூர்ந்திடுகிருதவன்மாவெனுமிறைபால். (௬௨)

விரிஞ்சனாணையினலவண்மென்கவான்மூலந்
தெரிந்தகொள்கையில்விதூமனைவசுக்களிற்சிறந்தோய்
புரிந்தமானுடமடக்கொடிபுமானுருவாகிப்
பரிந்தகாதலினின்பவாரிதியினிற்படிந்து. (௬௩)

மண்புரந்தருண்மகவினைமணிமுடிமிலைச்சித்
தண்புதுப்புனற்சக்கரதடத்திடைமூழ்கி
நண்பினும்புகல்சாபநீத்தவளொடுநலஞ்சேர்
விண்புகுந்திடுகென்றனன்மறையெலாம்விரித்தோன். (௬௪)

என்னவோதினனிந்திரனெயிற்கவுசாம்பி
மன்னனன்னவள்வனப்பெனுந்தூதுதன்மருங்கிற்
பொன்னினாடைதொட்டீர்த்தலுநிற்கலான்போகி
நன்னகர்ப்பதிவிடுத்திடத்தன்னகர்நடந்தான். (௬௫)

சேணெறிக்கிடைக்கண்டனடிலோத்தமையவட
னீணெறிக்குழற்கங்குலினெஞ்சகமயங்கான்
வேணெறிக்கொருசுடர்மிருகாவதிமெய்யிற்
பூணெறித்திடுபுதுவெயிலுளங்கொளப்போனான். (௬௬)

பொய்தரும்புலன்வெஃகுறுமெய்யரிற்போகுங்
கைதரும்படைமன்னனைத்திலோத்தமைகாணா
வெய்தருங்கவினிளையைநீயென்னைவேண்டிலையான்
மைதருங்கண்ணார்பொறுத்திடார்மறையவமானம். (௬௭)

சேர்கிலாதெனையெவளிடத்தாசையாற்சென்றாய்
கார்குலாங்குழன்மின்குலாங்கவினுடைமருங்கு
லேர்குலாவணங்கவணலம்வற்சரமிரண்டே
ழார்கிலாதகல்வாயெனச்சாபமாங்கறைந்தாள். (௬௮)

துவளுநுண்ணிடைத்திலோத்தமைக்கெதிர்மொழிசொல்லான்
பவளவாய்மிருகாவதியெனப்பெயர்பகரு
மவளயோத்தியிலுள்ளவளில்லவளாறு
லிவளவும்பிரிவாற்றலோவரிதெனக்கென்று. (௬௯)

காதிலோடிருகண்மிருகாவதிநாமச்
சேதவாணகைமுகிழ்நிலாச்சேயிதழ்ச்செவ்வி
மாதுதன்மனமலருறவளநகர்ப்போகி
யேதினுள்சிலவிறைச்செயலிழைத்தனனிருந்தான். (௭௦)

அருட்சிறந்திடுசகத்திரானீகனுங்கதற்பின்
றெருட்சிசேரவைத்திசைமுகன்சபித்தநாட்சிந்தை
மருட்சிகூர்கலைமதியொளிமாழ்கவந்தெழுந்த
விருட்சிபோலிருண்டலர்புனையிருங்குழலாளை. (௭௧)

பங்கமுற்றிடமுண்டகங்கறுத்துடல்பனிப்பத்
திங்கள்விட்டொளிர்திருமுகச்செவ்வியினாளை
யங்கயற்றுணைகண்டிடமகரநின்றாடுந்
தங்குபொன்மணியூசனேர்தாழ்குழையாளை. (௭௨)

வானமாரொளிவளர்சிறுபிறையுடன்மறுப்போ
னானமார்திலகம்பயினன்னுதலாளைக்
கானமார்கனிக்கோவையிற்சேந்துளங்கனாயப்
பானமார்நறவொழுகிடும்பாலிகையாளை. (௭௩)

மூரலென்றுமோர்பெயர்பெறவிளநிலாமுகிழ்க்கு
மாரநல்கியகந்தரத்தணிவளையாளை
வேரலென்றிருமென்கழையென்றிருவிகற்பாற்
சோரவிஞ்சையர்நெஞ்சமர்தோளிணையாளை. (௭௪)

அம்புலாங்கடலலைத்தநாளாரளைக்கள்வ
னும்பர்கண்படாதருண்மகற்குற்றிடத்துதவுந்
த ம்பமாவமுதடைத்தொளித்திடுமிருதடம்பொற்
குப் பநேர்வெளிவந்தனகொங்கையினாளை. (௭௫)

சின டிக்கொளாமுனிவரர்சிந்தைவண்டாடும்
புனமடி க்கொளாக்காந்தளம்போதுடையாளைத்
தனமடிக் கொளுநான்முதற்சார்புளார்கல்வி
மனமடிக்கெ ாளமடிக்கொளுமணிவயிற்றாளை. (௭௬)

தந்தியின்றுணை க்கோட்டிடைத்தாழ்கையாம்பருத்தா
லெந்தவாற்றினு விடைச்சிலபொருள்களான்மறையுங்
குந்தளக்கருங்குரு தெனக்குளிர்மடுச்சுழிநீ
ருந்தினின்றெழுநுண்ம யிரொழுங்குடையாளை. (௭௭)

அற்கருங்கடற்பரப்பதன்மேல்வெளியதன்மேற்
சொற்கமென்பதுபொருள்படத்துணைமுலைதாங்கி
யொற்கமின்றகல்கடிதடமாமதற்கும்பர்
நிற்குநுண்பொருளுருவிலாநேரிடையாளை. (எஅ)

குரம்பைமானவருலகினிற்கொண்டணைந்துற்று
ளரம்பையென்பதையறிவுறுத்தணிகுறங்காளைப்
பரம்புவிண்செலுநாட்கிளைப்பவனஞெண்டுறுமா
தரம்படுங்குளிர்போன்முழந்தாளுடையாளை. (எகூ)

ஏறொளுந்தடநீர்விளையாடியவிகல்வே
ளாரநல்கிணைவரானிகரடிக்கணையாளை
நேருணர்ச்சியிற்றிருவொடுநிறுத்தநாட்டன்னைப்
பாரிறக்கியவிதிதராசுறழ்பரட்டாளை. (அ0)

மழவர்தாமிடையின்றமர்சேர்வையின்வன்ன
மெழுதுபுத்தகநேர்புறவிணையடியாளைக்
குழுமிநின்றதன்வாசினைகொள்பவர்கூற்றின்
பழுதில்பேரொலிவழங்கிடும்பரிபுரத்தாளை. (அக)

வேதியன்முனநடித்தநாள்வெண்சிறையூர்தி
யோதிமந்தருபரிசினேருறுநடையாளை
யாதியின்னமுமிளவலையழிவுசெய்யாமற்
போதனல்கியபடைத்துணைபோன்றமர்வாளை. (அஉ)

சென்றுகண்டவர்பார்வையுஞ்சிந்தையுந்திரும்பா
நின்றுதங்களையுடையவர்கல்வியுநெறியும்
வென்றியும்பிணித்துடன்செலமெல்லடிப்புறத்தி
லொன்றுசங்கிலியொக்குமேருருவுடையாளை. (அங)

வேள்விரும்புறுனிரதியைவேண்டலன்மகவான்
வாள்விழிச்சசிதன்னைமான்மார்பகம்வையா
னீள்குழற்பொறிதனையிவணோர்படிலென்று
சூள்வகுத்திடவிளங்கியசோதியினாளை. (அச)

அறந்தருந்திருப்புக்கமாமதிலயோத்தியினிற்
பிறந்தகம்படப்பிறங்கியபெண்மையினாளை
மறந்தரும்படைக்கிருதவன்மாமகள்வடிவாய்ச்
சிறந்தசீரொலாந்திரண்டனசெய்கையினாளை. (அரு)

அருவமாமழகவயவம்படைத்தணைந்தனைய
பொருவிலாமிருகாவதியெனும்பெயர்புனைந்த
விரிகலாபமாமஞ்ஞையஞ்சாயன்மென்கொடியை
நிருபன்முற்றொடர்நிலைமையாற்றழுவானினைந்தே. (அசு)

காணரும்பெருங்காதலானறிஞரைக்கணாந்து
மாணெடும்புகழ்க்கிருதவன்மாமருங்கேவிப்
பூணிளங்கொடிதனைமணவிதியினாற்புணர்ந்தான்
சேணிலம்பிரிதுயரொலாமன்னனந்தீர்ந்தான். (அஎ)

ஏனைவானவர்மாதரைமறைத்திவரிடத்தி
லானநண்பினாலளவிலானந்தவாழ்வளிப்பான்
மானிலம்புகச்சொன்னதுவஞ்சமோகஞ்சன்
றானெனத்தழீஇயின்பமுற்றாரவர்தம்மில். (அஅ)

கன்னன்மாரனுமிரதியுங்கடவுளர்கோனு
மன்னமென்னடைமாதயிராணியுமரியும்
பொன்னுமென்றிடநாடொறும்புணர்ந்துவீற்றிருந்தான்
றன்னைநேர்மிருகாவதிதன்னொடுந்தலைவன். (அகூ)

காலமங்கதுதனின்மிருகாவதிவயிற்றிற்
பாலன்வந்தெழுகருப்பமுற்றிடுதலும்பரவுங்
கோலவெண்பிறையமரியாற்குழுவுறுங்கொள்கை
போலவெண்ணிறம்பூண்டனள்பொன்னிறப்பூவை. (கூ0)

ஞான்மலிந்துழியிந்திரதிசையினிற்சுடர்வா
டான்மனங்கொளும்பொருளெலாஞ்சகத்திராநீகன்
மான்மலிந்துளவாஞ்சையினாடொறும்வழங்கக்
கான்மலிந்தவீரோதியாள்வளர்த்தனள்கருப்பம். (கூக)

கோதையவ்வழிக்குருமணிவாவியுட்குளிக்கு
மாதருற்றனண்மன்னவன்மன்றலங்குசும்பப்
போதினீரினானிறைத்தனன்பூந்தடமெங்கு
மாதரங்கொடுபுகுந்தலைத்தாடினளரிவை. (கூஉ)

ஆடியேறியவங்கனையழலவிழ்முருக்கின்
றோடுடைந்தெனத்தோன்றலும்புலவெனுந்தொடர்பான்
மாடிலங்கொளிவிகடநாமத்தொருவான்பு
ளோடிமூக்கினாற்றூக்குபுசென்றதாலும்பர். (கூங)

தூக்கிவிண்படர்பறவையச்சுடர்த்தொடிதன்னை
யூக்கமோடுதயக்கிரிமுழைஞ்சினிலுய்ப்பத்
தாக்கணங்குறழ்தையலும்பரவசந்தன்னோ
டேக்கமுற்றுளந்தெளிந்துபின்னிரங்கினளிசைப்பாள். (கூச)

மைவிடத்துணைவிழியினார்மகிழ்நராலொருநாட்
கைவிடத்தகுநிலையரோகணவநிற்காணே
னவ்விடத்தினுக்கணியதோசேயதோவறியே
னிவ்விடத்துளேனெவ்விடம்புகுதுவேனிறைவா. (கூரு)

இணங்கிமார்தமையேவினனில்லையாலென்மேற்
பிணங்கியேயெனைப்பிரிந்தனன்போலுமெம்பெருமா
னிணங்கொள்வேற்படைச்சகத்திராநீகனென்னினைவுற்
றுணங்குமோமறந்துலகருள்சுரத்தலேயுறுமோ. (கூசா)

வினைவயம்படுவிதியினால்விளைகொணீர்த்தடத்தி
னனையுமன்றியான்கண்டிலேனெங்ஙனண்ணியதோ
மனனடுங்கவிங்கெனைத்தரும்பறவையவ்வாவிப்
புனனெடுங்கரையிருந்ததோமுன்னமிப்பொருப்பு. (கூஎ)

அரண்டருங்கவுசாம்பியுமலங்குமாளிகையு
முரண்டவாளரிசுமந்தவைம்பள்ளியுமுளரிச்
சரண்டருங்கழற்சகத்திரானிகன்றடமார்புந்
திரண்டதோள்களுங்காண்பனேவின்னமுஞ்சிறியேன். (கூகு)

அறிமுகம்பிறகாண்கிலேனடுத்தவூரறியே
னெறிமுகந்தெரிந்தேகிலேனொருதனிநின்றேன்
பொறிமுகந்தருவிரிஞ்சனூர்புணர்ப்பிதுவானூற்
குறிமுகங்கொளாமடமையேன்கூறுவதெவனே. (கக)

எனவிரங்கினள்பற்பலசொல்லினளிதனை
வினவிநின்றுளமுருகினவிலங்கலும்பிறவுஞ்
சினவுகோளரிமுதற்கொடுமிருகமுந்தீண்டா
நனியகன்றனவிறக்குநாளணித்துருமையினல். (க00)

ஆயகாலையின்முனிமகனொருவனுங்கவலைக்
கூயழுங்குரல்வழியுறீஇயருளினூற்குரவன்
ருயினல்லருடருஞ்சமதக்கினிதன்பான்
மேயவன்பினூற்கொண்டுசென்றியம்பிமுன்விடுத்தான். (க0க)

மயிலனையிளமடப்பிடிபோனடைவாய்மைக்
குயிலனையெமைக்கிருதவன்மாவெனக்கொள்ளென்
றெயிலனுலகுயிரவைக்கிரும்புலவேடர்க்
கயிலனிடராற்றினனுறினளவளும். (க0உ)

மதிநுதற்கொடியீன்றனளாங்கொருமகவை
யதனியற்செயல்பன்னியராற்றினரனைபோ
லுதயவெற்பினிலுதித்தலாலுதயனனென்றோர்
பதமிசைத்தபாலனைநாடிவிண்பரப்பில். (க0௩)

இறைவிதந்திடுமுருகனேர்குமரனவ்விசையா
லறையுநன்பெயருதயனனையினனவற்கு
முறையினூற்பவவினைமுதன்முடித்தருண்முனிவன்
குறைவில்பல்கலைமறைமனுக்கேள்விகள்கொடுத்தான். (க0௪)

மேல்வரப்பெறுமிருநிதிச்சேமமுன்விளங்கார்
போல்வளக்கவுசாம்பியர்புரவலன்றெளியான்
மால்விருப்பினுங்குற்றிடவீங்குறுமைந்த
னூல்வகைத்துறைபடைத்துறைகளின்மனநுனித்தான். (க0ரு)

வாளிளம்பிறைமதிபடப்பூரணைவருமு
னுளிலங்கியதெனவெழின்மழவுருநண்ணித்
தாளிருங்கழற்சகத்திரானீகனற்றனயன்
மூளிருங்கடமான்முதல்வேட்டையின்முயன்றான். (க0சு)

வேந்திளங்கிளர்கோளரிவேட்டைசெய்காட்டிற்
பாந்தளொான்றினைப்பிணித்தொருபுள்ளுவன்படர்ந்தா
னேந்தறன்மகன்கண்டிதனுற்பயனெவனீ
காந்துகட்செவிச்சிறைவிடுகென்றனன்கனிந்து. (க0எ)

விட்டிடச்சொலும்வேந்திளஞ்சேயெதிர்வேடன்
பட்டணங்களினுட்டியான்பயன்கொளற்பால
னட்டமிங்குனக்கேதெனுநகைமுகனுகிக்
கட்டினுனுடனெரியமீண்டன்னகட்செவியை. (கoஅ)

கறையகித்துயர்காண்கலனுய்தருங்கனகப்
பொறைமணிப்புயத்தொடியினைப்புளினனுக்குதவிச்
சிறைவிடுத்தனனரருவாயதுசெம்ம
னறைமலர்க்கழல்பணிந்துடன்கொண்டதூண்பு. (கoக)

இன்னதற்பினர்த்திருதராட்டிரன்மகனெனுமக்
கின்னரப்பெயர்மாசுணங்கேண்மைசால்குமரன்
றன்னைமுற்கொடுபாதலம்போயுபசரித்த
பின்னரீந்ததுதன்னுடன்பிறந்தபெண்ணமுதை. (கக0)

இளையளாகியலளிதையையீந்தபின்பாந்தள்
வளையிடுங்கரமங்கையுமன்னவன்மகனு
மளையுமன்புடனகமகிழ்ந்தமர்ந்தனரந்நாட்
டளைநெடுங்குழல்பழுதிலோர்குழவியைத்தந்தாள். (கக௧)

தந்தகோற்றொடிசாற்றுவாள்சருப்பமானுக
முந்தொர்சாபமுண்டென்பெயர்சுகண்டியான்முன்ன
மந்தவித்தியாதரர்குலத்தாயிழையகட்டில்
வந்தபீளிதுமற்றதுமாற்றிடுமருந்து. (கக௨)

தலைவமைந்தனைத்தலையளிபுரிகெனுத்தன்கைம்
மலரில்வீணையும்வாடுருநாகநீள்வல்லி
யலரலங்கலுமுதயனன்பாலளித்தரவக்
குலம்விடுத்திடாவேகினுள்விசும்பிலக்கோதை. (கக௩)

மன்னன்மைந்தனுமாமனுதியரனுமதியா
லன்னைதன்னுழையப்பொருண்மூன்றுடனணுகிப்
பன்னருந்தவன்றெளித்தலாற்பழங்கணித்துறையும்
பொன்னனுளுடனிகழ்ந்தகாரியமெலாம்புகன்முன். (கக௪)

மாதுகேட்டுளமகிழ்ந்தவணிருந்தனண்மற்றப்
போதுவேடுவன்புகழ்க்கவுசாம்பியிற்போகி
யீதுதோள்வளைகொண்மினென்றியம்பவோரிளங்கோக்
காதுவேற்பெருங்கோமுதற்பொறியதிற்கண்டான். (கக௫)

கண்டநாய்கனக்கடுங்கொலைக்கிராதனேடதனைக்
கொண்டுமன்னவன்திருமுனங்குறுகலுங்கோமான்
விண்டுபோயினமின்மிருகாவதிமென்கை
முண்டகம்பொழிமதுமழைப்பெருக்கிலேமூழ்கி. (கக௬)

சீதளம்பெறுவளையயத்திருவினைநீங்கிப்
பேதுறுந்துயர்க்கனல்வெதுப்பகன்றிடப்பிறங்குஞ்
சோதிமார்பகத்திருத்தினனெயினனைச்சுட்டி
யாதுகூறுதிநினக்கிதுவந்தவாறென்முன். (ககஎ)

சவரனச்சொடுசகத்திரானீகனைத்தாழா
வவரலாற்றடைவறைந்தனனிறைவனன்றங்கட்
கவரிலாயுகந்தராயணன்முன்னவர்கணங்கொண்
டிவரவேகினனிடைநெறிக்கரந்தனனிரவி. (௧௧௮)

கான்பரந்தபூங்குழன்மிருகாவதிகலவா
லூன்பரந்தமாலழலரசுச்சியிற்றூங்கி
வான்பரந்ததுபோற்பரந்திட்டதுமாலை
மீன்பரந்தனவெயர்ச்சிதாமெய்ப்பொடித்தென்ன. (௧௧௯)

மாசுடைக்கலைமதியவர்வளர்வுறின்மரபிற்
றேசுடைத்தகையோர்களைத்தெறுந்திறன்றேற
வீசுடைப்படைச்சகத்திரானீகனுள்வெருவ
வாசுடைச்சுடரம்புலியெழுந்ததம்பரத்தில். (௧௨0)

வயங்குவட்டமுங்கிருதவன்மாவருண்மகள்போற்
றயங்குசீர்மிருகாவதியாகியதகையா
லியங்குசேணிருந்திறைவனுக்கிடரிழைத்திட்டான்
முயங்குசீதளவமுதவெண்ணிலவுகான்முதல்வன். (௧௨௧)

சந்துமாலையுந்தழல்படுசகத்திரானீக
னுந்துமேனியிலுரோமராசித்துணைக்கிரட்டி
கொந்துலாமலர்ப்பகழிதூயஞ்சுகக்கோடை
வந்துவையமேல்வந்தமராடினன்மாரன். (௧௨௨)

வீரனேர்பொருதாருயிர்கவர்ந்திடும்வென்றி
மாரனின்மையான்மற்றதுவஞ்சனைக்கொள்வான்
சாரவிட்டதுமெல்லெனச்சார்ந்தவன்றன்பாற்
சேரவின்றுலாந்தீவகம்போன்றதுதென்றல். (௧௨௩)

குணந்தருஞ்சிலைக்கிருதவன்மாவருள்குயிலைத்
தணந்தநாண்முதலின்றளவொருகலைதானுப்
புணர்ந்தவானியம்போன்மிகநீண்டதுபுல்லார்
கணந்தொழுஞ்சகத்திரானிகற்கற்றைநாட்கங்குல். (௧௨௪)

விரவலார்சயத்தேர்மணியான்மணிவிரிந்த
புரவுளாழியத்தேரிடைப்பூட்டுருளாழி
பரவுகாவலற்கிருசெவிப்புழைவழிப்படரு
மரவமானதுசுடுதுளைத்திகிரிபூதரவம். (௧௨௫)

இசைந்தவீணையுமன்றிலுமிடர்செயவிரங்கித்
தசைந்தபூணிணைத்தனமிருகாவதிதணப்பா
லசைந்துறங்கிடாவரசனையவ்விருட்பௌவம்
வசந்தனேற்றினன்றெல்லுரைசொல்லுநாவாயால். (௧௨௬)

அலங்குநஞ்சுடர்த்தொகைப்படையுடையவனரசன்
வலங்கொண்மைந்தனையுதயவெற்புதவினன்மனைவி
புலங்கொளப்புகின்வேறலன்புதல்வனம்பேரன்
கலங்கதீர்ப்பனென்றெழுந்தனன்கதிரவன்கடன்மேல். (௧௨௭)

வைகறைப்படவெழுந்துபோயுதயமால்வரைமேன்
மொய்கரிக்கரியுறவுகூர்முனிவனுச்சிரமத்
தெய்கணைத்தனுச்சகத்திரானீகனுற்றிறைஞ்சி
யுய்கருத்தினுற்புகழ்ந்தனனுறுவனெஞ்சுவப்ப. (௧௨அ)

பார்த்திவன்றனைப்பார்த்தவன்பாத்தியமுதலாஞ்
சீர்த்தநல்லுபசாரமுன்செய்தபின்சிறந்த
வார்த்தையொன்றுரைசெய்வனின்மகனிவன்வென்றி
கூர்த்தமொய்ம்பினுனுதயனனிராமனேர்குணத்தான். (௧௨௯)

குசனைநேருமித்தோன்றலவ்வுதயனன்குழவி
வசையினின்றிருப்பேரனின்மனைவியம்மடவா
ணசையுடன்றழீஇயேகெனமன்னவனகைத்தேர்
மிசையிலேறியன்றவருடன்வியனகர்புக்கான். (௧௩0)

புக்கபின்புதன்புதல்வனுமுதயனன்புயமேற்
றக்கதன்றடந்தோளுறைதராதலமாதை
மிக்கவன்பினுலிருத்தினன்மேதினிவாழ்விற்
றுக்கமுற்றனனுணர்ந்தனன்சதமகன்சொல்லை. (௱௩௧)

கண்ணைநேரியயுகந்தராயணனெடுவசந்தன்
வண்ணமாருமண்வான்மிருகாவதியோடு
மண்ணலேகினன்மானுடவாக்கையையாழித்
தண்ணறும்புனலாட்டினுன்வீட்டினுன்சாபம். (௧௩௨)

தேவதுந்துபிமுழங்கினவிமையவர்சிதறும்
பூவுதிர்ந்தனமுன்னையவியல்பெலாம்புணர்ந்த
வாவியன்னவருடனிமையோருருவாகி
மீவிமானமேற்கொண்டுவிண்மேவினன்விதூமன். (௧௩௩)

வேறு.

திகிரிவாவிவழுத்துபுயாருமேதெரியமேலுலகுற்றதுதேறியே
யகிலலோகருமுற்றதின்மூழ்கினூரடல்விதூமனுடைச்செயலீதரோ
பகருநீரொர்பகற்பொழுதாடினேர்பரவுவானிலிருப்பர்கள்பாடுவார்
நிகரில்காதைசெவிக்கொளுநீர்மையார்நினைவுசேர்பொருளக்கணநேருமே. (௧௩௪

விதூமச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௲௬௪.

# தேவிபுரச்சருக்கம்.

மாண்டகையபரிதிமடுவாய்மையிதுவெனக்கேட்டு
மீண்டுமுனிவரருளைப்பார்மேதகுசூதனைநோக்கி
யாண்டதனைத்தேவிபுரமளவுளதென்றனையன்றே
யாண்டையதந்நகரமதற்கிந்நாமமிசைந்ததெவன். (௧)

கோசலைசேயணைமூலங்குலவாழித்தடத்தின்கண்
மாசலையப்புகுந்தாடுமனிதருறும்பயன்வகுத்துப்
பேசலையன்றிப்பிறங்கும்பெருமிதங்களுளபிறவு
மாசலையும்படிசுருங்காதகலமுறவருளென்றார். (௨)

சூதனவருரைகேட்டுச்சுடராழித்தடமுடிவா
மாதிருவின்புரம்வந்தவரலாறுமற்றையவு
மோதுமறைமுனிவீர்காளொருதலைக்கொண்டுருகுமனக்
காதலுடன்கேண்மின்கள்கழறுவமென்றவைகளைவான். (௩)

அன்புடனிக்கதைகேட்பாரறைவாரைவினையணுகா
மன்பெருநீரிடைக்குரம்புவகுத்திடுநாளாதிதனி
லொன்பஃதுசிலைநிறுத்தானுததியின்பாற்காகுத்தன்
பொன்புனைதன்கரங்களினாலதுதேவிபுரமாகும். (௪)

தாரணியையலங்கரிப்பாடலைவியவணாத்தூணா*
நாரணிதான்கதிராழிநறுந்தடத்தின்கரையதிற்றன்
பேரணிந்தோர்நகர்வகுத்தபெருங்காதைவருநிமித்தஞ்
சீரணிமாதவிர்கேண்மின்சென்றதொருகாலத்தின். (௫)

சுராசுரருடன்பொருநாட்சுதனிழந்ததிதியென்பா
ளரவமெனவுயிர்த்திரங்கியழுங்குறுவாடான்பயந்த
குரவநெடுங்குழன்மகளைக்குறித்துரைப்பாள்கோற்றொடியாய்
வரமிகுமோர்மகப்பொருட்டான்மாதவநீசெயற்பாலை. (௬)

இந்திரனுமிமையவருமிலராகவுளனாகு
மைந்தனுனதகட்டுதிப்பமறைநியதிவழுவாமற்
புந்திகவர்புலனடக்கித்தவம்புரிதிபோயென்றா
டந்தவளைப்பணிந்தவளுந்தபோவனத்தினிடைச்சார்ந்தாள். (௭)

மையுறுதன்மனத்திருண்டமலர்க்குழலாண்மணிமகிட
மெய்யுருவுதரித்திமையாவிண்ணவரும்விழிமுகிழ்ப்ப
வையழலினிடைநிலையுற்றருந்தவருங்கருதாத
பொய்யிறவமிழைத்திட்டாணடுங்கினமுப்புவனங்கள். (௮)

குற்றிடைநுண்கொடியவளாங்கொடியவண்முன்குறுகிமனத்
துற்றபயத்துடனுனதுதவமுகந்தேமொண்ணுதலாய்
மற்றையுருநரருருவாமகிடமுகமதலையைநீ
பெற்றிடுகென்றருள்புரிந்தான்பிறங்குசுபாரிசமுனிவன். (௯)

அவ்வரந்தந்தவனவளையணங்கிடையாயடன்மகிட
னெவ்வரமும்பெறுஞ்சிறுவற்கிடுநாமமிவனிமையோர்
கவ்வையுழந்திடவலைத்துக்கவுசிகனைப்புறங்காண்பன்
செவ்வரங்கொடவம்விடுதிவருகெனத்தன்னுழைச்சென்றான். (௧௦)

உடன்கொடுபோஞ்சுபாரிசன்றனூர்புகுந்தபின்றைநாண்
மடங்கலெனமகிடமுகமதலையவள்வயின்றோன்றி
விடங்கொளுருவெனவிளங்கிவெண்மதிசேர்விறற்சகரர்
கிடங்கெனமைந்திகல்வீரங்கெழுமிமிகக்கிளர்வுற்றான். (௧௧)

* நாத்தூண்—மைத்துனி.

தானவர்மாதவமனையதனயனிவன்றழைத்திடுநாண்
மேனிலையோர்பெரும்பகையாம்விப்பிரசித்திக்குரிய
மானமகன்வித்துத்துமாலிமுதல்வல்லவுண
ரானவர்தாமுடன்குழுமியன்றவன்பாலடைந்திட்டார். (கஉ)

அயர்நிலைதீர்கவரிமுகத்தவற்கறைவான்மின்மாலி*
யுயர்நிலைநந்தமராட்சியுடையவர்முன்னிடைநாளின்
மயர்நிலையர்நாரணன்றன்வன்மையினனமர்க்கெல்லாந்
துயர்நிலைசூழ்ந்திதுபொழுதுதியக்கின்றார்சுரரானோர். (கங)

மேதிமுகநின்வீரவென்றியிதில்விளங்கியிடக்
காதியிமையவர்குலத்தைக்கனகநிலங்கைக்கொள்வேம்
போதியெனப்புகன்றிடலும்புதியபடைத்திதிபேரன்
சோதியெரிவடவையெனப்போய்வளைந்தான்சுரரூரை. (கச)

வளைந்தமரருடனூறுவருடமமராடிதலு
முளைந்தமரர்சதமகனோடுடைந்துதலைகுலைந்தோடி
விளைந்தபுகழ்விரிஞ்சனுழைமேவினரவனவர்க்கொண்
டளைந்தமதிச்சடைமுடியாரரியொடமரிடம்புக்கான். (கரு)

இறைபிறைவிப்பொருள்புணருமீசனையுமாயனையு
முறைவழுத்திமுளரிமகன்மொழிகின்றுன்முகமகிடன்
பெற்றைவிடுக்குந்தகுவரொடும்புரிவாலப்போர்வலியா
னறையவிழ்க்குங்கற்பகக்காநன்னாடுகைக்கொண்டான். (கசு)

உம்பர்களுமகபதியுமொருங்கிநிலையிலராகி
யம்புவியின்மானுடர்போலலமராவுற்றலைகின்றார்
கொம்பருறழ்மணிமருங்குற்கோதையிளங்கொடிபாகா
தம்பமவர்தமக்குனதுதாட்டலம்வேறிலையென்றான். (கஎ)

உந்திமலர்மகனிதனையுரைத்திடலுமுலகொடுக்கு
மந்தமுதலவனழன்றானவனைவையுமாகையினு
லிந்திரனுன்முகன்முகுந்தனிவர்முதலாமிமையோர்பால்
வந்தெழுவெஞ்சினச்சுடர்கள்வானளவினிமிர்ந்தனவால். (கஅ)

நிமிர்ந்தசுடரவைதிரண்டோர்நேரிழைதன்வடிவாகி
யமர்ந்தவதற்கழனுட்டத்தண்ணலொளியணிவதனங்
கமங்கெழுகுன்முகிலுருவன்கடியசினக்கனல்கரங்க
ணமன்றருவன்றழற்படலைநறுங்கதுப்பினெடுங்கற்றை. (ககூ)

தாமரையோன்றருநெருப்புச்சரணசரோருகத்துணைக
ளேமநிலக்கிறைஞெகிழியிடைமதித்தீயிருகொங்கை
வாமர்†மணிமுழந்தாள்கள்வருணகிரணம்புடவி
யாமதனன்கனனிதம்பமடியுகிராதபன்சோதி. (உ0)

மலர்க்கைநகம்வசுக்கள்வசுமந்திரிவெந்தழனுசி
நலத்தகையநவவிரிஞ்சர்நகையெரிவெண்ணகைமுறுவல்
வலக்கண்ணுமிடக்கண்ணும்வயங்குதழற்கடவுளழல்
கலக்குமிருவகைச்சந்திக்கனலிரண்டுங்கரும்புருவம். (உக)

* மின்மாலி—வித்துத்துமாலி.

† வாமம்—தொடை.

காற்றுதவுகனலியிருகன்னமற்றைக்கடவுளர்தீ
யேற்றவவயவம்பிறவுமிங்கிலைக்கொண்டெழும்படிவங்
கூற்றுருவமடந்தையெனக்கொடியதிறற்சுந்தரியா
யாற்றன்மிகுந்தெவராலுமடற்கரிதாயினவங்கண். (உஉ)

கன்னிதனைக்கண்டுமனங்களிசிறந்தார்கடவுளர்கண்
முன்னுதற்கட்பெருமானைமுதற்றலைவர்முத்தலையாய்
மன்னுதலைச்சூற்றலையாம்வயப்படைகண்மலர்ப்பிணைய
னன்னுதற்செந்திலகம்வினாகாகமிவைநயந்தளித்தார். (உங)

அங்கிருந்தாரவருதவுமவைதரித்திட்டார்ப்பரவத்
தெங்கிருந்தார்களும்வெருவவெதிர்விளங்குமெதிரில்லாக்
கொங்கிருந்தார்மலர்க்கூந்தற்கொடும்பாலைக்கிழத்திதனைப்
பொங்கிருந்தாபதர்தேவர்பிறர்யாரும்போற்றிசைத்தார். (உச)

அகிலதலம்விதிர்விதிர்ப்பவதிருமடற்கேசரிமேற்
பகவதியையடிவணங்கிப்படைபலகொண்டணைந்திட்டா
ரிகல்கருதியிமையவருமிவளிடிவெங்குரல்கேளா
மகரமலிகடல்புரண்டுவருவதெனமகிடமுகன். (உரு)

பல்லவுணருடனணுகிப்பகிரண்டமிருணீங்க
வில்லுமிழுந்திருவுருவவிறலணங்கைமுன்கண்டான்
செல்லுமதுபொழுதின்கட்டேவிக்குந்தானவர்க்குஞ்
சொல்லரும்வெஞ்சமர்விளைந்ததெண்டிசையுந்துணுக்கென்ன. (உசா)

வேறு.

ஆயிரகோடியிலக்கமுதற்படையவர்சூழக்
காய்கணைவிற்குலிசங்கதைசூல்கடகங்குந்தம்
பாய்கரிவாசிபதாகினிதேரிவைபலவோடு
மாயிருமேதிமுகத்தவுணர்க்கிறைவந்தெய்தி. (உஎ)

ஏவினனாயுதம்யாவையுமங்கவனெதிர்நிற்குந்
தேவிதன்மேலவைசிந்துபுவேதித்திரளெல்லாந்
தாவினடானவர்மேலவள்கட்டுணைதுணையாகப்
பூவிரிவெம்படைபற்பலபோக்கினர்புலவோரும். (உஅ)

பட்டனதானவர்தானைகளிற்பலபடல்காணு
வுட்டெறுகோபவழற்புகைமானவுயிர்த்தொல்லை
கிட்டினன்மேதிமுகத்தவனுஞெலிகிளர்தாள்வில்
வட்டமுகங்கொளவாங்கினன்வாளியின்மழைபெய்தான். (உகூ)

வேறு.

ஈராயிரமைந்தொகைவெஞ்சரமிந்திரன்மேலு
மோராயிரமைங்கணைதன்முகவூர்தியன்மேலுங்
கூராயிரமெண்கணையங்கடலின்கோமேலுஞ்
சாராயிரமாறடுகோறனதன்றன்மேலும். (௩0)

வாயுவசுக்கண்மருத்துவர்சீதளமதிவானோன்
றேயுவிருச்சிகனுதியமற்றுளசேனாட
ராயகணத்தவரோரொருவர்க்கயுதம்பாண
மேயசினச்சுடர்போலெவர்பாலினும்விட்டார்த்தான். (௩க)

விட்டதுகாணலும்விந்தைவெகுண்டனள்வேதாள
மட்டிரிபாரிடராகியவீரரைவம்மின்கள்
கட்டுமினீடியபாடியைநீருயிர்கவர்கின்றே
னெட்டருமெய்வரமேதிமுகத்தனையானென்ருள். (௩௨)

அக்கணமன்னதுசெய்குவமென்றெயிறவிர்பேழ்வாய்
மெய்க்கணநாதர்திரண்டனர்சூறைவிசைக்காலிற்
புக்குழிஞெச்சிறுபஞ்சியெனத்திசைபோய்வீழச்
செக்கிடுமிக்கினெரித்தனர்தானவர்திரளெல்லாம். (௩௩)

பூதர்கலக்கியபோர்நிலைகண்டுபொருக்கென்ன
மேதிமுகத்தனிதானவினத்தொடுமிடலூழி
வாதமெனப்படர்காலையமைச்சர்மகாநாதன்
பாதமளப்பிலனென்றுளனைம்முகிபதமில்லான். (௩௪)

மாவனுமேதகுசண்டன்மகோதரன்மலியூணன்
வீவில்கற்பதகுடன்மகோற்கடன்விழியொன்றும்
பாவிசுலோசனன்லோசனமெண்ணிலிபலரின்னோர்
தேவிமுகத்தெதிர்நின்றனர்போர்புரிசெயல்கொண்டார். (௩௫)

வேசரிபோலவர்மேல்வரல்கண்டவர்மிசைவேகக்
கேசரியேறியுகைத்திறுதிக்கெழுகிளர்மேகத்
தோசைகொள்விற்கைவளைத்துயர்துர்க்கையொலிப்பித்தாண்
மீசெறிவித்திடுநாண்வயிரக்கணைவிடலுற்ருள். (௩௬)

ஈறில்சரத்திரவேலும்யானையிலக்கம்பத்
தூறில்வயப்பரியோர்சதலக்கமொலித்திண்டேர்
நூறெனிலக்கமைந்நூறொருநூறறுவலெண்ணின்
மாறிலிலக்கத்தோருடன்மாவனுமாய்வுற்ருன். (௩௭)

தேவிவணக்கியவிற்படைகக்கியசெந்தீவா
யேவிலமைச்சர்களாயிரகோடியிலக்கத்தோர்
தாவிலிருத்தையொரேழரையிற்பொருசமராடன்
மாவனுவொத்தபடைத்திரளோடவண்மாய்வுற்ருர். (௩௮)

வேறு.

கண்டவ்வாறுகவரிமுகத்தினன்
மண்டுசீற்றவடவையின்வாடினன்
றுண்டவெண்பிறைமூரற்சுழல்விழிச்
சண்டகோபற்கொருமொழிசாற்றுவான். (௩௯)

அடையுமாவனுமுன்னரமாத்தியர்
படைமுருக்கியபண்ணம்பணத்தியை
மிடையுநின்பெருஞ்சேனையின்வெள்ளமோ
டிடையவேற்குதியேகுதியென்றனன். (௪0)

போவனென்றுபொருசண்டகோபனு
மேவல்பிந்தவிகன்றுசென்றேற்றமர்
தேவிமுன்சிலைகோட்டுபுசிந்தினு
ணுவமல்கியவாளியடங்கலும். (௪௧)

செறுத்துவந்தவன்சிந்துங்கணையெலாம்
வெறுத்திடாவிளையாட்டினின்விந்தைதா
னறுத்துவீழ்த்தபினம்பொன்முழவுகோல்
பொறுத்ததாள்வலவன்னுயிர்போக்கினாள். (௬௨)

தேருடைத்தனள்விற்றுணிசெய்தன
ளூருடைத்திண்புரவியுலைத்தனள்
சாருடைத்தடங்கேதனஞ்சாய்த்தனள்
போருடைச்சண்டகோபன்புழுங்கவே. (௬௩)

அசையும்வையமிழந்தோனசைவிலா
திசையும்வையத்தெதிர்ந்திருங்கேடகம்
வசையில்வாள்கொடுவார்சிலைக்கையினும்
விசையையூர்திதன்மெய்யினும்வெட்டினான். (௬௪)

வெட்டுநாந்தகம்வெட்டலின்றித்துணி
பட்டதந்தரிபாரவெஞ்சூலரத்
திட்டவண்சண்டனூர்புகவேவினாள்
கொட்டமல்குங்குரற்சண்டகோபனே. (௬௫)

அரவில்வெய்யவடற்சண்டகோபனு
மிரவுமுற்றியிறந்துழியக்கணங்
கரவைாத்தலையேறியக்கன்னிமுன்
பரவுசித்திரபானுவந்தெய்தியே. (௬௬)

எறியிலங்கயில்கண்டையிைத்திட
வெறியிலங்குவிழியினன்வீசினான்
மறியினன்றழல்வத்திரிமாற்றினாள்
குறியிலங்குழுவெங்காரக்குரைப்பினால். (௬௭)

மாற்றிவி[வீழ்ந்த]...ண்மற்றவன்மார்பினூ
டேற்றசூலமெய்...றேற்றியெதிரிபம்
பாற்றுசித்திரபானுவினாவியைக்
கூற்றமுண்ணக்கொடுத்தனள்கொற்றவை. (௬௮)

ஐயைபின்னரடருங்கராளனைக்
கையினால்விழக்குத்திக்கதையினான்
மெய்யின்மோதிவிளிவித்துவாளினான்
மையில்பாட்களனுவியும்வாங்கினாள். (௬௯)

ஆழிக்கொத்தெதிரந்தகனாவியை
யாழிச்செம்பொனணிகரத்தேந்திய
வாழிக்கீர்ந்தனளாகண்டலன்மக
னூழித்தேர்வலவற்கிளையாளரோ. (௭௦)

முட்டுமேதிமுகத்தவனேவலாற்
கிட்டுந்தேர்ச்சித்துணைவர்கிளையெலாங்
கட்டினாட்பினுட்காமருகார்த்திகை
விட்டில்கொல்லும்விளக்கின்விளங்கினாள். (௭௧)

வேறு.

அவ்வகையணிகெழுதானையுடைந்துழியடன்மகிடானனவசுரேச
னிவ்வகையமரிதுநலனெனநகையுடனெருமையினிகலுருமுழுதாகிக்
கவ்வைசெய்முகனுறுதண்டமுயிர்ப்பெழுகால்கொள்குளம்பிவைகளினாவி
வவ்வியவிசயைகணங்களையவள்பரிவாளரிதனையடவந்துற்றான். (௫௨)

அடவவன்வந்ததறிந்தெழுகுலகிரியகலிடமவைபிருபிளவாகி
யிடவடியிடுதிண்மடங்கன்முனிந்துடனெரியவிர்குருதியிழிந்தோட
வுடலுறவுகிர்கள்வகிர்ந்ததுணர்ந்தவனொருகவரியினுருவுறுமூழிக்
கடலெனமறுகிடுமகிடனைவென்றுயிர்கவரநினைந்தனள்கலையூர்வாள். (௫௩)

நிறங்கெழுமைக்கிரிவாசுகிசுற்றியநீர்மையின்மற்றவனெடுநீண்மை
பிறங்கியமேனியைநான்கொடுகண்கள்பிதுங்கவளைந்துபிணிக்குங்காற்
கறங்கொலிநீண்மகிடப்படிவத்தொடுகட்டுமகற்றுபுகடிதங்கண்
மறங்கிளர்கோளரியாகமெடுத்துமுன்வந்தனனத்திதிமகண்மைந்தன். (௫௪)

சிங்கவுருத்தலைகொள்ளும்விருப்பொடுதேவியுருத்தெழுசெயனாடா
வங்கதுவிட்டனனுண்மகனாயினனழல்வசியங்கைகொண்டவணின்றா
னிங்கிவனிக்கணமிற்றுயிர்நீங்குகவென்றெரிவெஞ்சரமெய்தனண்மா
றங்கையொழித்திபமாயவனேறியசயமிகுகேசரிதனையீர்த்தான். (௫௫)

எழுமதியுண்ணுமிராகுவெனத்தனையீர்த்தபுழைக்கையையெதிர்சீறித்
தொழுதகையந்தரியூர்திறலாழிதுமித்தலுமொய்ம்பதுதொலைவுற்றே
பழுதுபடுஞ்சிறைவன்புள்விசும்புபறந்திகலின்றகல்பாரின்கண்
விழுவதெனத்தகுவர்க்கிறைபண்டையமேதியுருப்பின்வெளிப்பட்டான். (௫௬)

விண்ணவர்தொழவருவிசயமடக்கொடிவெய்யவன்மேதியின்மெய்காணா
வுண்ணிறைகோபவழற்கணெய்விட்டெனவுண்டனடேம்பிழியுணலோடும்
வண்ணவிழித்துணைவன்னிபிழிந்தனமகிடனுமிடலொடுவளைகொம்ப
திண்ணியவெண்குலமலைகள்பிளந்துயர்தேவிதன்மேலவைசெலவுய்த் ... ர். (௫௭)

துரந்தவடுக்கலடங்கலுநுண்ணியதுகள்படவெய்தனள்சொல்கின்றாள்
வரந்தருவன்றகுவன்முகநோக்கியிம்மதுநுகர்காலையின்மதனோடு
கரந்திடலன்றிமுன்னின்றிடுதென்றிசைகாவலனூர்வாகனமாக்கிப்
பரந்திடுநின்னையிமைப்பிலிமைப்பிலர்பதமவையவரவர்பாலீவேன். (௫௮)

மைத்திரண்மேதியவென்றவனுச்சியின்வளாவிழுமுருமெனமாறங்கை
குத்தினனெஞ்சுகுழம்பிமெய்வன்மைகுலைந்துநிலைப்படல்கூடாம
லித்திசைசேர்திசையென்றுணர்வுற்றெனயமதிசைவாயலையெறிதீரத்
துய்த்தகடுப்பினுளுற்றியரற்றியுகக்கடைவேலையினோடுற்றான். (௫௯)

ஓடுகருங்குகுவைத்தொடர்பூரணையொப்பவிளங்கெழிலொண்சீயப்
பீடுடையூர்தியுகைத்துடனாரணிபின்றொடர்வுற்றனள்பெயரன்னா
னாடுபொன்னாகவெண்ணாகனையஞ்சுமைநாகநிகர்ப்பநடுக்கத்தான்
மாடகல்யோசனைபத்துளபுண்ணியவாவியின்மூழ்கிமறைந்துற்றான். (௬0)

வாவியமூழ்ந்துண்மறைந்துகிடந்திடுமகிடனைமற்றதன்மாடெய்தித்
தேவிதெரிந்திலணிற்புழியோர்மொழிசேணிலிணங்கிரிசெயமாதே
யாவியயர்ந்தனதங்கையவைத்தலினவனிதனளுறவாழ்ந்துள்ளா
னீவிடலின்றுயிர்கொள்கெனவொல்லைநிகழ்ந்ததுகேட்டனணிகரில்லாள். (௬௧)

கோறலையுட்கொடுசின்றிடுகொற்றவைகுணாயகல்வாய்பயில்கோளரியா
மாறலையூர்தியைவாய்பருகென்றனள்வாவியடங்கலும்வறளாக
வீறலைவாரிதிமண்படவுண்பதொர்வெண்புயலென்னவிரைந்தங்கட்
சேறலதொன்றொழியாதுகுடித்ததுசிங்கவினத்துயர்சிங்கந்தான். (௬௨)

பற்றியவந்தயனிற்பதுகாணிலர்பட்டிகர்மிக்கெழுபயமுள்ளே
யுற்றுறைகின்றுழியோடியகருவரியொத்துவறத்தலுமுதகந்தான்
மற்றதறிந்துளம்வெள்கிவிழித்தவண்மகிடனுநேர்பொரவல்லோரிற்
கொற்றவைகாணவெழீஇயவள்கண்ணெதிர்குறுகினனீறுறல்குறுகுற்றான். (௬௩)

மதித்துமருப்பிணைசேரொருமைத்தலைமடவையிடைக்கழல்வைப்பார்போன்
மிதித்தொருமுத்தலைவேல்கிரிவத்திடைவெண்ணுனைகாலவிறற்கன்னி
பதித்தழல்வாள்கொடுசென்னியரிந்தனள்பட்டனன்மேதிப்படிவத்தான்
றிதித்தொடர்புற்றவர்மாய்வதுதொன்னூற்றெய்வவழக்கின்செயலன்றே. (௬௪)

வேறு.

மேதிமுடிமிதித்தவடிவெட்டுண்டவிடஞ்செந்நீர்
போதலவையொருநான்கும்புலவரவணுவமித்தா
ரூதிடுதோற்றுருத்தியஃதுறப்பிடித்தகரங்கொல்லன்
றீதருஞ்செஞ்சிவைவீசுஞ்செழுந்தழலின்கொழுந்தென்ன. (௬௫)

பொருமயில்வாட்கரங்கொண்டுபோர்மடந்தையறுத்திடலுங்
கருமகிடமுகங்கான்றகறைகடிதுபரந்தெங்கும்
பெருகியதங்கவண்முன்னோன்பிறழ்துளைப்பற்காளியன்மேன்
மருமலர்த்தாளுறுத்தவதன்வாய்வழியுங்கறையொப்ப. (௬௬)

விடங்கெழுமுசுடிகைமுடிவேறுபடத்துடித்திறக்கும்
படங்கொளரவுடலென்னப்பதைத்ததவன்பருங்காயம்
வடங்கெழுசெந்துகிருருக்கிவாக்கிவைத்தமரகதத்தின்
கடங்கவிழ்ந்ததெனக்குருதிகான்றதுபைங்கவரிமுகம். (௬௭)

அனகவருட்சுடர்வடிவாமம்பணத்தியழற்சூலம்
பனகநிகர்பாதகன்மேற்படவூன்றிப்பரிந்திடலுஞ்
சனகனருடாமனைமேற்றையலுறைதடமார்பன்
கனகவரைநிறுத்தலைத்தகருங்கடலிற்கதறினனால். (௬௮)

மாலையெனப்படர்குருதிவளையநிலவரைசிவப்ப
நீலயுருக்கொடிமகிடனெடுஞ்சிரமேனின்றிடலாற்
பாலையெரிவனநடுவட்பருமணித்திண்பீடிகைமேன்
மேலையவட்டொழும்பேறும்விண்ணவரன்றடைந்தார்கள். (௬௯)

ஐவகையநாதமுந்தாமதிர்ந்தொலிப்பவமரேச
னைவகையதருமலரிஞ்சாரம்பொழிந்தார்த்தா
னைவகையபொறிகளிப்பவலகைநரிகொடியெருவை
யைவகையபேருணவுமார்ந்துபசிதீர்ந்தனவால். (௭௦)

இரணியரிலொருகோடியிராவணரிலொருகோடி
முரணுடையதாரகப்பேர்மூர்க்கர்களிலொருகோடி
யரணமிகுசூர்கோடியவரவர்தம்மனிகமுடன்
மரணமுறும்பொழுதுளவாமகிழ்வணைந்தார்வானோர்கள். (௭௧)

வெற்றிபுனைமகிடமுகன்விளிந்தவன்றமேதினியோ
ரிற்றைவரையித்தினம்போலிலங்குதினங்கண்டறியே
மற்றிதுசெங்கதிரொளியால்வந்ததன்றுமாழ்கிருளு
முற்றதொலையிருளுமலவுணர்வதுண்டென்றதிசயித்தார். (எஉ)

விண்குளிரமேதிமுகவெய்யவன்முனிறந்திடலுங்
கண்குளிரக்கவினுருவங்காணுமற்கேளாமற்
பண்குளிரச்செவியமுதம்பருகாமல்வாய்குளிர
மண்குளிர்ந்தபல்லுயிர்கள்வடிவமெலாங்குளிர்ந்தனவால். (எந)

திடங்குலவுமனனின்றிச்சிதறிமையோர்திரளானோ
ரடங்கவணைந்தந்தரிதாளரவிந்தம்பணிந்தருளா
லிடங்கெழுமுற்பதத்தணுகியெல்லவருந்துயர்தீர்ந்தா
ருடங்கிருணோயுயிர்க்கெல்லாமொருநாளிலொழிந்ததுபோல். (எச)

தேமினியமலர்க்கூந்தற்றேவியவடன்பெயரால்
யாமினியவலைக்கரைமேலிலங்குவடசாரிமையோர்
தாமினியபொன்னுலகுந்தருநிழலும்விரும்பாம
லாமினியவளம்படைக்குமணிநகரொன்றுண்டமைத்தார். (எரு)

இழைக்குநகர்க்கிடொன்றுமிசையாமலெவ்வுயிருந்
தழைக்குமியல்வரமளித்தாள்சயமடந்தையவளேவக்
குழைக்குநறுஞ்சுவைமதுரக்குளிரமுதாற்குலவமரீஇ
மழைக்குயின்போனிறைத்தனரவ்வாவியினைவானுடர். (எசு)

தக்கவர்வர்ய்ப்படுவதுமுன்சால்புடையதாயிடினு
மிக்குயர்ந்துபண்டையினும்விழுமியதாய்விளங்குதலா
லக்குமரியரியூர்தியார்ந்துலர்ந்தவறற்பட்டந்
தொக்கவமுதாய்ஙிரம்பிச்சுதைத்தீர்த்தமாயினதால். (எஎ)

புத்தமுதமயமாகும்புண்ணியநீர்படிந்தோர்கள்
சித்தமுறும்பொருள்கூடத்திருவுள்ளஞ்செய்தகல்விசும்பி
லெத்தலமுந்தொழுமிறைவியெழுந்தருளியினிதிருந்தாண்
முத்திதருந்தேவிபுரமுறையீதுமுனிவீர்காள். (எஅ)

இந்நகர்முற்படநன்னுளைமையாளுமிபமுகனைத்
தன்னலர்க்கண்புனைகழலோன்றருந்திலகசாமிதனைப்
பொன்னவிர்பூமலர்கொண்டுபூசித்தங்கவரருளாற்
கன்னவமுந்தவணிறுத்தான்காகுத்தன்கரங்களினால். (எகூ)

கோனதற்பின்றினமைந்திற்குரம்பிலங்கைமுடிவாகத்
தானிழைத்தறலைக்கொண்டுதளர்வினளன்றருங்கனகக்
கானவரியணையிருந்துகவிப்படையாற்கரைகண்டா
ஞனவணைமறங்கெடுக்குமறங்கொடுக்குமனைவர்க்கும். (அ0)

குணமருங்குதேவிபுரங்குடமருங்குகுணசப்பள்ளி
யணையதனுக்கதன்மூலமாமிரண்டுமவற்றுமுடி
யிணையிலணைக்கிறையாகுமிராகவனையிறைஞ்சிடுக
புணருமருளிதுநோக்கிப்புறநெறிக்கட்போனாலும், (அக)

அக்குரம்பினடிமூழ்கியணையணைவார்சங்கற்பஞ்
சக்கரநீர்த்தடமியற்றித்தங்கியதன்றகையுணர்க
விக்கிரமத்திழைத்திடுவார்க்கெழுபவநூறாயிரத்திற்
புக்கவினைத்தொடர்நீங்கும்பொருந்தியிடும்பரபோகம். (௮௨)

ஆதலினாற்றருமதடமதற்குநிகர்பிறிதில்லை
மாகநதிமுதற்றீர்த்தம்வகுத்தவிதன்பதினாறி
லேகமதற்கிணையாகாவிதுசரதஞ்சிலையொன்பான்
மோகமறநாட்டுமணைமூலத்தின்முதன்மூழ்கி. (௮௩)

திகிரியறற்கரையினிற்சேத்திரபிண்டங்கொடுத்தங்கண்
முகிலுருவன்றனைவணங்கிமொழியுநெறிவழிபோகி
யகறருப்பசயனமடைந்தன்றுநளன்றருஞ்சிங்க
நிகரிலணைதனைப்பணிவார்நிரயமுறும்பயனினையார். (௮௪)

இராவணனாமிராகவனையெண்ணியொருதலைநிலையா
யிராவணங்கின்மணவாளனீரிரண்டுமருப்புடைய
யிராவணனுந்தொழுஞ்சரணத்தெழுந்துகளாற்சுசியாகி
யிராவணனைத்தெறுஞ்சேதுவிதன்பொருட்டிப்பணிவென்றும். (௮௫)

கோதவந்தீர்முத்திநிலக்குறியாகிக்குழைக்கொம்பர்ப்
பாதவம்போற்குளிர்கவிகைப்பத்திரதப்பெயர்வேந்தன்
மாதவமாமகன்கொடியாய்வளர்சீதைமனக்கமலக்
காதவனாயமர்சேதுவதன்பொருட்டிப்பணிவென்றும். (௮௬)

வேறு.

ஓதாவிவையிருமந்திரமார்கலியூடாரணையைவணங்கினர்போதுக
வேதாளவரதமென்றறைநீரினில்வேறாரொருவர்விளம்பியநீள்கதை
யீதாதரமொடியம்பிடுநீர்மையர்யாரேமகிழ்வுறவுண்டிடுபான்மையர்
காதாலவரவர்பண்டையதீவினைகாணாரிறைகழல்கண்டுறைவார்களே. (௮௭)

தேவிபுரச்சருக்கமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௬௫௧.

---

# வேதாளவரதச்சருக்கம்.

---

சூதமுனிவனிவையுரைப்பத்தொன்னூற்பொருண்மைமுழுதுணர்ந்த
வாதிவருணரவர்பின்னுமறைவார்சுருதியளந்தமைத்த
வேதவியாதனருண்மதலாய்விளம்புந்தருமத்தொல்காதைச்
சீதவமுதஞ்செவிநிறையத்தேக்கியிருந்துந்தெவிட்டாதால். (௧)

ஆசிலுனதுதிருவடிகளடைந்தவடியேமகமகிழ
வேசில்கதைகளுரைத்தருளாயின்னுமுனநீயெடுத்துரைத்தாய்
தேசுபயிலும்படையாழித்தீர்த்தமதற்குத்தென்பாலில்
வாசமருவும்வேதாளவரதமெனவோர்மலர்வாவி. (௨)

அன்னதீர்த்தமதற்கப்பேரடைந்தவகையுமதன்றகையு
மின்னபரிசென்றெமக்கிசைப்பாயென்னச்சூதனியம்பிடுவான்
மன்னுமுனிவீர்நன்றுவினுமருவுந்தருமக்கதையிதுதான்
கன்னம்புகுமேன்மடவோர்தங்கருத்துமுருகிக்களிகூரும். (ங)

இந்தக்கதைமுன்றருணநிலாவெறிக்குஞ்சடிலத்திறையிறைவிக்
கந்தப்புரத்திலருள்புரிந்ததததனையறைவனறவீர்காண்
முந்தைப்பொழுதோர்காலவனுமுனிவன்வழுவாமொழிப்புனிதன்
சிந்தித்தினியசிவக்கொழுந்தைச்சேருந்தவத்தின்செயல்பூண்டான். (ச)

தன்னுச்சிரமந்தனிலிருப்பான்றனக்கோர்குமரிதானுண்டாற்
பொன்னுதரிக்கும்வனப்புடையாள்புவனம்விளங்குங்காந்திமதி
யென்னுவிசைக்கும்பெயருடையாளீன்றமுனிவற்கென்றுமலர்
மின்னூர்தருப்பைசமிதைபலிவேள்வியேவல்விதந்தருவாள். (ரு)

செயகிலக்கட்டாளொருநாட்சென்றுசெழுந்தண்மலர்பறித்துத்
தூயமுனிவன்மகத்தழலின்றெழிலுக்குதவத்துணேவோடுங்
காயுமதிநேர்கதிர்வதனக்காந்திமதிதான்போந்திடலு
மேயசுதரிசனன்சுகன்னனிருவர்விச்சாதரர்குமரர். (சு)

கனகவிமானந்தனிலேறிக்ககனத்தணைவார்காந்திமதி
தனதுகவினுமயிலியலுந்தாமக்குழலுந்தளிரடியு
மனமென்னடையுங்கவிரிதழுமவனிசிறுகவகனிதம்பப்
பனகபடமும்பணைமுலையும்படைவேல்விழியும்பார்த்தார்கள். (எ)

சூழுமவரின்முன்னவனுஞ்சுதரிசனன்றன்சுடரிழைமேல்
வீழுமனங்கொண்டநங்கனடும்விளைப்பூஞ்சரங்களுரங்குளிப்பத்
தாழுநெறியாற்றனையிழிந்துதைபலவளச்சார்ந்துரைப்பான்
யாழின்மொழியாய்நீயாரையேவருணைத்தந்திடுமேலோர். (அ)

உன்றனெழிலாமழல்வீசவுருகியுள்ளநவநீத
மின்றெனுடலந்தனைச்சுடுமாலிரதியனையாயெனக்கிரங்கி
மன்றலளகமலர்வேரிமழையாற்றணித்துமகிழ்ந்தணைப்பாய்
நன்றுதருங்கேசரர்மகனயானுமஞ்சுதரிசனனங்காய். (கூ)

மாளாவளங்கூர்விஞ்சையர்க்குமன்னன்மதலையானதனுற்
றேளாத்தரளத்தொடையனையாய்துணையாய்விரும்பிற்சுகம்பெரிதாம்
வேளாலழிந்தேன்விழிவாளால்வென்றிதருவாயென்றிடலுங்
கேளாவதனைக்காந்திமதிகிளப்பாளறநூற்கிடைநோக்கி. (க0)

வம்மோசுதரிசனகேண்மோமறைநூற்பொருடேர்காலவனும்
வெம்மோகனமின்முனிமகள்யான்வேண்டும்பணியங்கவற்கிழைப்பேன்
பொம்மோய்வேள்விபுரிவதற்குப்போதுகொணர்ந்துபோகின்றேன்
செம்மோட்டிரவிதேர்தோன்றிச்சென்றதியாமமொன்றதனுல். (கக)

தரியேனிங்குத்தாழ்த்தக்காற்றந்தைமுனியுந்தமையுதவும்
பெரியோரன்றிப்பேதையர்க்கோர்பெற்றியுளதோபெறுவாயே
லெரியோடிகலுந்தவத்தாதைக்கிசையென்றியம்பியேகுற்றுள்
பிரியாமருளினவள்கூந்தற்பிடித்தான்வலிதிற்பெயர்குற்றுன். (கஉ)

இயலுமெகினத்திளம்பேட்டிலெழில்வெண்டேவிதொடுத்தீர்க்கும்
வயவில்வேடன்றனைப்போன்றான்மரபின்விச்சாதரர்குமர
னயர்வினிலையுங்காந்திமதியவன்கையகப்பட்டலைகுழலாற்
றுயர்கொண்டுழந்தாண்முட்கவையாற்றோகைதுவக்குண்மஞ்ஞையைப்போல். கங

பதுமமகளைக்கொடுபோகும்பத்துமுகன்போற்பாறுதலு
மிதுவென்புகுந்ததெனவேங்கியோராரன்றிலெனக்கதறிச்
சுதரிசனனுஞ்சேணியர்கோன்றோன்றலெனதுசுருட்கோதை
யதனைப்பற்றியீர்த்தகல்வானத்தாவெனையீங்களியென்றாள். (கச)

கடியுற்றலறுங்காந்திமதிகடுங்கூற்றிசையைக்காலவன்றா
னெடிதுற்றறிந்துமுனைவரொடுநில்லாதேகினோர்கண்டான்
வடிவிற்சிறந்தமகடனையுமயிர்தொட்டிழுக்குமைந்தனையு
மிடியிற்கொடியபெருஞ்சாபமிடுவான்சீறியிஃதுரைப்பான். (கரு)

விச்சாதரரின்மிகவிழிந்தோய்வேதநீதியொருவினையாற்
கைச்சாரிடும்பைபலமருவிக்கவல்கூர்மலினக்கடைமாந்த
ரச்சாய்நெடுநாளலமரலுற்றதன்பினெவருமணுகாத
மைச்சார்சுழற்கண்வேதாளவடிவாகென்றான்மறையுணர்ந்தோன். (கசு)

தசையோடுதிரந்தனையருந்தித்தையலாரைவலிபுரித
லிசையாவரக்கர்வேதாளமிரண்டுமிழைக்குமியல்பாகும்
வசையார்வன்மைசெய்தலினால்வண்ணமிதுநீபெறக்கடவை
நசையால்விலக்காநினக்கிளையோனரனுமளவேநயந்திடுவான். (கஎ)

ஆவதிலனால்வேதாளமகலுஞ்சாபமவன்றனக்குக்
காவற்சேணிவிக்கினத்திகவுதுகனைத்தான்காணிலென்று
தேவர்பரவுங்காலவன்றான்றெய்வமுனிவர்திரளோடுந்
தாவின்மகளையுடன்கொண்டுசாலையுறையுடனேச்சார்ந்தான். (கஅ)

ஆத்தவறிவினவன்சாபமதனுக்கஞ்சியதன்பின்னர்
மூத்தசுதரிசனனிளையமுறைதீர்சுகன்னனுடனழுங்கி
நீத்தயமுனைக்கரைவேதநிகர்கோவிந்தசாமியெனுங்
கோத்தமறையோன்பிதாவாகக்கொள்வோமென்றுட்கொண்டானால். (ககூ)

விசையதத்தனெனப்பிறந்தான்விச்சாதரரிற்சுதரிசன
னசைவிலசோகதத்தனெனவானான்சுகன்னனவர்க்கிளமை
யிசையும்பருவத்தருண்மறையோனீராறாண்டுமழையின்றிப்
பசையில்கருப்புவரத்தளர்வான்பன்னியுடனும்பாலரொடும். (உ0)

தனயர்மனைவிதன்னோடுந்தளர்கோவிந்தசாமியென்பான்
றுனைகொள்வருத்தமருத்தலைப்பத்துகடீர்காசித்தொன்னகர்போய்க்
கனிகொள்வடக்கீழ்த்தவமிழைக்குங்கபாலமாலாபரணனெனு
முனியைவணங்கவவனினியமொழிந்தாங்கொன்றுமொழிந்திடுவான். (உக)

வாக்குமறையோர்குலத்துயர்ந்தோய்மைந்தரிவரின்முந்தையவ
னீக்கமுளதாமுனக்கெனலுநெடுந்தேரிரவிநீர்க்கணையா
லாக்கும்பகைதீரந்தணன்பாலாகுந்துயரமவுணரினி
யூக்கமுடன்வந்தடுவரெனவொளிப்பான்கடலினுட்புகுந்தான். (உஉ)

தேரினடக்குங்கதிர்மறையச்செய்யுநியமச்செயலாற்றித்
ஆரநடக்குந்துயக்கதனுற்றுணரில்கோளியதன்பாங்கர்ப்
பாரினடக்கும்பலிநடவாப்பழஞ்சேதிமத்திற்பாலரொடுங்
காரினடக்குங்கோதையொடுங்கங்குற்றுயின்றான்கலைமறையோன். (௨௩)

தந்தைவிசயதத்தனொடுதானைவிரித்தோர்தலைத்துயின்றா
னந்தவசோகதத்தனுடனன்னைதுயின்றாளவ்வண்ணம்
பந்தவிசயதத்தனைத்தான்படியினெடுஞ்சேண்படருதலால்
வந்தகுளிருமெய்வெதுப்பும்வாட்டத்தாதைமருண்டணைத்தான். (௨௪)

அப்பனணைத்துமவியாமலந்தவிசயதத்தனுக்கு
வெப்புங்குளிருமிகத்தருவாய்வெய்யதழலென்றையனுடன்
செப்பவவனுந்தீத்தேடிச்சென்றுதிரும்பிச்செழுந்தோன்றான்
மைப்பொங்கிருள்வாய்நகருறங்கும்வன்னிகிடையாதிவணென்றான். (௨௫)

ஐயனுவலுமதுகேட்டுமமையாப்பிணியாலவனுரையைப்
பொய்யென்றகற்றிப்பூசுரனேபோதிகொணர்திபொருக்கென்னச்
செய்யதழலீண்டெரிவதெனச்சேணிற்றெரிப்பத்திருமறையோன்
மெய்யின்மொழிகேணிதுகேண்மோவிசயதத்தாவெனப்புகல்வான். (௨௬)

இடனுந்தூரம்வெருவருநெஞ்செரியுங்குணபந்தனைப்பற்றிச்
சுடலையதன்கணதுதீண்டிற்சுருங்குமாயுளாகையினாற்
கடனன்றுனக்கென்பதுகருதிக்கவராதொழிந்தேன்காணென்றா
னுடனொன்றவனும்பயந்தவனையொறுத்துநோக்கியுரைசெய்வான். (௨௭)

ஈமத்தழலென்றெனையளிக்குமெந்தாய்நொந்திங்கிடருழப்பேற்
கோமத்தழலென்றாயேலுய்யாதின்றெனுயிரொன்றா
னாமத்துணையின்மகவாஞ்சையளக்கரமிழ்ந்தோனதுகொள்வான்
போமப்பொழுதுவிசயதத்தன்புறப்பட்டவன்பின்போகுற்றான். (௨௮)

சுடலைக்காட்டில்விசயதத்தன்றொக்கவதற்பின்சவத்தழலி
னுடலைக்காய்ச்சியிதஞ்சிறிதேயுற்றான்பெற்றானுடன்கேட்பான்
மிடலுற்றெரியுமீங்கிதனில்வேறுதிரண்டுவிளைக்கமல
மடலிற்சிவந்துவயங்குமிந்தவன்னியென்னவகையென்றான். (௨௮)

சொன்னமதலைக்கருமறையோன்சொல்வான்குணபத்துழைமண்டைச்
சென்னிவளைத்துச்சுழன்றெரியுஞ்செந்தீச்சுவாலையதனாலே
வன்னிதிரட்சிவடிவாகிவசைகீகசமென்றிருவகையாய்த்
தின்னும்புலவாற்செம்பதுமத்துணரிற்றோன்றுஞ்சுதவென்றான். (௩0)

கேட்டபொழுதில்விசயதத்தன்கிட்டிப்பிணத்தின்றலைதனையோர்
காட்டத்தறைந்தானறையவசைகக்கித்தெறித்ததவன்முகத்தி
னாட்டுநசையாற்படுநெய்த்தோர்நாவால்வளைத்துநக்கிநவி
ரோட்டையெடுத்தவ்வசையனைத்துமுண்டான்மறித்துமுணர்வில்லான். (௩௧)

வேறு.

கோதாளிரத்தவசைவாரியுண்டகோவிந்தசாமிகுமரன்
பாதாளமும்பர்பதிமுட்டிநீண்டபடிவத்தினோடுபயமார்
வேதாளமாகிமிடலோடெழுந்துமிடையண்டகோடியுடைய
மாதாளியைந்துதுணைமின்பிறங்கவருகார்விசும்பினதிர்வான். (௩௨)

நின்றுண்டவூனின்வசையன்றிமுன்னர்நிலையுற்றதாதையுயிருங்
கொன்றுண்டுமிக்கவசையுண்ணநாடுகுறியோடும்வந்துகுறுக
வன்றுண்டதீர்த்திவனாவியென்னவறைசேணில்வாணியதனான்
மின்றுண்டமூரலதுபோனதஞ்சிமிகுதூரம்விண்ணினிடையே. (௩௩)

வேணிக்கணோடியபலகோடிகோடிவேதாளநாதன்மகிழுங்
காணிக்கையாகிநடுமேவிமுன்னங்கபாலந்தகர்த்தகதையைப்
பேணிக்கபாலமிகுபோட*னென்கைபெயராய்நராத்தியணியோன்†
பூணுற்றவெற்றிபொலிசேனைகாவல்புணர்வுற்றிருந்ததுவே. (௩௪)

வேறு.

அனையதோர்காலைதன்னிலடல்கொள்சித்திரசேனப்பேர்
வனைகழல்வீரன்றன்னான்மறங்கெழுநராத்திபூணன்
றனதுயிர்மாய்ந்ததன்னான்றலைமைசேரரசுதாங்கி
வினைகெழுகபாலபோடவேதாளமேவிற்றன்றே. (௩௫)

மாவிந்தவரைமுளைத்தவளர்பிறைவாளெயிற்றுச்
சாவிந்தவண்ணமங்கட்டங்கியபின்னைநின்ற
கோவிந்தசாமியென்பான்குலமகன்கொள்கைகாணூஉ
வாவிந்தவிறும்பூதென்னென்றகம்வெரீஇயகன்றுபோனான். (௩௬)

புறந்தழற்காடுநீங்கிப்புதல்வனோடில்லாடுஞ்சுந்
திறந்தபாண்கோயிலெய்திச்சேய்முறையவர்க்குச்செப்பி
யிறந்தகன்றுடையவான்போலேம்பலித்திரங்கியேங்கி
யறந்திரிந்தறியேனென்னாவந்தணனாண்டிருந்தான். (௩௭)

சான்றவேதியனையங்கட்சமுத்திரதத்தனென்னு
மான்றசீர்வணிகன்கண்ணுற்றறிந்தவனலக்கண்டீர
வேன்றநண்பளைந்தவின்சொலிசைத்திருபிறப்போயிங்கென்
வான்றனமுழுதுநீயேவளர்த்தனைவைகிடென்றான். (௩௮)

கோட்டமிலிளங்கோமாற்றங்கோவிந்தசாமிகேளா
வாட்டியுமகவுந்தானுமதற்குடன்பட்டவன்றன்
மாட்டினைப்பெருக்கிவிண்போமைந்தனைமண்ணிற்காண
நாட்டியகவற்சியோடுநண்ணியங்கிருந்தானன்றே. (௩௯)

இந்நெறியுறையுநாளிலிளவலாமசோகதத்தன்
றன்னெறிமறையுமேனைத்தடங்கலைப்பரப்புந்தானை
மன்னெறிமரபுக்கேற்றவழக்கமும்பிறவுங்கற்றுப்
பன்னெறியவரும்போற்றும்பான்மையிற்சிறந்தான்மன்னோ. (௪0)

தேசிவன்படைக்குமேல்வைத்திகழ்பிரதாபமௌலி
காசிமாநகரங்காக்குங்காவலன்வாயில்காண்பான்
மாசிலாவவாசிநின்றோர்மற்படைவல்லமல்லன்
வீசியவென்றியாண்மைமேதகவோடும்வந்தான். (௪௧)

அவன்றனையரசன்பாங்கரவ்வினையாளரஞ்சிக்
கவன்றனைவோருமொல்கக்காவலன்கனன்றுசிந்தை
யிவன்றனையழைத்துநீயேயாரையுமெள்ளுமற்போ
ருவன்றனைவென்றியாயினுதவுவன்வேண்டிற்றென்றான். (௪௨)

---

* போடம்—தகர்த்தல். † நராத்திபூடணன்.

மாற்றமுட்கொண்டுசொன்னமன்னனுமயங்கமல்ல
னூற்றமுமவமதிப்புமுவகையுமுயிரோடுண்பான்
காற்றெதிர்கறங்கிற்சுற்றிக்கண்ணிணைகலங்கக்கையா
லேற்றறையொன்றுகொண்டானிரண்டறைமிகுதியென்பான். (௪௩)

அறையதின்மல்லனைவாயறைதிறந்தாவிபோனான்
மறையவன்மைந்தன்செய்தமைந்தினைமகிழ்ந்துநோக்கி
யிறையவனிலேகராலுமிழைப்பதோவென்றுவென்றிக்
குறையுளாமசோகதத்தனுடனுயிர்நண்புகொண்டான். (௪௪)

ஆடகன்மொய்ம்பின்மிக்கவாண்டகையசோகதத்த
னோடகன்ஞாலங்காவலுடையவனொருநாட்பச்சைக்
கோடகங்கரப்பத்தானேகொழுந்தழன்மாலைப்போதிற்
காடகம்போய்மயூரகதியுடைக்கிள்ளையூர்ந்தான். (௪௫)

அற்றதுபோழ்திற்பீலியகநெடுங்குடையிற்காகஞ்
சுற்றியநிழற்கீழ்நீண்டசுடர்முனைக்கழுவினுச்சி
யுற்றிடுமொருவன்பாய்மாவூர்ந்திடுமரசைநோக்கிக்
கொற்றவகேண்மோவென்னாக்கொண்டதன்குறைகிளப்பான். (௪௬)

ஒன்னலனேவலாலேயொருசிறிதுஞற்றுந்தீங்காற்
றன்னலர்கருணைநீங்கிச்சயமிகுந்தண்டபால
மன்னவன்கழுவில்வைத்தான்வைகலுநான்குசென்ற
வின்னுயிர்போவதொல்லையான்றவமிழைக்கிலன்றே. (௪௭)

பூரியனாதலாலேபொழுதுநீட்டித்ததந்தோ
நீரினைவேட்டுலர்ந்தேனெஞ்சகமென்னமன்னன்
றாரிசைதோளசோகதத்தனைத்தண்ணீர்த்தாகந்
தீரியநல்கவேண்டுஞ்செம்மனீயிவனுக்கென்றான். (௪௮)

கொன்புவியேந்தல்கூறக்கோவிந்தசாமிதந்தோன்
றன்பெயர்ப்பொருண்மைதோன்றத்தடம்புனற்சிரகந்தாங்கி
யன்பினாண்டணையும்போழ்திலக்கழுக்கடையிற்கீழோர்
மின்புரைமருங்குற்செவ்வாய்வெண்ணகைக்கரியகூந்தல். (௪௯)

பைந்தொடிதனித்தொருத்திபடுத்திருந்தாளைப்பாரா
வந்தணையார்கொலோநீமருளினந்துணங்கையாடும்
வெந்திறற்பிதிர்வனத்தில்வேண்டியபொருளுமுண்டோ
பந்தணைபதுமப்பாவாய்படுகொலைக்கழுவின்பாங்கர். (௫௦)

ஈண்டிருக்கின்றாயென்னவிக்கழுமிசையிருக்கு
மாண்டகையிவனென்கேள்வனருங்கொடையாளன்போல
மாண்டுயிர்வழங்கான்வல்லைமாய்குவன்போலுமாய்ந்தால்
வேண்டுயிர்கூடநீப்பான்மேவியதிங்குமேலோய். (௫௧)

மாக்கழுத்தலைமேல்வைகுமற்றிவன்வானம்பார்க்கு
மேக்கழுத்துடைமையாலேயிரும்புனலீயமாட்டேன்
போக்கழுங்குற்றுநெஞ்சம்பொருமுவேன்புகல்வதென்னே
நீக்கழுக்கடையாநல்லோய்நீர்மையீதென்றாணின்றாள். (௫௨)

கூறியகூற்றுநாடிக்குளகழலசோகதத்த
னூறியகருணேயோடுமுளைசெய்வானுயர்ந்ததோளி
லேறியங்குனதுகொண்கற்கெழுந்தநீர்வேட்கையெல்லா
மாறியவண்ணமன்னுயார்புனலளித்தியென்ருன். (ருங)

காரிகைகடுப்பிலங்கட்கந்தரந்தாழ்த்துநிற்பான்
பாரியபுய்யமீக்கொண்டுபெருகினள்பதிவாய்கக்குஞ்
சோரியையசோகதத்தன்ருேண்மிசைவீழ்தலோடும்
வீரியனிதுவென்னென்னுமீப்படவிழித்துக்கண்டான். (ருச)

பசும்புயற்றுளியுண்வானம்பாடியிற்பாவைநுங்கு
மசும்புறுகுருதிகாணுவாடகஞெகிழத்தோடுந்
தசும்புறழ்கொங்கையாடன்ருளிணைபிடித்தான்றள்ளி
விசும்பிடைப்போனுளோர்கான்மிளிர்மணிச்சிலம்பைவீழ்த்தி. (ருரு)

பொன்மணிச்சிலம்புகொண்டுபூசுரன்போகிக்காசி
மன்மருங்கியம்பியெல்லாம்வழங்கினனதனைவேந்தன்
சொன்மறைக்குமரன்வீரத்துணிபினேவியந்துபோற்றித்
தன்மகண்மதனலேகைதனையவன்றனக்களித்தான். (ருசு)

அணங்குறழ்மதனலேகையவளொடுமசோகதத்தன்
மணங்கெழுமருகனுகிவாழுநாண்மாமன்மற்றவ்
விணங்குநூபுரத்திற்கேற்றவிணையரிச்சிலம்புநேடிக்
குணங்கிளர்கருத்திற்கொண்டகோளினைக்குறிப்பிற்றேர்ந்தான். (ருஎ)

மாதுலன்காதநீர்ப்பான்மறையவன்மயானத்தன்றே
யீதியாம்பெற்றேமின்னுமீமமேலேகியிட்டாற்
கோதுகொள்புலவூன்றின்னக்குறுகும்வேதாளமண்ணே
யாதும்வந்தடுக்குமாண்டவ்விராக்கதவணங்குமெய்தும். (ருஅ)

அரியமந்திரத்தினுலேயாகிலுமழைத்தரக்கி
பரிபுரங்கோடும்யாண்டும்பலித்திடாப்பணியுமுண்டோ
திரிவிலாவன்கண்வென்றித்திரருக்கேம்பலென்னுப்
புரியும்வேதாளமெண்ணில்பொருகணநிருதசாலம். (ருக)

என்னவெண்முடித்திமம்போயியம்பினன்மந்திரங்க
டின்னுமூன்கொண்மினென்னச்செறிந்தனவலகைமற்றும்
வின்னுதலுருமுக்கூற்றுவித்துத்துக்கேசியென்னு
மன்னவடானுமுற்றுளநிந்தனனசோகதத்தன். (சுo)

ஆர்ப்பரித்தருந்தச்சூழுமக்கணத்தவளைநோக்கி
வேற்பொருவிழியாயொன்றைவிடுத்துவிண்சென்றுயன்று
காற்பரிபுரத்தின்மற்றக்கவின்றனைதணையுந்தாவென்
றேற்புறமறையோன்கேட்பவிராக்கதமாதுசொல்வாள். (சுக)

பண்டதுகொண்டவீரப்பனவனேபணிசாலன்ன
வொண்டனிச்சிலம்புங்கோடியுதுவன்றியொளிகொண்மாழை
விண்டபூங்கமலப்போதும்வித்துத்துப்பிரபையென்னும்
வண்டறைபரிசார்மற்றென்மகளையுங்கோடியென்ருள். (சுஉ)

காஞ்சனநளினப்போதுங்கன்னியுங்காற்சிலம்பும்
வாஞ்சையிற்கொண்டுமீண்டம்மறையவன்மன்னவன்முன்
பூஞ்சிலம்பதனைவைத்தான்புகுந்தவாறரசன்கேளா
வாஞ்செயலார்செய்வாரென்றதிசயித்தவற்புகழ்ந்தான். (சுஈ)

அத்திறமமருநாளிலலங்குவேலசோகதத்தன்
மொய்த்தபூந்தளிமநாப்பண்முயங்கிவீற்றிருக்கும்போழ்தில்
வித்துத்தப்பிரபைதன்னைவினவுவான்விளங்குசெம்பொற்
புத்திதழ்ப்பதுமமெங்கட்பூத்திடுமென்னப்பூவை. (சுச)

கரவலகபாலபோடகப்பெயர்க்கடிவேதாளப்
புரவலற்குள்ளதாங்கோர்பொன்னிதழ்க்கமலப்பொய்கை
வரவலமறையோயுன்றன்மாமனீராட்டிற்கொய்தே
யிரவலர்கதுப்பினென்றுய்க்கீந்தனனென்றிசைத்தாள். (சுரு)

பாசிழைபகரக்கேட்டுப்பால்வளாய்பசும்பொற்கஞ்ச
வீசிலகொணரவேண்டுமேவுதுமவண்யாமென்னுப்
பூசுரன்றெரிவையோடும்புங்கவன்புகன்றசாப
மாசறுகழுவுவான்போன்மருவினன்வாவிப்பாங்கர். (சுசு)

துறக்காடணியதாகத்தோன்றியவெல்லைபோல
நறைக்கொழுங்கனகக்கஞ்சநாண்மலர்நிறையப்பூத்த
மறக்கடிவயவேதாளமன்னவனுணையஞ்சிச்
சிறைக்களிவண்டும்வீழாத்தேன்றடங்கண்டுவந்தான். (சுஎ)

வெய்தெனச்சுழிபுக்குவிரிந்தபொற்சரோருகங்கள்
கொய்திடத்தடுத்தரப்புங்கொடியவேதாளமெல்லா
மொய்தினிற்செற்முன்செற்றநோன்மைதானுவலக்கேட்டுக்
கைதருகபாலபோடகன்மனங்கனன்றுபோந்தான். (சுஅ)

போந்தவன்றனைவெள்ளம்பொங்கழற்கரியதாது
தோய்ந்தநீர்போலமாய்த்துத்தோன்றும்வேதாளவண்ணன்
மாய்ந்திடவடருங்காலைவளரொளிவிமானமீதிற்
காந்திசேர்விக்கினத்திகவுதுகன்ககனநண்ணி. (சுகூ)

அவனயமொழிகள்சொல்லியழைத்துயசோகதத்தா
விவனுயிரிவனைக்கொள்ளேலென்றுவிண்ணியமியம்பு
முவணையிற்சாபநீங்கியுறுவதற்குறுவன்கூறுந்
தவணையன்றுதலாலேதண்ணளியாற்றடுத்தான். (எ0)

உரைசெயுமோசைதேராவும்பரினேக்கிவிஞ்சைக்
கரசனைக்கண்டான்கண்டவளவினிலகன்றுசாபந்
தெரிசனவேதிகண்டசீருணம்போலத்தெய்வப்
பரிசெலாமருவியுற்றுன்பட்டர்சுடர்ப்பைம்பொற்றேர்மேல். (எக)

அன்னவன்றனக்குப்பின்னுமளியிளுலறைவான்சேணி
மன்னவன்சுகன்னவம்மோமற்றிவணின்றேனுன்றன்
முன்னவன்காலவப்பேர்முனிமகட்டீண்டலாலே
சொன்னவெஞ்சாபச்சூழாற்சுழற்கண்வேதாளமானுன். (எஉ)

தடுத்திலையென்றுனக்குந்தந்தனன்சாபம்யானீங்
கடுத்திடநீங்கிற்றற்பமாகையாலவன்றனக்குத்
தொடுத்ததீங்கொழியுமெல்லைசொல்லினனில்லைநல்லோய்
விடுத்திவண்சேண்போகென்றுவிளம்பினன்விஞ்சைவேந்தன். (௭௩)

மின்னுடைத்தனிவிமானமீப்பயில்விஞ்சைநாதன்
றன்னுடன்சுகன்னன்மீண்டுசாற்றுவான்றலைவகேண்மோ
வென்னுடன்வந்தோனின்னவிழிபுறவேகேனீது
நின்னுடைக்கருணையாலேநீங்குமாநினைதியென்றான். (௭௪)

நினைகுவாய்நீயேயென்றுநின்றவனிரப்பநீடுங்
கனைகழல்விக்கினத்திகவுதுகன்கழறுகின்றா
னெனையவராலுநீங்காவித்துணைக்கடியசாபந்
தனையெவரகற்றற்பாலார்சாற்றுவதுண்டுமற்றும். (௭௫)

பங்கயன்சனகராதிப்பண்ணவர்க்குரைத்ததாகு
மிங்கிதுகேட்டியாயிலிசைக்குநன்னீர்களெல்லாந்
தங்கியநிலையாப்நேமித்தடந்தனக்கணித்தாய்த்தென்பால்
வங்கவாரிதியின்கூலம்வதியுமோர்புனிதவாவி. (௭௬)

நோக்கிடவிரிந்துபாறுநொய்தினில்வினைகளெல்லாம்
வாக்கினால்வகுத்தலாற்றேன்மற்றதின்மூழ்குமாந்த
ராக்கமுன்றமையன்றன்னையப்புனலாட்டுவித்தா
னீக்குறுங்காலவன்முன்னிகழ்த்தியசாபமென்றான். (௭௭)

செப்பிதுவினவியொல்லைத்திசைமுகன்சனகர்முன்னோர்க்
கப்பொழுதிசைத்ததாகியாழிநீரதற்குத்தெற்காய்
மைப்புயறவழுங்கந்தமாதனவரைக்குதக்கா
மொப்பினீர்மேவிமுன்னோற்குரைசெய்வானொன்றுபின்னோன். (௭௮)

சடைமுடிக்காலவன்றன்சாபநோய்தரும்வேதாள
முடையுடறீரமுன்னோய்முழங்கொலித்தெய்வவாவி
குடையெனப்பவனமங்கட்குரைத்தெழுதரங்கமோதவ்
வடையுநீர்த்திவலையொன்றையவன்மிசைவீசிற்றம்மா. (௭௯)

வீசியவுறைவாள்கொண்டுமேயவெஞ்சாபம்வீட்டி
யேசிலந்தணனாயங்கணிருந்துசங்கற்பங்கூறி
நேசமோடுதகமூழ்கிநிலைமொழிதன்னைநீத்தான்
பூசுரனென்றுதொக்கபுணர்மொழியிரண்டுதம்மில். (௮0)

தோமினீர்த்தடத்தைவாழ்த்திச்சுதரிசனன்றானன்று
காமருவிக்கினத்திகவுதுகன்சுகன்னனென்ன
வாமிருவோருஞ்சூழவரம்பையர்வாழ்த்தெடுப்பத்
தாமமார்கடவுணாட்டிற்சார்ந்தனன்றலைமையோடும். (௮௧)

பண்பில்வேதாளரூபந்துவலிற்பாற்றலாலே
வண்புனற்பெயர்வேதாளவரதமென்றுரைக்கும்வைய
மொண்புனலிதற்குமுன்னமுரைத்தவையுரைக்கநின்ற
வண்புனல்யாவுமொவ்வாமண்புகார்மூழ்குமாந்தர். (௮௨)

வேறு.

நியமநலங்கொடுபுரிகுகதென்புலமாள்வோர்க ணிலவுகடன்றனேயினேயதடந்தனி லோர்ஞான, மயமுணரந்தணிரதிர்விளங்கிடவேதாள வரதமெனும்பெயர்வரவு மொழிந்தனமாருத, நயமிகுநண்பொடுபகருமிகன்கதைநாவார நவிலவிரும்பினர் செவியுறுமன்பினர்நாடோறும், பயமருள்வஞ்சகவினேயுளமுந்திலர்பார்மாதர் பணே முலேயுண்கிலர்பரமப்தந்தனில்வாழ்வாரோ. (அரு)

வேதாளவரதச்சருக்கமுற்றிற்று.

ஆ விருத்தம் எகூச.

# பாவநாசச்சருக்கம்.

அந்தண்மாதவிர்கள்வம்மினீருளமமைந்துகேண்மின்முதலாடினேர்
மைந்துசேரலகைவரதநீரினிடைமற்றதன்பினுடன்மருவுவார்
கந்தமாதனவரைக்கண்மற்றதுகடற்கண்மன்னுகரைபுருவமாய்ப்
பந்தநீங்கயனிருக்கையுய்க்குநெறிபடவகுத்ததுபடிப்பிரான். (க)

கோடியாயிரவிலக்கம்வாவியுளகுலவுவெற்பதனிதகளு
மாடிலத்தொகையசலதியாச்சிரமவடவிவேதவனமாதியாய்
நாடியப்பதிகள்யாவுமெய்கொடுநயந்துவைகுமவணுடொறும்
வாடிலாவமரரொண்வகைத்தொகையவசுவசிட்டன்முதன்மறைவல்லோர். (உ)

சித்தர்சாரணர்பிதிர்க்கள்விஞ்சையர்சிறந்தகின்னரர்கணங்கடா
மொத்தசீருலகபாலர்பானுமுதலொண்பதின்றெகையகோளினேர்
நத்துலாவுகரனுன்முகக்குரிசினுகநாதனிவர்நங்கைமா
ரத்தியானனன்விசாகன்மற்றையரளப்பிலார்கள்பலரவரொலாம். (ங)

பொய்வினேப்பவமொழித்துநீடுபுவிபுனிதமாம்வகைபொருப்பிதின்
மெய்விருப்பினெடுமேவுவார்தருணவெண்ணிலாமவுலியண்ணலு
மையரிக்கணுமையோடிருப்பனவண்மருவுமாடலரமாதரார்
சைவநற்சரணருச்சனேக்குரியதகையராயினர்தயங்குவார். (ச)

வீறெடுங்கிளர்விலங்கலீதெவர்விழிக்கெதிர்ப்படுமவர்க்கெலா
மீறெடும்பவமிலாதவின்பமதியெய்துமிங்கிதிலெழுந்துலாங்
காறெடும்பொழுதினியைபின்மாதர்புணர்கடியபாதகமோர்கோடியின்
பேறெடும்பிரமகத்திகோடிபழிபின்கொடுத்தனபெயர்ந்துபோம். (ரு)

வழுவின்மாதவர்வணங்கும்வெற்பிதுமுன்வாரிநாப்பணதுமாநள
னெழுவினீள்புயவிராமனேவலிலிருங்குரம்பினேயிழைத்திடும்
பொழுததற்குநடுவானதெண்ணிநரர்போற்றிசெய்துநெறிபோதுவார்
தொழுதுமற்றிதனேவேண்டுகோடல்சிலசொல்லவேண்டுமிகுதொடர்பினல். (சு)

சாந்திமேவியுயர்தருமமல்கியரிதன்னேமுன்னமரர்தாமெலாம்
போந்திறைஞ்சவளர்பொற்பின்மன்னியபொருப்பிறைமிகுபுன்மைசான்
மாந்தரேமுனதுசென்னிமேலுனேமதித்திடாதடிமிதித்திடு
மேந்துதீவினேபொறுத்துநின்கணமரீசனேத்தரவிரங்குவாய். (எ)

என்றுவேண்டுமொழிகூறிமெல்லவதிலேகிவேலையிடைமூழ்கியாங்
கொன்றுகாதலொடுகடுகுகொண்டதொருபிண்டநல்கிலுகமுற்றுறு
மன்றுகாறுமகிழ்கூர்வர்தென்றிசையினார்சமித்தளிரினளவிடிற்
சென்றுசேணரகுவாழ்பிதிர்க்கண்முறைசேர்வர்முத்தியோடுதேவரூர். (அ)

ஏவநாசமணுகாதவிவ்வரையிலெங்கணும்புகழெடுத்தசீர்ப்
பாவநாசமெனவுண்டுமாதருமபட்டமொன்றுடல்படுந்துடக்
காவநாசமுறுமெண்ணிலாடினரகற்றியெவ்வினையுமாவணைக்
கோவனாசறுவைகுண்டம்வைகுறுவர்கோதின்மாதவகுணத்தினீர். (கூ)

எனநவிற்றியருள்சூதனோர்முனிவர்யாவரும்பெருகுமிச்சையால்
வினவுகிற்பவர்கள்பாவநாசமெனமேவுபேருணர்வின்மேலையோய்
வனமலர்த்தடமிதற்குவந்ததுவுமற்றிதன்பெருமைமுற்றவு
முனதுளக்கருணையாலுரைத்தியெனவோதவானவனுவப்பினால். (க0)

இமையவெற்பினயல்பிரமவாசிரமமென்னுமெல்லையினியன்றவா
றமையவுற்றறைவனறவிர்காளறிமினாயிடைப்பலவறந்தரு
முமையுதித்தகிரியருகுசேர்தருமவுருவவாசிரமமொன்றுதான்
சுமைமலர்ப்பணைவயங்குதண்டலைதுதைந்தநீழலொடுசூழ்வதாம். (கக)

கோடிலங்கவருகுன்றமோடமர்குராங்கமெங்கணுநெருங்கிடுந்
தோடிலங்குமலர்வண்டினோசையொடுபண்டைவேதவொலிதுன்றிடும்
பீடிலங்குமறைவாணர்சாரணர்பிறங்கியோகியரறங்குலாம்
வீடிலங்குமனைவாழ்க்கையோரதுவிடுத்துமெய்ம்மையுணர்விழுமியோர். (கஉ)

இற்றொடர்ச்சியொடுவாழ்வனத்தவர்களியல்வுழிப்பிரமசரியமா
நற்றொடர்ச்சியவர்தத்தமக்குரியநான்மறைத்துறைநடாத்துசீர்
முற்றொடர்ச்சிபயில்வாலகில்லியரைமுதலமாதவர்கள்பிறரொலா
மற்றொடர்ச்சியகன்ஞானவாச்சிரமமாமதன்கணினமர்ந்தநாள். (கங)

முடமதிச்சடிலமுக்கணக்கனருண்முன்னுமாதவர்கண்மன்னுமவ்
விடமதிற்பழையசூத்திரக்குலமியன்றுளானொருவனிகன்மிகுந்
திடமதிப்பெயரினானணைந்தினிதுசென்னியாலெதிர்வணங்கினான்
கடமதித்தகளிறன்னவற்கவர்கள்காசிலாசிபலகழறினார். (கச)

கேள்வியிற்பெரியபடிவரங்கணுயர்கிளரொலிச்சுருதிவழிதரும்
வேள்வியைத்தெரிபுகண்களிப்பமகிழ்மேவியன்னசெயல்வெஃகியே
கோள்விடுத்தமுனிகுலபதிக்கருகுகுறுகிமுன்பணிகுணத்தனா
யாள்வினைத்தொழிலினானவற்கதனையாதரத்தினொடுமறைகுவான். (சரு)

அன்னையன்னையருளாலுனைப்புகலடைந்தனன்றருமமாற்றுவா
னென்னைவீறுமியமானனாக்கியருளெச்சமிங்கிதனினிறைவயான்
றொன்மையேயவல்புரிசூத்திரன்பெருமதொண்டுகொண்டருளுகென்றலுந்
தன்னைநாடுமுனிதான்வினாயதுதனக்கியன்றவிடைசாற்றுவான். (கசு)

இழிந்தவுற்பவனினக்குவேள்விகளிழைப்பதற்குரிமையில்லையா
லொழிந்திடுந்தநினைவுங்கள்பான்மறையினோடுபல்லவகையோதிறான்
மொழிந்தவன்புலையனொப்பனன்றியுயர்முந்தைநன்மரபின்முறையெலா
மழிந்தவன்பிரமகோத்திரக்கயலனாகியேபதிதனாகுமால். (கஎ)

மறுவிலாதமனுவாதிசொன்னகுல்வழிவழாதுதிடமதியினோ
யுறுவதானமறைவாணரோவலையுஞற்றுகென்றனனுவப்பினற்
பெறுவதானசெயல்பிழைபடத்தளர்வுபெற்றுநின்றுமிகமற்றவன்
வெறுவியாகுலமனத்தினெண்ணினன்விசாரமொன்றுதவமேவுவான். (௧௮)

பூவனந்தடம்வகுத்துநோன்புமுறைபோற்றிவேள்விமுறைபுரிகுவித்
தாவதாகியமமாற்றிநல்லுணவயர்த்தருச்சனையமைத்துறுந்
தாவதர்க்கினியகாய்கிழங்குகனிதந்துநெஞ்சிலுறுதட்பமோ
டோவினுள்கள்பலசெல்லமெய்ந்நெறியுழத்தலுற்றனனெழுங்கினால். (௧௯)

நற்குணங்கொடிவைசெய்யுநாண்மருணடைச்செலாவறிவினன்மைசால்
கற்கனிண்மரபில்வந்திடுஞ்சுமதிகருதிவேதநிலைகண்டுளான்
செற்குலந்தவழ்பொதும்பர்மேவுதிடமதியிருக்கையிடைசென்றனன்
முற்கலந்தவனிறைஞ்சிநண்புதருமுகமனும்பலமொழிந்தபின். (௨௦)

கந்தமென்கனிவழங்கியன்புசெயல்கண்டுவந்துமிகுகாதலா
யந்தணாளவகலென்றபின்னர்தனதாசிலாசிரமமணுகினு
னிந்தவாறுபலகாலிவன்கண்முனியெய்திநண்புநனிசெய்தலு
நந்தம்வாய்மைதவருனெனும்பரிசுநாடியின்னணநவிற்றுவான். (௨௧)

தென்புலத்தவர்கடேவருக்குரியசெய்கடன்றருதிறங்களு
நன்புலத்தமனுவோடுமாளயநயங்கொளட்டகைமுன்னனவா
யன்பினிற்புரிசிராத்தமானவையுமடியனேனடிகளாகிநீ
யின்பினிற்றெருளும்வண்ணமுள்ளபடியின்றெனக்குரைசெயென்றனன். (௨௨)

தெட்பமார்சுமதிதன்மதிச்செயறெளிந்திடாதமருள்சிந்தைசேர்
நட்பினுலுரைமருதெலாமுணரநல்கியேமரபினாளுமே
யொட்பமேவுதிடமதிகொடவ்வகையுஞற்றுவித்துருகியுவகையாற்
றட்பமோடவனளித்தகொண்டுறையுடன்னைவந்தினிதுசார்ந்தனன். (௨௩)

சிறந்தசீர்ச்சுமதிவாழுநாண்முனிவர்தேர்வுறீஇயிஃதவன்றனைத்
துறநதுநீக்கவதுகருவியாவுடறுறந்தவாசியிடைதூதரோ
டிறந்துபோகிமிகுகற்பகோடிகொளிலக்கநாணிரயமெய்தியே
பிறந்துநீடுதருவாகிமுன்பினர்பெருங்கரத்துருவுபெற்றனன். (௨௪)

பன்றிநாய்பறவைநீசர்பின்னவர்கள்பரதர்மன்னருறுபடிவெலா
மொன்றியேயடைவின்முந்துபோலமறையுயர்குலத்திடையுதிப்புறு
நன்றிசாலுமுபநயனமாண்டினிலைநாலிரண்டினினயந்தொர்நாட்
டுன்றினனடவிவாயவண்பிரமசாதிசேரலகைதொட்டதால். (௨௫)

தொட்டபோதுமனமச்சமுற்றுவிழிசுழலவேறுபடுதொடர்பினோ
டொட்டுமுன்னையியல்விட்டுமம்மரினுழந்துவாய்வெருவியோலமிட்
டெட்டெனுந்திசையுமாறியோடியிடறுற்றுவீழ்ந்தழுதெழுந்திராப்
பட்டிடுஞ்செயலையீன்றவன்றெரிபுபருவரற்பரவைமூழ்கினான். (௨௬)

மூழ்கலுற்றுமுறைநாடிமைந்தனொடுமுகிலுடும்பொதியமுனிவனு
மாழ்கடற்கரமமைத்ததண்டமிழகத்தியன்சரணவம்புயந்
தாழ்கருத்தினொடிறைஞ்சிநின்றுமிகுதனயனுற்றமருள்சாற்றியே
சூழ்கதிர்ப்புவியில்வேறுவெந்துயர்துடைத்திடும்புகலுணிர்திடேன். (௨௭)

ஆருயிர்க்கினியையன்னைதன்னிலெமதம்பிகாபதிதனன்பரு
ணேரலுற்றவர்களில்லையுன்னையினிநின்கணுய்யுநெறியிங்கெனக்
கோரின்மிக்கமகனொருவனேயிவனுடற்கரந்தகடியோடுமா
நீரம்வைத்தருளியானுமென்மரபினோரும்வீடுபெறவென்றலும். (௨௮)

நெடிதுபோதுகுறுமுனிவனின்மலனிலத்துலாவிமுனிகழ்ந்திடும்
படியெலாமுணர்வுகொண்டுபண்டிவனொர்பனவனுன்மறைபகர்ந்திடு
மடிவுதீர்மனுவைமன்னுருத்திரன்மனங்கொளச்சொல்வினைவன்மையாற்
கடியதீநரகடைந்திழிந்தபல்கருப்பமுற்றுவருகதையெலாம். (௨௯)

ஐயனோடுசொலியவ்வினைக்குறையினந்தகன்விடவணைந்ததால்
வெய்யபேயிதுவிடுக்குமாற்றினைவிளம்புவன்றெளிதிவிழைவொடுஞ்
செய்யசங்குலவுதென்கடற்கணமர்சேதுநாப்பணுயர்சேணுடன்
வையகம்பரவுகந்தமாதனமென்வரையிருக்குமிசைமறைவலோய். (௩௦)

அச்சிலம்பிடையொர்பாவநாசமெனும்வாவியுண்டதனினாடினன்
மெய்ச்செறிந்தபிணிபூதமாதிபழவெவ்வினைப்பிறவியிவ்வெலாம்
விச்சைகண்டவிருள்போல்விளிந்தொழியும்விசயமென்னவொளிமிக்கதா
யிச்சகம்புகழுமன்னசூழிபுகவேகுவாய்மகனொடிக்கணம். (௩௧)

ஏகிமுத்திவசமூழ்கிலிந்தவிடரீடழிந்தகலுமின்பமுண்
டாகும்வேறிலையுபாயமென்றுமலயத்தருந்தவனறைந்தனன்
ருகமிக்கமறையோனுமன்றுதருதனயனோடணையதடமீஇ
மோகம்விட்டகலுமாறுசேயினொடுமூன்றுநாளதனின்மூழ்கினன். (௩௨)

விண்டுபோயினதுவேதியக்குலனில்வெறியநெட்டலகைவிடுதலுங்
கொண்டல்கான்றமதிபோல்வனப்புமிகுகோலமேவுமறையோன்மகன்
றண்டலின்றிவளர்செல்வமல்கியதருக்கினுற்றணியெருக்கினோ
னண்டஞானமுதலமல்முத்திநிலையத்தனோடினிதடைந்தனன். (௩௩)

அவனளித்ததிடமதியுநாள்சிலவகன்றபின்புயிரகன்றுபோ
யிவனெனக்கடியவளறுபுக்கிழிபிறப்பெலாமடைவிலெய்துநாட்
பவமுடைக்கழுகினுருவமாயவழிபாவநாசதடமேவியே
தவனநீக்குபுனலுண்டுவீசசிறைதனையடித்துடனனைத்தனன். (௩௪)

பறைவிரித்துருநனைத்தபோதுவினைபற்றறுத்தமரர்படிவமாய்
நறைவிரித்ததொடையாடையாபரணநன்னிழற்கவிகைபலவுடன்
குறைவிரித்தநடுவானரம்பையர்குழாம்வளைப்பவறைகுரன்மணிப்
பொறைவிரித்தகொடிசூழ்விமானமிசைபொன்னகர்க்கடிதுபோயினன். (௩௫)

வேறு.

வாவியின்மாணிஃதந்தணீர்வான்றவம்வீடுவழங்குமாற்
பூவினனாரணனும்பரார்பூசைசெய்நீர்மையதொன்றுதான்
மேவினராடுநரிந்தநீர்மேலறைவோர்வினையன்றியே
பாவமெலாமடுபண்பினாற்பாவவிநாசனமென்பவே. (௩௬)

பாவநாசச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௭௭௦.

---

# சீதைகுண்டச்சருக்கம்.

---

மதுரவாய்மைமல்குசூதன்மரபினுடிவனாவிலாக்
குதுகலங்கொண்முனிவரோடுபின்னுமொன்றுகூறுவான்
பதுமவாசம்வீசுபாவநாசநீர்படிந்தபின்
மிதிலைவந்தசீதைவாவிகுடையவேண்டும்விதியினால். (௧)

பிரமவண்டமதனிலுள்ளபெரியகங்கைமுதலநீர்
பரமர்தங்குகாசியாதிபதிகடங்கள்பழிகடீர்
வரமனங்கொள்செய்கைமுன்னிவைகுமங்கண்வாழுமாற்
சிரமொணர்ந்துகொண்டதேவும்வாவிமேவுதிருவினால். (௨)

வேயிரண்டுவாளிரண்டுவில்லிரண்டுவில்லுவக்
காயிரண்டுகொண்டவல்லிகருவின்மேவுமுயிரொலா
மாயிரண்டினுடுசீதைவாவியின்கண்வேதியப்
பேயிரண்டினைஞ்சதங்கண்ணனைவிண்டுபேர்ந்ததால். (௩)

உதுவிளம்புசூதன்முன்னமுறுவர்பின்னுமுரைசெய்வார்
புதுவிளம்புநிலவுமூரல்வனிதைசீதைபுனிதநீ
ரிதுவிளம்புபிரமகத்தியிந்திரற்குநீக்குமா
றதுவிளம்புவந்தவாறுமறைதியென்னவன்பினால். (௪)

தண்கலந்தசிந்தையோடுசூதனன்றுசாற்றுவா
னெண்கடந்தபொருண்மைநாடுமிருடிகாண்முன்னேல்வையின்
வண்கிடங்குசூழுமாரைவைசயந்தநகரிலே
வெண்கபாலபரணனென்றோர்விறலரக்கன்மேவுவான். (௫)

பங்கயன்கணும்பரிற்படாவரம்படைத்தசீர்
வெங்கபாலபரணவீரன்விறலமைச்சன்வின்மைசா
லங்கமேயகுணபவூண*னக்குரோணிநூறதாய்ப்
பொங்குதானையிரதமும்பல்புரவியோடுபொலிகுவான். (௬)

மகரவேலைபோலவாழும்வாளரக்கன்மந்திரப்
புகரிலானைவருகவென்றுபுரிவதொன்றுபுகலுவான்
பகரிலேகரரசைவென்றுபடலைவாசைசூடியே
சிகரமார்வசந்தமேவியமரர்நாடர்தெரிவைமார். (௭)

முன்குலாவியாடல்காணவேண்டுமென்றுமொழிதலு
நன்கிதென்றுமந்திரத்தினுதனுநவிற்றினன்
வன்கண்மாயநிருதனன்றுவானவூரைவலிசெய்வான்
வென்கொடாதபடைஞர்சூழவிண்ணிலேகவெஃகினன். (௮)

நீதன்வஞ்சநெறிமைதன்னினீடுமைந்தனனதன்
மேதனூர்புரக்கவைத்துமிடைபதாதிநடைகொளும்
பாததூளிநரலைமேடுபடவிலங்கல்பஃறுகட்
பூதியாகமெய்புமுங்கியிரவிகண்கள்பொத்தவே. (௯)

---

* சவபக்ஷன்.

மூசுதானையியமுழக்கின்முகின்முழக்கமூழ்கவெண்
டேசினீடுதுவசராசிசுடர்விசும்புதூர்க்கவூர்
வாசியோதைவழுவையோதைமண்டியெண்டொகைப்படு
மாசையானைசெவியடைப்பவமரரூனையணுகினான். (க0)

எய்தலுற்றவேலைவேலையெனவிரட்டுமொலியினால்
வெய்தெனப்படர்ந்தவாறுவினவியும்பர்வெள்ளமு
மைதிரக்குழூர்தியானும்வந்துவந்துமார்புதந்
துய்தலற்றநிருதநாதனுடனுடன்றுபொருகுவார். (கக)

கருளினோடுவெயில்கலந்தகாட்சியன்னமாட்சிசே
ரிருவர்தங்கள்படையுமுந்தியெதிர்விளைக்குமமரிலே
யருகுநின்றசேனைகோடியங்குமிங்குமற்றதா
லொருவரோடுமொருவர்தொந்தயுத்தநின்றுஞற்றினார். (கஉ)

கூற்றனேற்றதண்டமங்கைகொண்டுமீண்டுகுணபலூ
ஞற்றலானையக்குரோணிமுப்பதோடழித்தனன்
காற்றினோடிவந்தடர்ந்தகைசிகன்றனாவியை
மாற்றினானோர்வாளின்வீசிவருணனென்னும்வானவன். (கங)

குருதியங்கணிருத*னாவிகுத்தமேவிவவ்வினான்
பரிதியங்கணமலனண்புகொண்டிலங்குபான்மையா
னொருகபாலபரணனோடுடன்பிறந்தநால்வரிற்
றிருகுகோரதிட்டிவன்மைசெய்யவங்கிசிந்தினான். (கச)

வெம்பயாவகன்றனாவிவிரவுகந்தவகனினா
லும்பர்போனதூன்விருப்பினானும்†வேரியூணனு‡
மிம்பர்யாருமிடர்கடூரவியமனூரிலேகினா
ரம்பொனாடுறைந்துவாழுமாயுள்வேதரிருவரால். (கரு)

பாறுகொண்டவன்கபாலபரணனோடுபரவுவிண்
ணேறுகொண்டதிண்பதாகையிறைவனேற்றெதிர்ந்தவண்
கூறுகொண்டபாதியாமமளவில்வென்றிகொளவரு
நூறுகொண்டவக்குரோணிசேனைமுற்றுநூறினான். (கசு)

படுத்தல்கண்டுசீறிவந்துபடுகபாலபரணனே
ரடுத்துநிற்றிபோகலும்பரதிபவென்னவார்ப்பரித்
தெடுத்துவில்வளைத்துவாளியெங்கணுஞ்சொரிந்தபின்
றொடுத்தொரைந்துவாசவன்றன்மௌலிமீதுதூவினான். (கஎ)

பிசிதவுண்டிநாறுவெண்பல்பிறழ்கபாலபரணனோர்
விசிகமைந்துமுடனறுத்தமேன்மைகண்டுவிட்டிடும்
வசிகொள்சூலமதனைவேலின்மாற்றிநிற்குமதிநுதற்
சசிமணாளன்வீறுணர்ந்துதழலெனாவெகுண்டுதான். (கஅ)

அஞ்சுநூறுபத்துநூறுதொடியிரும்பினான்முழம்
விஞ்சுநூறுகொண்டமைத்தவிசயதண்டவெற்பினாற்
பஞ்சபாதகக்கபாலபரணனும்பர்படையெலா
மெஞ்சுமாறுகொக்கரித்துரத்தினோடெறிந்தனன். (ககூ)

---

* ருதிராக்ஷன். † மாமிசப்பிரியன். ‡ மத்தியசேவி.

அடுதிறங்கொடன்பதாகையற்றுமார்பிலுற்றெனப்
படுதலுங்குழம்புநெஞ்சுபதைபதைத்துவையமேற்
சடிதிவீழ்ந்துநெடிதுபோதுதனைமறந்துதுஞ்சினுன்
முடிவிலண்டர்குரவனங்கணஃதுணர்ந்தமுறைமையான். (உ0)

வீவதற்குமுன்னமாகவேந்துதன்னைமிருதசஞ்
சீவனித்தொன்மந்திரஞ்செபித்தெழுப்பல்செய்தன
னுவதக்கணத்தினெஞ்சயர்ச்சிநீங்கியைந்தருத்
தேவருக்குநாதனுந்தெளிந்துசிந்தைதேறினுன். (உக)

தேறிவெள்விசும்பினேடுதிண்களிற்றின்மத்தகத்
தேறிநூறுகோடியங்கையேந்திமுன்பெதிர்ந்திகல்
கூறிவையமோடுநேர்கொடுங்கபாலபரணன்மேற்
சீறிவன்மைசிதறவீறுசென்னியின்கணெற்றினுன். (உஉ)

தொடிசிதைந்துதோள்சிதைந்துதுரகமோடுதிகிரிமேற்
கொடிசிதைந்துபடைசிதைந்துகுடைசிதைந்துகொண்டபோ
ரடிசிதைந்துதானுமேனியளவிறூளியாயிடும்
படிசிதைந்துதிண்கபாலபரணனுவிபாறினுன். (உங)

அடும்பயந்தருங்கபாலபரணனுவியகறலுங்
கொடும்பயஞ்செய்கிருதனைச்செய்கொலையினண்டர்கோவினைப்
படும்பயங்கொள்பிரமகத்திபற்றியேபடர்ந்ததென்
றிடும்பைதீருமுனிவரோடுசூதனங்கியம்பினுன். (உச)

வேறு.

கனாதருகாதைகேட்டுக்கணங்கெழுமுனிவரானே
ருனாதருகின்றூர்யாதுமுண்மையாலுணர்ந்தசூதா
புனாவிலாவரக்கற்கொன்றபுன்மைதான்புலவர்தங்கட்
கனாயன்மேற்பிரமகத்தியாயதென்றறைந்ததென்னீ. (உரு)

கோவினைவதைத்தபாவங்கொடும்புலிகொன்றூர்க்காமோ
வாவினெண்பாலுண்டார்பாலடையுமோமருட்கையம்மா
யாவதுமுணரலாற்றேமிதனிலையெங்கள்சங்கை
போவதுகருதியன்பாற்புகலுவாயெனப்புகன்றூர். (உசா)

அந்தணர்மாற்றங்கேளாவதிசயமடைவதாகி
முந்தையேகாந்தத்துற்றமுறையினைமொழிவான்சூதன்
விந்தவாரடவியங்கண்விறற்றிரிவக்கிரப்பேர்ப்
பந்தவாளரக்கன்றேவிபாசிழைக்கொம்பரன்னுள். (உஎ)

மெல்லிதழ்ப்பவளவாயால்விண்ணவர்வேட்கைதீர்ப்பாள்
பல்லிதழ்ப்பதுமவண்டின்பரிபுரமிழற்றுந்தாளாள்
வல்லினைக்குயத்தாற்கோங்கைமயிலைமெல்லியலால்வென்றுள்
செல்லினைக்கவர்ந்துதேன்மேற்செறிகுழலென்னச்செய்தாள். (உஅ)

காமனையாறலைத்துக்கவிகையுங்கணையுங்கைக்கொண்
டேமநன்முகமும்பார்வையிணையுமாவிழைத்துக்கொண்டா
டேமலர்வல்லியொன்றுதென்றலிற்றுளங்குமாபோற்
றூமனமருளக்கண்டோர்தான்றனிசரித்தாண்மன்னே. (உகா)

ஊரரவிந்தமாண்பேரோங்குமாமுளரிநாப்பட்
சீரரவிந்தமேவுந்திருவெனத்திரியுங்காலை
நீரரவிந்தநோக்கினெடியவனுந்திநீங்கா
வேரரவிந்தமைந்தனெனத்தகுமிருடிநாதன். (௩0)

சுடர்ச்சுசியன்னதூயோன்சுசியெனுநாமமேயோ
னிடர்ச்சினமிகந்தோனாங்கணிருந்தவமிழைத்திருப்பான்
படர்ச்சியின்வயத்தாலோர்நாட்பால்வளைப்பசும்பொற்றொட்டா
ளடர்ச்சிசாறருச்சூழன்னானாச்சிரமத்தணைந்தாள். (௩௧)

தூசியன்மருங்குனல்லாடொக்கபோதரியநோன்பான்
மீசிறந்துடையோன்காணாவேள்படைக்குடைந்துவீங்கு
மாசையங்கடலிற்றோன்றுமவிர்மதியன்னவன்னா
டேசியல்வதனநோக்கிச்சிந்தைமால்கொண்டுசொல்வான். (௩௨)

எங்குளாயிந்தக்காட்டிலெய்தியதென்கொலென்பேர்
நங்கைநீயுரியையார்க்கோநவிலெனநகையினோடு
மங்கைதானுரைப்பாண்மேலோய்வயத்திரிவக்கிரன்றன்
அங்கமாமனைவிநாமஞ்சொல்லுவார்சுசீலையென்றே. (௩௩)

வகைமலர்கொய்யவந்தேன்மகவிலேன்மணாளன்றானும்
புகழ்முனிசுசிபாற்போகிப்புதல்வனைப்பெறுதியென்றே
பகர்தருசொல்லுமுண்டாற்பகவநின்னருளினாலே
யிகலுடைமக்கட்பேறின்றியான்பெறவிரங்கிடென்றாள். (௩௪)

வாரிசமகடூஉவன்னவரிவளைவாய்மையாகுஞ்
சீரியவமுதமாந்திச்செவிகளாற்களிப்பினோடும்
பேரியன்முனிவன்கூறும்பெய்வளாயிங்குவந்த
காரியநன்றால்யாமுங்கருத்திடையுவகைகொண்டேம். (௩௫)

தண்டளிருடச*நாப்பட்டபனியச்சேக்கைமீதில்
வண்டமர்குழலாய்நின்பூண்மணிமுலைதழுவும்வாஞ்சை
கொண்டனனென்றுகாதல்கூறியக்கோதையோடு
முண்டகமுதல்வன்போல்வான்மூன்றுநாண்முயங்கியுற்றான். (௩௬)

இயைந்தவளின்பவேலையிடையமிழ்ந்தெழுந்தபின்னர்
வியந்தருண்முனிவர்கோமான்விளம்புவான்வெறிமென்கூந்தற்
குயந்தருகிள்ளையன்னாய்கோளியந்தளிரகட்டிற்
பயந்தருணிகபாலபரணனாம்பாலன்றன்னை. (௩௭)

ஆயுவுமநேகமுள்ளானடுபடையாண்மைவல்லோன்
மாய்விலன்வலாரியல்லாவானவர்தம்மாலெய்துஞ்
சாய்விலெத்திருவுமெல்லாஞ்சகத்திரவருடந்தானே
தேய்விலாத்தவங்களாற்றித்திசைமுகனருளிற்சேர்வான். (௩௮)

ஒள்ளிழைமடவாயுன்றனொருமகன்சதமகன்போல்
வள்ளியவலியுமின்புமருவுவானென்றுகூறி
வெள்ளியங்கிரியில்வெள்ளைவிடைப்பிரான்காசிதன்னிற்
றெள்ளியவுணர்வின்மேலோன்சென்றனன்சென்றபின்னர். (௩௯)

---

* உடசம்—பன்னசாலை.

பாற்செறுடியவள்கபாலபரணனைப்பயந்தாளன்றே
னேற்றுநான்முகனைநோக்கிநூறுபத்தாண்டுகாறு
மேற்றமுந்திறலுஞ்சீருமெய்தினனிவனைவிண்கோத்
தோற்றிடத்துரந்துகொன்றுன்சூழ்ந்ததுபிரமகத்தி. (௬௰)

தீயினுங்கொடியபேயாற்சிந்தைநோயுழந்துசால
வாயிரங்கண்ணனெண்கண்ணவன்றனையடைந்துபோற்றி
மாயிரும்பிரமகத்திவந்தவாறியம்பியீது
நீயிரங்குற்றுநீக்கநினைதியென்றிறைஞ்சிநின்றுன். (௬௧)

நின்றவாசவனைநோக்கிநிறையிதழ்மனையிருப்போ
னென்றுளங்கனிந்துநண்பானுரைசெய்வானும்பர்கோவே
மன்றலஞ்சுனைநீர்க்கந்தமாதனவரையிற்சீதை
தன்றடங்கரையில்வேள்வித்தழன்முகவாயிறன்னுல். (௬௨)

சிற்பரமன்றுளாடுந்திங்களங்கண்ணியானை
யற்பினுல்வணங்கியேத்தியப்புனலாடினுயே
னிற்புருதகலுமிந்தநீண்மறைப்பேயுநீயும்
பொற்புறுமகிழ்வினேடுபுகுதுவாய்புலவர்நாட்டில். (௬௩)

ஆதலாற்பொருளுமின்புமறனெடுவீடுநல்குஞ்
சீதைபூந்தடத்திலின்னேசெல்கெனச்செப்பலோடும்
போதனன்மாற்றங்கேட்டபுரந்தரன்புவிசூழ்கந்த
மாதனம்போகிச்சொன்னவகையெலாமரபிற்செய்தான். (௬௪)

ஆங்கணிந்திரனைநீங்கிற்றருங்கொலைப்பிரமகத்தி
யோங்குயர்நிலையிற்போனுனுபேந்திரற்குரியமுன்னே
னீங்கிவ்வாறேற்றம்பெற்றவிலங்கெழிற்சிதைநன்னீர்
பாங்கினுற்படிவாரெண்ணும்படியெலாம்படியிற்சேர்வார். (௬௫)

இராகவன்றெளியுமாற்றுலெரியிடைமூழ்கிவிண்ணேர்
புராதனமுனிவர்காணப்பொலன்றளிர்க்கொடியிற்றேன்று
மராவுறழல்குற்சீதையாழ்புனற்குண்டமென்பர்
தராதலமுய்யத்தந்துதானிதிற்குடைதலாலே. (௬௬)

வேறு.

ஈறிலன்புடையுங்கடமக்கியாமேதமின்றியியம்புதிறத்தினுற்
றேறுமின்கள்சிறந்ததவத்தினீர்சீதைகுண்டமெனும்பெயர்பெற்றவா
றூறகன்றநலங்கொளுளத்தினுலோதுமிந்தவருங்கதைகற்றுளோர்
பேறிதென்றுபிறங்குசெவிக்கொள்வார்பேசருந்திருநன்றிபடைப்பரோ. (௬௭)

சீதைகுண்டச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௮௬௭.

---

# மங்கலதீர்த்தச்சருக்கம்.

---

நாரணனெண்கலைநற்படிவத்தோ
னேரணவுங்கழலெண்ணுபுபின்னுங்
காரணமெய்ந்நெறிகண்டுளசூத
னாரணவாய்மையருக்கருள்செய்வான். (க)

ஞானநலந்திகழ்நான்மறையீர்காள்
சானகிதன்றடமூழ்கியதக்கோர்
தேனிறைமங்கலதீர்த்தமெனப்பே
ரானசெழுந்தடமாடுவரன்பால். (உ)

இந்திரையிந்திரனெண்ணிறவத்தோர்
சந்ததமன்னதடத்தினலஞ்சேர்
சிந்தையின்மேவுவர்செப்புமதன்பால்
வந்தபெருங்கதையொன்றுவகுப்பாம். (ங)

திங்கள்வயங்குதிருக்குலமுள்ளான்
றுங்கமனுத்துறைசோர்வுபடாதே
பைங்கடல்சுற்றியபார்முழுதாள்வா
னிங்கிவனுமமனோசவனென்பான். (ச)

மேதகுவானவர்வேந்திவனாற்றும்
போதமகத்திடைபுந்திநிறைப்பா
ராதியருங்குலவந்தணரொல்லா
மோதனமுண்டுதம்முந்திநிறைப்பார். (ரு)

மன்புரிகின்றவளங்கொள்சிராத்தத்
தின்புறுநெஞ்சினிடஞ்சிறிதின்றாற்
றென்புலவாணர்செழுங்கொடைவேந்தன்
பின்புளராலவைபெற்றிடவேண்டார். (சு)

மந்திரம்வேதம்வரம்பில்புராணந்
தந்திரமாதிதடங்கலைதன்னு
ளிந்துவின்மேற்பழுதீறுறவந்தோன்
புந்திபுகாதபொருட்கலையின்றால். (எ)

வாணெடும்வென்றிமனோசவமன்னன்
றாணிழனீங்கியதண்டலரானோர்
கோணுதன்மாதர்குழாத்திலர்பொற்பூ
ணுறுகந்தரநாரியர்தாமே. (அ)

சீதநிலாமதிசேர்மரபுற்றோன்
கோதறுசெவ்வியகோற்குளிர்பூங்கா
மாதிறல்வாய்மைமனுக்குலமன்னர்
நீதிவெயிற்குநிழற்செயுமம்மா. (கூ)

இறைவனுமாயனுமென்றுமிருக்கு
மறைகடலோங்கலகன்றதுமுண்டான்
மறைவழுவாதமனோசவனெஞ்சத்
துறைவதொர்நாளுமொழிந்தறியாரால். (க0)

வம்பலர்மாலைமனோசவமன்ன
னம்புலிதன்குலமாகையினாலே
செம்பொருளுத்திதிரிந்தசினஞ்சேர்
வெம்பணிதீண்டவெருவருமென்றும். (கக)

இன்னணமாற்றுமிசைக்குரியோனு
மன்னவர்சிங்கமனோசவனென்பான்
றன்னருளாயதடம்புயறன்னு
னன்னிலமாதுநயம்பெறுமந்நாள். (கஉ)

நிந்தைபுனைந்துநிலத்திருநீப்பான்
முந்துகுலத்தின்முறைச்செயல்விட்டே
மந்தரவாகுமனோசவமன்ன
னந்திஉளத்திலகந்தையையுற்றான். (கங)

ஆரமுதத்திடையாலமடைந்தாற்
சாரமுதச்சுவைதான்கெடுமாபோ
லீரமுதக்கலையிந்துகுலத்தோன்
வீரமுதற்குணமேவிலனானன். (கச)

யாவனகந்தையினைப்பொருள்கொண்டா
னவனவன்கணமூக்கிவறன்மை
மாவகல்காழ்ப்புமருட்கைமதத்தோ
டீவறுவேட்கையிடங்கொளுமன்றே. (கரு)

இடங்கொளுமக்கணமின்பநலத்தாற்
றொடங்குதிருப்புகழ்சுற்றியசுற்ற
முடங்கியைகான்முளையூர்பொருளூற்ற
மடங்கலுமாயுமலக்கணுமேவும். (கசு)

போதிலைகாய்முதல்பொற்புறுவித்தி
னுதலெனக்கொளகந்தையவன்பான்
மேதினிமானவர்யாரும்வெறுப்புற்
றோதுமமுக்காறுற்றதுமன்னோ. (கஎ)

சீற்றமயக்கொடுசேகிவையிற்றான்
மாற்றிரிகாமமனோசவனன்னாட்
சாற்றரும்வேதியர்தங்கிழமைத்தாங்
கூற்றுநிலக்கிறைகொள்ளமதித்தான். (கஅ)

கொள்ளமதித்தகொடுந்தொழில்வேந்தன்
றெள்ளியவிப்பிரர்செஞ்சடைமுக்கண்
வள்ளல்வளைக்கரமாலிவர்பாகத்
துள்ளபொருட்பலவுங்கவர்வுற்றான். (ககூ)

சாலிவயற்பயிறண்ணடைகொண்டான்
பாலியல்பின்றுபழித்துறைபூண்டான்
மேலியறீயவினைப்பயனெண்ணுன்
மாலியல்சிந்தைமனேசவமன்னன். (உ0)

இக்கொடுவேந்தனிழைத்திடுபாவம்
பக்குவமாயபலத்தொடர்பாலே
யொக்கலின்மேதகுமூணமிலத்தான்
மிக்குறுகோலபவேண்டலனுற்ருன். (உக)

கூன்றடவிற்பயில்கோலபனேடு
மூன்றிருதிங்கண்முயன்றமராற்ரு
மான்றுமனேசவன்வல்லையின்வல்லே
தான்றருகான்முளைதையலொடுற்ருன். (உஉ)

தண்டியவூணதராதிபன்வெம்போர்
விண்டவனீள்வனமேவலுமன்னேன்
மண்டலமாதைமணந்துவலத்தா
லெண்டருகாலமிருந்தனனிப்பால். (உ௩)

அச்சமில்கோலபனுண்டிடவைய
மைச்செறிகாட்சிமனேசவன்வாளா
வெச்சமுமில்லுமிளைக்கவிளைத்தே
பொச்சையினூடுபுகுந்தலமந்தான். (உ௪)

பொன்னுலகோர்மிசைபுத்தமுதீயும்
வன்னமதிக்குலம்வந்தருள்கோமா
னின்னலுழந்தனனெவ்வகையானுந்
தன்னவையல்லதனக்குதவாவே. (உ௫)

நீணிலவாழ்வினைநீர்த்திரையென்று
தேணுளதாவெணியின்புறலாமோ
மாணுயர்செல்வமனேசவனுக
மூணிலதாகியுணங்கியதென்ருல். (உ௬)

குஞ்சரமெண்குகுராலரியேனம்
வெஞ்சினவேங்கைமிடைந்துறுகானில்
வஞ்சகனுனமனேசவன்மற்ருேர்
தஞ்சமிலாதுதளர்ந்துழியோர்நாள். (உ௭)

தோன்றல்பசித்தழல்சுட்டிடவாடா
வீன்றவரோடுமிளைத்தனனென்ரு
னூன்றளர்செய்துயரொட்டலர்வாளாற்
கீன்றெனமம்மர்கெழீஇயினரன்னேர். (உ௮)

ஆருயிர்மைந்தனகட்டழலாகு
மாரிவறந்தவயங்கெரிவேனி
னேரியவல்லியினின்றுளம்வாடும்
பாரிதன்னேடிறைபன்னியுரைப்பான். (உ௯)

மாதுசுமித்திரைமற்றிதுகேண்மோ
யாதினியாற்றுவதெவ்விடைசெல்வேஞ்
சாதலணைந்ததுசந்திரகாந்தற்
கோதுவதென்னினியுண்டியுமின்றால். (௩0)

ஏக்கறுமிந்தவிடுக்கணொழித்தே
காக்குநர்வேறெவர்காசினியின்மேற்
பூக்கமலத்துறைபுங்கவனென்பா
னுக்கமிலெம்மையளித்ததையென்னே. (௩௧)

குன்றவில்லானடிகோவலனற்று
ளென்றுமுனுவிமையோரிவர்தம்மை
யன்றுபணிந்திலனவ்வினையாலே
யின்றடைகுற்றதகந்தையெனக்கே. (௩௨)

வெவ்வியயானெனன்மேவிடலாலே
வெளவினனந்தணர்வானவரானோர்
செவ்வியமாண்பொருடீவினையிற்றுற்
கவ்வையுழந்துகலங்கலுருற்றேன். (௩௩)

மாற்றலனுள்கெனமாநகரீந்தேன்
பாற்றொடிநீதருபாலகனோடு
மாற்றருமுந்தியழற்பசிகூர
வீற்றொருவேன்வனமேவினனந்தோ. (௩௪)

நீரணிவேணிநிருத்தனைமாலை
வாரமனத்துணராமருளொன்றோ
வாரணருண்ணவளித்திலனன்னம்
யாரிவணுண்டியெனக்கிடுகின்றோர். (௩௫)

கண்ணனுளத்தனுகாதகழற்கா
லுண்ணிலவுந்திருவும்பரின்மேலாம்
வெண்ணிறநீறணிவேடமிலங்கும்
புண்ணியரேவல்புரிந்தறியேனால். (௩௬)

பாங்குறுவாழைபலாவிவைநல்குந்
தீ கன்ண்டுசெருப்பலர்சாந்தம்
பூங்குடைவெள்ளிலைபொங்குதுவர்க்கா
யீங்கிவைம்விளாயேய்ந்தனமற்றும். (௩௭)

சித்திரையாகுதிங்களினேருஞ்
சித்திரைநாண்மறைதேர்ந்தவர்தம்பாற்
சித்திரகுத்தர்சிறட றவீயேன்
சித்திரமன்னசெழுங்காடிநல்லாய். (௩௮)

ஆலரசத்தியருச்சுனமதி
சாலமிழற்றுதருப்பதிக்தோர்
மேலெறியாதபவெப்பமுறாத
வாலியவட்டையில்வைத்தறியனால். (௩௯)

காதினிலங்கியகட்செவியெம்மான்
மேதினியுண்டருள்விண்டுவிளங்குஞ்
சேதிமரீண்மதில்சேர்மணிமுன்றில்
சோதனிகொண்டுதுடைத்தறியேனல். (௪0)

ஏரிகுளங்கிணறிங்கிவைதாரோன்
காரிநகர்த்திருள்கண்டனைமுன்னோர்
சீரியகோயில்சிறப்பொடுசெய்யேன்
பாரில்வணங்கல்பழிச்சலிலேனல். (௪௧)

பூவனமொன்றுபுரிந்ததுகாணேன்
மாவனமாலைவனத்தயல்போகேன்
றேவரைவிற்கெழுதிங்களினுற்றேன்
மேவியபூசைவிடிந்திடுமுன்னே. (௪௨)

தாதையர்தாயர்தமக்குயர்கன்னி
மாதமுதற்கண்மகாளயமற்று
மீதுறுகாமனைமித்திகஙித்த
மாதிசிராத்தமளித்தறியேனல். (௪௩)

ஒட்டியதிங்களொடொன்றொருபான்மே
லிட்டுளபக்கமிருங்குகுமேவு
மட்டமியாதியறந்தருமங்நாட்
பட்டினிகொண்டுபசித்தறியேனல். (௪௪)

நாலுமறைக்குணவின்றிடுநற்சா
பாலமுறைத்தபலன்கெழுமோரோழ்
கோலமனுக்கொடுகோதிரிவெண்ணேள்
சாலவென்மேனிதரித்திலன்மன்னே. (௪௫)

அநாதிமுதற்கணரன்பொறியைந்து
மெனுவின்மனத்தினிருத்தியதில்லேன்
பிணுகிதொழும்புபிறங்கியகண்டி
கனுவினுமென்மிசைகண்டறியேனல். (௪௬)

விண்டுவினுமம்விளம்புமெழுத்தா
மெண்டொகைமந்திரமெண்ணிலனீதோ
பெண்டொருபங்கிறைபேசியநூற்பா
லண்டனவொன்றையுஞுற்றியதில்லேன். (௪௭)

புண்ணியமின்னவைபோற்றலிலாதே
நண்ணியதென்றிடர்நாடியினைந்தே
மண்ணில்விழுந்துமனுசவமன்ன
நுண்ணிகழ்போதமொழிந்துகிடந்தான். (௪௮)

தார்புனைகோனுடருரணிமீதே
சோர்பொடுசாய்ந்துதுடிப்புறுமாற்றை
யேர்புனைமின்றிருவில்லவளென்னும்
பேர்பொருண்மாறுறுடெண்கொடிகண்டே. (௪௯)

சேற்றெழுசெய்யசெழுங்குமுதத்திற்
ரேற்றலிலாதசுரும்பிசைபோலே
வேற்றுணைநீர்வரவீழ்ந்தழுதேங்கிப்
போற்றியகேள்வன்மெய்புல்லினள்சொல்வாள். (௫௰)

சோமகுலேசதுளங்கொளிவீசு
மாமணிமார்பநின்மைந்தனொடென்னை
வேமெரிதில்லம்விடுத்தொருநீயே
போமதுகொண்டனைபுந்தியிலந்தோ. (௫௧)

ஆவொருவேன்மகனுமிவனோடுங்
காவலரின்றுழல்கன்றுடையான்போற்
றீவனமீதுதிரிந்திடுவேனோ
வாவுறுகிள்ளைமனோசவமன்னா. (௫௨)

கேளிரைநீத்தகிலேசமலாதுன்
றோளையுநீங்குதுயர்க்கடன்மூழ்கிக்
கோளரியஞ்சுகுலப்பிணையாகோ
வாளமர்தானைமனோசவமன்னா. (௫௩)

உன்னையுநீங்கியுலங்கெழுதோளாய்
பொன்னவிர்பூண்மணிபோக்கியதேபோ
லென்னையமங்கலையென்னவிசைக்குங்
கொன்னுமென்னுருயிர்கொண்டுறைவேனோ. (௫௪)

சுந்தரநின்னிருதோள்பிரிவேனோ
வந்தனன்யானுமனோசவவென்பா
டந்துறழ்நேரிடைசந்திரகாந்தா
வுந்தையயர்ந்ததுணர்ந்திடுகென்றாள். (௫௫)

கண்டதுகான்முளைகண்புனல்சோரப்
பண்டிகொழுந்துபசித்தழலோடுந்
தண்டலிறந்தைதனைத்தழுவுற்றே
விண்டொலியின்றிவிழுந்தழும்வேலை. (௫௬)

வேறு.

நெடியவேணியனீறணிமேனியனீங்காக்
கடிகொள்கண்டியன்கண்ணுதருள்புணர்கருத்தான்
டிமையாலுயர்பண்ணவன்பல்லுயிர்புரக்கு
களாகியபராசரனணைந்தனனங்கண். (௫௭)

உ தசாலிகண்டுதவியவெழுந்தகாரொத்த
குணங்காண்மாதவக்குரிசிலைத்தெரிந்துதண்கோதைப்
பணங்கொள்குலாள்பராசரன்பாதபங்கயமேல்
வணங்கினாருண்மைந்தனுந்தானுமாய்மண்ணில். (௫௮)

ரணமேல்முந்தையறன்றுயர்த்தழல்சமிப்ப
வ ணவாசிஅருளினுற்றெளித்தளித்தறவோ
னிர லேவிழியாரைநீமதலையாரொவனோ
கிரண ாழ்குறுமிரவிபோற்கிடப்பவனென்றான். (௫௯)

வேளைவென்கொளுமெய்த்தவன்வினவிடைகொடுப்பாள்
வாளைநேர்விழிமற்றவனென்மணவாளன்
காளைசந்திரகாந்தனெங்கான்முளைகதிர்கால்
கோளையாகியவம்புலிகுலேசனிக்கோமான். (சுo)

வேந்தையீன்றவன்விக்கிரமாட்டியன்விருப்பான்
மாந்தர்சொல்பெயர்மனேசவன்மலர்த்திருமடந்தை
காந்தனன்னவன்புலனிரண்டொருபொறிக்கவர்வோ
னேந்துமன்பதையிங்கெனச்சுமித்திரையென்னும். (சுக)

கோலபன்றனதருவமாங்கொடுவினைவயத்தான்
ஞாலமுந்திருநகரமுநரபதியிழந்தே
பாலனேடுமென்னேடுமிப்படர்விடரிதன் கண்
மாலுடன்புகுந்துற்றனன்மைந்தனிவ்வைகல். (சுஉ)

பற்றின்றெரிபசியினுற்றன்முகம்பார்த்துத்
துற்றிவேண்டுசொற்றுய்ப்பதற்குதவிடுஞ்சொன்றி
யற்றதன்வயிற்றழலிடையஞ்செவித்துளையா
லூற்றுவீழ்ந்துணர்வொடுங்கினனிறைவனென்றுரைத்தாள். (சுஙு)

நிமித்தமீதெனநெடுங்கணீர்சொரிந்திடநிற்குஞ்
சுமித்திரைக்கெதிர்சொல்லுவான்பராசரன்றேகாய்
கமித்துநின்றிடுகளையெலாங்களைபடுங்கணத்திற்
சமித்துமோகமிங்கெழுவனோர்கலையிலுன்றலைவன். (சுச)

வாடுறேலெனமனந்தெளித்தரிவையைமன்று
ளாடுதாணிணைந்தருந்தவனரசனதாக்கை
யூடுதன்கையாலொருமுறைதடவலுமுணரா
வீடுகொண்டெழீஇயிறைஞ்சினன்பராசரனிணைத்தாள். (சுரு)

கழுமலத்தமிழ்ப்பிள்ளையார்கரதலந்தீண்ட
வழுதிதீப்பிணிமாற்றியன்றுயிர்பெறுவளம்போ
லெழுதருந்திறன்மனேசவனிருந்தவன்பாதந்
தொழுதுளங்கவர்களிப்பினுலவனெடுஞ்சொல்வான். (சுசா)

அறனிலாதவர்க்கரியநின்றரிசனமதனு
னிறனிலாவுயிர்நிலைகெடாதயர்வினைநீங்கித்
திறனிலாவுணர்வெய்தினன்சேர்ந்தனன்வனத்தின்
மறனிலாவுவேற்கோலபமாற்றலன்வலியால். (சுஎ)

சத்திதந்தருடனயநின்றனதருட்கடைக்கண்
வைத்திடாவிடிலுய்கலன்மரபிதுவென்று
னத்துணைப்பொழுதஞ்சலென்றரசனையமைத்த
கைத்தலத்தினன்பராசரனருளினுற்கரைவான். (சுஅ)

செல்வமன்னவகேண்மதிதெவ்வினைத்தெவிட்டி
மல்வளங்கெழுவாகுவின்வாகைநீமிலையு
நல்வரங்கொளுநடவையொன்றியம்புவனரலைக்
கல்வளம்பயில்கௌசலைகானைதன்கரைமேல். (சுகூ)

தாணுவாழ்வரைக்கந்தமாதனந்தனிலுண்டோர்
மாணுறும்பெயர்மங்கலதீர்த்தமாம்வாவி
வேணவாவுலகடைந்திடமிதிலையிற்பிறந்த
யாணர்வல்லியோடிராமன்வீற்றிருப்பனுங்கென்றும். (எ0)

சேயுநீயுநின்றேவியுமாயவண்சென்று
பாயுநீர்த்தடமன்பினுற்படிந்ததன்பாரத்
தாயநற்பதிச்சிராத்தமுன்றனவையமைத்தாற்
போயொழிந்திடும்பொருகொடிநெடுங்கொடிப்பூவை. (எக)

அண்ணலானனவம்புயமாலயமாக
நண்ணுமாமகணண்ணலன்றன்னையுநாசம்
பண்ணிநின்பழம்பதிபுகுவாயுனைப்பகரும்
புண்ணியம்புணர்பொருட்டினுற்போதுவன்யானும். (எஉ)

அல்லறீரியநம்மொடுமணைதியொன்றறவோன்
வல்லைமன்னன்முன்னோருடன்மங்கலதீர்த்தத்
தெல்லைநாடியேயேகுவானிருஞ்சுரம்போகித்
தில்லமும்பலதேசமுங்கடந்தவண்சென்றான். (எங)

மங்கலப்புனன்மரபினுன்மற்றவரோடு
மங்கலக்கணின்றகன்றிடவாடியேயருளாற்
றிங்கண்மூன்றளவிறைவனுற்சிராத்தமுஞ்செய்வித்
தெங்கணும்புகழ்பராசரனிருந்தனனிதன்மேல். (எச)

நீரொழுத்தெனநெடுந்துயர்நீங்கிடவிராம
னோரொழுத்தினையரசனஞ்செவித்துளையுளைத்தான்
போரொழுத்திகழ்புயத்தினுன்புனலதிற்புகன்ற
வோரொழுத்தைநான்கொருபதுநாண்முறைசெபித்தான். (எரு)

அறைபுநன்மனுவரசனோர்பராசரனருளான்
முறையிலங்கெதிர்தோன்றினமுரண்கொள்கார்முகமுங்
குறையிலேமலிதூணியுங்குமுறுவெள்வளையு
மிறைசெய்தண்டமுமுசலமும்விளங்குமாடியமும். (எசா)

பாகுநீள்கொடிபரியுடன்படர்நெடுந்தேரு
மீகையாலுறையிட்டகூர்நாந்தகமிரண்டு
மாகமார்தொடையாரமுமாயிரந்துகிலும்
வாகுசேர்மணிவலயமுமகுடமுந்தொடியும். (எஎ)

வைசயந்தியாம்பொன்மணாமாலையுமருவார்
கைசயந்தராதோடவென்காண்பவன்கண்டே
யுய்சயந்தருமூழினுலுவகையுற்றோடி
மொய்சயந்தனக்குதவிடுமுனியுடன்மொழிந்தான். (எஅ)

அங்கண்மன்னனைப்பராசரன்றனபிடேக
மங்கலத்தடநீரினுற்செய்தருள்வழங்கப்
பொங்குபூணொடுமெய்புகுங்கருவியும்புனைந்து
செங்கைவாளொடும்வில்லொடுந்தேர்மிசையேறி. (எகூ)

தூங்காற்றிய தூணியன்முதுகிடைச்சுமந்த
வோங்குபொன்முடிச்சென்னியனுச்சியிற் கதிர்போ
லாங்கண்மேதகவிளங்கினனரசனன் றவர்க்குப்
பாங்குசேரருட்பராசரன்பின்னரும்பரிவால். (அ௦)

விரிஞ்சனுதியர்விசிகமேல்விடுதலுமீளப்
புரிந்தகோடலுமவயவப்பகுதியும்போற்றித்
தெரிந்திடற்கருங்கொள்கையாற்றிருவருள்செய்து
விரிந்தமாதவமேன்மையாலாசிகள்விளம்பி. (அக)

ஒன்னலன்றனைவென்றிகொள்போகெனவுரைப்பப்
பன்னரும்புகழ்ப்பராசரன்பங்கயபாத
மன்னனாகியமனேசவன்வலங்கொடுவணங்கிப்
பொன்னனாளொடுமாரனன்னனெடும்போனான். (அஉ)

விண்ணியங்குதேரிரவிதன்மெய்க்கிழலேய்ப்ப
மண்ணியங்குதேர்மனேசவன்வளநகர்மருங்கிற்
கண்ணனம்புயக்கண்படுங்கடலெனக்கரத்தி
லொண்ணிறங்கொள்வால்வளையினையூதினனுரப்பி. (அஙு)

கூற்றுவந்தமையுணர்ந்திடக்குறித்தகாளம்போ
லேற்றிடுஞ்செவிக்கோலபன்யாரெனவிடுக்கண்
டோற்றுநெஞ்சினன்படையொடுமதிற்புறந்தோன்றி
யூற்றமோடுறுமனேசவற்கண்டமருழந்தான். (அச)

மூட்டுபோரொதிர்மூன்றுநாண்முயன்றபின்முன்னங்
காட்டிலோடியகாவலன்கார்முகங்குனித்துப்
பூட்டிநான்முகப்புங்கவன்பொருசரம்போக்கிக்
கூட்டுதானையுங்கோலபனுவியுங்கொண்டான். (அரு)

மருவலானுயிர்மாய்ந்தபின்மனேசவனென்னுஞ்
செருவலான்றனதணிநகர்சென்றுடன்றெரிந்தா
லருவலாவிடையவள்சுமித்திரையொடுமமர்ந்தா
னுருவலாநடைவருடமோராயிரமுவப்பால். (அசு)

அற்றைநாண்முதலகந்தையும்பொருமையுமகற்றிச்
செற்றமின்றிநன்றுயிரொலாம்புரந்துதன்சேயைச்
சொற்றவாண்டவைசென்றுழிமணிமுடிசூட்டிப்
பிற்றையிற்றுறந்தேகினன்மதிக்குலப்பெருமான். (அஎ)

தேவிபின்வரமுன்புபோற்சேதுவைச்சேர்ந்து
வாவிமங்கலப்புனல்படிந்ததன்கரைமருங்கி
லாவியுள்ளுறைசதாசிவத்தண்ணலையறிவான்
மேவிநாள்பலகழிந்தபின்மனேசவவேந்தன். (அஅ)

சட்டகந்துறந்தெம்பிரான்சிவபுரஞ்சார்ந்தான்
மட்டுவார்குழன்மண்படமனேசவற்றழுவிப்
பட்டவிந்தனச்சேக்கையிற்பள்ளிகொண்டேழாளாய்ப்
பொட்டுவாணுதன்மனைவியுமப்புரம்புகுந்தாள். (அகூ)

வேறு.

செருவினிற்பகைவென்றுலகேத்தவேசிவபுரத்தையடைந்திடவேற்றமார்
நிருபனுக்கருடந்தமைகேட்டிரானிலவுமுத்தியுமின்பமும்வேட்டுளோர்
மருவுமுத்தமமங்கலதீர்த்தநீர்மனம்வருத்தியுமன்பொடுமாற்றிலா
விருபிறப்புடையந்தணிர்போற்றுவாரிருவினைக்கிரிநுண்டுகளாக்குமே. (கூ0)

மங்கலதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கூ0எ.

# அமுததீர்த்தச்சருக்கம்.

வேதங்களைகண்டுவகுத்தவியாதனென்பான்
பாதங்கணினைந்துபணிந்துயர்பண்பினீடுஞ்
சூதன்பெருநண்பொடுபின்னருஞ்சொல்லுகின்றா
னேதந்தவிர்மாதவர்தங்குழுவின்பமெய்த. (க)

மாகாந்திவிளங்கெழின்மங்கலவாவியின்கண்
மோகாந்தகாரமுடிவெய்திடமூழ்குநல்லோர்
பாகாந்தகைமென்மொழிப்பங்கயப்பாவைசேரு
மேகாந்தராமநகரத்திடையேகுவாரால். (உ)

நாலார்கதியாருயிருக்கருணல்கநாளுஞ்
சேலார்நயனத்திருச்சீதையுந்தானுமாகித்
தோலாதவிலக்குமன்வாயுவின்றோன்றன்முன்னும்
வாலார்நரர்சுற்றவிராகவன்வைகுமங்கண். (ஙு)

மின்னாருடலிற்றிரைவெண்ணரைவீவுநீக்குந்
தென்னாரமுதத்தடமென்றொருதெய்வவாவி
யந்நீணகரத்துளதீசனதாணையாலே
மன்னுதரவிற்படிவாருயிர்மாய்ந்திடாதால். (ச)

அற்பாலமுதத்தடமூழ்கடியார்களுக்குக்
கற்பார்மரணப்பெயர்க்கட்டுரைநீக்குபாக்கு
நற்பான்மையதன்சரைநண்ணுவனாளுமுக்கட்
பொற்பாருமையம்பிகைதோள்புணர்பூதநாதன். (ரு)

அவ்வாறுரையாடியசூதனையன்பினோக்கி
வெவ்வாறிகல்வென்றிகொள்வேதியர்மேன்மையாதோ
வெவ்வாறமுதத்தடநாமமியைந்ததென்றூர்
செவ்வாறுணர்வார்க்கவனம்முறைசெப்புகின்றான். (சு)

ஆனவமுதத்தடநாமமணைந்தவாறு
மானுவதனீர்மையுமற்றும்வகுத்துரைப்ப
னூனருயிர்வேறுணர்மாதவிருண்மைதேர்மின்
மேனளிமையாசலமேவியசாரலின்கண். (எ)

நிலையாயுளனாரணநீதியினீடுவாய்மைக்
கலையார்புலமைத்துறைகண்டவன்காமமில்லா
னலையாழியடக்கியவங்கையருந்தமிழ்த்தென்
மலையாசலமாதவர்கோனுடன்வந்தமேலோன். (௮)

எக்காலமுமுத்தியைவெஃகியிருங்கடற்க
ணக்காலமிருண்டெழுமாலமயின்றவன்றாண்
முக்காலமுமர்ச்சனைமுற்றுபுதொண்டருக்கு
மைக்காரடவிப்பயனுண்டிவழங்கியன்பால். (௯)

தாவாவிருபானொருநான்கெழுத்தானமைந்த
வோவாமனுவாதியமந்திரமுன்னியின்பான்
மேவாதரவானுயனைவகைவேள்வியாற்றி
நாவார்மறையோதிநலங்கெழுநூல்களாய்ந்து. (௧௦)

பிரமப்பொழுதத்திலெழுந்துபிரானையுன்னி
வரமுற்றிடுவிப்பிரர்வேதவழக்கினூற்றுங்
கிரமத்திடையொன்றொழியாவகைகேடுறுமற்
சிரமத்தினையின்றியுஞற்றுசிறப்பினீடி. (௧௧)

மூண்டங்கியொர்மூன்றுமுறைப்புரிமொய்ம்பின்மல்கி
யாண்டின்வரையீன்றவர்தங்கள்சிராத்தநல்கி
வேண்டும்பரிசேனவுமேதகவோடுமிக்குப்
பூண்டங்கருணன்னெறியிவ்வகைபோற்றுநாளில். (௧௨)

ஓராயிரம்வற்சரமாகியுமும்பருய்யக்
காரார்விடமுண்டருள்கண்ணுதனல்கலாணன்
வேரார்பசையுண்டெரிவெம்முதிர்வேனிறன்னிற்
பாரூடிடமாரடிநுண்விரல்பற்றவூன்றி. (௧௩)

நின்றங்கலையாவகையைந்துநெருப்பினுப்ப
ணென்றங்கிருகண்கொளவங்கையெடுத்துநக்கன்
பொன்றங்கடியல்லதுசார்பிலன்போற்றினனு
லன்றங்கருமாதவமாயிரமாண்டினெல்லை. (௧௪)

செல்லார்மலயத்தவன்பின்வருசெம்மலாகு
நல்லானிதுசெய்வுழிநாரியொர்பாகமாகி
யெல்லாவிமையோர்களுமேத்திடவேறுகைத்துக்
கல்லானிழன்மேவியகண்ணுதல்கண்முனின்றான். (௧௫)

அப்பெற்றியினோர்படல்கண்டவருந்தவத்தோ
னெப்பெற்றியினோர்களுமெய்தருமெந்தையெம்மா
னப்பெற்றியசுந்தரமேனியுவந்துநோக்கி
மைப்பெற்றிருள்கண்டனைவாழ்த்திவழுத்துகின்றான். (௧௬)

எரிநேத்திரமிந்துவெழுங்கதிர்நோக்கமென்னுந்
திரிநேத்திரதிங்கண்மிலைச்சியசென்னிமன்னு
வரிநேத்திரவம்புயமார்கழலண்ணன்மஞ்சார்
கிரிநேத்திரமாமுமைகாதல்கிளைத்தகேள்வா. (௧௭)

கோளால்வருகூற்றையுதைத்துயிர்கொண்டவென்றித்
தாளாகனகச்சிலைதாங்கிவளைத்தெடுக்குந்
தோளாவயனுச்சிதுமித்தவுகிர்ச்சுடர்க்கை
வாளாவினையூழ்முறைநாடிவழங்குவள்ளால். (கஅ)

அளவின்றிநெருங்குசராசரமாகியெங்கு
முளவென்றிடுமாருயிருக்குயிராகியொன்றுங்
களவென்றெவர்காண்பவரன்றவர்காணநல்கும்
வளவென்றிகொள்போர்மழுவாட்படைவானநாதா. (கக)

உழையேந்தியகைத்தலபூண்முலையொண்டழும்போ
டிழையேந்தியமார்பகவேடுவனிட்டபச்சைத்
தழையேந்தியசேகரசங்கரதன்கரத்திற்
கழையேந்தியவேளுயிர்வௌவியகண்ணினனே. (உ0)

நேசங்கெழுதொண்டர்கணெஞ்சகநீங்ககில்லா
வாசங்கெழுபூரணஞானம்வயங்குசோதி
நாசங்கெழுநான்முகன்வெண்டலைநாமமாலைத்
தேசங்கெழுமூர்த்தமிலங்கியதேவதேவே. (உக)

நாணுதயனோடரிதங்களினுதரென்றே
வீணுதரவுற்றிகலாடியவேட்கைதீரத்
தூணுர்பதுமத்தனிமாமணித்தோற்றமென்னச்
சேணுடுகடந்துவிளங்குஞ்சிவக்கொழுந்தே. (உஉ)

அற்றம்பலவாயினுமன்புடையார்கடம்பாற்
குற்றம்பலமாகியிடாதருள்கோதிலானே
யுற்றம்பலர்கண்முகிழாதவருள்ளமன்றிச்
சிற்றம்பலமீதினுநாடகமாடுசெல்வா. (உங)

கனிகந்தநுகர்ந்தமர்காதலின்மாதவத்தோ
ரணிகந்தொழுதண்கயிலாசவடுக்கலானே
வணிகந்தவகன்றரவானதிவந்துவெஞ்சூர்
முனிகந்தனைமுந்தொருதந்தனையீன்றமுத்தா. (உச)

ஆய்வாரருவோடுருவன்றியகண்டமாகி
மாய்வாருடலென்பணிமாலைவயங்கவாடற்
பேய்வாழ்சுடலைபயில்பிஞ்ஞகபேதைவாழ்க்கை
யோய்வாருயிருண்டவர்பேரறவோங்குமூர்த்தி. (உரு)

ஒன்றேயெனிலங்ஙனமோதியதொன்றுகாட்டி
யன்றேயெனிலொன்றனிலாகுதியாரளப்பார்
குன்றேயருண்மூன்றுகுணத்தகுணங்கடந்த
நன்றேயெனையாளுதிவேண்டலன்ஞாலவாழ்க்கை. (உசு)

பொன்னங்கழல்வாரிசநாண்மலர்போற்றிபோற்றி
யென்னன்புனையெங்ஙனமெய்திடுமென்னலோடு
முன்னின்றருண்மூவிலைவேற்படைமுக்கண்முன்னோன்
றன்னன்பனையன்பொடுநோக்கினன்சாற்றுகின்றான். (உஎ)

வேறு.

அத்திநீராசமித்தவகத்தியன்பின்னர்வந்தோய்
முத்திநீவேட்டதாயின்மொழிவதோருபாயமுண்டான்
மைத்திரனாலாவுங்கந்தமாதனவரையில்வீரை
தத்தியதரங்கம்வீசுந்தடநெடுஞ்சேதுவின்கண். (௨௮)

மாவிருப்புற்றுவாழுமங்கலவாவிப்பாங்கர்
பூவிருப்புற்றசெல்வப்புனிதநீருள்ளதொன்று
நீவிருப்புற்றமுத்திநிலைதருமதுவேயன்றித்
தேவிருப்புற்றவீடுசேர்வதற்கெளியதின்றால். (௨௯)

செய்யநீருண்மையாமுஞ்செப்புதல்வல்லேமல்லே
மையுறேலதன்கட்போதியருஞ்சிறைநீக்குவாயேன்
மெய்யிதுபுரிதியென்னாவெள்விடைவெற்புகைத்து
வையிலைக்கழுமுளேந்தும்வானவன்மறைந்துபோனான். (௩௦)

புனையிழைபாகன்மாற்றம்புண்ணியமுனிவன்கேளா
வினையதுசெய்வலென்னாவிலங்குமேகாந்தராமந்
தனையணிசெய்வதாகித்தன்னிகரின்றித்தன்பா
னனையுநர்க்கின்பமீயுநற்றடமதனிலுற்றான். (௩௧)

வருடமோர்மூன்றுமற்றவ்வாவியின்மரபினாடி
யருடருநாலாமாண்டிலருந்தவன்சமாதியுற்றுத்
தெருடரும்பிரமனாடிச்சென்றிடச்செலுத்திக்காலைப்
பொருடருஞ்சென்னியேற்றிப்போக்கிமெய்வீட்டிற்புக்கான். (௩௨)

கடமுனியிளவறான்பக்கடுப்பெனுங்கட்டுவிட்டு
மடமுனிநித்தமுத்திமருவலால்வழங்குவார்க
டடமிஃதமுதவாவிதானெனத்தனிமெய்ஞ்ஞான
நடமுதல்வீடுபெற்றோர்நாசமின்றிருத்தலாலே. (௩௩)

மனமடிவின்றிமூன்றுவற்சரமமுதவாவிப்
புனல்குடைந்தாடுவார்பாற்பொருந்திடுமழிவிலாமை
நனியிதுசரதமென்னாநல்லருட்சூதனுண்டே
ரினமுனிக்கணங்கள்கேட்கவினிதருள்செய்தானன்றே. (௩௪)

தன்னைவல்வினையினோடுதலைவனைத்தகையிற்றேர்ந்த
நன்னயமுனிவர்சூதனகைமுகநளினநோக்கி
யுன்னைநன்றிறைஞ்சினோமேலுரைத்தியேகாந்தராம
மென்னவிந்நகர்க்குப்பேர்வந்தெய்தியநிமித்தமென்றார். (௩௫)

இசைதருகின்றான்சூதனெல்லொளியிராமனென்னுந்
தசரதன்மதலைதானுந்தம்பியுந்தபனன்சேயும்
வசையில்வீடணனுமாண்டமாருதியவனுந்தொக்குக்
குசைநெடுஞ்சயனந்தொட்டுக்குரங்கினாற்குரம்பொன்றாக்கி. (௩௬)

சானகிதன்னையுன்னித்தசமுகத்தரக்கற்கோறற்
கானகாரியங்கள்செய்வானவணிருந்தாயும்வேலை
மீனமார்தரங்கவேலைமிக்கெழுகுரைப்பினுள்ளே
தானடங்குற்றுத்தம்மிற்சாற்றியமாற்றங்கேளார். (௩௭)

ஆயினரவையினுள்ளோரஃதுணர்ந்தடலிராம
னேயெனச்சிறிவல்லேயிருபிருகுடிமுரிப்பா
லோயெனக்குறிப்பினூர்க்குமுததியைநிறுத்தானத்தான்
மேயதேகாந்தராமவிழுப்பெயரப்பதிக்கே. (௩அ)

பூணுலாந்தோளயோத்திப்புரவலனுணைபோற்றிச்
சேணுலாந்தரங்கமின்றிச்செழுங்கடலமைந்ததன்மை
காணலாமின்றும்வீரர்கற்பனைகட்க்கலாமோ
மாணிலரவெளியசங்கமரீஇப்பெரும்பயமுற்ருேற்கே. (௩௯)

வேறு.

நியதியோடமுதத்தடமூழ்கியேநிலவுகோசலைபுத்திரனுதியோர்
பயிலுவாரைவழுத்தினர்தாமெலாம்பரமபோகபதத்துணைமேவுவார்
பெயர்விலாநிலைபெற்றிலர்மாலுளார்பிரமஞானமனத்திலரானுமே
லுயருமாத்ரவிற்படிவார்களேலுதகமீதவருக்கருளீயுமே. (௪௦)

அமுததீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௪௭.

---

# பிரமகுண்டச்சருக்கம்.

---

பண்பெருகுமாதவர்பணிந்தினிதுகேட்பக்
கண்பிறழ்வில்சூதமுனிகட்டுரைசெய்கின்ருன்
மண்புகழுமாரமுதவாவியதன்மாடே
யொண்பிரமகுண்டமெனவுள்ளதொருநன்னீர். (௧)

ஆரமுதவாவியிடையாடினரிராம
னேருமுறைமந்திரமுவந்துநிலைபோற்றி
வீரமலியைந்துபுலவேடரைமுருக்கிப்
பேருணர்வினுமேவர்கள்பின்பிரமகுண்டம். (௨)

வீங்குகந்தமாதனவிலங்கலதனூடே
தேங்குதிரைமுத்திலகுசேதுவதனுப்ப
ணேங்கிவருநல்குரவினுக்கொருமருந்தா
யாங்கதுவிளங்குமுலகத்தனையுமேத்த. (௩)

அன்றியஃதாயுமறையந்தணர்கடம்மைக்
கொன்றவினைகோடிபலகோடிதுகளாக்கு
மன்றவது கண்டளவில்வல்வினைகளெல்லா
மொன்றுெழிவதன்றியழிவுற்றகலுமொல்லை. (௪)

கோகனதமார்பிரமகுண்டமதுகண்டோர்
சேகுறுதவங்கவிகைதெள்ளுபுனலாடல்
யாகமிவையெண்ணிலவிழைத்தடைவதென்னே
போகுமொருகான்முழுகினேனரிபுரத்தில். (௫)

கொற்றமலிநீள்பிரமகுண்டமதில்வெண்டே
ணெற்றியிசையாரொருவரிட்டவர்நிலத்தே
மற்றவர்வயத்தினிலேவாரயனுமாலும்
வெற்றிபுனைவெள்ளைவிடைவேணிமுடியானும். (சு)

கொத்தவிழ்மலர்ப்பிரமகுண்டமணிநீற்றுன்
மத்தகமிலங்குதிரிபுண்டரமலிந்தோர்
முத்தரிதிலையமிலைமுன்னுபரமாணு
வத்தனையதிற்புனைகுவாரமலராவார். (எ)

கொங்குலவுதண்பிரமகுண்டமதினீற்று
லங்கமறையப்புனையுமன்பரவர்பேற்றைச்
சங்கரனளந்துரைசெய்தன்மையுடையானே
யிங்கிதிலனேவிரண்டுமெண்ணமுடியாதால். (அ)

குற்றவுடலைப்பிரமகுண்டமதினீற்றுன்
முற்றுமறையார்றுதன்முயங்கவணியாதா
ரற்றுநலமாரவுரவத்தினிடையாழ்வா
ரொற்றபனனம்புலியிரண்டுமுளவெல்லை. (கூ)

இந்தமணிவெண்டுகளிருக்கவொருநீற்றைப்
புந்திபுரிவோர்களொருபோதுமணியாதார்
நிந்தைகுறையொப்புமைநிகழ்த்துமவர்சோர்வில்
வந்தவொனத்துணிவர்மானமுணர்தக்கோர். (க0)

குவ்வுதவுகோன்பிரமகுண்டமதில்வெண்டேள்
சைவநெறிவேதியர்தமக்கருள்செய்வோரா
லிவ்வலயஞாலமுழுதீந்தமரபிற்று
லவ்வகையிலோர்சிறிதுமையமிலையம்மா. (கக)

இம்மெனநெடுங்கரமெடுத்துரைசெய்கின்றேன்
மெய்ம்மையிதுமெய்ம்மையிதுமீண்டுமிதுமெய்ம்மை
கொய்ம்மணமலர்ப்பிரமகுண்டமுறைநீற்றைத்
தம்மையுணர்மாதவிர்தரித்திடுமினீரும். (கஉ)

மாறில்கந்தமாதனவரைக்கணிறைசாபம்
பாறவிமையோர்களெதிர்பங்கயனிழைத்தான்
வீறுபலவேள்விகள்விதிப்படிவிளைத்த
நீதிஃதவ்வாவிகுடைவார்நிமலராவார். (கங)

தொன்மையிதுசூதமுனிசொல்லியிடுமெல்லை
புன்மைதவிர்மாதவர்புகன்றுவிடைகொள்வார்
நன்மனவியாதனருணம்பியையவுழுத்தா
வன்மைபுரிசாபமதுவந்தவகைகேட்பார். (கச)

மேதினிபடைத்தருளும்வெண்ணிறமடந்தை
காதலனையாதுகுறைகண்டிறைசபித்தா
னேதமிகுசாபமஃதென்னமரபிற்றே
சூதவருளென்னவவனுள்ளபடிசொல்வான். (கரு)

முன்புநறைமுண்டகன்முகுந்தனிவர்தம்மின்
மன்பதைபுரக்குமுதல்வள்ளலொருவன்யான்
பின்பிறரிலென்றிகல்பெருக்கியெதிர்பேசி
யன்பறமுரண்டனரழுக்குடைமையாலே. (௧௬)

வேலைபதின்மின்மினியிரண்டுடன்வெறுக்குங்
காலையுதயந்தருகதிர்க்கடவுள்போலு
மாலையிருதாரகைமனப்பகைகொளுங்காற்
பாலையுறழ்வெண்மதிபடர்ந்தசெயல்போலும். (௧௭)

வேளிருவோர்தமில்வெகுண்டமர்தருங்கா
லாளுமனுவேந்தவணடைந்தமுறைபோலுந்
தாளுடையிரண்டுதகர்தம்மிலமராடு
நாளிலொருபோரிடபநண்ணியதுபோலும். (௧௮)

மாயனெடுவாரிசன்மதர்ப்புமதிமாழ்க
வாயவர்தமக்கறிவுமன்புமுளவாகப்
போயளவிலண்டமிசைபொங்குதழல்வண்ணத்
தூயசிவலிங்கவொளிதோன்றியதுமுன்னர். (௧௯)

ஏமமுதலாளியையிகந்திருவர்காப்போர்
தாமொருவர்வவ்வும்வகைதம்மிலிகல்காலைச்
சேமநிதியாளனிடைசேர்ந்தனையதெய்வத்
தாமவருண்மேனியதுதன்னையவர்கண்டார். (௨0)

கண்டதிசயத்தினொருகாட்சியினினைத்தார்
தொண்டுடைமுதற்பரமசோதியெனவெண்ணார்
கொண்டுளமருட்கைகிளைகொண்டெழுதலாலே
மிண்டுடனகந்தையும்விடுத்திலரிசைப்பார். (௨௧)

அண்டரினமக்கதிகராயினவரின்றால்
விண்டெவருரைப்பவர்கண்மேன்மையிவர்பாலென்
றெண்டகரவீறுமிதுவேயஃதளக்குந்
தண்டமுநிறுக்குமிருதட்டுறுதராசும். (௨௨)

ஆதியிஃதந்தமிஃதென்னவரிதாகி
வீதிதருதேரிரவிவேறுபலகோடி
தீதிரளுறும்படிவுசின்னமுறவீறுஞ்
சோதியையளக்குமிதுவேநமதுதோற்றம். (௨௩)

என்றுமிருபித்தரஃதெய்திடுமுன்னெஞ்சத்
தொன்றியமறைப்பழுதுரைத்திடுதல்போலே
யன்றைவரைதாம்வெளிவிடாதுளமடக்கும்
புன்றலைமைவானவர்புலங்கொளவகுப்பார். (௨௪)

தேவரிதுகாண்கவெனமெய்ப்பொருடிரிந்தார்
மேவுகிலையமும்விகற்பமனமுற்றார்
யாவரிதனீறுமுதலெண்ணியளவிட்டா
ராவரவரோபிரமமாகுமுதலென்றார். (௨௫)

செந்துகிரினைக்கரிதுதேரில்வெளிதென்றே
யந்தரிருவோர்தமிலளந்திடுதல்போலே
யிந்தவுருவெண்ணரியதெண்ணவெளிதென்னுந்
தொந்தவுணர்வின்றவர்துணிந்தவழிவேதன். (உசு)

காட்டியிதுவென்னுனைசெய்கட்டளைகடந்தே
மோட்டழலுருக்கொடெழுமூர்த்தியைமுகுந்தா
கோட்டரியதாளளவுகோடிமுடிதன்னை
நாட்டியுணர்கிற்பனிவனுனெனநவின்றான். (உஎ)

சாகரமிலக்குரியதாதையுனைகேளா
மாகரமமைத்தவளைமாயனிசைவுற்றுச்
சேகரமதெண்கணதெரிந்திடுதியென்றே
சூகரவுருக்கொடுசுடர்ப்பதமளப்பான். (உஅ)

கோடுகொடுமண்பிளவுகொள்ளமிசைகுத்தி
யாடரவுசேர்பிலமடங்கலுமகழ்ந்தே
யோடியலமந்துமயலோடளவில்கால
நேடுபுதிரிந்தனனிலைப்படலிலாதே. (உகு)

பாந்தளுலகத்தவர்கள்பன்றியிஃதொன்றிங்
காய்ந்திடுமழற்படிவமாமிதனையன்றே
சாய்ந்ததுடறன்னடிதளர்ந்ததுமிகத்தா
னேய்ந்ததுளமென்னிதனையுன்னியழல்கூரும். (௩0)

ஆனசெயலில்லதையமைத்தலரிதாகு
ஊனமுளதோவஃதொழிந்திடவொணுதோ
வேனம்வறிதேயலைவதென்னெனமுகுந்தன்
றானுணரொணுதவகைதன்னிலறிவுற்றான். (௩௧)

விட்டனனகந்தையும்வியப்பொடுமதர்ப்புஞ்
சட்டெனவெழுந்தமரர்தங்களையடைந்தே
யெட்டரியதென்பதையிகந்திதனைநாடிப்
பட்டதுயர்போதுமடிபார்க்கவரிதென்றான். (௩உ)

வன்னிவடிவாயமுதல்வண்ணமுடிகாண்பா
னன்னவடிவாகியயனண்டமிசைபோகிப்
பன்னரியநாள்பலபறந்துதடுமாறி
யுன்னரியதாயுரனொழிந்துவிழுகிற்பான். (௩௩)

மாலுமடிகாணலிலன்மற்றதுதெரிந்தான்
போலவமரேசரொடுபொய்சொலினுமொப்பா
மேலவஃதின்றெனினுமியாமுயர்வமென்னுக்
கோலியதொர்வஞ்சமதுநெஞ்சினிடைகொண்டே. (௩௪)

சீதரனெடும்பருயர்சென்னியுணர்சேணிற்
போதலிலனொன்பதொருபுன்மைதுணையாகச்
சோதியிதனீண்முடிதுணிந்தனனியானென்
றோதினனுளங்கொள்படிநுற்றிடுவதோரான், (௩௫)

தாடலையிரண்டின் முடி தானயனுணர்ந்தா
ரூடுமிவனைத்தன துநாபியினளித்தோன்
றேடலிலனேவடிதெரிந் துணர்வதுண்டென்
ருடகிலத்தவருமையுறவினின்ருர். (௩௬)

அடிக்களவையுற்றிலதகழ்ந்துபிலமெங்கு
நொடிக்கிலிவனென்னின்மிகநோன்மையுடையானே
முடிக்களவையுற்றதெனமுண்டகமிருந்தோன்
வடிப்பதெனமாயமெனமாயனுமருண்டான். (௩௭)

புன்னிலைதருங்கொடியபொய்யிதுபுகன்றே
மென்நிலையதாகுமெனவெண்ணியயனேங்கு
மந்நிலையழற்படிவினின்றுமருளாலே
தன்னிலையளப்பரியதாணுவெளியானன். (௩௮)

வேறு.

துளங்குமிளம்பிறையொளிரச்சுரநதிவெண்டிரைவீச
விளங்குமரனடிவிருப்பவிமையமயிலிடங்கொள்ளத்
தளங்கொணறுந்துணரிதழித்தார்மார்பன்றனிவிடைமேல்
விளங்குதலுமிருவோரும்வெள்கிமுகங்கவிழ்ந்திட்டார். (௩௯)

புத்தேளிர்கணந்தொழுதுபோற்றிசைப்பப்புண்டரிகன்
பித்தேறுமுகந்தெரிந்துபிறைமவுலிமுறுவலுடன்
போய்த்தேசொற்றனையெம்முன்பூசையுனக்கெஞ்ஞான்றுந்
தத்தேறுந்திரைத்தரணிதனிலிலதாகெனச்சபித்து. (௪0)

நெடியவனைமுகநோக்கிநீசரதம்புகன்றமையாற்
படியவர்கின்பாற்புரிகபரவுபெரும்பலியெனலு
மடிதொழுதுமலர்விரிஞ்சனளவிலருட்பெருமானே
கொடியபிழையொன்றுமுளங்கொண்டுபொறுத்தருளென்ருன். (௪௧)

நம்பனயன்றுயர்க்கிரங்கிநல்லருள்கூர்ந்தெமதுமொழி
வம்புபடாதுயர்கந்தமாதனத்தின்மருங்கேகித்
தம்பநெடுந்தழற்சாலைசமைத்துமகம்பலதந்தாற்
செம்பதுமத்தவதீருஞ்செப்பியபொய்ப்பாவமெனு. (௪௨)

பருவமுகிற்படாம்போர்த்தபனிமலையின்மிசைவளர்ந்த
தருணமலர்க்கொம்பினெடுந்தவளமதிதவழ்மவுலிச்
சுருதிதொழும்பரன்கரந்தான்சொன்னமுறைமைப்பதனைக்
கருதியயன்காகுத்தன்கண்டகரைவரையடைந்தான். (௪௩)

அக்கிரியிலமரர்முனமாயிரமெண்பஃதாண்டு
மிக்கபவுண்டரிகமுதல்வேள்விகளாலருச்சித்தா
னக்கணையங்கெதிர்தோன்றிநாயகனுநான்முகற்குப்
பொய்க்கிளவிப்பவம்போக்கிப்புனிதவரம்பலதருவான். (௪௪

உருவதனிற்பூசையிலையுயர்சுருதிமிருதியினாற்
திருமறையோர்பாவனையாற்செய்கவனைவழிபாடு
இருதுவிதுசெய்யுமிடங்கிளருலகமொருமூன்றும்
பிரமகுண்டமெனப்பெயராய்ப்பிறங்கியறங்கொடுத்திடுமால். (௪௫)

நீயிழைக்குமகத்தடத்தினீர்படிவார்க்கருண்முத்தி
வாயிலிடேர்தாள்கழலுமத்தகத்திப்பொடிபுனேவா
ரேயெனமைப்படலமிரித்தின்புறவரிடுவதில்லான்
ருயைமணம்புணர்கொழுநன்றனக்குதித்தான்ருனல்லன். (சகூ)

ஆரொருவர்குடைந்தாலுமயுதபஞ்சபாதகம்போஞ்
சேரவணுகாவலகைதிரள்பூதமெனவருளி
யீருமழுவினன்மறைந்தானென்றுமவணுறைந்தார்கள்
காருறுகந்தரன்மகிழுங்கண்ணெனவிண்ணவர்பிறரும். (சள)

வேறு.

மரபிலங்கிமுடித்தயனூரிலேவனிதைபங்கனருட்கொடுபோயினன்
பரவுமன்றுதொடுத்திமையோர்கடாம்படிவரங்கண்மகச்செயல்பேணினூர்
கரவுசஞ்சலமுற்றவுநூறியேகதிவழங்கும்வழுத்திடயாருமே
பிரமனன்பினிழைத்திடும்வேள்வியாற்பிரமகுண்டமெனப்பெயரானதே. (சஅ)

பிரமகுண்டச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ககடு

---

# அனுமகுண்டச்சருக்கம்.

---

நாலாரணநிலையிட்டவனல்குங்கிளர்சூத
னூலாருரனுடையார்முகநோக்குற்றனனுவல்வான்
கோலாகலவண்டார்விதிகுண்டங்குடைவுற்ருேர்
வாலார்விறலனுமானருள்வளர்குண்டமதடைவார். (க)

செருமாறெழுநிருதத்திரள்சிதறப்படைபொருதே
கருமாமுகில்வண்ணன்மீண்டிடுகோலக்கிளர்கந்தப்
பெருமாதனவரைமானவர்பேசும்பெயர்தனதா
வொருமாதடமடன்மாருதிகண்டானுலகுய்ய. (உ)

அதனீர்மையையறிவுற்றரனகலானவணமர்வா
னிதனீர்படிகின்ருர்புகுமிடமேசிவலோக
பதமாமிருணிரயப்புவிபாழ்பட்டனபவனன்
சுதனுலிஃதுண்டாகியபின்னென்பலசொல்லில். (ந)

முன்னுனிதுபோலுந்தடமொழிதந்திலன்முனிவீர்
பின்னுனிதுகிகரும்புனல்பேசாததுசரத
மின்னுவினையடுநற்றடமிதன்மேன்மையையெரிவெற்
பன்னுனறிவுறுவானஃததியானெனலாவான். (ச)

வயமாருதிதடமாடினன்மன்னன்றருமசக
னுயர்கேகயகுலமோங்கிடவொளிமைந்தனையுற்ருன்
சயமாரவர்தொகைதானெருசதமென்றருள்சூதன்
புயமாணிறைசெயல்கேட்டிடுமுனிவோரொடுபுகல்வான். (டு)

அணிகேகயமரபுள்ளவனரசன்றருமசகன்
பணிமேனிலமுழுதும்பகைபடவென்றினிதாள்வான்
றணிவானிகலுயிர்மேலருடவருமொழியறமே
துணிவானவனிருதோள்புணர்தூயார்தொகைநூருல். (௬)

தளர்நேரிடையவருத்தரதாராகணமனையார்
வளர்கேகயகுலமுய்ந்திடவடமென்றளிருந்திக்
களர்மாநிலமெனமன்னியகருவுற்றிலர்களிவண்
டுளர்தாரவனவர்பான்மகவுளதாநெறியுறுவான். (௭)

மாமேதமுன்மகமுள்ளனமருவுந்துலையாதி
யாமேவருகொடைதென்றிசையவர்பூசைகளலைசூழ்
பூமேவியசுரருண்டிகள்புதல்வற்பெறலுதவு
நாமேவியமனுவேபலநாளும்புரிகுற்றுன். (௮)

முதிர்வெய்தினனதுபோழ்தினின்முதல்வன்றருமசகன்
வெதிர்தோள்புரையரசன்மனைமின்னார்களின்முன்னுங்
கதிர்மாணகிலவளீன்றனள்காதன்மகனும
மதிர்வார்கடலெழுமென்றுறழவிர்சந்திரனறவீர். (௯)

நித்தன்சடைபுனைசந்திரனிகர்சந்திரனவனும்
வைத்துந்திபிலருடாயெனமனநண்பொடுமற்றைக்
கொத்தொன்றியகுழலன்னையர்குழுவுங்குயமுறுபா
லுய்த்தங்கெழில்பெறநல்கிடவொளியால்வளர்வுற்றுன். (௧0)

தாய்மாரவர்தங்கட்கிருதடவாள்விழியானன்
பாய்மாவுடைமன்னற்குயர்பணைவன்புயமொத்தா
னுய்மாமதியேனுதியரவர்சூழ்துணையதுவாய்ச்
சேய்மாநகருள்ளார்பெறுசெல்வநிகர்செல்வன். (௧௧)

வேறு.

பாலற்குரியசீராட்டுப்பண்ணியரசன்வளர்த்திடுநாட்
கோலத்தளிமந்தனிற்றுயிலுங்குலமாமதலைகொழுங்கமலக்
காலிற்றெறுக்கான்முள்ளூறுத்திக்கடுவுற்றிடலுங்கலங்கியெழுந்
தோலிட்டழல்கேட்டன்னையர்தாமுள்ளம்வெருவியுடனழுதார். (௧௨)

ஏங்கியழுதகுரலொலிகேட்டிறைவனமைச்சர்புரோகிதரோ
டாங்கணொருவனறிவானையனுப்பவவன்சென்றகன்கடையை
நீங்கலரியபண்டகனோர்நின்றுவினவவவனுரைத்தான்
றேங்குகுதலைமொழிமைந்தன்றேளால்வருந்தவழுதசெயல். (௧௩)

போனன்பறப்பன்முள்ளூறுத்திப்புதல்வன்பதைப்பப்பொருராகி
மானாழுதகிறமனைத்தும்வந்துபுகன்றன்மன்னனுடன்
றூநான்மறையோருடன்றேர்ச்சித்துணைவர்தொடரத்துனைவோடுந்
தேனாலங்கற்றருமசகன்றிருமாளிகையுட்சென்றடைந்தான். (௧௪)

செறியும்பிடகரவர்தம்மாற்றேள்வெங்கடுத்தீர்மருந்துதவி
யறியுமகவைக்கொண்டாடியங்கையேந்தியணைத்தன்பா
னறியதுகிலும்பசும்பொன்னுநலங்கொண்முத்துநல்குரவு
மறியவழங்கிமருத்துவர்க்குமன்னன்மகிழ்கூர்ந்ததற்பின்னர். (௧௫)

ஏகிப்புறத்திலரியணைமேலிருந்தாரணனையெதிர்நாடி
யூகித்துரைப்பான்யார்க்குமகவொன்றுமதனிலஃதின்றே
யாகிவிடுதனன்றுகுமன்றேல்விளைக்குமருந்துயர
மாகமருங்குனூற்றுவனைமணந்தேனொருவன்மரயதனால். (கசு)

ஆனேன்விருத்தனிங்கெனக்குமரிவைமார்க்குமொருமைந்தன்
றானேயுயிராமவனிறந்தாற்றனைவாழ்விழத்துமெல்லோமு
நானேரிடையார்நூற்றுவர்பானூறுமதலைப்பேறுகப்
பானேர்சுருதிநிலைதுணிந்துபகர்வீர்விதிநூற்பரிசுணர்ந்தீர். (கஎ)

செப்புங்கருமம்பெரிதெனினுஞ்சிறிதேயெனினுஞ்செய்திடுகேன்
றப்பின்றுணைதருமமிசைத்தருகேன்மகவுசதமுண்டா
மப்பண்புடையபணியுண்டேலருள்வீரொன்றுனடல்வேந்த
னெப்புங்கருத்தாலவரொல்லாமுணர்ந்தாரரசற்குரைசெய்வார். (கஅ)

தேர்ந்தோமுரைத்துமன்னவகேள்சேதுவடிவாய்த்தென்கடற்பால்
வார்ந்தவருவிமருங்கொலிப்பவயங்குங்கந்தமாதனந்தான்
கூர்ந்ததடமொன்றதன்பாங்கர்க்குலவுமனுமகுண்டமென
நேர்ந்துமுனிவரமரர்பிறர்நெருங்கியதனைவணங்கிடுவார். (ககூ)

தெரிசித்தாலுமத்தடத்திற்றெய்வப்பாணிபாணியினிற்
பரிசித்தாலும்பவந்துரக்கும்படியின்மிடியும்பழங்கண்ணுங்
கரிசிற்சிறந்தநிரகுங்களையுங்காட்டுங்கதிவேண்டில்
வரிசைக்குலநன்மடமாதர்மைந்தர்முதலாம்வரநல்கும். (உ0)

வாஞ்சையுதவுமதின்மூழ்கிமக்கட்காமமகம்புரிந்தாற்
றேஞ்சொன்மடவார்நூற்றுவர்க்குஞ்செம்மலுளவாமென்றிசைத்தார்
பூஞ்செங்கதிர்வேற்போர்வேந்தன்புரிவான்கிருதுபுகழ்மறையோர்
தாஞ்சென்றிகலும்படையமைச்சர்தம்மோடனுமான்றடம்புக்கான். (உக)

புகுந்துதனதுமனைமடவார்பொருநர்முதலோர்பலரோடுந்
தகுந்தண்புனிதத்தடமூழ்கித்தனயர்க்காமத்தழல்வேள்வி
யுகந்தபொருளோடுபகரணமொருங்குசேர்த்தியொருதிங்கண்
மிகுந்தவிருப்பானவரோடும்வீற்றங்கிருந்தபின்வேந்தன். (உஉ)

மேடமாதந்தனிலிழைத்தான்விளம்பும்வேள்வியதன்கரைமேற்
றேடுஞ்சிறிதுமனுகாமற்சுருதிமுறையின்றுறைமுடிவு
கூடவமைத்தவாசிரியன்குவியாமகஞ்சேரவியுணவின்
சேடமதனைத்தேர்வேந்தன்றெரிவைமார்கடமக்களித்தான். (உங)

பின்னருரியமாதருடன்பிழையில்வேள்விமுடிவதனிற்
சொன்னமுறையினீராடித்துகடீர்குரவர்தமக்குதவிப்
பொன்னுமணியும்பூசுரர்க்குப்பூரிகொடுத்துப்புலம்பலவு
மன்னன்வழங்கியனைவோரும்வாழ்த்தவடைந்தான்வளநகரில். (உச)

வையம்புரந்தங்குறைநாளின்மருவுமாதமொருபஃதிற்
றையலார்களொருநூறுதனயர்ப்பயந்தாரவர்தமக்குச்
செய்யும்பிறவிவினைமுடித்துத்திலமும்பசுவுஞ்செழும்பொன்னும்
பொய்யில்புவியும்பூசுரர்க்குப்புகழ்க்கேகயர்கோன்புரிந்தளித்தான். (உரு)

மகவோரிரண்டாமுன்னவட்குமற்றையவர்கட்கோரொன்றாந்
தொகையாலொருநூற்றொருபுதல்வர்தோற்றம்பெருகவளர்ந்திளமைத்
தகையார்பருவமணைந்திடலுந்தரணியதனைத்தானொன்று
மிகையார்நூறுகூறாக்கிவேந்தன்விருப்பாலவர்க்கீந்தான். (௨௬)

கோற்றேன்மொழியாருடனனுமகுண்டமணுகித்தவம்பண்ணா
ளாற்றாவரன்றாளிணைகருதியாவிதுறந்தான்றருமசகன்
வேற்றாரையருமுடன்விளிந்தார்மிக்கபுதல்வன்சந்திரன்றா
னீற்றார்தினந்தொட்டவர்க்குரிமையிழைத்தான்சிராத்தமீறெவையும். (௨௭)

வேறு.

எழில்வைகுண்டமடைந்தனன்மாதரோடிறையதன்பினர்சந்திரனாதியோர்
பழுதின்மொய்ம்பொடுமுன்பகிர்பாலொலாம்பகையொழிந்துபுரந்தனர்நாளுமே
யழிவறும்புகழ்மன்செயலோடுநீடனுமகுண்டமதன்றகைகூறினோ
முழுகுமின்கணலம்பெறநாடுவார்மொழிதருங்கதையும்பரில்வாழ்வரோ. (௨௮)

அனுமகுண்டச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௦௨௩.

---

# அகத்தியதீர்த்தச்சருக்கம்.

---

நிதியமலைமிசைத்தவளநெட்டெயிற்றொன்றினைமுறித்துநிருத்தன்பங்கில்
வதியமலைமகனெழுதப்பாரதநூல்வகுத்தவன்றாள்வணங்கிப்பின்னுந்
துதியமலைம்புலன்முனிந்தசூதமுனிமுனிவரர்க்குச்சொல்வான்றொன்னூற்
பொதியமலைமுனிதீர்த்தம்புகுவர்முதலனுமகுண்டம்போற்றுமேலோர். (௧)

பைந்தமிழ்மாதவனமைத்தபட்டமிதுமேருவுடன்பண்டைநாளில்
விந்தகிரிமிகவிகலிவிண்ணொடுமண்புதைப்பவிடம்விடுமூச்சின்றி
யந்தமுயிர்களுக்குறலுமறிந்தமரர்கயிலைமலையணுகியண்ணற்
கிந்தவகைமுழுதுமடைவினிலியம்பியிருகழற்காலிறைஞ்சிநின்றார். (௨)

மஞ்சுமலிவரையணங்கைமணம்புணர்வான்விருப்பினொடும்வசிட்டனாதித்
தஞ்சமறைமுனிவரரைத்தடஞ்சிலம்பன்பால்விடுத்துத்தசும்பின்சேயை
நஞ்சுபொதிகளன்விளித்துநீயணுகிவிந்தகிரிநளிநீக்கென்றான்
செஞ்சொலருந்தமிழ்முனிவன்சிவபெருமான்கழல்வணங்கிச்செப்புகின்றான். (௩)

குருகுபுனைகரத்துமையைவேட்டருணின்மணவாளக்கோலங்காணா
தொருதமியேன்புரிந்தகொடுந்தீங்கெவனோவெனவெருக்கொண்டுரைப்பவீசன்
வருதியெனமருங்கழைத்துமனநடுங்கேல்வண்ணமிதுமறைக்காடென்னும்
பொருவினகர்தனிலுனக்குக்காட்டுதும்யாமுண்மையிதுபோதியென்றான். (௪)

விடைகொண்டுவிடையவன்பால் விரைந்துசென்றுதென்றிசைப்பால்விண்ணும
ண்ணும், புடைகொண்டுவளர்விந்தப்பொருப்பதன்மேற்றிருப்பதமென்போதுசூட்
டிக்,கிடைகொண்டநிலத்தளவுங்கீழ்ப்படுத்தியிடம்பலவுங்கெழுமியெல்லைத், தடை
கொண்டுவளர்கந்தமாதனத்தின்றலையணைந்தான்றமிழ்நர்கோமான். (௫)

பிறங்கலதன்பெருமையுணர்ந்தாயிடைத்தன்பெயரதனாற்பெருந்தண்வாவி
யறங்குலவவருள்புரிந்தான்றானுமவண்வீற்றிருக்குமந்நீர்ப்பட்டந்
திறங்கெழுமுக்காலத்துஞ்சிறப்புடையதிவ்வுலகிற்செல்வங்கல்வி
நிறங்கலவாவீடுதருமற்றுநினைந்தனவுதவுநிகர்வேறின்றால். (௬)

சுனையதனிற்றீர்க்கதமன்றருபுதல்வன்கக்கீவான்றொல்லைநாளி
னனைதருநல்வினைப்பயனாற்சுவநயனாமன்னனருணாறுமென்கூந்தற்
புனையிழையைமணம்புணர்ந்தானவன்சரிதந்தருந்தருமம்புகரின்றாக்கு
மனையகதைவிரித்தறைவன்மனநிறுவியறிந்திடுமினறத்தின்மிக்கீர். (௭)

ஏர்க்குமருந்தவமுயலுமியல்புடையானந்தணரிலேற்றமிக்கான்
தீர்க்கதமனவன்குமரன்கக்கீவானுபநயனச்செய்கைமுற்றிப்
பார்க்கணுயர்புகழ்ப்பிரமசரியநிலைவழுவாதபண்பினீடிக்
கூர்க்குமதிமறைதெரிவானுதங்கனெனுங்குரவனிடங்குறுகினானால். (௮)

குறுகிமறையதனங்கமிருமூன்றுசாத்திரங்கள்குலவுந்தொன்மை
யுறுகதைகளிதிகாசமுபநிடதமவைபிறவுமொழிபினோடு
மறுபஃதாண்டாசிரியன்மனநிலையிற்பகுத்துணர்வினாய்ந்தபின்னர் [வான். (௯)
மறுவில்பொருள்வளநகர்ப்போய்க்கொணர்ந்தாசான்றிருமுன்னர்வைத்துச்சொல்

ஓதுமறைமுதலனைத்துமுதங்கவுனதருளதனாலுணர்ந்தேனில்லிற்
போதல்புரிகின்றதுளம்விடைதருதல்வேண்டுமெனப்பொருவிலாசான்
காதலநன்றேகுதிநின்கடிகொண்மணமுடிவதற்கோர்கருமஞ்சொல்வேஞ்
சேதுவின்கணுயர்கந்தமாதனத்தின்மலயமுனிதீர்த்தமுண்டால். (௧௦)

வீடுதிருமுதலுதவும்வினைகளையுமத்தடத்தில்விதியினாலே
யாடுதிநீமுப்பொழுதுமாண்டொருமூன்றதன்காறுமப்பாலாண்டிற்
கோடொருநான்குளதாகிச்சரற்காலமுகிற்குலம்போற்கொழுங்கால்வெள்ளைப்
பீடுடையமேருவெனவிறைகயிலைநடைபயின்றபெற்றித்தென்ன. (௧௧)

அடிமிதிப்பினுகிர்நுதியாற்றுவக்குண்டுபாதலஞ்சேரரவநாத
னெடுநிகளச்சங்கிலிபோலீர்ப்புண்டுகிடந்தலையநீண்டவாலைப்
படிமிசையுமுகிலுறங்கும்பாற்கடலிற்றோய்த்துடுவிற்பரக்கவீசிப்
பொடிவிழநீள்பகிரண்டப்பித்திகையைத்தனதபரப்புறத்திற்றேய்த்து. (௧௨)

புழைக்கரத்தால்விண்முகடுபொள்ளல்படவுரிஞ்சியண்டப்பொருள்களெல்லாந்
தழைக்குநிலத்திடையுகுத்துத்தடமருப்பாற்படியுழுதுதானநீராற்
குழைத்தளறுபடநெடியதிசைக்கரிகளவைமுழுதுங்குலவுமுண்டிக்
கழைச்சுமைகடருங்கருத்தாலுயிர்கவராதருள்புரிந்துகடைக்கட்டீயில். (௧௩)

வீழ்ந்தபொறிவடவையெனவிரிகடலிற்கிடந்தெரியவிலங்கலெல்லாந்
தாழ்ந்தசெவிப்பெருங்காற்றில்வேர்பறிந்துகிடுகிடெனத்தளரத்தேவர்
சூழ்ந்திறைஞ்சுமகபதியூர்மதக்களிறுசேண்வழுவித்துயின்மயக்கா
லாழ்ந்தபுனற்கயமதனேர்விழுந்தமிழ்ந்திமீளவெழுமதனையேய்ப்ப. (௧௪)

கந்தமதக்கார்மழையிற்சுரும்புகருங்கனோபலத்திற்கனாலக்காமர்
தந்தியொன்றுதமிழிருடிதடத்திலெழுமதன்பிடரிற்றயங்கிரண்டா
மிந்திரன்போலினிதேறிச்சுவநயனாமன்னவனூரிடத்திலேகு
வந்தரசன்கண்டுநினைமகிழ்ந்திடுந்தன்மகடுயரமாறிற்றென்றே. (௧௫)

முற்பகலக்குரிசின்மகனாற்கோட்டுவெள்ளிபத்தின்முதுகிலேறிப்
பொற்பினெடும்புகுதுமவன்றிருக்களத்திலலதலங்கல்போடேனென்னக்
கற்பனைகொண்டனளதனைமண்புரக்குமரசிருடீர்கருத்தினாடி
வற்புறுநெஞ்சகங்கவன்றானாரதனப்பொழுதவன்பால்வந்தான்மாதோ. (கசு)

நாரதனைமுறைவழுத்திநரபதிதன்மகளுளத்தினாட்டமுற்ற
நீரதனைவிண்ணப்பஞ்செய்துவெள்ளைநெடுங்களிறுநிலவுதேவ
ரூரதனிலுளதாகுமிவள்விரதமென்மனத்தையுலைக்குமந்தோ
வேரதனிலுயர்மடவார்வாழ்க்கையுறுதீன்றவரிலிருத்தறுன்பம். (கஎ)

என்னையிதற்குபாயமெனநாரதன்வேந்தனைநோக்கியெய்துமாற்றா
லுன்னையுளாத்தினிதகன்றானுனதுவரவினைநாடியுற்றான்மன்னன்
பின்னையெனுதிக்கணமேபிள்ளாயக்குறுமுனிவன்பெருநீர்வாவி
தன்னையடைந்தாடுகெனக்கக்கீவான்மலயமுனிதடத்தைச்சார்ந்தான். (கஅ)

தூவருடந்திடுமுதங்கன்சொற்படியைம்புலனடக்கித்தூநீராடி
மேவருடங்குயர்நகரப்பட்டினியும்பாரணமும்விதியினாற்றி
மாவருடமலயமுனிதடமுறைவான்விழிதுயின்றான்வாவிப்பாங்கர்
மூவருடமுடிவுறுநாண்மாலைவினைக்கடன்முடித்துமுந்நூன்மார்பன். (க௯)

கடையாமத்திறுதியெழுகடலொலிபோலெழுமொலியாற்கக்கீவான்கண்
படையொருவியெழுந்திருந்தான்பதமதனின்மதின்மதுராப்பதிக்குமன்னாந்
தொடைமருவுபுயசயிலச்சுவநயன்றான்மாவேட்டைத்தொழின்மேற்கொண்டு
மிடையுமிருந்தானையுடன்வியன்கந்தமாதனமாம்வெற்பையுற்றான். (உ0)

வேட்டைவினைவிளையாட்டின்மேனியிளைத்தகத்தியன்பேர்விமலவாவிக்
கோட்டையடைந்தனனிறைவனதுகாலைத்தீர்க்கதமன்குமரனீரும்
பூட்டையுநேர்பவமகற்றும்புகழ்நியமத்துறைமுடிபுபோற்றியுற்றான்
றுட்டயங்குமொருபுழைக்கைச்சயிலமெனநான்கெயிற்றுத்தவளவேழம். (உக)

கும்பமுனிதடத்தெழுந்துமருங்குறலுமதுகண்டுகுரவன்சொன்ன
கம்பமதகரியிதுவென்றெழுந்துபுனல்படிந்தேத்திக்களிற்றைமேற்கொண்
டம்புவியாள்சுவநயனூரடையநினைந்திடும்பொழுதிலந்தவேந்த
னும்பன்மிசைக்கக்கீவானுழையணைந்தான்விருப்பினொடுமுனாக்கலுற்றான். (உஉ)

இருபிறப்போய்வருதியுனக்கேதுபெயர்யார்குமரனிபத்திலேறி
யொருதனிநீபோவதெவனுரையெனலுந்தன்பிறப்புமுதங்கனென்னுங்
குருமுதல்வன்பணித்தனவுமணவினைமேற்செல்வதுவுங்குறைபடாம
னிருபனுணர்வுறமொழிந்தானவனதுகேட்டுவப்புததிநிலையின்றாகி. (உங)

எந்தவிறைமகடனைநீமணக்கநினைத்தனையவளையீன்றளித்த
வந்தவிறையவன்யானேயந்தணநீயணைந்ததுநன்றாயிற்றையா
முந்துமுயறரும்பிரமசரியநிலைவிடுத்தினிநீமுகிழக்கொங்கை
நந்தமகடனைவேட்டுநல்லறமாமில்லறத்தைநடாத்துகென்றான். (உச)

அறைவதுகேட்டந்தணன்சேயழகியதேயரசவெனையளித்தமேலோன்
மறைவனத்திற்கடவுளடிவணங்கியருந்தவம்புரிவன்மற்றவன்பா
னிறைபெருகுவிப்பிரனைநீவிடுத்தியெனவுகந்துநிருபர்கோமான்
பொறைமருவுபுரோகிதனுஞ்சுதரிசனன்றனைச்சிறப்பிற்போக்கினானால். (உரு)

சுதரிசனன்றானையொடுஞ்சுருதிவனத்துடசநிலைதன்னிமன்னும்
பதரிலரும்பொருடெரிந்ததீர்க்கதமன்பதமலர்கள்பணிந்துபோற்றி
யெதிரிலருந்தவந்தருமமூறின்றியினிதுநடந்தனவோவின்பப்
புதரிலுயர்புலமறையோயெனவினவத்தீர்க்கதமன்புகலுகின்றான். (உசு)

எழுதரியமொழிமுளரியிறையருளாற்குறையெமக்கிங்கில்லையென்றும்
விழுமிதினீயிருந்தனையோசுவநயன்றன்புரோகிதநீவேந்தைநீங்கி
யொழிவதிலையணைந்தபணியுளாயென்னச்சுதரிசனனுனதுநண்பா
விழிபிலைநன்றிருந்தனனாற்சுவநயனின்பால்விடுத்தானியம்பக்கேண்மோ. (உஎ)

மகத்திலுயர்நின்மகனுங்கக்கீவானவன்கந்தமாதனத்தி
லகத்தியன்பேர்ப்புனற்றடத்தானவன்குணமுமழகுமொழுங்கறிவுமன்பு
மிகத்தெரிந்துதன்மகளையவற்களிப்பான்விருப்புற்றுவேட்டைபோங்காற்
சகத்திலுயருனதுகுலத்தனயனைக்கண்டிப்பணிதான்சாற்றினால். (உஅ)

ஐயனுமதிவேண்டுமென்றனன்மற்றாகையினாலரசன்பெற்ற
மையுறுகண்மடக்கொடியைநின்குமரன்மணப்பவருள்வழங்கவேண்டுஞ்
செய்யுமிதுபொருட்டாகவெனைவிடுத்தானினையபெருஞ்சேனையோடும்
வெய்யவினைப்பவந்தீர்க்குந்தீர்க்கதமமுனிவவெனவிளம்பிப்போற்றி. (உகூ)

யானடைந்தபணிக்குடம்பாடருளுகென்றான்சுதரிசனனிலங்குவேதக்
கானடைந்ததீர்க்கதமன்களிசிறந்துநமக்குமிதுகருத்தேயாமும்
வானடைந்தநெடுங்கந்தமாதனத்துவருதுமெனமறைக்காட்டண்ண
றேனடைந்தபதம்போற்றிப்புரோகிதனோடவண்சென்றான்றினமோராறில். (௩0)

மலையமுனிதடத்துறையுமகற்கண்டானவனுமிகமனமகிழ்ந்து
தலையளிகூர்தாதைபதந்தொழவெடுத்துப்புல்லிமடிதனிலிருத்திக்
கலைமறையும்பிறநூலும்பயின்றனையோவெனப்புகன்றுகற்றவண்ண
நிலைபெருகுமணவினைமேற்கொண்டநெறியீன்றவற்குநிகழ்த்துகின்றான். (௩க)

குருவுதங்கன்மணமுடியுங்கொள்கைநவின்றருந்தமிழின்குரவன்வாவி
மருவுகெனவொருமூன்றுவருடமதிற்படிந்துற்றேன்வந்ததந்தப்
பருவமதிலருள்புரிந்தபடிதனதுவயத்திலிவண்படர்ந்துமாதை
நிருபனுந்தந்திடநேர்ந்துநினையழைத்தானெனப்புகன்றுநின்றான்மைந்தன். (௩உ)

தந்தையெனுந்தீர்க்கதமன்றனயனெனுங்கக்கீவான்றன்னைச்சார
வந்தசெயல்சுதரிசனன்வாய்க்கேட்டுச்சுவநயனுமடியில்விட்டுக்
கந்தமலர்ப்பங்கயனைக்கவுசிகன்சென்றடிவணங்குங்காட்சிபோலச்
சிந்துமுனிதடத்தணுகித்தீர்க்கதமன்சேவடிகள்சிரத்திற்றாழ்ந்தான். (௩௩)

ஏரிலக்கில்படைவேந்தையெழுதியெனவாசிபலவியம்பியன்பாற்
றேரிலக்கின்மறையுணர்ந்ததீர்க்கதமன்குமரனுடன்நிகழும்போதி
னேரிலக்கில்சேதுவிடைநிலவுதனுக்கோடியெனுநீரிற்றோய்வா
னோரிலக்கமுனிவரொடுமாணவகர்குழாஞ்சுற்றவுதங்கனுற்றான். (௩ச)

உதங்கனிருசரண்டொழுதான்கக்கீவானவனாசியுரைத்தான்பின்னர்ப்
பதங்கனிகர்தீர்க்கதமனுதங்கனெனுந்தவத்திலுயர்படிவர்தம்மி
லிதங்கழறிப்பழமைபலவியம்பினர்களிறைவனும்வந்திறைஞ்சிநின்றான்
கதங்கடியுமுதங்கனடியிருடியுமன்னவற்குநலங்கணாந்தானன்பால். (௩ரு)

ஆயிடையிம்மணவினையைமுடித்திரொனத்தீர்க்கதமற்கறைந்தானண்ண
றூயதவன்மன்னவகேணன்னாளுநாளையின்றேதொடங்கல்வேண்டுஞ்
சாய்வில்கந்தமாதனமேகடிமறைநூற்சடங்குதருதானமின்னே
சேயிழையைத்தருதியென்னப்புட்டகமண்டபத்திறைவன்சென்றானெல்லை. (௫௬)

கடைபுரக்குமொருநூறுதொகைவிருத்தசண்டர்தமைக்கடிதினேவிப்
படைபுரக்குமதர்விழியைத்தருதிரொனக்கடும்பரிமேற்படர்ந்துவல்லே
மடைபுரக்கும்புனன்மதுரைவந்துமணம்புகன்றிறைவன்மனையாரோடு
மிடைபுரக்குமருள்படையாவிளமுலையைக்கொண்டணைந்தாரிறைவன்பாங்கர். ௫௭

மாதானநெடுங்கந்தமாதனத்திற்றீர்க்கதமன்மற்றைவைகற்
கோதானமுதற்சடங்குமுடித்ததன்பின்கக்கீவான்குலவிலங்கன்
மீதானவெண்களிற்றின்பிடரேறியிருகுரவர்வியப்பவங்கி
யாதானம்பயின்மறையோர்வாழ்த்தெடுப்பவிண்ணிழிந்தவமரர்கோன்போல் (௫௮)

காரணந்தருகுழலரசன்கன்னிமனக்கற்பனையின்கடைகாண்கிற்பான்
றோரணங்கணெருங்குபெருங்காழகமாளிகைபுகுவான்றொக்கபோதி
லாரணங்குமெண்ணமினிமுற்றியதென்றகமகிழ்ந்தாளதன்முன்வாயிற்
போரணங்குபுயநிருபனெதிரேற்பக்குரவரொடும்புகுந்தான்மைந்தன். (௫௯)

மருக்கமழுமலர்க்கூந்தல்வனிதையெழிற்சிலதியர்கண்மணிப்பொற்றட்டைத்
தருக்கினெடுங்கரத்தேந்திமணமகனுங்கக்கீவான்றன்னைச்சூழ்ந்தா
ரிருக்குநெறிமுனிவருடன்றுகின்மனையுட்கொடுபோகியிறைவன்றானு
மருக்கியமேமுதலியநல்லுபசாரமவர்விரும்புமடைவிற்செய்தான். (௬0)

சடைமவுலித்தீர்க்கதமனுதங்கனிவர்குமரனெடுந்தவத்தின்மேலோர்
மிடையவெழிற்சுதன்மையெனவிளங்குமணப்பந்தரின்கண்வீற்றிருந்தா
ரடையுமதுபொழுதின்கட்புரோகிதனோடவனிதலமடங்கத்தன்னோர்
குடைநிழலிற்புரந்தருளுஞ்சுவநயன்றான்கொடுவந்துகுமரிதன்னை. (௬௧)

சதவிதழிற்பொறியிருவர்சசியொருத்தியல்லளெனத்தயங்குவாளை
வதனமதியாலுலகம்வயங்கவளர்சுருட்கங்குல்வனப்பினாளைப்
பதமலர்மென்சிறுநடையாற்படிமடந்தைதவமுடிக்கும்பண்பினாளைப்
புதுமணத்தண்காவணத்துட்புங்கவர்முன்சுடர்விளக்கிற்பொலியவைத்தான். ௬௨

வைச்சதன்பின்மணவணிசால்வல்லியவடீர்க்கதமன்மகன்கழுத்திற்
செச்சைமலர்மாலையுறழ்திருக்கரத்தாற்செண்பகப்பூந்தேமென்மாலை
யச்சவையினவருவப்பவணிந்திட்டாளுதங்கனவணங்கியோம்பி
யெச்சநுடங்கிடையவள்கைபிடிப்பித்தான்கக்கீவானெழிற்கரத்தால். (௬௩)

பின்னவளைவாழ்த்திவினைமுற்றியபின்றீர்க்கதமன்பிறங்குதங்கன்
பொன்னுனைநேர்திதலைமுலைமகள்கேள்வன்மருங்கில்வரும்பூமித்தேவர்
முன்னருடன்மன்னவன்றன்மறையவர்தொக்காயிரத்தான்மூன்றுநூறு
நன்னருணரந்தணருக்குணவளித்தானமுதளித்தநாரணன்போல். (௬௪)

அளித்ததன்பினாசிரியனுதங்கனுந்தனாசிரமத்தடைந்தான்மற்றைத்
தெளித்தமறைமுனிவர்களுந்தங்கடங்கடேயமதிற்சென்றாரங்கட்
களித்தறுகண்வெள்ளிபமுங்கடமுனிவன்றடங்குளித்துக்கரந்ததங்கண்
விளித்திறையைத்தீர்க்கதமன்வேதவனமகன்றனுடன்போம்விருப்புரைத்தான். (௬௫)

அரசனுந்தன்மகள்பொருட்டுச்சீதனநூறாயிரம்பொனைந்துநூறூர்
புரையிறுகிலோரயுதம்பூட்பெட்டியொருநூறுபொருவில்சேதா
நிரையணங்கிலிணங்கியர்கணிலவுமிழுமணித்தராளநீடலங்கல்
வரைசெய்வகையோரொன்றிலாயிரமீந்தனன்முனியுமகிழ்ந்துவாங்கி. (சகூ)

வாரியுண்டோன்றடம்படிந்துமனைவியொடுமகன்றொடரமறைக்காடெய்திக்
காரியல்கந்தரற்போற்றிவீற்றிருந்தான்றீர்க்கதமன்கணிப்பில்கால
மாரியனுங்கக்கீவானிறைமகடோள்புணர்ந்துவப்புற்றமர்ந்தான்பன்னாட்
பாரியதோட்சுவநபனுந்தமிழ்முனிநீர்ப்படிந்தனன்றன்பதியிற்போனான். (சஎ)

வேறு.

ஒருதமிழ்முனிதடமிக்காலேயுவமனின்மனமதூகக்கிவான்
புரிகதைமறைபகர்பொற்பாலேபுகழ்திறமுடையதுதப்பாதே
தருவதுதிருவொடுமெய்ப்பேறேதவறறமுனிவிர்படிப்பீர்நீர்
மரபினில்வினவுதிர்நற்சீரோமருவுவரிசைசெயலுற்றோ. (சஅ)

அகத்தியதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் க௦எக.

---

# இராமதீர்த்தச்சருக்கம்.

---

வாதராயணன்மாணவகன்பினும்
வேதபாரகர்கேட்கவிளம்புவான்
சீதைகோன்றடஞ்சென்றுகுளிப்பரான்
மூதுணர்க்குறியன்புனன்மூழ்கினோர். (க)

மறையுமோதிடுமந்திரபேதமுங்
குறையுடைப்பொருள்கொண்டுசெய்வேள்வியு
நிறைபலந்தருநீங்கிடுந்தீங்கெலா
மிறையிராமன்றடத்தினிடத்தரோ. (உ)

மட்டுவாரிசத்தோடிவர்வண்டுபோற்
புட்டில்சேர்கைப்புயலனையான்றடத்
திட்டதேதுமிலக்கின்றியோங்குமான்
முட்டிமாத்திரமேனுமுனிவிர்காள். (ங)

தனிமைசான்றசவுனகனுதியீ
ரினிதுகேண்மினிராகவன்குண்டமா
நனிபெருந்தடநாடிநடந்ததோர்
புனிதமாக்கதையுண்டுபுகலுகேன். (ச)

பொதியமாதவன்பொன்னடிச்சென்னியான்
றுதியினீடுசுதீக்கினனுயிடை
விதியின்மேயவியன்றவமாற்றுவான்
பதியிராமன்பதந்தொழும்பண்பினான். (ரு)

ஈறில்காட்சியிராமனெழுத்தெனு
மாறுசேர்மறையைந்தெனுமாயிர
மூறுகாதலினுடொறுமோதுவான்
கூறுமன்னவன்குண்டத்தின்மூழ்கியே. (சு)

பலியுணுவிற்பசித்தழலாற்றுவான்
வலியவைம்புலவஞ்சரையஞ்சிடா
ஞெலிகொணீதியொழுங்குபிழைத்திடான்
கலிகொளெண்ணிரிகாலமிருந்தனன். (எ)

பொழுதுபற்பலபோனபின்பொன்னெடுங்
கழலிராகவன்காருறழ்மேனியைச்
செழுமலர்த்திருச்சீதையைநீங்கிடா
தெழுதிநெஞ்சினிலேத்தரெுடங்கினன். (அ)

வனிதைகோசலைமாணெடுமைந்தனே
சனகனீன்றசரிவளைகாந்தனே
யனுமனண்பவமரர்கொண்டாடநீ
டனுமுறித்ததடம்புயவெற்பினய். (கூ)

தாடகைக்குச்சமன்பதியீந்திடாக்
காடகைக்குங்கவுசிகன்வேள்விமேற்
கோடகைக்கொடுகாத்தருள்கோசல
நாடகைத்தகரனுயிர்நஞ்சமே. (கo)

கவந்தவேங்கையுங்கள்ளமாரீசனு
நிவந்தவேணமுநீடுயிர்நீங்கவே
சிவந்தகண்ணசிலைமகளாகவன்
றுவந்தசேவடியொண்டனிவீரனே. (கக)

மழுவிராமன்வலங்கவர்மைந்தின
யெழுவிரிச்சிகன்கான்முளைக்கீசனே
தழுவுசீர்த்தித்தசரதன்செல்வமே
குழுவுருவலிவாலிவெங்கூற்றமே. (கஉ)

தம்பிபாடுந்தொடைப்பரதன்றனை
யெம்பிவாவென்றிலக்குமன்போலரு
ணம்பிகுழுநரலையிலங்கைமன்
றம்பியச்சந்தவிர்த்ததலைவனே. (கங)

மோதுவாரிமுரணுடைத்தாயிடைச்
சேதுவாற்றிச்சிரமொருபத்தனைக்
காதியாருயிர்கைக்கொளுங்கைத்தலப்
போதின்மேயபொருவிற்குரவனே. (கச)

பல்லுயிர்க்கும்பழவினைவாழ்க்கையி
னல்லதீர்க்குமருளின்சலதியே
யெல்லவர்க்குமிரவியினேர்வரு
மல்லலங்கணவென்றுவழுத்தியே. (கரு)

ஆளுவாயுன்னடியவன்யானென
நாளுநாளுநலங்கொளிராகவன்
ருளிலன்புதழைப்பச்சுதீக்கிணன்
வேளைவென்றுவியன்றவமாற்றினன். (௧௬)

அமனங்கொள்சுதீக்கிணமாதவற்
காமநாளிலயோத்தியர்காவலன்
றேமலர்க்கட்டிருவருட்பார்வையா
லோமுதற்பிரமத்துணர்வுற்றதால். (௧௭)

பண்டைவேதம்படியாதுணர்ந்தனன்
கொண்டஞானகுரவனையின்றியே
யெண்டருங்கலையாவையுமாய்ந்தனன்
விண்டிடாதுடல்விண்செலக்கற்றனன். (௧௮)

வீற்றுடற்புக்குமீள்வதுமேவினு
னேற்றதேவர்க்கெதிர்மொழிபேசிடு
மூற்றமுற்றுனுறவிமுன்னுமுயிர்க்
கூற்றுளங்கொளுங்கொள்கைபடைத்தனன். (௧௯)

முத்தொழிற்புரிமூவரிருப்புட
னெத்திறப்புவனத்தினுமேகிடுஞ்
சித்திபெற்றனன்வாயிலிற்றேர்கொண
வித்தகப்பொருட்காட்சியுமேவினன். (௨௦)

தாமவார்குழற்சானகிநாயக
னுமவாவியின்மூழ்கியநன்மையாற்
றேமவாவில்சுதீக்கிணனெய்தினன்
சேமவாழ்வெனும்யோகர்திருவெலாம். (௨௧)

இத்தகைப்புகழ்மேன்மையிசைந்ததாய்
மைத்தபாவமும்வஞ்சமரணமு
முய்த்திடாததருமத்துயர்ந்ததாய்க்
கைத்தகிழ்நிலங்காட்டாக்கவினதாய். (௨௨)

வீடுமாக்கமும்வெஃகியசித்தியும்
பீடுநல்கும்பெருமைபடைத்ததாய்க்
கோடுவார்சிலைக்கொண்டலன்னுன்கழ
லூடுகாதறருந்திருவுள்ளதாய். (௨௩)

ஞாலமேத்துநறுந்தடமற்றதன்
கூலமேல்வளர்கோசலர்கோமக
னீலகந்தரநித்தனருட்குறி
மூலலிங்கநிறுத்திமுறைமையால். (௨௪)

சராசரங்கடளிர்ப்பத்தனன்பினுற்
புராரிபொற்பதம்பூசனைசெய்தன
னிராமநாதனையேத்துவவொய்துவார்
பராபரந்திருமேவப்படாததோ. (௨௫)

கண்ணன்காகுத்தன் காதலினர்ச்சனை
பண்ணும்பார்ப்பதிபங்கன்பதமலர்
நண்ணிமுன்னநவிற்றியபொய்ப்பவம்
புண்ணியந்தருபுத்திரன்போக்கினான். (உசு)

அன்னவாசகங்கேட்டருள்சூதனை
முன்னிருந்தமுனிவர்வினவுவா
ருன்னும்வாய்மையுதிட்டிரன்பொய்மொழி
யென்னகாரணத்தாலன்றியம்பினான். (உஎ)

அடலிராமதடத்தினிலாடியே
சடிலசேகரன்றன்னருட்கண்ணினாற்
படிறுசொல்பவம்பாற்றியபண்பெலா
மடமறப்புகலென்றுவழுத்தினார். (உஅ)

வலத்திருக்கைமழுப்படைவள்ளலார்
நலத்தசேவடிநண்ணியுதிட்டிரன்
சலத்தினோதுசடப்பவந்தீர்ந்தமை
சொலத்தொடங்கினன்சூதனவர்க்கரோ. (உகூ)

பண்டுபாண்டவரைவரும்பார்த்திடுங்
கண்டெரிந்திடான்கான்முளையோர்களு
மெண்டகும்பெருவாழ்வின்பொருட்டிகல்
கொண்டுடன்றுகுருநிலமேயினார். (௩0)

ஆங்கணையிருநாளமராற்றியே
காங்கெயன்மெய்கலங்கிவிழுந்தபி
னூங்குசான்றவுரத்தனுணர்ச்சியான்
றூங்குவில்லன்றனுமறைத்தேசிகன். (௩க)

வட்டமாகவில்வாங்கியொனாந்துநாட்
டிட்டத்துய்மனையேற்றுச்செழுஞ்சர
மட்டிலாதவழங்கினன்மாரிபோற்
பட்டொழிந்தனபாண்டவர்தானைகள். (௩உ)

பாண்டவப்படைசாய்தலும்பாஞ்சால
ராண்டகைத்திறல்வீரனடர்ந்துபோர்
மூண்டுவாளிமுடுக்கிமுடங்குவின்
மாண்டதேசன்பதாதியைவாட்டினான். (௩௩)

மீட்டுவிற்குருவேதியன்றன்படை
வாட்டுதிட்டத்துய்மன்மிசைவார்சிலைப்
பூட்டுமேப்பலபோக்கினன்போக்கலுங்
கூட்டுபாண்டவர்வானிகுலைந்தவே. (௩௪)

அனிகமோடலுமங்கணருச்சுனன்
குனிசிலைக்குருமேற்சிலைகோட்டினா
னனிகொள்போரிதுகாணுநசையினா
லினிதுவானவர்வானில்வந்தீண்டினார். (௩ரு)

பொருவுபோரிவைபோற்பிறவின்மையா
லிருவர்போர்க்குமிதரவிதரமே
மருவுநேருவமானம்வகுத்திடப்
பெருகுகாதல்பெறிற்கவிவாணரே. (௩௬)

பல்லமாரிபரிதிமறைத்திட
மல்லலாடமர்மற்றிவர்செய்வழிச்
செல்லினூர்தியன்சேய்சிலையாண்மையை
வில்லினுதன்வியந்துபழிச்சினன். (௩௭)

வைக்குமன்புடைமாணவகன்றனை
யக்கணத்தினகன்றமராற்றினுன்
பக்கமேவியபாஞ்சாலநாயகன்
கைக்கணேற்றிடுங்கார்முகப்போதகன். (௩௮)

வகுத்தவுண்டையின்மாண்டனுத்தேசிகன்
மிகுத்தநூற்றின்மிசையிருபானெனுஞ்
சகத்திரங்கழன்மன்னவர்தங்கள்போ
ருகத்தரந்தவருனுயிர்நீக்கினன். (௩௯)

செவ்வியன்னதிற்றிட்டத்துய்மன்சினங்
கவ்வுநெஞ்சினன்கார்முகத்தேசன்மேற்
பவ்வமுண்டுபடர்முகிற்றுளைபோல்
வெவ்விறற்கணைபற்பலவீசினன். (௪௦)

பூபதிக்குலமிற்றவப்போர்நடுத்
தீபமன்னதொர்திட்டத்துய்மன்மிசைக்
கோபமூண்டெதிர்கூடிப்புடைத்தனன்
சாபநாதன்றனதுகைவாளினுல். (௪௧)

கட்கம்வீசிக்கடிதினறைந்தபின்
வட்கலின்றெதிர்பாஞ்சாலமன்னவ
னுட்கவாளியுலப்பிலதூவினன்
கொட்கநெஞ்சங்குலைந்தவன்மாழ்கினன். (௪௨)

வாயுமைந்தன்மருவுபாஞ்சாலர்கோ
னேயுமாறுகண்டோடினனெல்லைதன்
சேயதேரினிலேற்றினன்சென்றுமுன்
றூயகாட்சித்துரோணனைச்சொல்லுவான். (௪௩)

அரியநான்மறையந்தணர்தங்களிற்
பெரியராவர்பிறர்க்கிடொண்ணிலார்
தரியலார்தமரொன்றிருசார்பினுக்
குரியரோபொருளுண்மையுணர்ந்துளோர். (௪௪)

மெய்த்திருத்தவம்வீரம்படைக்கினு
மெத்திறத்திடரெய்தியதாயினு
முத்தமக்குலமேன்மையொழுக்கமார்
தத்தநீதிபிழைப்பர்கொல்சால்புளோர். (௪௫)

சாதிவாய்மைதவறித்தருக்கினூற்
றீதுசேரினுஞ்செய்பார்கொலேத்தொழி
லாதலன்றியவனியரசனை
வாதைசெய்வர்கொன்மாமறைவாணர்தாம். (சசு)

கொன்றிடாமைகுலமறையோர்செயல்
வென்றியென்றுவிதிப்பழுதாற்றியே
புன்றலேக்குடிவேடர்புரப்பரா
னன்றுநன்றுசுருதிநடக்கையே. (சஎ)

கேணிகழ்த்துவன்கேடறுசாயகத்
தூணிவெந்நுறத்தூக்கித்துரோணநீ
மாணிலத்துயிர்காக்குமனுமுறைக்
காணிவேந்தனைக்கொல்லக்கருதினுய். (சஅ)

வெட்டும்வாட்கைத்துரோணவென்மேலது
புட்டின்மேவுபொருகணைத்தூணியோ
மட்டுருதமறைப்பொருட்புத்தகங்
கட்டியார்த்தகவளிகையேகொலோ. (சகூ)

பைத்தகொம்பர்ப்பலாசநற்றண்டமோ
கைத்தலத்ததுகார்முகமாவதோ
மெய்த்தனுக்கண்விசித்ததுநாரியோ
புத்தகத்திற்புனேயுங்கயிறதோ. (ருo)

வலதுகையதுவாயழல்வாளியோ
விலகுநூல்களெழுதெழுத்தாணியோ
பலன்வழங்குபசுக்கள்படுக்கவோ
கொலேவிளேக்கவோகொண்டதுவாட்படை. (ருக)

வயமளித்திடும்வாம்பரிவையமோ
வயர்வில்வேள்வியதன்முடிவேதிடும்
பெயர்வில்காட்சிப்பிரமரதங்கொலோ
வுயர்துரோணநீயூர்ந்திடுமூர்தியே. (ருஉ)

மார்பினூலுமறையவர்வேடமுஞ்
சேர்புகின்றனேதிண்பெருங்கைகளிற்
கூர்படைக்கலங்கொண்டாய்குரவநீ
பார்புரக்குமிறையோபனவனே. (ருந)

அந்தன்சேய்களுக்காயமராடுகின்
மைந்தன்ருனுமடிந்தனன்ஞாட்பினு
ளெந்திரங்கலேநோலெனக்கொண்டனை
வெந்துரோணநின்மேன்மைநன்றென்றனன். (ருச)

தண்மைதீர்பரித்தாமன்மடிந்தவா
றுண்மைநாடியுதிட்டிரன்வாயினூற்
றிண்மைசால்படைபோக்கித்திகிரிமேல்
வெண்மைநூலணிமார்பன்விழுந்தனன். (ருரு)

சோகமுற்றுத்துரோணன்றனுவியை
யோகினுச்சிநெறிவிடவுன்னினன்
பாகமங்கதிற்பாஞ்சாலனன்னவன்
சேகரங்கொளவாள்கொடுசென்றனன். (௫௬)

ஒல்வதன்றெனுதிட்டிரனுதியோர்
சொல்விலக்கித்துனேந்தவன்கூடுமுன்
கல்வியோகுடைக்கார்முகத்தேசிகன்
செல்வச்சேணினைச்சென்னியிற்கூடினன். (௫௭)

தருமநீடுதவநெறிகேள்விசால்
கிருபனேடுகிரீடியதுகுல
நிருபனேடவணின்றனர்நோக்கினர்
பொருவிலாரியன்பொன்னிலம்போனதை. (௫௮)

வஞ்சவாள்கொடுதிட்டத்துய்மன்னவண்
டுஞ்சலுற்றதுரோணன்றலையினை
யெஞ்சவீர்ந்தனனிற்றனதானைகள்
பஞ்சவர்க்குமகிழ்ச்சிபடர்ந்ததால். (௫௯)

அசித்தானைதுணுக்கெனச்சாய்தலுங்
கூசிப்போரினங்கூட்டங்குலைந்ததென்
பேசிக்காணெனப்பேதுற்றுக்கேட்டனன்
வாசித்தாமன்வலம்புரித்தாமனே. (௬0)

அரகதாமனுந்தோன்றன்முகத்தெதிர்
குரவனிற்றமைகூறுந்துணிபிலான்
வரவுதேர்ந்தகிருபனைவந்தவா
றுரகேதனனேதெனவோதினன். (௬க)

கிளக்காடிக்கிருபனுங்கேடிலா
வளக்கரும்பரித்தாமற்குனத்தனுந்
அளக்கிலாததுரோணனென்பானவன்
விளக்கநீடும்விரிஞ்சன்பகழியால். (௬௨)

மூண்டபோரின்முரசக்கொடியினன்
மாண்டதானைமடியவருத்தினு
னீண்டடங்கிலன்யார்க்குமிவனெனுப்
பாண்டவர்க்குமுகுந்தன்பகருவான். (௬௩)

வேறு.

மெத்துதானைபடமுருக்கிவில்வலங்கொள்கல்விசா
லித்துரோணன்யாவராலுமீடழிந்துமீள்கிலான்
பொய்த்ததொன்றுதருமனின்றுபுகலிலன்றுபாயம்வே
ருெத்ததில்லையவனிருக்கிலொன்றுமாவதின்றரோ. (௬௪)

அருமைமைந்தனசுவதாமனுவிபோனதென்னவே
தருமமைந்தனேதில்வீறுதங்குதன்கையாயுத
மொருவிவீழ்வனுண்மைவென்றியொன்றிடாதொழிந்ததேன்
மருவலாரைநீதிவிட்டும்வன்மைகொள்வொன்றனன். (௬௫)

பைந்துழாயலங்கல்சூடுபகவனன்னபகர்தலு
முந்திவீமனசுவதாமன்முடிவுமேயினானெனா
வுந்தையோடுமோதினானவ்வுரையினுண்மைகொண்டிலான்
றந்தவாய்மைசரதமேகொறருமமைந்தவென்றனன். (௬௬)

புண்ணியத்தின்மைந்தனின்றுபொய்மைகூறுபுன்மையு
நண்ணலாரைவென்றிகொண்டுஞாலமாளுநன்மையு
மெண்ணியங்கனோன்றுமோதிடாதிருந்துசிறிதுபோழ்
துண்ணினைந்தநீள்சலத்தினோருபாயவகையினால். (௬௭)

திமிரமூடுபரிதிபோலநின்றுசெய்வதின்றியே
சமீரணன்றன்மதலைசெற்றதந்திநாமநெஞ்சுகொண்
டமரினீடுமசுவதாமனாவிபோனதுண்மையே
நமரிறைஞ்சுவில்லினுக்குநாதவென்னவோதினான். (௬௮)

அதுவினாவியுனதுதாதையாயுதங்கைவிட்டலு
மதியினீடுமறனின்மைந்தன்மற்றுன்மைந்தனிற்றிலான்
கதழ்கடாங்கொள்வழுவைபட்டதென்றுகட்டுரைத்தன
னெதிரில்கைத்துரோணனிட்டவேதிமீண்டெடுத்திலன். (௬௯)

சேகுமேவுதிட்டத்துய்மன்மறலியென்றுசிந்தியா
யோகமார்சமாதிவைகியுந்தையுச்சிவழிதிறந்
தேகினான்விண்யார்வில்க்குமெண்ணிடாதுசிகைபிடித்
தாகநீடுசென்னியன்னகூற்றுவந்தரிந்ததால். (௭௰)

பரிசிதென்றுகிருபனோதுபான்மைநாடியாயிடைப்
பெரிதயர்ந்துணர்ந்துவீழ்ந்துபேதுறாவிரங்கியே
தரிகொளாதுகண்கணீர்ததும்பிமண்புரண்டுதா
னரிதெழுந்தழன்றுசிந்தையசுவதாமனறைகுவான். (௭௧)

படிறுகூறியெந்தைதானைவிடவிழைத்தபதகனு
முடியரிந்தமூர்க்கனோடுமற்றையோருமுற்றவே
தடிவனின்றெனாண்மையவர்சார்ங்கபாணிகாண்கவென்
றொடிவிலாதசபதவாய்மைதுரகதாமனோதினான். (௭௨)

இத்தகைத்தவெல்லைதன்னிலெல்லையுந்துரோணனு
மத்தமித்துளாரதன்பினரசர்யாருமணுகினார்
தத்தமக்கமைத்தபாசறைக்கணின்னதகைமையான்
மொய்த்தபோரின்முடிபுமாறுமூன்றுநாளினுற்றதே. (௭௩)

வேறு.

இதற்பின்னரிறந்தகன்னனிகலரவுயர்த்தகோமான்
முதற்பெயரவர்க்குந்தங்கண்முரட்படைமுற்றினோர்க்கு
முதிட்டிரனோதுமாற்றாலுத்தரவினைகளாற்றி
யதற்பினரந்தமன்னனுமதிகொண்டுமீண்டான். (௭௪)

எஞ்சியதானையோடுமிருந்தனன்ஞாயிலெங்கு
மஞ்சனவெழிலிதுஞ்சுமத்தினாபுரத்திலந்நாட்
டஞ்சமார்தவுமியன்றன்றடநகரவர்களோடுஞ்
செஞ்சுடர்முடியறத்தின்சேய்க்கணிசிந்தைசெய்தான். (௭௫)

குண்டலத்துருவங்கொள்ளாக்கூற்றமொன்றெழுந்தங்க
ணெண்டகைபறத்தின்றோன்றலொன்னலர்தமக்குநல்லோய்
மண்டலம்புரக்குமாற்றான்மணிமுடிமிலைச்சும்வாஞ்சை
விண்டனையொழிதிநின்பால்வெவ்வினைமேயதுண்டால். (௭௬)

அடைவுசால்குரவனாகுமந்தணர்குலத்திற்சான்ற
விடையில்சீர்த்துரோணன்றன்னையியம்புமோர்சலத்தினாலே
படைவிடப்பண்ணிவாளாபடுத்தனைவெள்குறாதே
யுடையதீங்கதனைமாற்றாதுனக்குலகளிக்கலாமோ. (௭௭)

வேதியக்கொலையீதின்னேவிடும்பரிசிழைப்பாயென்னா
வோதியதொழிந்தவெல்லையுதிட்டிரன்கேட்டுரைப்பான்
போதமொன்றின்றியாய்ந்துபுரிதிறன்றெளியாதிந்தப்
பாதகத்தியைந்தேனில்லாப்படிமிசைவாழ்க்கைபற்றி. (௭௮)

இணங்குமித்தீமைதீர்தற்கென்செய்வேமெங்கட்செல்வேம்
வணங்கிடுந்தேவியாதோவழங்குநற்றானமென்னா
வணங்குறாதிதற்குபாயமறைபவர்யாரோவென்னா
வுணங்கினனிருந்தானங்கணுணர்வுசால்வியாதனுற்றான். (௭௯)

கண்டெதிரெழுந்துசென்றுகைகுவித்திறைஞ்சிவாசங்
கொண்டநீரருக்கியாதிகொடுத்தருச்சித்துப்போற்றி
முண்டகனன்னதெய்வமுனியையாதனத்திருத்தி
விண்டனின்முளைத்தவாணிவிளம்பியதியாவுஞ்சொன்னான். (௮௦)

பராசரன்மதலைகேட்டப்பான்மைபாணிப்பப்பாணிச்
சராசனமேருவானோன்றடங்கழற்சமாதிவைகி
யராமிசையுலகந்தாங்குமரசநின்பாலித்தீமை
யிராதகன்றிரியுமாறொன்றியம்புதுமிழைத்தியென்றான். (௮௧)

தோடுறுகுவளைத்தாரிற்றும்பிபண்பாடுந்துங்கக்
கோடியர்குன்றத்தோளான்குலமுதற்செல்வனாரு
மூடுமாலிருடீர்யோகின்முதல்வனைமுனிவர்கோவை
வீடுமிங்கெவற்றாலீதவ்விதியினைவிளம்புகென்றான். (௮௨)

கல்விசால்வியாதன்கூறுங்கந்தமாதனப்பொருப்பிற்
செல்விசும்பேறவீசுந்திரைக்கடற்சேதுவின்பால்
வில்வலம்படைத்தவென்றிமேயசீரிராமனாமஞ்
சொல்வதோர்தடமுண்டந்நீர்சுடுமிருட்பாவம்யாவும். (௮௩)

மீக்கிளர்புனிதமேவிவிளங்கிடுமிராகவன்றா
னாக்கியதந்நீர்கண்டாரழல்வளரலகைகாணா
ரூக்கமாருரிமையுண்டாமுலகினுக்கதன்பாலம்பொன்
கோக்குளிர்வெள்ளியெண்மண்கொடுக்கிலிக்கொடுமைதீரும். (௮௪)

போதுநீயங்கணென்றான்புண்ணியப்புதல்வன்றானுஞ்
சாதியாலுயர்ந்தகாட்சித்தவுமியனோடுமற்றை
மூதுணரிளைஞரோடுமுழங்கொலித்தாங்கமெற்றுஞ்
சேதுவிற்செல்லுவான்சாதேவனைநகரில்வைத்தே. (௮௫)

கால்கொடுகடந்துசின்னாள்கடந்தபின்சேதுக்கண்டா
னூல்கொடுவிளங்குமார்பினுணங்குநூற்றவுமியன்முன்
பால்கொடுபகர்ந்தசங்கற்பத்தினாற்பரவிராமன்
மால்கொடுவகுத்ததெய்வவாவியின்மூழ்கினானால். (அசு)

சுத்தநீர்படிந்தெழுந்துசுருதிவேறமைத்தோன்சொன்ன
வத்தமார்கவிகைநல்கியபின்மழுப்படைசுமந்த
கைத்தளிரிராமநாதன்கழலிணைபணிந்தோர்திங்க
ளொத்ததோருணவிலாமலுதிட்டிரனுறைந்தான்மன்னோ. (அஎ)

பலத்தினாலிவறலின்றிப்பலபொருள்வைகருேறு
நலத்தினாலுதவிமேவுநாளிலோர்சேணில்வாணி
யுலத்தினாலுயர்ந்ததிண்டோளுதிட்டிரவுனக்காசானைச்
சலத்தினாற்கொன்றதீங்கிச்சலத்தினாற்றீர்ந்ததின்னாள். (அஅ)

கவலைகொண்டழுங்கல்வேண்டாங்கரிசெலாங்கழிந்ததேகிக்
குவலயம்புரத்தியென்னக்குவளையந்தாமத்தோளான்
றிவலைநீர்ச்சரயுநாடன்செல்வமாந்திங்கள்வேணிப்
பவலயம்பணிக்கும்பொற்றாள்பணிந்துதன்பதியிற்போனான். (அக)

அந்தநல்வாணிபோற்றியத்தினாபுரத்தறத்தின்
சந்ததிபோகிமுந்நூற்றவுமியன்சடங்கியற்றச்
செந்தனமகுடஞ்சூடித்திண்டிறலரசரேத்தப்
புந்தியிற்களிப்பினோடும்பூதலம்புரந்தான்மாதோ. (கூ0)

வேறு.

ஈதிராமனினியதடத்தினீரிலாதபெருமையறத்தினீர்
காதலோடுகழறினன்முத்திசேர்காதைகாதின்வழிநுகர்கற்பினோ
ரோதுமாதருடையநலத்தினேரோவிலாதவுவகையுளத்தராய்
மாதுபாகர்கயிலையிடத்திலேவாசமாகிமருவியிருப்பரே. (கூக)

இராமதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கககூ௨.

---

# இலக்குமதீர்த்தச்சருக்கம்.

---

அலக்கணின்றுயர்நிலைதருபழமொழியதன்முறையறிகுத
னுலப்பிலந்தணரவரொடுபின்னருமுவகையினுரைசெய்வான்
பொலக்குறுந்தொடிச்சானகிபுணர்முகில்புண்ணியப்புனல்கண்டோ
ரிலக்குமன்றடநீர்புகுந்தாடுவரீடுறுமியல்பாலே. (க)

இத்தடத்தினின்மூழ்கினர்நல்குரவெய்திலரெஞ்ஞான்றும்
வித்தைமேவுவர்மக்களையீனுவர்மேதகவுளராவார்
முத்திசேருவராயிடைச்சுமித்திரைமகன்மனுமொழிகுற்றோர்
சித்தராகுவர்மறைமுதற்கலையெலாநெஞ்சிடங்கொடுதேர்வார். (௨)

மூழ்கிஃபங்கதிலிலக்குமன்கண்டருண்முக்கணெம்பெருமானைச்
சூழுநெஞ்சினர்வறுமையினீங்குவர்சொல்லருங்கதிசேர்வார்
காழுலக்கைகொள்கைப்பலபத்திரன்காமரப்புனலாடி
வாழியீசனைவணங்குபுதீர்ந்தனன்மறையவன்பழிமாதோ. (௩)

இருந்தமாதவரீதுரைசூதனையெதிர்முகமலர்நோக்கித்
திருந்துரோகிணிசேய்மறையோனுயிர்சிந்தியவருமாறென்
பொருந்துதீவினையன்னதுபோகியதெவ்வகைபுகலென்றார்
மருந்துவேறிதுசெவிநுகர்வதுவெனமற்றவன்மொழிகுற்றான். (௪)

பருமணிப்படத்தனந்தனதுருவமாம்பனைக்கொடியவன்முன்னாட்
குருகுலத்தவர்பாண்டவர்தங்களில்வெம்பகைகொளல்காணூஉ
வொருவருக்கிடரொருவர்தம்பாலுறிலென்றுதன்னுளநாடி
யிருவருக்குநேர்புரிகுவான்றன்புனல்யாத்திரையிடைசென்றான். (௫)

முற்பகற்பிரபாசநீரதனிடைமூழ்கினன்முறைபாலே
தற்பணம்பிதிர்வானவரிருடிகடங்களுக்கருள்செய்தான்
பிற்பகற்கலைமடமகடன்புனல்பிருதுநீர்பிறழ்விந்து
வெற்படும்புனல்பிரமநீர்சிந்துநீர்பகீரதியமுனைநீர். (௬)

சதத்துருப்புனல்சுதரிசனப்பெயர்த்தண்புனலிவையாடிப்
பதத்தின்மேதகுநைமிசாரணியமேற்படர்ந்தனன்பலதேவன்
கதத்தினீடலக்கையவன்செல்லுமக்காலையிற்கதிநல்கு
மிதத்ததீர்க்கசத்திரமகநடத்தினரிருந்தவரிருந்தாரால். (௭)

யாதவக்குலமுதல்வனைக்கண்டனரெழுந்தனரெதிர்சென்றார்
போதுடைப்புனலருக்கியமுதலவாற்போற்றினர்பொற்பீட
மீதிருத்தினராங்குயராதனம்விட்டெழாமிகைநோக்கிச்
சூதனைச்சினங்கொண்டனனதிகனோவிவனெனத்துணைவோடும். (௮)

உரைசெய்வான்பினர்மறையவர்நாப்பணேயுயர்விலாவநுலோம
மரபினுனிவன்மேதகுபீடிகைவைகுதல்வழக்கன்றாற்
புரையிதன்றியும்வியாதனுற்புராணமும்பலவகைப்பொருணூலின்
கரையுமெய்தியுமறந்தவாவருநமைக்கணிப்பிலன்களிமிக்கான். (௯)

வயிரவாளுறழ்மதர்விழிச்சத்தியவதிமகன்மாணாக்கர்
பயிலனுதியர்பலரிவன்போற்பழிப்படுவனபயில்கில்லார்
கயவரைக்கடிந்தறிஞரைவளர்க்கயாங்காசினிமிசைவந்தே
முயிரிழந்திவனங்கையாற்சுத்தனுயுய்ந்திடாதொழிவானோ. (௧௦)

இசைவதேயிதுபுரிவதனாற்பழுதின்றெனுவிகலோடு
முசலமோடலஞ்சுமந்தவன்றன்காமுண்டகமலர்மேவுங்
குசையின்மேதகுசூதனைமணிமுடிகொய்தனனதுகண்டார்
வசையின்மாதவர்மனம்வெருண்டையகோமரபுகொலிதுவென்பார். (௧௧)

பழிவிளைந்ததுபனைதருங்கொடியினுய்ப்பண்டியாம்பயில்சூதற்
கழிவிலாயுவோடுயர்பிரமாதனமளித்தனமதுதேரா
யொழிவில்யோகுடையுனைநியமிப்பவருலகினிலெவருள்ளார்
கழியவேண்டுமீதறத்தினுலனக்கியாங்கழறிடுந்தகையேமோ. (௧௨)

கோடிலாவலங்கொண்டகையோயெனக்கூறினரதுகேளா
வீடியற்றலுமுலகுசெய்பொருட்டினால்வேறலமிகுசூதற்
கோடிலாயுளும்வாயிலுமூற்றமுமுதவு அமுணர்யோகப்
பாடின்மாயையாற்றீர்புரைப்பீரெனப்பகர்ந்தனன்பலதேவன். (கரு)

அங்கணோதுவார்முனிவரரையகின்னடற்படையதன்மொய்ம்பு
மெங்கள்வாய்மையுங்கூற்றமும்பிழைபடாதிழைக்குதியாதேனுந்
அங்கணீள்பலபத்திரவென்றனரன்றவன்சொல்கின்றான்
றங்கண்மைந்தரேதாங்கள்வேறலவெனச்சாற்றிடுமறையெல்லாம். (கச)

குறைவிலென்றனியோகினாலிவ்வுடற்றோன்றியோர்குலமைந்த
னிறையுமாயுளிற்கல்விசானிலைமையினீடுகநெறியாலே
யறையுமுங்கள்பாற்றருமமார்தொல்கதையன்னவனறவீர்காள்
பொறைகொணெஞ்சினீர்வேட்டவைபுகலுமின்புரிகுவனெனலோடும். (கரு)

மதலையில்வலன்வற்கலனிசாசரன்மாமறைமகமெல்லாஞ்
சிதையநிந்தனைசெய்குவனவனுயிர்சிந்துதல்செயல்வேண்டு
மதனையன்றியேவேறிலையெங்களுக்கையநீயாண்டொன்றி
னுதகமுள்ளனவாடுதிபழிவிடவென்றனருதுபோழ்தில். (கசு)

நற்கலைப்பிறைநிறையுநாளிட்டிகணயந்தழிநணுகுற்றே
வற்கலக்கலன்மலங்கறைமூத்திரமென்பொடுமதுமாரி
நிற்கலின்றியேசொரிந்தனனெங்கணுநிணமுறுதசைவீசிச்
சொற்கலைத்துறைமறைவழிபுரிமகக்குழிகளைத்தூர்த்திட்டான். (கஎ)

வெந்தவெற்பனமேனியன்மதகரிக்கோடுறழ்வெண்பல்லன்
செந்தழற்பிழிகுஞ்சியன்முத்தலைச்சூலெனத்திண்கூற்றை
மைந்துடைக்கரங்கொண்டவன்வற்கலன்மாதவர்மகச்சாலைக்
கந்தரத்திடைநின்றனனவனதுகண்டனனடல்வெள்ளை. (கஅ)

பரியயாக்கையால்வான்வெளியடைத்தவன்பயிறருநிலைநாடித்
தரியலாரலம்படையெனவப்பெயர்த்தாயதானவரஞ்சற்
குரியநாஞ்சிலுமுசலமுந்தயித்தியருயிர்கவரொருதண்டுங்
கரியகண்ணனுக்கண்ணனுங்கெய்திடக்கருதினன்கருத்தின்கண். (க௯)

மூன்றுமுற்றலுங்கலப்பையைவற்கலன்முரட்சுவலதன்மீதே
தோன்றுதிக்கயத்தஞ்சனப்பிடர்மிசைத்தோட்டியிற்றொடுத்தீர்த்து
மான்றுமண்ணிடைவீழுமுன்வலக்கையிலுலக்கையாம்வடவெற்பாற்
கான்றிடக்கறைநெற்றியிலெற்றினான்காழகங்கரிதானோன். (உ0)

முசலமற்றவன்மூர்த்தமேற்படுதலுமுன்சிறகரியுண்ட
வசலமென்னவீழ்ந்தவனியிற்றுஞ்சினனதுபொழுதறநூலிற்
குசலராகியமாதவரிரேவதிகோமளக்குயவெற்பிற்
பசலைபூத்திடவரும்பலதேவனைப்பழிச்சினர்பரிவோடும். (உக)

நீராட்டினர்நீனிறவாடையைநீக்கினர்நில்வம்பொற்
பாரிசாத்தினர்பணிபலவணிந்தனர்பலனுயர்பணைத்தோளில்
வாரிசத்தினம்வைசயந்திப்பெயர்மாலையுமிலைந்திட்டார்
வீரியத்தினான்விளங்கினனெழில்புனைவெள்ளியங்கிரிபோல. (உஉ)

பின்றைம்மாமணியாடையன்பெருந்தவரனுமதிபெற்றேகிக்
கொன்றடம்புவியுள்ளதீரவையெலாம்விதிமுறைகுடைந்தாடித்
தன்றனூர்புகத்தொடங்கலுமுணங்கியதன்னுருக்கரிதாகி
நின்றுவானெனமுழக்குபுபின்ருெடர்நீழலைநேர்கண்டான். (உங)

ஐயுருவிஃதென்னெனவாய்ந்தனனுயிடையகல்வானின்
மெய்யிலாவொருமெய்ம்மொழிரோகிணிமெய்த்தவமனையானே
வையவாள்விழிரேவதிகொண்கனேமற்றனைமறையோனைச்
செய்யும்வெங்கொலைசிறிதினந்தீர்ந்திலதென்றதுசெவியுற்ருன். (உச)

ஓரியாண்டியாமுததிருமுலகின்மேலுதகமுள்ளனவெல்லாஞ்
சேரவாடியுந்தேய்ந்திலதேலினித்தீர்விதற்கெவனென்றே
பாரின்மேலுழுநாஞ்சிலைப்படையெனப்பரித்தவன்பரிவெய்தி
மாரனெய்திடாநைமிசவனம்புகாமாதவர்க்குரைசெய்தான். (உரு)

அந்தவாசகங்கேட்டலுமிராமனையருகழைத்தறவோர்கள்
கந்தமாதனவரைமிசையிராகவன்கட்டியகணாநாப்ப
ணிந்தஞாலமேலுயிரெலாநலம்பெறவிலக்குமன்றன்பேராற்
றந்ததோர்தடமுண்டதனீர்சுடும்பழவினைத்தருவெல்லாம். (உசு)

நாடுகோசலநாடனுக்கிளையவனற்றடமதுநண்ணி
யாடுமற்றவன்வழிபடுமருட்குறியம்பிகையமர்பாகன்
ருேடுசேர்கழன்முண்டகஞ்சூடுநீயக்கணந்தொலைவெய்தி
யோடுமிப்பழியென்றனரன்றவனெல்லையிலவனுற்ருன். (உஎ)

அழகுசேர்புனலிலக்குமன்வாவியினுதரவதனேடு
முழுங்கொனிலம்பொன்பசுநென்முதன்முதுமறைமொழியாற்ரு
னெழுகுமந்தணர்க்குதவினனுவப்பொடுமுச்சியினுயரெல்லை
மெழுகுகண்டெனவிலக்குமனேசனைவிழியினுற்றரிசித்தான். (உஅ)

வட்டவானகவாணியொன்றவ்வழிமற்றவன்றனைநாடி
விட்டதாலுனைவிப்பிரவெம்பழிவேறினிமிகையின்ருற்
றட்டிலாவளந்தருநகர்ப்போகெனச்சாற்றலும்பலதேவன்
சுட்டியப்புனற்பழிச்சியேதுவாரகைத்தொல்பதியிடஞ்செல்வான். (உகூ)

அத்தலப்புனலேனவுமாடினன்றசரதனருள்செம்மல்
லகத்தலத்தனுக்கோடியும்படிந்தனன்காமருகாகுத்தன்
முத்திசேர்பொருட்டருச்சனைமுற்றியமுக்கணெம்பெருமானை
வைத்தகாதலின்வணங்கினன்விடைகொடுவளநகர்தனிற்போனன். (ங0)

வேறு.

வென்றிசேர்பலபத்திரன்மேலதாம்விஞ்சுபாதகம்விட்டதுகூறினே
நன்றுறுதவினைப்பகைசிறியேநந்திடாதகதிப்புகுமாதவீர்
துன்றுநீரிதனிற்றகையீதரோதுங்கமார்கதைகற்பவர்காதலா
னென்றுமாசில்செவிக்கொளுவார்கள்பாலின்பமீயுமிலக்குமன்வாவியே. (ஙக)

இலக்குமதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ககக௩.

---

# சடாதீர்த்தச்சருக்கம்.

தூமனவேதவியாதனைநாடுபுகுதன்முன்
காமமிலாரொடுமீளவுமோர்கதைகழறுற்று
னுமவிலக்குமன்வாவிகுடைந்தெழுநல்லோர்க
டாமுடனுடுவர்பீடுடைநீடுசடாதீர்த்தம். (௧)

உற்பவநாசமுடற்றிணைவானணையுணர்வின்மை
யிற்பிணியாதியிடர்க்கிடரீகுவதிதுபோலப்
பிற்பிறவேறிலைவீடுவிரும்பினர்பெயருள்ளத்
தெற்படுமாசுகழிக்கவிழைந்தனரிவொல்லாம். (௨)

ஆணவமம்மர்கழீஇநுகரனுபவமடைகில்லார்
வீணினிலுச்சிவெடிக்கவரற்றுவர்வேதாந்தஞ்
சேணுறுபூருவபக்கவிடங்கர்கள்சித்தாந்த
மாணுறுமீனமிடைந்துளவேலையம்மறையந்தம். (௩)

பங்கமுறப்படிவுற்றதின்மெய்ப்படுபயனோரா
ரங்கமுணக்கியவிச்சையின்மாழ்குவரறிவில்லார்
துங்கமறைச்சிரநெஞ்சுவிளக்கியசூழ்வார்முன்
சங்கையொடுத்தரமோதினர்பின்புதருக்கிற்பார். (௪)

வித்துமறைச்சிரமோகவிகாரம்விளைத்தற்கே
சுத்திமனக்கிதனுவிலையாமதுதுணிகில்லேஞ்
சித்தமயக்கறுமாறுளதொன்றதுசெப்புங்காற்
றத்துவமாதவிர்யாமுரைசெய்தசடாதீர்த்தம். (௫)

பின்னலிலஞ்சியின்மூழ்குதிர்நீரதுபெண்பாகன்
றன்னருளாலெளிதாயடிவாழ்வுதரத்தந்தான்
முன்னரிராமனிராவணனுவிமுடித்தெய்தி
யின்னலகன்றிடவேணிகழீஇயினனிந்நீரில். (௬)

கூர்த்தநன்மாதவிர்மற்றதனுற்பெயர்கோடீர
தீர்த்தமெனப்படுமாயிரமறுபதுசேர்யாண்டு
வார்த்திகழ்வானதிதோய்ந்துறல்கோதாவரியுந்தி
நீர்த்தருமாழ்ந்தெழிலோர்விசைகேசரிநிகழ்பொன்னுள். (௭)

இந்நதியிப்பதமூழ்கிடுமோராயிரநான
நன்னலநல்கிடுமேதகுகோமதிநதிவீசு
மன்னியசீகரவாரிகண்மற்றவைவளர்வேணித்
தன்னிகர்சூழிவிழிக்கெதிருற்றுழிதருமம்மா. (௮)

காசறுமித்தடமூழ்கினரந்தக்கரணங்க
ளாசறுமன்னதினலொழிவுற்றிடுமஞ்ஞான
மாசறுஞானமஞ்ஞானமகன்றுழிவந்தெய்தும்
வீசியபேரொளிமெய்யுணர்வாலுயர்வீடுண்டாம். (௯)

உற்றிடுமுத்தியினாலவர்பூரணவுருவாகிப்
பற்றிலகண்டிதசிற்பரநித்தியபரபோகம்
பெற்றமர்வாருயர்பின்னலிலஞ்சிபெறுங்காதை
சொற்றிடவேண்டுவதொன்றுளதன்னதுசொல்கின்றோம். (கo)

வேறு.

துகளிரிவியாதமுனிவனோடவன்றன்சுதனெனுஞ்சுகன்றனக்கொருநாட்
புகரிரிவாதம்விளைந்ததவ்வேலைப்புத்திரன்புராதனப்பொருடேர்
தகைமைசால்கல்வித்தபோதனவேந்தற்றந்தையைச்சரணமேல்வணங்கிப்
பகவமுற்றுணர்ந்தபடிமைசால்செல்வபண்ணவவெனப்பலபழிச்சி. (கக)

வினவுவானகண்டமெய்ப்பொருட்காட்சிவிடையவன்பாற்பெறல்விரும்பி
மனனிடைவிளக்கம்வந்திடிலன்றேமயர்விருட்படலிகைவாங்கும்
புனிதமெய்ஞ்ஞானம்புணர்ந்திடுமதனாற்பொருந்திடும்புகழபவர்க்க
மினியதோருபாயமதற்குநீயிசைப்பாயென்மிசைக்கருணையாலெந்தாய். (கஉ)

வேதம்வேதாந்தம்விளங்கிதிகாசமேதகுபுராணமற்றெல்லா
மோதினனுன்பாலுள்ளமேற்புனிதமுற்றிலதின்னமுமுரவோ
யேதினியுபாயமென்றனன்வியாதனியம்புவானிதுகடாநெறித்தே
மாதர்சான்மருட்கைமாய்ந்திடுமந்தமந்திரங்கேட்டிநீமைந்தா. (கங)

விடாவிடர்ப்பிறவிவிடத்துரந்தகற்றுமேன்மைசாறருமமேவடிவாய்ச்
சடாநெடுந்தீர்த்தமென்னவொன்றுண்டாற்றராதலத்தவரெலாமறிவார்
படாமுறமுழுதிப்பாரகங்காக்கும்பங்கயப்பாவைகோனாகுங்
கெடாவருளிராமன்சடைகழீஇயளித்தான்கெழுதகைவாந்தடமதற்கே. (கச)

சுருதியத்தடத்துமூழ்குமானவர்தங்கருத்துறுகாளிமந்தீரும்
வருமனத்திடையேமருடிரிபுனிதம்வண்மையேபட்டினிமனுக்க
ளுருநிரப்புறுதலுவைபலவின்றியொற்கமிலீகையெல்லாமுந்
தருபயனுதவுந்தருமநாடளிக்குந்தவறெலாமொல்லையிற்றடியும். (கரு)

வாழுநாளிட்டமங்கலத்துயர்ந்தமங்கலமறுவிலாவளமை
காழிலாப்புனிதங்கதியினிற்சிறந்தகதியிவைகையகத்தாக்கு
மாழிநீராசாம்வருணனையவன்சேயறிவுசால்பிருகுவந்நாளிற்
கேழிலாவிமலமனக்குறும்பரிசுகேட்டனனன்னவன்கிளப்பான். (கசு)

கல்விமாதவங்கள்வேறுமற்றொன்றுங்கழறிடான்கந்தமாதனமாஞ்
செல்வநீள்சிலம்பிற்சேதுவிற்சிறந்தசெழுஞ்சடாதீர்த்தமேநவின்றா
னொல்வதென்றவனுமுணாக்குநீராடியுள்ளமேற்றெளிவினையுற்றுச்
சொல்வகைதொடராச்சுடர்வடிவானான்றுணையிலாவருணனற்றோன்றல். (கஎ)

சங்கரன்கலையாந்தவத்துருவாசன்றானுமித்தடம்படிந்துயர்ந்தான்
செங்கண்மாலுருவாய்த்திகழ்ந்திடுதத்தாத்திரயனுமிதனினாற்சிறந்தா
னங்கதிற்படிந்தோரறிவினால்விழுப்பமடைகுவராதலானீயு
மிங்குளந்தெளியச்சடிலநீரடைவாயென்றனன்சுகன்றனக்கீன்றோன். (கஅ)

வாதராயணன்றன்மதலைபோய்ச்சடிலவாவிதோய்ந்தஞ்சுகம்வழங்கு
மேதுவாலியன்றவிழிபிணைமாற்றியின்பமேகாரணமாகச்
சோதிசாலகண்டசுகோததிமூழ்கிச்சூடினான்சுகனெனுநாம
மாதலானீருமமலமாமாசையடைதிரேலாடுதிரதன்கண். (ககூ)

இலங்குநீர்வடிவாயிமையவர்சுரபியெழிற்சடாதீர்த்தமென்றிருப்பச்
சலங்கொலோவறிதேதகையிலாவினையிற்றனையினேருழந்துமெய்தளர்வார்
நலங்குலாமின்பும்வீடுமித்தடத்தினனேகுவார்மெய்மையானயப்பா
ரலங்குநீர்வரிசையாங்கொலோவறைவோமயன்முதன்மூவர்தாமறிவார். (உ0)

காலமோர்மூன்றுங்காசினியதன்மேற்காணுறுதிதற்குநேர்கருத்தின்
பாலுருதொழிமினனையநீர்கயைபாற்பண்ணியதிவசமாண்பயனைச்
சாலுநீணகரங்குறித்திடும்பிண்டந்தந்திடுஞ்சடிலநீர்த்தடத்தின்
மேலையாறுணர்ந்தீருங்கள்பாலன்பால்விளம்பினம்வேணிநீர்மேன்மை. (உக)

வேறு.

வேதம்வகுத்தவனீடுசேய்வேணிமணிப்புனலாடியே
யாதியருட்பெறுமேன்மையாலாசறுதத்துவஞானமே
யீதருமிக்கதையோதுவார்யாவர்செவிப்படுகாதலார்
வாதைவினைப்பகைசூழ்வுறுர்மாயனிருக்கையில்வாழ்வரோ. (உஉ)

சடாதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஉகரு.

---

# இலக்குமிதீர்த்தச்சருக்கம்.

---

பெருகொளிவளர்சூதன்பின்னருமுறைசெய்வா
னுருகியமனனேடுமுணருதிர்முனிவீர்காண்
முருகவிழ்சடைநீரின்முழுகினர்முறையாலே
திருமகள்பெயர்மேவுந்திகழ்புனல்படிவாரால். (க)

பந்தணைவிரல்வாசப்பங்கயமனைவாழு
மிந்திராதடமாகுமிப்புனல்குடைவார்தஞ்
சிந்தனைமுடிகூடுஞ்செல்வமுமிகமல்கு
மந்தரமடைகில்லாரவர்சுகமளவின்றும். (உ)

புண்ணியமகனுகும்பொருகொடிமுரசாளன்
கண்ணனதருளாலேகமழ்தடமிதிலாடி
நண்ணினனளவில்லாநன்னலமுறுசெல்வ
மெண்ணருமுனிவீர்காளென்றனனுயர்சூதன். (ங)

சாதனைபுரியோகச்சவுனகன்முதலாகு
மாதவராதனுண்மைவரன்முறைநெறிகேட்கு
மாதரவடைவுற்றூரவருளமதுநாடிச்
சூதனுமதனீர்மைசொல்லியதுணிபுற்றான். (ச)

வேறு.

நந்தியாவத்தமாலைநரபதிதந்தையாகு
மந்தனதாணைநீங்காரறன்மகனுதியைவ
ரிந்திரப்பிரத்தமேவியிருக்குநாட்புள்வாய்கீன்றேன்
வந்தனனவனையன்னோர்வரவெதிர்கொண்டார்மன்னோ. (ரு)

வரவெதிரேற்றுத்தங்கண் மாளிகைக்கொண்டுபுக்குப்
பரவுநற்சிறப்பிற்போற்றிப்பகல்சிலபரிவினோடும்
பிரிவிலாநண்பின்மேயபின்னையப்பின்னைகேள்வ
னரவவார்கழல்கள்பூசித்தறன்மகனிதனைக்கேட்பான். (௬)

பூக்கமழ்நளினநாபிப்புராதனமுகுந்தகேண்மோ
வாக்கமுண்டாவதெற்றாலடியனேற்கருள்செய்யென்றான்
காக்குமாலறத்தின்காளாய்கந்தமாதனமாம்வெற்பிற்
றாக்கணங்கவடன்பேராற்றயங்குசீர்த்தடமொன்றுண்டால். (௭)

தன்னுழையாடினைத்தனதனிற்றலைமைசெய்யும்
பொன்னலர்வாவிமூழ்கப்போதுவாய்நீயும்போதிற்
செந்நெலம்பொருப்புமாழைச்சிலம்புநிற்சேருஞ்சேரார்
வென்னதுகொடுப்பர்வேளாண்மேதினிதழைக்குமேனாள். (௮)

கடவுளாதனினாடிக்கற்பகநீழல்பெற்றார்
வடதிசைத்தலைவனென்பான்மாநிதித்தலைவனானான்
சுடர்மணிக்கவானரம்பைத்துறக்கவானரம்பைதன்னைத்
திடநெடுந்தோளிற்றோய்ந்தான்செய்நளகூபரன்றான். (௯)

நெடுங்கதைவீமனாதிநிலவுசீர்த்தம்பிமார்க
ளொடுங்குளிர்கமலபீடத்தொண்டொடிதடத்திலொற்கம்
விடுங்கிளர்செல்வஞ்சேரமேவுகென்றருளிச்செய்தா
னடுங்கொடிமுரசினானுமப்பணிதலைக்கொண்டானால். (௧௦)

தருமத்தின்றருமமன்னன்றம்பியரோடும்போகிக்
கருமத்தின்முறைவழாமற்காதல்கூர்விரதத்தோடும்
பருமத்தினகன்றவல்குற்பங்கயப்பாவைமாயன்
மருமத்தின்மனையாள்வாவிமாதமொன்றாடிப்பின்னர். (௧௧)

ஆனிலந்திலம்பொன்மற்றுமறுதொழிலவர்க்குநல்கித்
தானுறைநகரையுற்றான்றம்பிமார்தங்களோடும்
போனபினிராசசூயம்புரிகுவான்போக்கினான்றன்
பானிகழ்தூதர்தம்மைப்பாண்டவர்தூதன்றன்பால். (௧௨)

அத்திறங்கேட்டுக்கேடிலங்கதிப்பரிநான்கார்த்த
சித்திரத்தேர்மேற்கொண்டுதேந்துழாய்மவுலியண்ணல்
சத்தியபாமையென்னுந்தையலுந்தானுமாகி
யெத்திசையவரும்போற்றுமிந்திரப்பிரத்தமுற்றான். (௧௩)

எய்தியகண்ணற்காணாவின்புநீஇயிராசசூயஞ்
செய்திடுஞ்செய்திசொன்னான்றிருவளரறத்தின்றோன்றன்
மைதிகழ்படிவத்தண்ணன்மற்றதுவினவிமன்னா
வுய்திறனொன்றுண்டென்னாவுதிட்டிரற்குரைக்கலுற்றான். (௧௪)

பாண்டவர்செல்வமன்னாய்பார்த்திவொன்னும்பண்பால்
வேண்டுவதன்றிவ்வேள்விவிளங்கொளியிரதம்வேழந்
தூண்டியற்புரவிகாலாட்டொகையிலவுடையனாகிக்
காண்டகுவிசயத்தோளாற்கருபமோர்பஃதும்வென்று. (௧௫)

மிறைபுரிபொன்னலார்தமிட லுடைத்தவர்கடன்பாற்
றிறைகொணர்செம்பொற்குன்றந்திண்பெருங்கனகக்குன்றங்
குறைதரப்படைத்தவேந்தன்குயிற்றுவதாகுமெல்லா
மறைதருகிற்பதுன்பாலச்சுறற்பொருட்டினன்றால். (கசு)

இல்கொளியிராசசூயமிழைப்பதன்முன்னரீரைந்
தூலகையும்வென்றிகோடியுதிட்டிரவென்றானென்றா
வலகைதனுவியுண்டோனதுவினையரசர்க்கெல்லாந்
திலகநேர்பொறையின்மேலோன்செய்வதீதென்றுவந்தான். (கஎ)

தகுதியென்றுணர்விற்கொண்டுதருமத்தின்சேயறத்தின்
பகுதியாமிளைஞர்க்கூவிப்பண்புசானண்புகூறி
மிகுதிகூரிராசசூயவேள்வியாம்புரிதல்வேட்டேந்
தொகுதிசேரனிகத்தோடுஞ்சுடர்மணிக்கடகத்தோளால். (கஅ)

மாதிரவிசயங்கொண்மின்மற்றதுபுரிந்தீராயின்
மேதகுமிராசசூயம்வேட்குதுமென்றான்வீம
னாதியரதனைக்கேளாவழகிதென்றாழித்திண்டேர்
போதகம்புரவிகாலாட்பொருபடையோடும்போனார். (ககூ)

குடைப்புறத்துலகின்றாக்கிக்கொடியகத்தடக்கியும்ப
ரிடைப்படுங்குன்றமெல்லாமிருந்தாைப்படுத்தியெங்கு
மடைப்பொடுதுவன்றியாங்கோரணுவுமுன்புகுதலாற்றாப்
படைப்பெருந்தானைவெள்ளம்பாண்டவர்பரப்பிச்சென்றார். (உ0)

அயங்கொண்டதிண்டோள்கொண்டவறன்மகன்பின்னர்வந்தோர்
பயங்கொண்டபணிவினோடுபடர்திசையரசையெல்லாஞ்
சயங்கொண்டுகணிதங்கொள்ளாத்தனங்கொண்டுதருக்கினோடு
மியங்கொண்டவோதைவிம்மவிந்திரப்பிரத்தம்புக்கார். (உக)

நாற்றிசைவிசயவீரனனுதல்வேட்டநான்கு
வேற்றிறன்மள்ளர்மேனிமேவியவியப்பின்மீண்ட
மாற்றிரிவயவர்தம்முண்மாருதிநூறுபாரம்
போற்றியசொன்னமுன்னோன்பொன்னடிமுன்னர்வைத்தான். (உஉ)

ஆடெழிற்கிரீடிசொன்னமாயிரம்பாரந்தந்தா
னூடருஞ்சொன்னம்பாரநகுலனோர்நூறளித்தான்
வீடணனீந்தவீரேழ்விளங்கெழிற்சொன்னதாலத்
தோடுதென்றிசையிற்கொண்டதுதவினுனுவற்குப்பின்னோன். (உங)

எண்டகுதருமன்றாள்சேர்ந்திளையர்சேர்நிதியக்குன்ற
முண்டகநிதியமாகிமுன்புபின்கண்ணனீயக்
கொண்டவாயிரத்தோர்நூறுகோடிநூறாயிரம்பொன்
மண்டியகுவையாற்சங்கமாநிதியானதம்மா. (உச)

கோட்டமிறருமத்தோன்றல்குறைமுடிவுற்றதென்னாத்
தோட்டுணைத்துணைவரோடுந்துளபமாறுணைமைசெய்ய
நாட்டியயூபச்சாலைநண்ணிநற்றவர்களோடு
மீட்டுமக்கனகங்கைக்கொண்டிழைத்தனனிராசசூயம். (உரு)

எரிசுலாங்குண்டவேள்வியிராசசூயத்தினெய்துங்
கரிசிலாமறையோர்காதற்கடலினைத்திடல்செய்திட்டான்
பரிசிலர்சொற்றவெண்ணிற்படுதொகைக்கிரட்டியீந்தான்
குரிசிலாங்குழாத்துமேலாங்கொடிமுரசுயர்த்தகோமான். (உசு)

முக்கனிச்சிகரமொய்த்துமுழங்குநெய்யருவிதூங்க
மிக்கநன்முதிரைவர்க்கவியன்மணிக்குப்பைமேவி
நக்கன்வாழ்சிலம்பின்மல்குநன்றிவான்சொன்றிக்குன்றுந்
தொக்கபல்வளமுமீந்தான்றென்மறையோருவப்ப. (உஎ)

அறன்மகன்கொடுத்தசெம்பொனளவையீதளித்துநின்ற
நிறனுறுகனகமின்னநிலையினவென்றுகூறுந்
திறன்மறைவிரிஞ்சர்கோடிசேரினுந்தெரிக்கலாகா
பிறரெவரளக்குநீர்மைபெற்றவர்பிறங்குபார்மேல். (உஅ)

சென்றிரந்தவர்கொண்டேகுஞ்செல்வநீணிதியங்கண்டோ
ரொன்றறக்கொடுத்தானென்பாருபர்சரக்கறையினீடும்
பொன்றிரள்சும்மைகண்டோர்பொலிவினிற்குறைவுகாணு
தின்றிவனீந்ததற்பமிருப்பதுமிகுதியென்பார். (உகூ)

அரனருள்குறைவுண்டாமோவாவிகட்களித்திட்டாலும்
பரவைநீரெழிலிகோடிபருகினும்வற்றவற்றோ
புரிபவர்தருமநீங்கார்பொறியினைப்புண்ணியத்தின்
வரமிகுமைந்தன்செல்வமாயுமோவழங்கினாலும். (௩0)

உறுங்கொடைத்தருமனிவ்வாறுவந்தனனிளையரோடு
நறுங்குளிர்க்கமலவாவிநணேந்ததோர்நலத்தினாலே
தெறுங்கொடுமிடியையிந்தத்திருத்தடஞ்சேருமாந்தர்
வெறுங்கையாரென்னும்பேரின்மென்மையைவன்மைசெய்யும். (௩௧)

வேறு.

திமைவாரிதிடற்படவீட்டிடுந்தேவரூரில்வளத்தொடுகூட்டிடுங்
காமமோடுமயக்கறவோட்டிடுங்காணுறுதகதிப்பொருள்காட்டிடுந்
தாமநீடுதனக்குவையீட்டிடுந்தாவில்காதைபடித்தவர்கேட்டவ
ரேமமேவுமனத்திடைவேட்டவையாவுமீயுமிலக்குமிதீர்த்தமே. (௩உ)

இலக்குமிதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஉ௬எ.

---

# அக்கினிதீர்த்தச்சருக்கம்.

---

ஒளியொன்றுசோதியருவங்களோடுமுருவங்கொளாதவுணர்வின்
வெளியொன்றுரூதன்முனிவோர்களோடுபிறிதொன்றுமீளமொழிவான்
றுளியொன்றுவேரிமலர்மங்கைவாவியதுதோயுமன்பர்சுறவா
ரளியொன்றுவேலையருகொன்றுசெங்கணவிரங்கிதோயமடைவார். (௧)

தன்மங்கொணீரின்வடிவாகிமிக்கதவவாணர்சேமநிதியாய்
நன்மங்கலஞ்செய்பொருள்சேரநல்குநவைதீர்நிமித்தமதுவாய்
வன்மங்கொண்மாயவிருடீரமண்ணில்வருபானுவாகிமலரு
மென்மங்கிலங்கிபெயர்நீரிலாடுமிவர்முத்தராவதெளிதே. (௨)

அனனீரின்வாய்மையதுகூறுகுதனவனைத்தெரிந்துமுனிவோ
ரினநீரினுமமிஃதங்கிதீர்த்தமெனவந்தவாறுமிருடீர்
கனனீரின்மேன்மைபிறவேறுமுண்மைகழறென்றபோதுகவையா
மனநீர்வியாதனருண்மேவுமாணவகனோதுமுன்னைமரபால். (௩)

கழியுற்றகாலைவளர்கோசலேசர்கருணைப்பெருக்கமனையான்
பழியுற்றபத்துமுகவஞ்சனுவிபட்டையோடுகொன்றுபரவை
யுழியுற்றகோலமதில்சூழிலங்கையுயர்வீடணற்குமகிழ்வால்
விழியுற்றநண்பினருள்செய்தெடுத்தவினைமுற்றிமீளவருவான். (௪)

இல்லாமருங்குலவள்சீதையோடுமிகலாரிலக்குமணனோ
டொல்லாரையட்டபுகழோடும்வென்றியொருவற்குமின்றியயரும்
வில்லாண்மையோடும்விளையாடல்கொண்டுவியல்வானமெங்குமிடையும்
பல்லாயிரங்கொள்பலகோடிதொக்கபதினெண்கணங்கள்பரவ. (௫)

தன்கண்விளக்கமடைகின்றதன்மையதனோடுநீடுசனகன்
மின்கண்விளக்கம்வரல்வெஃகிஞாலமிசைசேதுமீதுநடவா
நன்கண்டரித்தறுதல்கந்தமாதனவிலங்கனண்ணிநளினப்
பொன்கண்கடுக்குமலர்வாவிமாடுபொலிவுற்றுநின்றபொழுதில். (௬)

குழுவார்பிதிர்க்கடவவாணரும்பரவர்முன்புநின்றுகொலைவாண்
மழுவாளிராமனிகல்வென்றவள்ளல்வருகென்றழைப்பவசுவைச்
செழுமேனியாடையொடுகண்சிவந்துசிலையொன்றுகொண்டுபகுவா
யெழுநாவினக்கியிருநாலுதிக்குமெழுசிந்துநுங்கியெழுவான். (௭)

மருளார்கடற்கணரன்வந்துதிக்குமதுபோலவீசுமதிநீ
ரிருளார்கடற்கணெதிர்தோன்றிநிற்குமெரியோனிராமனெழில்சே
ரருளார்முகத்தண்மலர்நாடிமாதரணியாயசீதையவள்பாற்
பொருளாருமிக்கபுனிதந்தெரித்தலதுசிந்தைகொண்டுபுகல்வான். (௮)

வணர்விற்கைராமவுனையொன்றுகேட்டிமரபொன்றுவாய்மையதனு
லணரிற்கறுத்தவரவன்னசென்னியளவைபத்திறனையடுமா
றுணரிற்கரங்கொள்படையன்றுதோளினுரமன்றுகஞ்சவொளிசே
ரிணரிற்பிறங்குமிவள்கற்பினையமிலைமெய்மைகோடியிதுவே. (௯)

முளையாடுதோளியிவள்சீதைகஞ்சமுளரிப்பொன்மக்கண்முறையால்
விளையாடுகின்றவளவேநினைக்கின்மிகுதெய்வமாவளுடனே
தளையாடுசெய்கைநரரூபமாவடனதிச்சையானதகையாள்
வளையாடுசெங்கையரிவந்தவண்ணம்வருவாளவன்றன்மனையாய். (௧0)

பரசங்கைராமனுருக்கொளன்றுபடிமங்கையானபடியா
ளுனாதங்குசீதையுருவங்கொடுன்றனுடன்சேவியிங்ஙனுறைவாள்
வனையங்குடைக்கைமுகிலாகும்வேலைவருவாளுருக்குமணியா
யினைசங்கபாணியவனீமலர்ப்பொனிவள்சங்கையாதுமிலையே. (௧௧)

எனதின்சொல்வாய்மையதுநம்பிநம்பியிவளைத்தரித்தியெனவே
யனலன்றுகூறவவணின்றதேவரறவோர்கள்யாருமழகார்
சனகன்றன்மாதினொடிராமனீடுதகைபேசினார்கடழலோன்
மனனென்றுவாய்மையதுதேறிவள்ளன்மயிலைப்பரித்தனனரோ. (கஉ)

பதனுண்மலர்க்கணவள்சுத்திதேறுபடியாலமைப்பநெடியோன்
கதனுன்மிகுத்தசுடரங்கிவீசுகடனின்றெழுந்துகரியா
மதனுன்மலர்ப்பொன்மடுமாடிலங்கியடைவார்கடீமையடரு
மிதனுலுனைக்குமுலகெங்குநாமமிஃதங்கிதீர்த்தமெனவே. (கங)

வேறு.

மோனமுத்திவழங்குமுழங்கெரி
தூநறும்புனலாடித்துறந்துனு
நானிலம்புகழ்நான்மறையந்தணர்க்
கானவுண்டியருத்தியருத்தியால். (கச)

புடவிவண்டுகில்பொன்னணிப்பூணெழி
லுடையகன்னியுவைதருகிற்பவ
ரிடையும்வெவ்வினையாவையும்வீட்டுவா
ரடைவரங்கைகொளாழியினன்பதம். (கரு)

சொன்றியீகைசுடர்ப்புனற்கூலமே
நன்றுசாலவிந்நாரத்தின்மூழ்கியே
யன்றுதுட்பண்ணியன்றனகற்றினு
னென்றுபேய்வடிவும்பரின்மேவினன். (கசா)

கட்டுரைப்பன்கதையிதுவந்தவா
றெட்டுமன்பினுணர்மினிருடிகாள்
வட்டவாரிவசுந்தரைக்கண்ணதோர்
பட்டணம்பெயர்பாடலிபுத்திரம். (கஎ)

பதியதன்கட்பசுமான்பரதவர்
விதியமன்னவனீதியொழுங்குளான்
மதியினீடுமறையவர்ப்பேணுவான்
விதியினனினங்காக்கும்விருப்பினன். (கஅ)

வன்பகட்டினுழுந்தொழின்மாண்பினன்
பொன்கொள்வோரிற்பொருள்விற்கும்பொற்பினன்
றன்புயத்தணைதையலர்கற்பினன்
முன்கணிப்பவர்மூவரம்மூவரில். (ககூ)

பாரின்முன்னவள்பன்னுஞ்சுபண்ணியன்
மாரிநேர்கொடைப்பண்ணியவான்வளர்
சாருபண்ணியன்மூவரைத்தன்குலப்
பேருயர்ந்திடப்பெற்றுவளர்த்தனள். (உ0)

தோடுலாவுதொடையற்சுகோசக
னேடுசெல்வநிகழ்வெகுகோசனென்
றீடுசாலுமிருவரையீன்றன
ணாடிம்வல்லிநடுவினடுவிலாள். (உக)

கிளைக்குமாபெரும்பண்ணியன்கேழ்கிளர்
வளைக்குநேர்தருமாபெருங்கோசன்மால்
விளைக்குந்துட்பண்ணியனெடுவெம்முலைக்
கிளைக்கும்வஞ்சியிளையாள்பயந்தனள். (உஉ)

எண்மரன்னவரீன்றவர்நால்வரு
முண்மகிழ்ச்சியுததியின்மூழ்கவே
மண்மலர்க்கையளைந்துமறுகெலாம்
வெண்மைசேர்விளையாட்டின்விரும்பினர். (உங)

வருடமைந்துறமைந்தர்வளர்ந்தபி
னருடரும்பசுமானங்கவர்தமைப்
பொருடருந்தங்குலத்திற்புரிதொழி
றெருடரும்படிதேற்றிநடாத்தினன். (உச)

அஞ்சுபண்ணியனாதியெழுவருந்
தஞ்சிறப்புடைத்தாதைமொழிவழா
ரொஞ்சலின்றுயர்த்தொழில்வாணிகம்
புஞ்சவானினம்போற்றலின்மேவினர். (உரு)

எட்டுமைந்தனொனுந்தொகைக்கீற்றிலே
பட்டதுட்பண்ணியன்சிறுபாலனுய்த்
தொட்டநாண்முதற்றன்மதிப்புன்றெழிற்
குட்டிவாளரவென்னக்குலவினன். (உசா)

எள்ளருந்திசைக்காவலனொண்மரிற்
பிள்ளையந்தகனென்னப்பிறங்குவான்
வள்ளலாம்பசுமான்றன்வயிற்றினிற்
றுள்ளுநீர்முகிற்றோன்றுமுருமன்னான். (உஎ)

தழலினுண்பொறிபோற்றனதாடலின்
விழையுமைந்தனைவெம்மைசெய்தெங்கணு
முழலுந்திமையுணர்ந்துமுணர்விலாக்
குழவியென்றுளங்கொண்டிலன்றந்தையும். (உஅ)

இந்தனங்களிடவிடமீப்படுஞ்
செந்தழற்சுடரொன்னவச்செட்டிதன்
மைந்தனண்டுவரவரநாடொறு
முந்துசெய்வினைத்தீமையின்முற்றினன். (உகூ)

தேவுசால்பிறைவவ்விச்சினவரா
வாவுநீருமிழ்ந்தென்னமகார்தமைக்
கூவலாறுகுளங்களிற்கொண்டுபோ
யாவெனுநொந்தரற்றவமிழ்த்துவான். (ஙo)

நாடொறுவகைநாடொறுமந்நக
ராடன்மைந்தரடங்கவமிழ்த்தினன்
வாடுறுமல்வளரிளங்கற்பகக்
காடுசாடுங்கரியிளங்கன்றுபோல். (ஙக)

எங்கண்மைந்தரைக்காண்கிலமென்பவர்
தங்களோடெந்தனயனைக்கண்டிரோ
வுங்கணென்னவுரைத்தழுமோதையே
யங்கண்மாநகரொங்கணுமானதால். (௩௨)

வள்ளம்வாக்கியவண்டயிரோதன
மள்ளியூட்டிவிடுத்தனைக்கன்னலே
யுள்ளதாவியுருவொடுமைந்தனைக்
கொள்ளுமோகொடுங்கூற்றமென்பார்சிலர். (௩௩)

குடுமிகோதிக்குழவியைவாய்தலின்
விடுமுன்காண்கிலம்வெய்யவினையினேம்
படுவதென்கொலிப்பட்டணம்பாவிகாள்
கெடுவதென்றுகிளந்தழுவார்சிலர். (௩௪)

ஆட்டினேன்புனலையவித்தண்புகை
காட்டினேன்சுட்டிகட்டுதன்முன்னரே
யோட்டுற்றான்மகனோடினன்பின்னரோ
மீட்டுக்காணேனெனவிழுவார்சிலர். (௩௫)

தேடிச்சிற்றுணவெய்துஞ்சிறானைவிட்
டோடிவந்தனனோர்சற்றுப்போதுபோ
யாடிவாவென்றனன்பின்னணைந்திலா
னீடுசேயெனநின்றழுவார்சிலர். (௩௬)

வாலுடைத்தகர்விட்டுமறுகிலோர்
காலுந்தான்றனிபோனதுகண்டிலே
னேலுமேழகமிங்குளதெங்குளான்
பாலனென்றுபரிதவிப்பார்சிலர். (௩௭)

உரவுசாலுமறுகினிலொண்சிலம்
பரவநாடியழைக்கவணைந்தனன்
பரவுபாலனைக்கண்டிலன்பாவியேன்
கரவிதென்னென்றுகைகுலைப்பார்சிலர். (௩௮)

பொன்னையொக்கும்புதல்வனைக்காண்கிலே
னன்னையென்னவணைந்தனன்முன்னரே
பின்னையுண்டிமுலையெனப்பேசிய
வென்னையென்செய்வலென்றினைவார்சிலர். (௩௯)

தீயெழுந்திலமாருதஞ்சேர்ந்தில
கோயினீங்கலன்கோமகன்கொள்ளையூர்
போயதில்லைபுதல்வரைக்காண்கிலா
மாயமென்னென்றுமாழ்குறுவார்சிலர். (௪0)

முன்னுகாட்சிமுருகர்முதியவ
ரன்னர்யாருமயர்வுற்றிருந்தனர்
கன்னலஞ்சொற்சிறார்தமைக்காண்கிலே
மென்னகாரணமென்றயர்வார்சிலர். (௪௧)

அனையமாநகர்வைகுமவரெலாந்
தனையர்ப்போக்கித்தளர்பவராதலா
லினைவர்தம்மிலிரங்குவரன்றியே
வினவுவார்பிறர்வேறிலராயினார். (சஉ)

இற்றமைந்தனையீன்றவரெங்கணும்
பற்றிநேடித்தெளியார்பயத்துயி
ரற்றொதுங்குமழன்றிரட்கண்டவர்க்
குற்றவீற்றுக்கடன்களுமாற்றினார். (சங)

உண்டிபோலவொழியாவிரதமாய்த்
துண்ட*னாகியதுட்பண்ணியன்றினம்
பண்டையப்பதிப்பாலனைக்கோறலான்
மண்டுமக்கள்வருத்தனையற்றதால். (சச)

பாழடைந்ததுபாடலிபுத்திரம்
வாழுமானவர்மன்னன்மருங்குபோய்த்
தாழுந்தம்மிடர்சாற்றினர்வேந்தனுஞ்
சூழுவீரெனக்காவலர்த்தூண்டினான். (சரு)

காவலாளருங்காண்கிலமென்றுதம்
மாவியஞ்சியரசற்கியம்பினார்
மேவியோதினர்மீண்டுநகருளார்
கோவுமுள்ளங்குலைந்துபுழுங்கினான். (சசு)

செவ்வியின்னணஞ்சென்றுழிச்செட்டிசே
யவ்வியன்பதிமைந்தரிலைவனைக்
கொய்யவம்மினீர்கோகனதம்மெனப்
பவ்வமன்னபடுகர்க்கொண்டேகினான். (சஎ)

கண்டமட்டிலமிழ்த்திக்கயத்துணி
ருண்டமட்டிலொழிந்தாருயிரொரு
விண்டமட்டில்விரைந்தொலைமீண்டனன்
கொண்டமட்டில்கொடுமைத்துட்பண்ணியன் (சஅ)

தோய்ந்துநீரிலத்தோன்றல்கடம்முயிர்
மாய்ந்திலார்மெல்லவான்கரையேறினா
ரீந்துளாற்குமிறச்செயலாகுமோ
தேய்ந்திடாமுறைத்தெய்வமுள்ளானையே. (சகூ)

தேமலர்த்தடஞ்சேய்மையதாகையா
லாமதாயுமறிவிலிளையவர்
தாமுமாகையிலங்கட்சரித்தனர்
மாமதிற்புரம்வந்திலர்மைந்தர்கள். (ருo)

தேண்டிச்செல்லுஞ்சிறுவர்தங்கேளிர்கள்
வேண்டிக்கூவிவிளிப்பதுகேட்டியா
மீண்டுற்றோமென்றியம்பினரேகியே
யாண்டைப்பாலனைக்கண்டாரவர்தமர். (ருக)

---

* துண்டன்—கொலைசெய்வோன்.

செத்துளோர்கடிரும்பிடக்கண்டுளோ
ரொத்துநெஞ்சமுவந்துமைமைந்தர்கா
ணத்திலங்குநளினத்தடத்தினு
ளுய்த்துளோரெவரோதுமினென்றனர். (௫௨)

புழைத்தண்கான்மனைப்போததுகொய்யவென்
றழைத்தவாறுமனைய துட்பண்ணியன்
றழைத்தடத்தில்விடுத்ததுந்தாமுயிர்
பிழைத்தவாறுமப்பிள்ளைகள்பேசினர். (௫௩)

ஆங்கவன்செயலன்றவர்கேட்டலு
மீங்கிவன்கொலிதுநாள்வரையெலா
மோங்குமைந்தருயிருண்டபாவியென்
றேங்கிமன்னவன்பாற்சென்றியம்பினர். (௫௪)

அப்புரத்திலரசனவரது
செப்புமுன்னர்ச்செவிகளிரண்டையு
மொப்பமூடினனஞ்செழுத்தோதினு
னிப்பவஞ்செயற்கெண்ணுவதோவெனு. (௫௫)

தாதைதன்னைத்தருகுதிறென்றலுந்
தூதரோடியிறைபணிசொற்றனர்
கோதுருவிளங்கோமுறையோம்பிடு
மாதரான்பசுமானுடன்வந்தனன். (௫௬)

தீக்குணஞ்சிறிதின்றித்தன்சிந்தையும்
வாக்குந்தூயவணிகனைநோக்கியே
பாக்கநீள்புகழ்ப்பாடலிபுத்திரங்
காக்குமன்னன்கழறுதன்மேயினன். (௫௭)

ஒன்றுகேள்பசுமானின்னொருமகன்
றுன்றுதீப்பணித்துட்பண்ணியன்றினங்
கொன்றுமுற்றினன்கோநகர்மைந்தரை
யின்றுளைவர்பிழைத்தனரீறிலார். (௫௮)

தீதிவ்வாறுமுன்செய்தவர்க்கண்டதுங்
காதிற்கேட்டதுங்காசினிமேலிலை
யாதிழைப்பதினியிவன்றன்னையா
நீதிவல்லைகொனீபுகலென்றனன். (௫௯)

கோற்றிறம்பயில்கோமானுரைசெயு
மாற்றங்கேட்டுவளர்பசுமான்மனத்
தாற்றுருத்துயர்மல்கியடாப்பழி
யேற்றதென்றுளம்வாடியியம்புவான். (௬0)

பல்வளம்பயில்பாடலிபுத்திரச்
செல்வமைந்தரைச்செற்றவித்தீயனுக்
கொல்வதேதென்றுணர்வதுமுள்ளதோ
கொல்வதேமுடிவன்றியுங்கூறுகேன். (௬௧)

வாழிமன்னவவாதைசெய்யாதுநீ
யேழையென்னினுமிற்றெழிவானிவன்
காழுறுங்கொலேயக்கொலேக்காரனாச்
சூழுமென்றிடுந்தொன்மொழிபொய்க்குமோ. (சுஉ)

சேயினேனையுஞ்சிற்றிடையானையுங்
காயுறுதகடும்பினுள்ளோனையும்
பாயும்வேலைப்படியிலோர்பண்டமென்
றுய்வரோநல்லறம்பொருளென்பவர். (சுங)

திருவுமின்புஞ்சிறப்பும்புகழுமற்
றெருவராக்கலுநீக்கலுமுள்ளவோ
மருவும்புண்ணியமாந்தர்க்கவைபெலாந்
தருமமின்றெனிற்றுமேசிதையுமால். (சுச)

பன்னியென்பலபாவிதுட்பண்ணியன்
றன்னேக்கொன்றுதலேயளிசெய்திடா
தென்னேநோக்கிவிடுக்கிலித்தீவினே
பின்னேயென்குலம்வேரிற்பெயர்க்குமால். (சுரு)

அணிசெய்மைந்தனைநீரிலமிழ்த்திடும்
பணியினின்றதுட்பண்ணியன்சென்னியைத்
துணிவுசெய்வதேதொல்லறமென்றனன்
வணிகர்கோன்பசுமானெனுநீதிமான். (சுசு)

தேன்வதைக்குங்குதலேயர்சிற்றுயி
ரூன்வதைத்தபுலேயனேயுன்முனம்
யான்வதைப்பனிறைவனிருக்கநீ
தான்வதைக்கத்தகுங்கொலென்பார்களால். (சுஎ)

சுற்றமஞ்சுறுதுட்பண்ணியன்றனேப்
பெற்றபேறவன்றன்னுற்பெறுகிலேன்
கொற்றவாவக்கொடுந்தொழின்மைந்தனேச்
செற்றநின்னுற்பெறுகுவன்றீயனேன். (சுஅ)

கூறல்கேட்டுப்புகழ்ந்திளங்கோவினேத்
தூறுஞற்றிடுந்துட்பண்ணியன்றனேச்
சீறியோட்டுமின்றேயத்தைவிட்டுயிர்க்
கீறுசெய்வதென்னென்றுரிருந்தவர். (சுகூ)

தொல்லேவல்வினேத்துட்பண்ணியன்றனே
வல்லேகூயவண்மன்னனம்மாநக
ரெல்லேவிட்டகலின்றேலிறத்தியென்
றெல்லேயேவலராற்றுரந்தோட்டினுன். (எ0)

ஆடுகொற்றவனுணேயினுலவ
ரோடுகென்றுபிடர்பிடித்துந்தவே
நாடுமிக்கநகரும்விட்டேகுவான்
கோடிழக்கக்குதித்தகுரங்குபோல். (எக)

மேயகொம்பர்விசைத்துவிண்வீசிடப்
போயபுள்ளிற்பொருக்கெனப்போகுறுந்
தீயனைத்தெருவூடிற்றசேயினோர்
தாயர்தந்தையர்கண்டனர்சாற்றுவார். (எ௨)

வண்டுலாங்குஞ்சிமைந்தர்தம்மாவியை
யுண்டகூற்றமனிதருருவமோ
கண்டுந்தேறினமில்லையிக்கள்வனைப்
பண்டைத்தீமைப்பயனிவனேயென்பார். (எ௩)

பாரின்மிக்கபசுமான்மகன்றனக்
காரித்தீமையறிவித்தனரென்பார்
நாரிற்பெற்றிடுநங்குலப்பாலரை
நீரிலிட்டநெருப்பிதுவோவென்பார். (எ௪)

சூழ்ந்தவஞ்சகத்துட்பண்ணியாவியாந்
தாழ்ந்தழுங்கித்தவிப்பத்தனயரை
யாழ்ந்தபாணிக்கிடங்கிலமிழ்த்திநீ
வாழ்ந்ததென்கொல்வகுத்துரைப்பாயென்பார். (எ௫)

பட்டணத்திவன்கையிற்படாவகை
யொட்டியிங்ஙனெழிந்துளமைந்தரைக்
கட்டிடாதிவற்காட்டினிலோட்டிய
சிட்டமன்னவன்வாழ்கெனச்செப்புவார். (எ௬)

பாலராருயிர்வவ்வுமப்பாதகக்
காலனனனங்காணவொண்ணுதென்பா
ரோலமைந்தரையில்லிற்கொண்டேகுமி
னீலவார்குழற்பேதையினீரென்பார். (எ௭)

அனையபற்பலவங்கணரைந்திடத்
தனைவினேடுமத்துட்பண்ணியன்பழ
வினைஅரப்பவிரைவினிற்போயினன்
முனைவர்நோன்புமுயலுமோர்கானிடை. (எ௮)

நீப்பநீங்கியநீதன்மற்றுயிடைத்
தீப்புகுந்துழியுஞ்சுடுசெய்கைபோற்
பார்ப்பனச்சிறுபாலனொருவனை
வார்ப்பனிச்சுனைவீழ்த்திவதைத்தனன். (எ௯)

அடித்துரப்பியரசனகற்றவும்
படித்ததீமைதுட்பண்ணியனீத்திலான்
வெடித்தகைப்பதுவேம்பிலுண்டாயஃ
திடித்தனாளினிடையிலையாகுமோ. (அ0)

அக்கொலைச்செயல்கண்டவருந்தவர்
தக்ககாளையர்தாந்திரண்டோடியே
மிக்கநீரில்விளிந்தவன்றுதையா
முக்கிரச்சிரவாவுடனேதினர். (அக)

மதலையிற்றமைகேட்டலுமாதவ
னிதனைச்செய்தவன்யாவனென்றேகியப்
பதகனுனதுட்பண்ணியன்பண்ணிய
விதனமாற்றலன்சாபம்விளம்புவான். (அ௨)

முடியநாடிமுறைமையினீயுமென்
படியில்சேயிற்பயத்திலிறந்துபின்
கடியதாய்த்திரிவாய்நெடுங்காலமென்
றெடிவிலாததவவலத்தோதினுன். (அ௩)

கோபமூண்டுமுனிவரன்கூறிய
சாபமேற்றுத்தனதுளம்வாடினு
னுபுகுந்ததிடரொன்றரத்தியோர்
மாபயஞ்செய்வனம்புகுந்தானரோ. (அச)

சிங்கமெண்குசினக்கரியோடிவ
னங்குழன்றிடுநாளிலடவிவாய்த்
துங்கமாருதமொன்றுதுகட்டிர
ளெங்கும்வீசிமழையோடெழுந்ததால். (அரு)

ஊழிக்காலத்துருத்தெழுமாறுபோற்
பூழிக்காற்றுப்பொருதெடுத்தெற்றலாற்
பீழைப்பட்டயர்வான்பிணமானதோர்
பாழிப்பூட்கைப்பருப்பதங்கண்டனன். (அசு)

கண்டுகாற்றிற்கலங்கியநோயினுற்
கொண்டரேுயுங்குவட்டுமுடுக்கர்போல்
விண்டவாய்வழிமேவியவ்வேழத்தின்
பண்டியூடுதுட்பண்ணியன்வைகினுன். (அஎ)

துளைநெடுங்கையகட்டினுட்டொக்கவன்
விளையிருட்டுமுழைப்புகும்வேங்கையுங்
கிளைமுகிற்குரல்கேட்டுடைந்தோடியே
யளைபுகுந்தவரவமுமாயினுன். (அஅ)

ஊதையுட்கியுவாவயிற்றுற்றவன்
பேதமாகியொருபுறம்பீறியே
மோதுருதமுரசினதுள்ளுறப்
போதுங்கள்ளநரியையும்போன்றனன். (அகூ)

மைம்மழைப்புனலுந்திவயிற்றினு
ளிம்மெனப்புகுந்தெங்குசிரம்பலால்
விம்மலுற்றது வேழம்வெளிப்படா
தம்மவங்கணவனிருந்தானரோ. (கூo)

மறங்குயிற்றியவண்பசுமான்மகன்
பிறங்குதந்திப்பிணத்தகடீங்கலான்
கறங்கிடாமற்கருங்குயினுப்பனே
யுறங்குமாலிடிபோலொடுங்குற்றனன். (கூக)

கள்ளமேவுகடியதுட்பண்ணிய
னுள்ளடங்கவொடுக்கியவும்பலைப்
பள்ளமேடுநிரத்திப்படர்மழை
வெள்ளநீர்த்தெறிவேலையிலிட்டதே. (௯௨)

போழும்வார்கைப்புணைநெடும்பாய்மரம்
வீழுறுவலைப்புண்டிடவெய்யவ
னூழிவேழக்கலத்தொடுமாழ்ந்துயிர்
மாழ்கினான்றன்மரபுவழக்கினால். (௯௩)

உய்தலின்றியுஞற்றியதீங்கினான்
மைதருங்கடலாழ்ந்தவன்மாண்டனன்
செய்ததீவினைசெய்தவற்பற்றியே
யெய்துமென்பதெவருந்தெளியவே. (௯௪)

வேறு.

வாயாலொருபொய்யுரையாப்பசுமான்மகன்றான்
போயாவியிறந்தபின்முன்புரிபுன்மையாலே
பேயாய்வனமீதுதிரிந்துழல்பெற்றியுற்றான்
றீயாருடல்வீயினுஞ்சேர்வதுதீமையன்றே. (௯௫)

மாறாதநெடும்பசிவெங்கனல்வாட்டவாடிப்
பாறானதுபோலவெழுந்துபறந்துணங்கி
யாறாதிடர்வேனிலரற்றியயர்ந்துழன்றா
னாறாயிரகோடிநுவன்றிடுகற்பகாலம். (௯௬)

நிலையாதிடமொன்றினினீள்வனமூர்களெங்கு
முலையாவலமந்தழுதேங்கியுயிர்ப்பினோடு
மலைவானொருநாளடைந்தான்மலயாசலத்தின்
றலையார்தமிழ்மாமுனிதங்கியதண்டகக்கான். (௯௭)

யான்றானெனதில்லறவோரையெதிர்ந்துசொல்வா
னான்றான்வரனாடுதிரென்றுநவின்றுநான்முன்
வான்றாழெயிற்பாடலிபுத்திரவாணிகன்பாற்
றோன்றாவருதுட்பணியப்பெயர்த்தோன்றலாவேன். (௯௮)

அந்நீணகர்மைந்தனைநீரிலமிழ்த்தினேன்யான்
மன்னாடுபுநீத்தனனென்னைவனத்திலுய்த்தான்
பின்னானுமொர்மாதவன்பிள்ளையைநீரிலிட்டே
யின்னாதபழக்கமிகுத்தலினிறைத்தேன். (௯௯)

ஏரார்முனிகண்டதுசீறியெனைச்சபித்தா
னாராவலகைப்படிவங்கொடளப்பில்காலந்
தீராவினையேன்றிரிகின்றனன்றெட்பமிக்கீ
ரோராதெனையாளுதிருய்ந்திடவென்றுரைத்தான். (௧௦௦)

உறுவோரதுகேட்டுரைத்தார்கடலுண்டவற்குக்
குறியோனொருமாணவகன்றனைக்கூவியிந்தச்
சிறியோனிடர்சேதுவினாழற்றீர்த்தமன்றிப்
பிறிதேதுமகற்றுதலில்லதுபேசவேண்டில். (௧௦௧)

நீசென்றதின்மூழ்கிவனுக்கெனநீங்குமின்னேன்
மாசென்றனனீடுசுதீக்கினன்வந்துவன்னித்
தேசொன்றறலிற்றினமூன்றுசங்கற்பஞ்செய்தே
யாசொன்றியபேயொழியும்படியன்பின்மூழ்கி. (கoஉ)

மாயன்புரிபூசனையீசனைமற்றுமாயி
னேயம்பெறவந்தனைசெய்தனனீர்கொண்டேகித்
தூயன்வணிகன்மகன்சென்னியிற்றூவலாலே
பேயின்றிறனீங்கிநற்றேவுருப்பெற்றுயர்ந்தான். (கoங)

வேறு.

பின்புதேர்த்தலைப்புக்கவன்வானமார்பெண்டிர்கூட்டம்விருப்பொடுசூழவே
பொன்கொணுட்டிலகத்தியனுதியோர்போங்குதாட்பணிவுற்றினிதேகினு
னின்பமீப்படிமித்திறமோதிடுமிந்தமாக்கதைசெப்பிடுமீதிலா
வன்பர்கேட்பவர்முத்தர்களாகுவாரங்கிவேட்குமறத்தவவாணரே. (கoச)

அக்கினிதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆகதிருவிருத்தம் கஙடுச.

---

## சக்கரதீர்த்தச்சருக்கம்.

---

ஆருயிர்கட்கருட்கடன்பூண்டறவோர்வைகுமாசிரமத்தெழுந்தருளியருளுஞ்சூதன்
பேருயிரினுடன்கலந்துவியாதன்பாதப்பிரசமலர்முடிபுனைந்துபின்னுஞ்சொல்வான்
பாருயிர்களளப்பில்பகிரண்டமாகிப்படர்ந்ததற்கோர்தனிமுதலாய்ப்பரமமாகுஞ்
சீருயிரையுணர்முனிவீர்தீரோடிச்சிறந்தவர்பின்றிகிரிதடஞ்சென்றுதோய்வார். (க)

ஆதரவுமுழுதடைவாராழிதீர்த்தமாடுமவரகிர்ப்புத்தநீயனென்னும், வேதமுனிவரன்றவத்தாற்றுறவான்மிக்கோன் விளங்கொளியசுதரிசனம்விரும்பிநோற்றான், காதலொடுங்கந்தமாதனத்திலங்கட்காரவுணர்செயுமிடுக்கண்கண்டுநேமி, வாதைபுரிந்தவரையெலாமிருடிவேண்டிவணங்குதலானத்தடத்தில்வைகிற்றன்றே. (உ)

இடம்பெரியவுலகிதனையிந்தவாற்றுலிலங்கியசக்கரதீர்த்தமென்னுமென்று, மடங்கலிலாமறையலகைக்கணம்வேதாளமணுகியிடாவறலிதுகண்டாடினூர்பாற், றடங்கிளர்தேரிரவியிதின்மூழ்கியிற்றதன்கரஞ்சாமீகரத்தாற்றரித்தான்முன்னம், வடங்கெழுநூன்மணிமார்பிறென்றான்சூதன்மாதவர்மற்றவனையதன்மரபுகேட்டார். ()

மொழிதருவான்சூதனருண்முனிகாள்கேண்மின் முன்னமராரிந்திரனைமுதலோரெல்லா, மழிவுசெயுமவுணரவர்க்காற்றாராகியாசானையுடனிருத்தியாய்ந்துதம்மின், வழியுநறைவனசனுழைவந்துபோற்றி வயகிருதவொமைப்பெரிதும்வருந்துகின்றூ, மொழியுமிதற்குபாயமுலகுதவுமேலோயுரைத்தருளென்றனர்விரிஞ்சனோதலுற்றான்

அஞ்சியிடேல்தொழிமினமரர்காணிரதற்குறுதிநவின்றிடுகேனடலேற்றண்ணல், கஞ்சமலரடிகுறித்துமுனைவரோடுங்காமர்கந்தமாதனத்தின்கண்ணீர்போகி, வஞ்சமிகுதானவர்கண்மடியுமாற்றான்மறைமுறையினிழைத்திடுமின்மகமொன்றந்தச், செஞ்சடையெம்பரன்பொருப்பினன்றிமற்றைத்தேயத்தினிடையூறுசெய்வரன்னோர்.

விலங்கலதிலிழைத்தனிரோல்வேள்விபொல்லாவிறனிருதரவரடங்கவிளிவொன்றான், குலங்கொளிமையோருமதுகுயிற்றுமென்னக் கோகனகன்றனைவழுத்திக்குரவன்முன்னா, நிலங்கொள்கந்தமாதனத்தினேகிநீங்காநேயமிகுமகிர்ப்புத்தநீயர்தம்மைப், பலங்கிளரவழுத்தியவர்பன்னசாலைப் பாங்கமைத்தார்மகச்சாலைபசும்பொன்னுடர். (சு)

பயமாருநிருதர்குலமூலமாழ்கும்படிபடியிற்படிவருடன்பண்ணும்வேள்விக், இயமானன்சதமகனாவிருத்திப்பொன்னோனிந்திரன்சேய்கவுசிகனெண்வசுக்கட்கீற்றோன், வயமார்மந்திரிவசிட்டன்பரிதியட்டாவக்கிரனக்கினிநடுவன்வருணன்வாயு, சயமாருஞ்சத்திமகன்சலதியுண்டோன்றுவில்சுனச்சேபன்மதுச்சந்தனின்னோர். (எ)

தொகைநான்குநால்வரிவர்வேள்வியாற்றுந்தொழிற்குரிமைபூண்டியற்றச்சுகனையந்த, மகநான்குமறைநெறியின்வழுவாக்காட்சிமருவுநெடுங்கரியாகவைத்துச்செய்தார், முகநான்குமொன்றுமுளமுக்கண்வானோன்முடிவிலருடரும்பொருட்டான்முறுகுசோதிப், பகனுன்குமூன்றுமொன்றுமுகுந்தனுழிப்பான்மையினாலவுணரிடர்ப்படுத்தலில்லார். (அ)

எரியுதவுமவிமாந்தியிட்டிக்குண்டத்திறைகுளக்கணெனப்பொலிந்ததிந்தவேலைப், புரியுமிதிற்புரோடாசசேடந்தன்னைப்பொங்குதழன்மகமிழைக்கும்புனிதர்க்கெல்லாம், பிரிவுசெய்துகொடுக்குமத்துவரியுவாகிப் பிறங்குமட்டாவக்கிரன்றன்பிரமனான, பரிதியிருகரத்தேந்தவிளங்குகாந்திப்பயங்கொள்பிராசித்திரமாம்பங்கையீந்தான். (கூ)

வானுலவுதேவர்குழாங்காணவங்கண்மற்றிஃதுபொற்றடந்தேர்வானிலோட்டும், பானுவினைக்கரந்துமித்ததன்றுதீயின்பாணியரிந்திடும்வீரபத்திரன்போ, லானபொழுதரவிந்தமலர்த்துஞ்சோதியலரிமுகம்புலர்ந்திமையாதவனைநோக்கி, யானிவணீர்கண்டிருப்பவிழந்தேனென்கையிதற்கருணீர்புரிந்திடுமினியைந்திலீரோல். ,(க0)

செற்றிடுவன்மகத்தையென்றானென்றாழங்கட் டேவொன்கொல்செய்வதெனத்திகைத்தார்சிந்தை, மற்றதுபோழ்தவர்கண்முகநாடியட்டாவக்கிரனோர்வார்த்தைசொல்வான்மதியஞ்சூடுங், கற்றைநெடுஞ்சடைமவுலிக்கடவுள்பாதகமலநினைந்துறைந்திடுமென்காலந்தன்னி, விற்றவிதிபலகோடியுதித்தவேதாவிலக்கமெனக்கறிவரிதாமிவர்கடம்மில். (கக)

உலகேசனெனும்விரிஞ்சனுறையுநாளி லொருநகரஞ்சாமளையென்றுண்டதன்க, ணிலகுமிருபிறப்பாளனரியரன்பே ரிவனொருநாள்வனத்தடைந்தோரெயினனுங்க, ணலகுபயில்கணைபூட்டியிலக்குநாடி யாடல்செயுந்தொழிற்கிடையேயதனைத்தேரான், விலகிடாதகப்பட்டானிரண்டுதாளும்வீழ்ந்தவறுப்புண்டுபண்டைவிதியினாலே.

அடியிழந்தமறையவன்போயறவோர்தம்பாலறைந்தவர்களேவலினிவ்வாழிதீர்த்தம், படிதலுமேயற்றவிருபதமுமேலாம்பரபதமும்பெற்றனனப்பரிசினாலே, நெடியதடமிதற்குமுனிதீர்த்தமென்றேநிகழ்ந்ததொருபேர்புலவீர்நீங்களிந்நீர், கடிதுகுடைந்திடப்பணிப்பீர்கதிரையென்றான்கடவுளருமூழ்குவருங்கைகளென்றார். (கங)

ஆயிரஞ்செங்கரமுடையோனதனினாடியாடகச்செங்கரங்களிரண்டடைந்தான்மண்ணின், மேயவிழியிலர்கூனர்முடவர்மூகர் வெதிரர்பிறவுறுப்பிழந்தவெறியோர்யாருஞ், சேயசுடர்ச்சுதரிசனவாவிமூழ்கிற் சேருமவயவங்களவைசிந்தைமுற்றுந், தூயசவுனகமுனியைநடுவண்ஞானச் சுடர்மணியாய்ப்படைத்தபுகழ்த் துறவினீர்காள். (கச)

வேறு.

அந்தரோன்கிருதற்புடனூற்றியேயண்டர்சேர்ந்தனர்சொற்கநன்னாட்டிலே
தந்தியிஞ்சைவிடற்கருள்கூர்த்தமால்சங்கமேந்தரிசக்கரதீர்த்தநீ
ருந்துமாண்கதைமற்றிதுதீர்த்தர்காளுங்கள்வாஞ்சையுவர்க்கடறூர்த்ததா
லிந்தவான்புகழ்சொற்றவர்கேட்டவரின்பநீங்கலரிப்பவநீப்பரோ. (கடு)

சக்கரதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஉசுசு.

---

# சிவதீர்த்தச்சருக்கம்.

---

கோடிபானுவுறழ்ஞானமன்றினிலைகொண்டசெஞ்சரணமுண்டகஞ்
சூடியாசிறவவாணர்தங்களொடுசூதனென்றுபினுமோதுவா
னீடியாகமிமையோரிழைத்ததடலிலவுமாயனதுநேமிநீ
ராடினோர்கள்சிவதீர்த்தநீர்படிவராதரத்தினெடுமந்தணீர். (க)

அளவிலாதமகபாதகம்பலவடுத்ததீவினையடுக்கரும்
பிளவதாயலகிறாளியாகவடுபெருமைமல்குசிவதீர்த்தநீர்
வளையும்வான்ஞமலியேறுகாலவடுகன்குளிப்பமறைவாணர்காள்
விளைவுசேர்கொடியபிரமகத்தியெனும்வெம்மைசான்மலினம்விட்டதால். (உ)

சொன்னவாய்மைசெவிபுகலுமாதவர்கடுண்ணெனுவெருவுகொண்டுதா
மின்னவாறுரைசெய்சூதனுனனமெதிர்ந்துநாடினரியம்புவார்
மன்னுசீருடையுருத்திரக்குழுவின்மருவுகாலவயிரவனையன்
றென்னவேதுவினிசைந்ததப்பிரமகத்திநீபகர்தியென்றனர். (ங)

கூடுமாதவர்கடாவினுக்குவிடைகுலவுசூதமுனிகூறுவா
னுடுகேனுரைவினையினோர்பவமடங்கவிட்டுலகிடம்புகா
வீடுசேருவர்கண்முந்தொர்வேலையடல்விண்டுவும்புகழ்விரிஞ்சனு
மாடுசேர்ககனவாணர்காணவொருவகையின்மாறுகொடுசீறினார். (ச)

பொழுதுமற்றதனிலன்னமூர்கடவுள்புள்ளினுக்கரசையூருவான்
பழுதிலாதமுகநாடியென்னெடுபகைப்பதென்வளைபரித்துளாய்
முழுதுநீஞலகமுதவிவைத்தவைமுடித்திடும்பரமமுதல்வன்யா
னெழுதவேறொருவரில்லையொத்தவர்களேற்றமானவரெனக்கிலார். (ரு)

இறையெனக்கொருவரில்லையானிறைவன்யாவருக்குமெனதேவலின்
முறையிழைக்குமவருன்னைமுற்படமொழிந்திடற்குரியரென்றனன்
கறையினிற்கழல்கள்கட்டுணும்பெரியகண்ணனெண்ணமொடுகமலமேன்
மறையவற்குறுமகந்தைகண்டுநகைவதனனுயுறுமருட்கையால். (சா)

இப்புவிக்குநடுவிடமிதென்றொருவனிடனுமெல்லையலவிஃதெனு
வொப்புவிக்குமவனென்னவேறுநிலையுரைசெய்பேதையெனவோதுவான்
வைப்பதற்குரியமுதல்வனுமெனைமதித்திடாமலெதிர்வனசநீ
செப்புமித்தலைமைநன்றுநன்றுவிடுதெளிவிலாதிதுதெரித்தியால். (எ)

ஏகனாயுலகமெங்குமாகிமுதலீறிலாததனியிறைமையோ
னாகநானொருவனின்றனன்புடவிபாக்குகின்றதெனதாணைகாண்
போகநானுதவவேண்டுமிப்பிழைபொறுத்தனன்புதல்வனாகையா
லாகநான்முகவுனக்கிலாததெவனென்றனன்புவனியுண்டவன். (அ)

வேலையங்கதனில்வேதநான்குமுயர்வெள்ளிவெற்பிலிறைவிட்டிடு
மோலையாளெனவணைந்துமுந்துபவமொருபதுற்றமலருந்திசேர்
மாலையம்புயனைவம்மினீரெனவழைத்தியாருணர்வுமருவொணா
மூலையின்கண்முதறனைவெளிப்படையின்மொழியலுற்றதருண்முனிவிர்காள். (௯)

ஏரிணங்குமதியன்பரஞ்செவியிறைக்குமாரமுதசீகரங்
காரிணங்குமலவிருள்விழுங்குகதிர்கல்வியின்முடிபுகவிஞர்தம்
பாரணங்குணமகன்றவாழ்வுபிறபற்றிலார்கணிதிபண்டைநூ
லாரணங்களொருநான்குமங்கவர்முனன்றுசொற்றமொழியறவிர்காள். (௧௦)

கோதறுநெடியசுருதிகோடிபலகோடிகொண்டதொருகூறுதா
னோதுமாசிரியனுரைசெயும்பொருண்மையுண்மையோவளவையுற்றிடா
வேதமேகுரவனாகிவந்துபொருண்மெய்மைசொற்றிடவிரும்பினால்
யாதினானிலையுமம்மர்ஞானமெவரெய்திடாதவர்களிருடிகாள். (௧௧)

திங்கள்வேணிபுனைமவுலியண்ணல்விடைசேர்பதாகையுயர்திருவினா
னெங்கண்மேலுமிமையோர்கண்மீதிலுமிருத்துபாதுகையிருக்கவே
சங்கபாணிமுகிலேபுகன்றியவிழ்தாமரைத்தலைவசாற்றுவா
யுங்கள்பாலுமுலகாக்கல்வைத்திடலொடுக்கலென்பனவுமுள்ளவோ. (௧௨)

தாணுவெண்குணனகண்டிதன்பரமசம்புவேறுவமைதானிலான்
பூணுமுன்றொடரிருட்கடந்தசுடர்புனிதனின்பபரிபூரணன்
வேணுமென்பதுவுமற்றதன்மறையுமேவிடான்கயிலைவெற்பினான்
காணுமுங்களுடனெங்களுக்குரியகடவுளாம்பரமகாரணன். (௧௩)

சத்தியாதியவிலக்கணத்தனொருதற்பரன்புலவர்தாமெலாம்
பத்தியாலெதிர்விழுந்துதண்டனிடுபாதபுண்டரிகமலரினான்
புத்தியோடமலமுத்திநல்கியருள்புங்கவன்மறுவில்புகழினா
னெத்தினாலுமெவராலுமெய்தரியவிறைவன்யாநுவலுமீசனே. (௧௪)

நாவிருக்குமெமைவினவிடாதிதனைநான்முகத்தநவிலுற்றதென்
பூவிருக்குமதுநுகருமோஞிமிறுபோலதற்குமுதல்பூவின்மேன்
மாவிருக்குமணிமார்பநின்னையுமருட்டின்மற்றெவர்கள்வல்லரே
தேவிருக்குநெறிதீதுநீவிரிதுசெப்பிடத்துணிதல்சிவசிவா. (௧௫)

மேருவில்லரன்வணக்குநாள்விசிகம்விண்டுநீயலைகொல்வேதனே
பாருலாவுசுடராழிவையம்விடுபாகனீயலைகொல்பகருவா
யூருமானுருவுகொண்டமாதவவுனக்கொணாதயனானாக்கினும்
போருலாவுபடைமாலெனும்பெயர்புதுக்கினுமிதுபுகன்றரோ. (௧௬)

இதற்குவேதவுனையாமொறுத்துமரனெம்மைநின்னுழையிருத்தலான்
முதற்பெருங்கடவுளாருகக்களரிமுனிவர்சோதனையின்மூனுநா
ளதற்குமோகினியெனப்பினேகினவரார்கொலோபகர்தியச்சுதா
பிதற்றுகின்றவுரைபின்னரென்னதுகொல்பெண்டிருந்தலைமைபெறுவரோ. (௧௭)

கொள்ளைவல்விடமெழுந்தவன்றெதிர்குறித்துநின்றுகணமாயுநின்
வெள்ளையானதிருவுருவெலாங்கருகிவிட்டவாறினிவிடுக்கொணு
துள்ளமேலதுவுமுண்டயற்கிறைமையுற்றதோடியுயிருய்தலாற்
பிள்ளைவாலமதிமௌலிகண்டமிருள்பெற்றதார்நிலைபெறக்கொலோ. (௧௮)

ஆழிகொண்டுலகளித்தியச்சுதமுனந்தவாழிவிழியம்புயம்
வீழிகொண்டமிழலைப்பதிக்கடவுண்மெய்ப்பதத்திடுபுபெற்றதா
லூழிகொண்டபலகலைநிகர்க்குமரனுடையதாள்பணியுமுன்றனுற்
காழிகொண்டபெயருரிணைப்பிரமனூரொனப்புகல்வர்கமலனே. (௧௯)

உடைப்பதற்குமதகந்தைநீருணர்மினுண்டுசொல்வதொருபாயம்யாம்
படைப்பதற்குலகுகாத்தனன்றுபகையின்றவைக்கிருவர்பதிகணீர்
துடைப்பதற்கொருவஞ்க்கினேரழிவுசூழுதற்கியைவதில்லையாற்
கிடைப்பதற்குமரன்வேண்டுமீளவவைகேண்மின்வல்லவர்கிளத்துவார். (௨௦)

அத்தனுகுமரனிற்கறுங்கடமிலாக்குவானொருவனவையெலாம்
வைத்தளிக்குமவனொருவனுயினிர்கொண்மாறுகொண்டவகையென்கொலோ
நத்தனேவருதிகேள்விரிஞ்சமனர்நரபதிப்பெயர்நயந்தவா
றுைத்துணர்ந்திடுமினவனைநீடுபசுபதியெனப்புகல்வதுலகமே. (௨௧)

செஞ்சடைக்கடவுள்யோகிருப்பவொருசிறிதுபோதுயிர்கள்செறிபுல
னஞ்சுமற்றிலயமானகண்படுதியரவணைக்கணரியென்றுநீ
யெஞ்சலுற்றதிலையொன்றுமுண்டிவறிதென்பெறற்கிதுதொடங்கினுய்
கஞ்சனைப்பகைமைகொண்டிலாவிறைமைகட்டுகின்றவிதுகருமமோ. (௨௨)

கந்தவெற்பிலுமைமைந்தனிட்டசிறைகண்ணுதற்கயிலைவெற்பினுன்
வந்துதைத்துவிடுவித்தநன்றியுமறந்துவாய்வெருவுமலரின்மே
லந்தணற்கிசையுமாறெடுத்தறைவதாரும்வல்லரலராலின்மேற்
செந்துணர்க்கமலவிழியுறங்கியருள்செல்வவிம்முறைமைதெளிதிர். (௨௩)

காட்சியிற்கருதன்மிக்கதாகுமுறைகருதலிற்பெரிதுசழறிடிற்
சூட்சிசேருமுறையெம்மையொத்தவைதுணிந்திடார்கள்கலைவாணர்தா
மாட்சிசேருமிதமகிதமெங்களிடையணுகுருவிளைவினறியலா
மாட்சிமேவுபிரமாணமெங்கண்மொழிவழுவுறுதிதுமனங்கொள்வீர். (௨௪)

சரதமிந்தவுரையாங்களும்பிரமதண்டுழாய்மவுலியண்ணலே
பரதஞானமணிமன்றினிற்குலவுபதமுகைத்துவிடுபரிகளே
வரதன்முக்கணிறைவள்ளறுள்ளுதிவானதிச்சடிலமவுலிதாள்
விரதமாய்நினைமினுங்கண்மேன்மையினைவிடுமினென்றதுயர்வேதமே. (௨௫)

ஓசைசேருரைகொள்கருவியாயினுமுரைக்கணிற்பவர்தமுள்ளமே
லாசைசேர்பயனளிக்குமல்லவாயழிவுசெய்தருளுமாணையாற்
றேசநீடுதிறன்மன்னர்போலனையதெய்வமாமறைகள்செப்பியு
மாசுநீங்கிமதியுற்றிலாரயனுமாலுமுன்னையமயக்கினல். (௨௬)

தாங்கள்செய்தபிழைகண்டுபற்பகறவிர்த்துமெய்ச்சினைதடிந்துமங்
கோங்குமெய்யுணர்வளித்துநற்கலைகளோதுவித்துமுனமுவகையாற்
றேங்குநீருலகுதந்தளித்திலகுதிருவின்வைத்துமொருதெளிவிலா
நீங்கிவேதமலவிறைவன்வந்தருள்செய்திடினுமோகம்விடுகிற்பரோ. (௨௭)

எவ்வியற்பொருளுமருளும்வேதமொழிதன்னையன்றுபிறிதின்மையா
லவ்வியற்பொருள்னறிவிலார்களுரையாடிடுந்துறையிலவர்கடாங்
கவ்வையுற்றமனனோடுமேல்விளைவுகருதிடாதெழுகளிப்பினாற்
செவ்வியிற்றிரிவுகொண்டிடாததிருமறைகளோடுசிலசெப்புவார். (௨௮)

வருதிர்கூறுமரபினியதேபுனிதமறுவிலாமதுரவாய்மைசேர்
சுருதிகாள்சுடலையாடன்மன்னுபுதுணங்கைசேரலகைசூழ்வதே
கருதியென்புதலைமாலைவெள்ளெயிறுகமடவோடுபுனைகாதலான்
விருதுபோலமுழுவென்பிணக்கழுமுண்மீதுகொண்டுவிளையாடுவான். (௨௯)

பச்சிளங்கமலமுகுளநேரிருபயோதரக்கவுரிபணைகொடோ
லிச்சைகொண்டுறையுமிவனையென்கொலிறையெங்களிற்பெரியனென்றிர்நீர்
வைச்சவாரமுளதோவவன்கணுமைவைத்ததுண்டுகொலியாங்கடாம்
பொய்ச்சொலேன்பகர்திர்போதிரென்றனர்கள்போதனும்பதுமநாபனும். (௩௦)

வேறு.

வேதத்துறைவிட்டிவர்மேலெழுவோன், னோதுற்றிடல்கண்டுடையப்படைமன்
மோதுற்றெனவம்முதனூல்வரைமேற், சோதிக்குடிலைச்சுடரோற்றதரோ. (௩௧)

அருவத்தினைவிட்டதிருங்குரலோ, டுருவத்தினையுற்றுணர்வில்லவர்மேற்
சருவிச்சுருதித்திரள்சாய்தருமப், பருவத்திகலிப்பகர்வுற்றதுவே. (௩௨)

வாரிப்படிதந்தருளும்வளனா, னீரிப்படிகண்டுநிகழ்த்திவிராற்
காரிப்படியென்கரியோய்கமலா, வாரிப்படியுண்மையறிந்தவர்தாம். (௩௩)

சொல்லார்சுருதிப்பொருளைத்துணியா, தொல்லாமெனநீருரைசெய்ததெனோ
வெல்லாநெறியானதும்வேண்டுவரோ,நில்லீர்கெடுவீர்நெறியன்றிதுவே. (௩௪)

மாலேயயனேவரனின்றுணர்வீ, ராலேநிழலுற்றமரும்பரமன்
போலேமறைநீர்புகல்வீருமதாங், காலேநமனைக்கடிகின்றதுவே. (௩௫)

தகையாரயனேசயமன்மதவேள்,மிகையாயெரிவான்விழியாதொழியாய்
பகையாரெயிறுள்படவெந்திடவே,நகையாதமர்வாயலைநாரணனே. (௩௬)

வெள்ளாறணிசெஞ்சடைவித்தகனிற், கள்ளார்துளவாகயிலைக்கிரியைத்
தள்ளாவகழ்வஞ்சகனைத்தடிதற், குள்ளாயொருதாள்விரலூன்றுவதே. (௩௭)

நடையார்மறையென்னுடனேநவிலும், விடையானிறையானெனவேவிழைவாற்
கிடையாரரவாகுரவாகிளவீ, ருடையாரெனவாருமையோதுநரே. (௩௮)

விண்போனிறையும்விடையானடிமே, னண்போபெரியாய்நவையேன்பகர்வா
யுண்போயுலகமுனையன்னவர்தம், பண்போவிஃதோர்பரிகாசகமே. (௩௯)

சாவுற்றிடிர்நீர்தலைமைப்பெயரான், மேவுற்றிடுநஞ்செயலும்விளியா
யாவர்க்கிறுதிக்கிடனேசுடுகா, டாவுற்றிடுகேதனனாடினனால். (௪௦)

தெழியுக்கிரர்தாந்திறன்மிக்குடையார், வழியிற்படர்வார்மணிநன்னுதன்மேல்
விழியுற்றிடுவான்விடின்மற்றெவையு, மழியத்தெறுமாலலகைப்படையே. (௪௧)

தலையென்பொடுநந்தலைவன்புனையு, நிலைநன்றலவேனெடுமாலயனே
யிலையென்றுரையீரிருவீருடலிற், புலையொன்றலிலாப்புனிதம்பெறலே. (௪௨)

கருமாவுருவேமுழுதுங்களுலுந், திருமாலுடையானெனவேதிகழ்வா
யிருகோடணியானிறையானினதா, மொருகோடணிவானுடையானலனே. (சங)

சிவனுமையினோடணியுஞ்செயலா, னவமாலவனீயறையாயதுவாந்
தவறோடுடையுண்டதுநந்தலைவ, னவில்வானணிவுற்றெனநீநவில்வாய். (சச)

எறிமூவிலைவேன்மிசையெம்மிறைவன், பொறிதீர்முழுவெண்பணியும்பொருணீ
யறியாயெனில்யானறைவேனரியே, வெறிபோல்வதுநீவினவுஞ்செயலே. (சரு)

நாவாளுடனீயெனநான்முகனே, மாவாளுடனீயெனமாதவனே
யேவாளுறழ்கண்ணிமையத்துமையென், றுவாளவண்மெய்யரனுற்றணையான் (சசு)

எவனென்றனிரோலிசைதந்திடுகே, னவனும்மவளும்மவர்வேறலராற்
றவனன்சுடருஞ்சசியுங்குளிரு, மிவனென்றிதுவென்றிருவேறலபோல். (சஎ)

பொன்பாலரியேபுணர்நின்னுழைநா, மின்பாலணையும்விதிபால்விளையு
மின்பாலிருவேறிசையுமிசையா, ரன்பாலுமையுமரனுமதுவே. (சஅ)

ஏகங்கொளுமோர்வடிவிங்கிதிலே, பாகங்கொளுவார்பலரோவலரேன்
மோகங்கொளினுமுடிபோயிடுமோ, தாகங்கொடுதாந்தழுவுற்றிடிலே. (சகூ)

வடிவம்பிறிதேன்மதியும்பிறிதா, முடன்ம்பிகைசேருடையானொருமைப்
படிவம்புருடப்பணிபெண்பணியென், றிடுமிங்கிதிலேதிசையுமிசையீர். (ருo)

தமையாணெனவுந்தகுபெண்ணெனவு, மமையாதொருபங்கரனுமொருபங்
குமையாளவளுமுடையாருவர்போ, லிமையார்பிறர்தாமுளரோவிசையீர். (ருக)

பெண்ணென்றிடிலாண்பெருமானுருவ, நண்ணுமகனுநவிலினொருபால்
வண்ணமகளாமறையுந்துணியா, வெண்ணந்தெளிவாரெவரிங்கினியே. (ருஉ)

அல்லாததுவும்மவனொன்றவளிற், சொல்லாடிடவேதொடர்புற்றிடுமா
லெல்லாவடிவுங்கொளுவானிறைவன், புல்லானுருவம்புலவோர்புகல்வார். (ருங)

ஞானம்படிவந்நவைதீர்சிவனுக், கூனம்புணராவுணர்வேயுமைதான்
யானிங்கிரவுற்றிடுகேனினிநீர், மோனம்புரிமின்விடுமின்முரணே. (ருச)

வேறு.

ஆயும்வேதநூலாதியற்புதன், றூயசோதியன்றணைமைவேறிலான்
மேயபாருயிர்நடவும்விண்ணவன், சேயமாண்முதல்சிவனென்றோதுமால். (ருரு)

அன்னதன்மையாலகிலமாயினான், றன்னைநேரிலானதிகர்தாமிலான்
றுன்னுமெய்யெலாந்தோன்றநல்குவா, னின்னசெய்தியென்றேவுவாரிலான். (ருசு)

உலகமீனெனாவுன்னைவேதனே, குலவிராசதகுணத்தினேவினா
னிலவுமாயனேநின்னைவைத்திடத், தொலைவிலாதசாத்துவிகத்தேவினான். (ருஎ)

நாறுசெய்துநீர்நட்டபாரொலா, மீறுசெய்கெனாவிடபவூர்தியான்
சீறுகாலருத்திரனையேவினான், கூறுதாமதகுணத்தினாலரோ. (ருஅ)

மன்றிலாடுவான்வைத்தவாழ்வலா, லென்றுமுங்களுக்கிறைமையில்லையா
லன்றெலாமுமாயல்லவாகியே, யொன்றுகாட்சியானுமைமணாளனே. (ருகூ)

அந்தநங்கையுமானும்வேறிலா, ரிந்துவேணியானின்பருபமே
கந்தவார்குழற்கவுரியாதியாய், வந்திலாள்சிவன்வடிவமாகுவாள். (சுo)

நானுநீவிருநாலுவேதமும், வானநாடரும்வயிரபாணியு
மேனையோர்களுமிறைஞ்சியேத்திடு, ஞானநாயகனரிபாகனே. (௬௧)

ஒன்றுமாக்கலானுலகெலாமவ, னன்றியாக்குவாரவருமில்லையான்
மன்றல்வாரிசமலர்த்திவாட்டிடு, மென்றுபோலுவானிகல்விருப்பிலான். (௬௨)

பாலர்மாதர்கோபாலர்பாலினு, மேலுருமருளென்கொலுங்கள்பாற்
சாலநீளுமித்தன்மைநன்மையோ, வோலமோலநீரொழிமினிக்கணம். (௬௩)

பாடுநூலெலாம்பரமனம்பலத், தாடுவானெனுவறையுமால்வனத்
தூடுசேர்முயற்குள்ளதாயினுற், கோடுநுங்களுக்கிறைமைகூடுமே. (௬௪)

சிந்தைநேர்கிலீர்திங்கள்வேணிசே, ரெந்தைபாலதேயிறைமைநல்கினுன்
றந்துவைத்திடுந்தலைமையுங்களுக், கிந்தநன்றியார்கோறலெண்ணுவார். (௬௫)

செங்கணேறுகந்தேறுசெல்வனும், புங்கவன்றிறம்புந்திகொண்மினீர்
சங்கையின்றியேசாற்றினேனெலா, மிங்கென்மேலினிக்குற்றமில்லையே. (௬௬)

மாமணாளனேவனசநாதனே, காமநாசனேகாணுமீசனென்
றோமெனும்பொருளாதிமூலமா, மோமெனும்பதமோதிநின்றதே. (௬௭)

கோலமாதவீர்குடிலைகூறவு, மாலும்வேதனுமருளகன்றிலார்
சீலமார்கொலோதேருமேலையோர், காலகாலனூர்காட்டிடாமலே. (௬௮)

மாயனோடயன்மனவிருட்படாம், பாயநின்றுழிப்பரந்துவானெலாஞ்
சேயசூழொளித்தினகரக்குழா, மாயிரங்கள்சேரலகில்கோடிபோல். (௬௯)

அமலும்வேறிடமளவையின்றியே, விமலரூபமாய்விரவுமோரொளி
குமலர்மாதிரங்குண்டலந்தருங், கமலநான்முகன்காணநின்றதே. (௭௦)

இச்சிறந்தநீள்சுடரியாதெனு, வச்சமோடுதானம்புயத்தின
னுச்சிமேன்முகமொன்றுநல்கியே, நிச்சயங்கொள்வானின்றுநேடுவான். (௭௧)

தோன்றுசோதியைச்சுருதிநாவினு, னேன்றுபன்முறையெட்டியெட்டியே
மான்றநெஞ்சினன்மண்டுகாதலோ, டேன்றியுள்ளம்வைத்தற்றுநோக்கினன் (௭௨)

இடையறுதுநின்றினிதுநோக்கலு, முடையநான்முகனுச்சிமேன்முக
மடையுமவ்வொளியதனின்மூழ்கியே, வடவைமாலழல்வதனமொத்ததே. (௭௩)

காலமன்னதிற்கண்டறிந்தன, னாலுமாமுகனணுகுசோதியு
ணீலலோகிதநிலவுமேருவைப், போலுமிக்கதோர்புருடனிற்பதே. (௭௪)

கண்டுநான்முகன்களிகொணெஞ்சனாய், மிண்டுநீங்கிலான்வெய்யமாயையா
லண்டரும்யவன்றலம்வாரியே, யுண்டநாதனோடிதனையோதுவான். (௭௫)

என்னுதற்கணேயெப்துபாலனென், றன்னுதற்கணேயுனையறிந்தன
னன்னுதற்கணாடுருத்திரன், பன்னுதற்கணேபெயர்கொள்பண்டைநாள். (௭௬)

எனவகந்தையாலெதிரியம்பினன், மனனில்வாயினின்மருவொணுனெனு
நினைவுநீங்கினனெடியநான்மறைப், பனவனம்பிகாபதியையெண்ணிலான். (௭௭)

பெருகநான்முகன்மேன்மைபேசலுங், கருருகந்தரன்கமலநாதன்மேல்
வருககாலமாவயிரவாவெனு, வருகுகூய்விழித்தருளினேவினன். (௭௮)

சொன்னவேலையிற்சூலபாணியாய், மன்னுகாலநீள்வயிரவன்புகுந்
தன்னவூர்தியோடளவகன்றநாள், வென்னிடாதவெம்போர்விளைத்தனன். (எகூ)

தயிருடைக்குமத்தனையதன்மைசால், வயிரவன்செயும்வன்மைகாணுறீஇச்
செயிரினான்முகன்செப்புதீமையை, யுயிர்நடுங்கிநின்றுள்கிமாழ்குவான். (அ0)

நாடுமெங்கணுநகைநிலாவெயிற், றூடுபோர்வயிரவனையன்றியே
வீடுநான்முகன்வேறிலாமையா, லோடுமெல்லையுமொன்றுகாண்கிலான். (அக)

அத்துணைக்கணைந்தாவதானதோர், மெய்த்தவேதியன்வெள்ளைவண்ணமார்
வத்திரந்தனைவயிரவன்றெரிந், துய்த்தகாலெனுவிசையினோடியே. (அஉ)

துள்ளியெங்கணுஞ்சோரிசோரவே, யொள்ளிதாயதன்னுகிரினாலைதைக்
கிள்ளினானவன்கிளருமோதிமப், புள்ளினானுயிர்போயினானரோ. (அங)

யாதும்யாவையுமிம்மெனத்தெறுந், தீதிலாவுருத்திரர்கள்சீறினால்
வேதனென்றுமாலென்றும்வேண்டவோர், பேதநிற்குமோபிழைபடாமலே. (அச)

மற்றவேலையில்வள்ளன்மீளவு, மற்றநான்முகனாவிநல்கினா
னுற்றகாலமென்றுயிரினோடய, னிற்றகாலமென்றிருமையின்மையான். (அரு)

உய்யுநான்முகனுமையொடங்குறும், பையபாம்பணிப்பரனைநோக்கினா
னையனாணையாலறிவுபெற்றனன், செய்யசேவடிசென்னிசூட்டினான். (அசு)

வடிகொள்சூலவேல்வயிரவன்றனான், முடிவுருவயன்முக்கணாபக
னடிகடேறினானவலம்வந்துழிக், கொடியதண்டநேர்குரவனில்லையே. (அஎ)

அம்புயாசனத்தண்ணலன்றவண், வம்புகூறுதன்மருளைநாடியே
வெம்பியுள்ளநீர்விழிகள்சிந்திநின், றெம்பிரானருளேத்தன்மேயினான். (அஅ)

வாதைசெய்துமென்மாலகற்றினா, யாதையாவுனக்கென்னைநல்கலாற்
றாதையாயெலாந்தந்தளித்திடும், பேதைபாகவென்பிழைபொறுத்திநீ. (அகூ)

கிரணவெண்ணிலாக்கெழுவுவேணியா, யரணமூன்றுமன்றட்டவீரனே
மரணமுற்பவமாற்றியாளுநின், சரணமல்லதோர்சரணமுள்ளனோ. (கூ0)

ஆணுமாடெழிற்பெண்ணுமல்லவும், பூணுமின்பமும்பொருளுமாயினாய்
காணுமாறிலேன்கனவுதன்னிலுந், தாணுவேயுனையல்லதாணுவே. (கூக)

என்னைநல்கியேயென்றனாலுயிர், தன்னைநல்குவாய்சங்கபாணியா
மன்னைநல்கியேவளரநல்குவா, யுன்னைநல்குவாரொருவர்வேறிலாய். (கூஉ)

பதமகன்றிடாப்பணிபணித்திடா, திதமொழிந்தமாவீட்டுமிவ்வெலா
முதவுகென்றியானுன்னையோர்ந்திடா, மதனடைந்ததும்வள்ளலுன்றனால். (கூங)

கதியிழைக்குநின்கழல்களேத்திடு, மதியிழைப்பதேயமையுமற்றினிச்
சதியிழைக்குமித்தரணிதந்திடும், விதியிழைக்கயான்வேண்டிலேனரோ. (கூச)

குனிதரும்பொருட்குன்றவில்லனே, பனிதருங்கிரிப்பவளவாயிதழ்
வனிதைபாகனேவரவுபோக்கிலாப், புனிதநின்கழல்போற்றிபோற்றியே. (கூரு)

நினையுநெஞ்சினோர்நேயநீரிலே, நனையுநல்லருண்ஞானமேனியா
யனையர்பாவகத்தணியுமாமலர், புனையுநின்பதம்போற்றிபோற்றியே. (கூசு)

இன்னுமீசநின்னிறைமையெண்ணிடா, துன்னுமாலெனக்குற்றதாயினு
மன்னபோதுவந்தருளியாட்கொளும்,பொன்னிணைமலர்போற்றிபோற்றியே. கள

மாற்றநெஞ்சமேமாயயாக்கையென், றேற்றமூன்றையுமெனையுமென்றனா
லாற்றுபாரையுமுடையையாதலாற், போற்றலுன்கடனென்றுபோற்றினான். (கஅ)

அயனையஞ்சலென்றருளியாயிடை, வயநெடும்படைவயிரவன்றருஞ்
சயமுவந்தவன்றன்னைநோக்கியே, கயனெடுங்கணாள்கணவனோதுவான். (கக)

பங்கயாசனன்பண்டையுள்ளவன், புங்கவன்பழிபோகுமாறுநீ
தங்குவெண்பலிதானென்னாணையா, லிங்கிவன்றலையோட்டிலேந்துவாய். (க00)

நீநடத்திடினீதிவையகந், தானடத்துமாலென்றுசாற்றியே
யானடத்தியேயம்பலத்திடு, மாநடத்தினான்மறைவுசெய்குவான். (க0க)

பிரமகத்தியென்பேரிலங்கிபோ, லுரமிகுத்துளாளொருமடந்தையை
வரமுடிக்கொணாவயிரவன்பினர்ப், புரமெரித்தவன்போகவேவியே. (க0உ)

மாண்டவந்தணன்மவுலியோட்டிலே, வேண்டும்வெண்பலிவிரதம்வீரவோ
ராண்டினெல்லைகாமுற்றியானபி, னீண்டபாரின்மேலாடிநீறொலாம். (க0ங)

கங்கைமூழ்கினாற்கழியுமிப்பழிப், பங்குநாலிலோர்பங்குநீங்கிடா
வங்கதன்பொருட்டாலவாசியிற், றங்குகந்தமாதனவிலங்கலில். (க0ச)

சென்றுநீசிவதீர்த்தமூழ்கினா, லன்றுபோகுமாசறவடங்கலு
மென்றுமூழ்கினோரிடரகன்றிடத், தொன்றுநாந்தருதூயதத்தடம். (க0ரு)

திடமிதற்குநீவேறுசிந்தனைப், படலகற்றெனப்பரிவினோதியே
வடநிழற்கணேமறைவிரித்திடுங், கடவுளுற்றனன்கயிலைவெற்பிலே. (க0சு)

காளகந்தரன்கயிலைசென்றபின், வாளிலங்குசூல்வயிரவன்றலைக்
கோளிலங்குமோடொருகைகொண்டுதா, னாளிலெங்கணும்பலிநயந்தனன். (க0எ)

பின்படர்ந்திடப்பிரமகத்தியு, முன்புநீறொலாமூழ்கிவானியா
றன்பினாடினானந்தணக்கொலைத், துன்பநீங்கிடச்சூழுநெஞ்சினான். (க0அ)

கூறுமூன்றுதான்குளிர்பகீரதி, யாறுதீர்த்தபினண்ணலாணையான்
மாறுறுவிறல்வயிரவன்மனந், தேறுநீள்சிவதீர்த்தமேவியே. (க0க)

வெய்யசூலமும்வெண்கபாலமுங், கையிலேந்தியேகயிலைவெற்பின்மே
லையன்மாத்தடத்தாடியேறியம், மையனீங்கினான்வயிரவப்பிரான். (கக0)

முளரியான்பழிமுற்றுமற்றபின், வளரிகற்புகழ்வயிரவன்முன
முளரிதழ்க்கடியுண்டுவண்டினம், விளரிசூழ்தொடைவேணிமேவியே. (ககக)

ஐயமெய்திடேலயனைநீகொலை, செய்யும்வெம்பழிசேரவிண்டதாற்
பையுடரவிப்பலிகொளோட்டினைப், பொய்யில்கங்கையிற்கொண்டுபோய்ப்புதை.

இனியெனாவருணல்கியேகினான், கனியைநேரிதழ்க்கவுரிபாலினான்
வனியினீடொளிவயிரவன்பினா, னனிகொள்கங்கைநீர்நண்ணிநான்முகன். (ககங)

ஒண்கபாலமற்றதனையோரிடைத், தண்குலாவுநீர்தனிலமைத்தன
னெண்கொள்பாரொலாமந்தவெல்லையைத், தெண்கபாலநற்றீர்த்தமென்னுமே. ககச

வேறு.

எவர்கவிற்றுவாரிதுசெவிக்கொள்வா, ரவரிடர்ப்படாரளவிடற்கொணு
வுவமனற்றசிருதவுமுட்கொள்வீர், சிவதடத்தினீர்செறிதவத்தினீர். (ககடு)

சிவதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசஅக.

---

# சங்கதீர்த்தச்சருக்கம்.

---

வங்கதீர்த்தமுற்நீரினீடருண் மறைவியாதனைவாழ்த்தியே
துங்கதீர்த்தர்குழாத்தைநாடுபுசூதமாமுனியோதுவான்
பொங்குதீர்த்தமுடிப்பரன்சிவதீர்த்தமூழ்கியபுனிதர்பின்
சங்கதீர்த்தமடைந்துமூழ்குவர்சார்புதீர்த்ததவத்தினீர். (க)

சலிலமற்றிதுதேசிகன்றருதந்தைதாயிவர்தங்கள்பால்
வலியுரைத்திடுமறமுநன்றிமறந்தகுற்றமுமாற்றிடு
நலிவுதீர்புனல்சங்கதீர்த்தமென்னுமமுற்றதுநற்றவ
மொலிகொள்சங்கன்முழங்குசங்குடைமாலையுன்னியுஞற்றலால். (௨)

சொற்சிறந்ததொர்காதையிங்கிதிலுண்டுகேட்டவர்துகளிலா
வெற்சிறந்தசிறப்பின்மேவுவரிகல்விருப்பிலன்யார்கணு
நற்சிறந்தருணரிஞன்பிரமத்தியானநயந்துளான்
வற்சநாபனெனும்பெயர்த்தவன்மறைவழக்குணர்மாண்பினுன். (௩)

ஒற்றுமைக்கொளுநெஞ்சனுய்த்தனதுடசநாப்பணுழந்திடு
மற்றமின்றுயர்மாதவத்தினளப்பில்காலமமைந்துதான்
சற்றுமெய்யசைவின்றிருந்தனனன்றவன்கிளர்தனுவெலாம்
புற்றின்மூயதுவேரினுட்படுமுட்புறக்கனிபோலவே. (௪)

மேனியெங்கும்வளைந்தெழுந்துவன்மீசமூடுதனுடிலான்
முனிருந்தனனுள்ளிருந்தொளிர்தற்பரப்பொருள்போலவே
வானிலிந்திரனிங்கிவன்றவமாண்புதேரியவந்தவண்
பானியந்தருமுகில்கண்மாரிவழங்குமாறுபணித்தனன். (௫)

மாலினீட்டமிருண்டெழுந்திடைவெளியிலாமன்மறைத்துவான்
மேலையண்டகடாகம்விண்டதன்மேல்வயங்கறல்வீழ்வபோற்
காலவீற்றிவிடித்துமின்னிநெருங்குதாரைகள்கான்றமேற்
சாலுமாதவன்வாளிமாமழைதாங்குவீரரிலோங்கினுன். (௬)

கரியகொண்டன்மணிக்கடத்திரள்காலுமாமழைகடவுளான்
சொரியும்வெண்பபமாகவாலிகடியமாமலராகவே
யெரியுலாவுமிடிப்புகழ்ச்சுடர்மின்கொடிந்திரனென்பவன்
புரியுமர்ச்சனைவற்சநாபமுனிப்பிராற்கெனல்போன்றதால். (௭)

துடிப்பிலான்சிலைவடிவின்மன்னியதோற்றநாடுபுதுவசவன்
னிடிப்பினாற்செவிடுறுசெவிப்படவெறியுமூதிரின்மெய்யெலாம்
பொடிப்பினீடுநடுக்கமுற்றுடல்பொங்குவெங்குளிர்மிகுதியாற்
பிடிப்புறுதுவிதிர்ப்புறும்படிபீழைசெய்தனபின்னரும். (அ)

வெருவுமாறுருமேறுபுற்றதன்மீதுவீழ்த்தினவீழ்தலு
முருவமாரதனுச்சியெங்கணுமுடைவுபட்டனவொல்லையிற்
பொருவிலாமுனிமெய்ந்நனைந்தருணீர்புறம்பொழிவுற்றபோற்
றருவினீடுதவந்தழைத்தனனருகுசார்ந்ததுதருமமே. (கூ)

அசைவிலாதிவன்முயலுமாதவமென்கொலென்றதிசயமிகுந்
திசையுமாறுளமெண்ணியாகநனைந்திடாவகையெருமையின்
றிசையினீள்வடிவுற்றுமற்றவனடுவுறும்படிசேர்புறீஇத்
தசையினீடுபிறக்கினான்மழைதாங்கிநின்றதுதருமமே. (க0)

உறுவர்காணிரைவரைகவித்துமுன்மாலளித்ததையொப்பவே
மறுவிலாமுனிமேல்விழாவகைமழைதடுத்ததுதருமமும்
பிறழ்கடாவதின்முதுகின்மாமழைபெய்தவாறெனவுலகெலா
மறையுமுன்மொழிதானுமிக்கதைபற்றியாயினதாகுமால். (கக)

அவசமின்றொளிர்வற்சநாபவருந்தவன்புனையவிர்மணிக்
கவசமானவன்மீகமேலருடருமநின்றிடுகாலையிற்
றிவசமேழொடுமழையொழிந்ததுதருமதேவதைசேர்ந்ததாற்
றவசயம்புனைமுனியைவிட்டயறங்குபுற்றொருசாரினில். (கஉ)

நளியிலாமுனிபின்விழித்தவணாடினன்றிசைநான்கையுந்
துளியுலாமழையானனைந்தனவெங்குமாமொருதுணிபினோ
ரளியினாலுயிருய்ந்தனம்பிறிதன்றெனாவவனுய்குவான்
களியினீடுகருங்கடாவயலொன்றுநின்றதுகண்டனன். (கங)

கால்பரித்துநிலத்திறங்கியகாளமேகநிகர்த்திடு
மால்பரித்தகடாவைநாடுபுவற்சநாபன்மனங்கொளா
நீல்பரித்திடுமினையதேயெமதுயிர்பரித்திடுநிலையதாம்
பால்பரித்திடுமதியிலாவிதுதருமமுன்னியபண்பெனோ. (கச)

மாய்வுறுதெமதாவிநல்கியமகிடமற்றிதுவளைவிலா
வாயுளெய்துகவென்றுவாழ்த்தியகன்றுவேறயல்போகியே
ஆயநோன்புதொடங்கினன்றருமத்தின்மெய்யதுசூசிபோன்
மேயமெய்ம்மயிர்நிரைபொடித்திடமிக்கசீர்மகிழ்மேயதால். (கரு)

வேறிடத்துறையிருடிதன்மனமெய்ப்பொருட்டனிவெளியிலே
யேறிடத்தெரியாமைகண்டிஃதென்கொலென்னவிரங்கியே
மாறிடப்புரிபாவமல்கிடினெஞ்சுசஞ்சலமருவுமாற்
கூறிடப்புகிற்றீமையோருழைகுடியிருந்ததுமில்லையாம். (கசா)

உழிதர்கிற்பதென்னுள்ளமென்னவுணர்ந்துபன்முறையுன்னியவ்
வழிதனைத்தெரிகுற்றுநெஞ்சமருண்டுதன்றனைவைதுகொண்
டிழிபுரைத்திலமிவ்வுடற்றொடர்பென்றுபேதைமையெய்தினே
மழிவினன்றிமறந்தபாதகரங்கணெய்தியதையகோ. (கஎ)

மாரிகாத்துயிர்வாழவைத்திடுமகிடமற்றிதைவழிபடேம்
பூரியர்க்குளிழைத்தநன்றிபுலன்கொள்ளார்மிகுபுன்மையோ
ரேரியற்றிருமறைகளிற்பரிகாரமில்லையிதற்கிவர்க்
கோரியற்கதியுலகுமங்கில்லையுறவுமிங்கில்லையுணரிலே. (கஅ)
எருமைசெய்திடுநன்றிதன்னையிழித்ததீவினையாலெமக்
கொருமையுற்றிலதுள்ளமியாருபகாரமாற்றியதுணர்கிலா
ரருமைசேரரணுகநம்பியடைந்துளாரையழித்தவ
ரிருமைசேர்பயனுன்றுமெய்திலரொய்துவாரிருணிரயமே. (கக)
யாப்பின்மன்னியநன்றிதன்னைவிடுத்ததீமையிதற்குயிர்
நீப்பதேபரிகாரமென்றிடுநீதிநூலருடாதைதாய்
காப்புநேர்கிலர்குரவர்தக்கிணைகாதலோடுவழங்கிலார்
தீப்பவங்களுமாற்றுநன்றயர்தீங்குநீங்குயிர்தீர்க்குமால். (உ0)
மடிவதன்றியிருப்பதில்லையிம்மண்ணினன்றிமறந்திடு
முடிவிதீமையினோடுமாவிமுடிக்கிலெய்திடுமுத்தியென்
றடியிலங்கொளிமாமணித்திரளாடகக்கிரியுச்சிமேற்
படியின்மாதவனேதியுன்னினன்வீழ்ந்திடும்படிபடியின்மேல். (உக)
போரினோடுபுறங்கொடாருயிர்பொருண்மையென்றுபுலங்கொளா
வீரர்போன்முனியிறுதிநாடியமேன்மைகண்டிருண்மேதியின்
பாரமாவுருவிட்டுவந்தெதிர்நின்றுமாதவபதறல்யான்
யாரையும்முயர்மேன்மைசெய்திடுதருமமென்னவியம்பியே. (உஉ)
உனைமகிழ்ந்தனம்வற்சநாபவிருத்தியாயுவினோடுமித்
தனையெனுமிகுகாலநின்னிகர்தருநர்தாமிலர்தரணிமேற்
றுனியினோடுயிர்நீத்தலேபரிகாரநன்றிதுறந்தவர்க்
கெனினுநல்லறமாற்றுநின்கணுபாயம்வேறுளதிருடிகேள். (உந)
கந்தமாதனவெற்பிலேமுனிசங்கனெண்ணுபுகண்ணனைத்
தந்தவாவியின்மூழ்குநன்றியயர்த்ததீமைதகர்க்குமா
லிந்தவாய்மையினையமெய்தலையென்றுகூறியதிருடிகேட்
டந்தவாவியினுடியவ்வினைநீக்கினின்மலனாயினன். (உச)
அங்கண்மன்னியனந்தகாலமகண்டவாழ்விலமர்ந்தனன்
சங்கவாவியின்மேன்மைதானிதுநன்றிவிட்டவர்தாங்களுங்
கொங்கைவாய்வழிபாலளித்திடுகோதைதாதையர்குரவனும்
புங்கவன்பழிபுகலுவார்களுமுய்வரிப்புனல்போற்றினல். (உரு)
மொழியுநால்வர்தமக்குமுன்மனுநூன்மொழிந்திடுமுறைமையா
லழிவதேபரிகாரமாம்பவமஃதகற்றிடுமற்புதங்
கெழுவுசங்கதடத்தினிற்கரிதாங்கொலோபிறர்கேடெலா
மொழிவுசெய்குதல்பூரணப்பொருளோடுலாவருமூரவிர்காள். (உசு)

வேறு.

நீடுசேர்பயில்சங்கதடத்தினீர்நீர்மைகூறுநிறைந்தபுகழ்ச்சிசால்
கேடில்காதைவிரும்பிநவிற்றுவார்கேள்வியூடுபுகுஞ்செயல்பெற்றுளா
ராடினோரொனநன்றியயர்த்தலாலாயதீவினையங்கணகற்றியே
வீடிலாதவிரிஞ்சபதத்திலேமேவியாவர்விளங்கருண்முத்தரோ. (உஎ)

சங்கதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கருoஅ.

# முத்தீர்த்தச்சருக்கம்.

---

அங்கைபயிலுங்குண்டிகைத்தேவணையான்சூதனவன்பின்னுஞ்
சங்கையகலும்படியுரைப்பான்றவத்தீர்சங்கதடம்படிந்தோர்
மங்கையொருபக்குடையபிரான்மருவுங்கந்தமாதனஞ்சேர்
கங்கையமுனைகயைமூன்றுங்கலந்துகுளிப்பார்களிப்பாரால். (க)

உலகமுழுதுமெடுத்தபுகழுடையதீர்த்தமுவைமூன்று
மிலகுதருமந்தரும்பாவமிடுக்கண்மருணோயிவைதீர்க்கு
மலகிலிரயுக்குவனருளாலறிவையடைந்தானடல்வேந்தர்
திலகன்சானசுருதியவைசென்றுகுளித்ததிருவதனால். (உ)

வேந்தன்சானசுருதியருண்மேயவகுந்துவிளம்பியிடும்
வாய்ந்தவியாதமாணாக்கன்வதனநோக்கிமுனிவவொலா
மாய்ந்தசூதவெமக்கிவைவந்தணைந்தவாறுமரசனரு
ளேய்ந்தமுறையும்விரித்துரைப்பாயென்றாரவனுமிசைக்கின்றான். (ங)

முடவன்பிறப்பிலொருமுனிவன்மொழிவாரிரயுக்குவனெனப்பேர்
நடவுஞ்சகட்டின்மிசைத்திரிவனம்பன்கந்தமாதனத்தின்
மடனிலறிவன்றவமுஞற்றிவாழ்நாள்வரம்புகடந்தமர்வான்
றடமாநதிகண்முதற்றீர்த்தந்தான்சென்றாடுந்தகையில்லான். (ச)

சொற்றமுனிவன்கதிர்விலகிச்சூழுங்கந்தமாதனத்தின்
முற்றவேனிலவகையாய்முழங்குதழலின்வெளிதன்னி
லுற்றபுனலின்மழைபனிநாளுறுநோன்பியற்றியுடம்பெல்லாம்
வற்றிச்சொறிகொண்டெழுந்தினவுமாறவகிர்வானுகிர்வாளால். (ரு)

அடங்காதெனினுங்கண்டேயையைவாய்வேட்கையடங்கிடுவான்
முடங்காலெனினுமொருபொழுதுமுயலுநோன்புமுடங்கலிலா
னுடம்பாஞ்சுமையிற்சிறிதுசிறிதொழிந்ததொழிகவென்பான்போற்
சடம்பாய்குருதித்துளிபரம்பத்தளிர்க்கைநகங்கொண்டுரிஞ்சிடுவான். (சு)

ஈனாம்பொறியிறொன்றினிடரில்லேமேனையொன்பஃதுந்
திரிலடையுமின்பமெனச்சிந்தைகளிக்குமஃதன்றிப்
பாரிலுளைக்கும்பங்குவெனும்பழியுட்கருதான்படர்யமுனை
நாரங்கங்கைகயைமூன்றுநண்ணிக்குளிக்குநசையுற்றான். (எ)

புன்மைநிலையினினித்தனக்குப்போய்வந்துழலும்புலையாட
லின்மைதெரிப்பான்போக்குவரவின்றியிருப்பானிருந்தளப்பான்
சென்மமுடவன்யானதிகள்சேயவுருளிற்செலவரிதா
லன்மைகடியுந்தவவலியாலழைப்பனவற்றையெனத்துணிந்தான். (அ)

ஆர்க்குமரியதவமுடையானம்மூவாறுமடுக்கலின்பா
லீர்க்குங்கருத்தான்குணதிசைபார்த்திருந்தோர்மனுவையெண்கொண்டான்
பார்க்குமளவிற்பார்கிழித்துப்பணிநாடொருவிப்பவப்பொதும்பர்
வேர்க்கணசமூநதிமூன்றுமேயவவன்பால்விரைவோடும். (கூ)

குறுகிமுனிவனுளங்குளிரக்குளிர்றுண்டிவலைமிசைவிசிறி
மறுகுமனந்தீர்மாதவநின்மனுவின்வலியால்வந்தடைந்தேம்
பெறுகவேண்டுங்காரியநீபேசென்றிடலும்பெருந்தவத்திற்
றறுகண்மிகுந்தோன்விழித்தெறியுந்தரங்கநதிகடமைக்கண்டான். (க0)

கதிகளுணர்ந்தோன்கண்டுருகிக்காதல்பெருகிக்களிசிறப்ப
நதிகளவற்றிற்கருக்கியநீர்நல்கிவேண்டும்பலிநயந்தான்
மதிகொளுலகிலலகுபடாவாழ்வின்மலிந்தமாண்பதனு
லதிகரவருமன்புடையாரளிக்குஞ்சிறிதுமுவப்பாரால். (கக)

பூசையிழைத்தபின்முனிவன்புகல்வான்யமுனைபுனற்கங்கை
யாசையலைக்குமலைக்கையையென்றறையுஞ்சலங்காளசலமிதில்
வாசம்புரிமினெஞ்ஞான்றுமண்ணீரகழ்ந்துவருமிடத்தின்
வீசம்புனலைதும்பெயரால்விளம்பக்கடவதுலகென்றான். (கஉ)

இன்பங்குலவுநதிமூன்றமிசைந்துகரந்தவிமையவரை
மின்பங்கதனைத்தனதுபங்காவிரும்பும்பங்குமெய்ம்முனிவன்
றன்பங்கமிலாத்தவவலியாற்சார்ந்தநதிநீர்தனிலாடு
மன்பங்குடையாரருளுடையாராவாராகாரறிவில்லார். (கங)

மக்களுருவங்கொடுதோன்றிமறைந்தநதிகளன்றுமுதன்
மிக்கவுலகம்புகழ்ந்தேத்தவிளக்கம்படைத்தவவற்றின்பாற்
புக்குமகிழ்வுற்றினிதாடும்புனிதமனிதர்க்கதுபோழ்தே
அக்கமகலும்பிறவிமருடோன்றுதொன்றுஞ்சுடர்ஞானம். (கச)

இருடீரிரயுக்குவன்றுனுமியம்புந்தனதுமந்திரத்தின்
கருடீர்வலியால்வரவழைத்தகாமர்யமுனைமுதன்மூன்றும்
வெருடீர்மனத்தால்வேறுதவம்விட்டுப்படிந்துவிருப்பினொடு
மருடீர்கந்தமாதனத்தில்வைகுற்றிருந்தான்மற்றந்நாள். (கரு)

சானசுருதியபிதானந்தரணிகிருபன்புத்திரன்சே
யானமுறையாற்பவுத்திரனென்றறையும்பெயருமடைந்துள்ளான்
றீனர்விழைவுதீர்க்கையினாற்சிரத்தாதேயனெனப்பட்டான்
மேனிதழைப்பவட்டுதவிவெகுபாக்கியனுந்தானானன். (க௬)

பரிசிலாளர்வயினளவில்பரிவுங்கொடையும்பயின்றுடைய
வரசன்படிமையதுபுனையாவறவோரனையானவனுரு
முரசுமுழங்குங்கொடிவீதிமூரிநகரம்பெருநடவை
தனைசெய்முதூர்பஃறேயஞ்சதுக்கமுதலதலமெல்லாம். (கஎ)

பருப்பின்பொருப்புநெய்ந்நதியும்பழத்தோடலம்பும்பாற்கடலும்
விருப்பினறியகறிவகையும்வேண்டும்பிறவுமுளவாக்கிக்
கருப்புக்குறையுமுயிர்வளர்க்குங்காதலனைபோற்கரைந்தன்பாற்
றிருப்பிகிறுவிவருவார்க்குஞ்செல்வாரெவர்க்குஞ்சிறந்தளிப்பான். (கஅ)

அன்னமிலதேலாருயிர்கட்கசைவின்றுகுமாகையினாற்
றுன்னுமடிசிறருஞ்சானசுருதியெவையுந்தொடுத்தியக்குந்
தன்னேர்வடிவந்தானுகுந்தானத்துயர்ந்ததகைநாடி
மன்னுநரருமாதவரும்வானோரெவருமகிழ்ந்தாரால். (ககூ)

வேறு.

நாளுமகிழுமமரர்முனிவர்ஞாலவனிதைநலனுணுங்
தோளுமரசர்மவுலியிடறுசுடர்கொள்வீரவணைகழற்
றாளுமுடையவரசுசானசுருதிதன்னையன்பினு
லாளுமுறைமைகருதியெகினமாயினார்களனைவரும். (௨௦)

அஞ்சவுருவமாகிவிண்செலளவிறிங்கண்மாலைபோற்
றஞ்சவமரர்முனிவர்நீடுதகுதிமருவுதொகுதியின்
புஞ்சம்றிஞர்பரவுசானசுருதிவீசுபுகழ்மைபோல்
விஞ்சும்வேனிலிரவிலுன்னிவிண்பரந்துபோனதால். (௨.௧)

மேகமுட்டுமேனிலைக்கண்வெண்பளிங்கினீடுசா
லேகமுற்றிருந்தசானசுருதிமீதெழுந்துதாம்
போகலுற்றபோதுபின்செல்புள்ளிலொன்றுமுன்புகுந்
தோகைமிக்கவெகினமொன்றைநாடியொன்றுசொல்லுமால். (௨௨)

நிற்றிநிற்றிநீபலாக்கநீடுசேர்மராளகா
வெற்றியோடுவிரசுசானசுருதியிந்தமேனிலத்
துற்றுளானிவ்வாறுதானுணர்ந்திலாய்கொலுள்ளமேற்
சற்றுமெண்ணிலாமலந்தர்தம்மிலேகுகின்றியால். (௨௩)

இரவிகோடிசிறுகமல்கியெங்கணும்பரந்துபோய்ப்
பிரமலோகமுழுதுமுண்டுபெருகுசோதிநிருபனைப்
பரவிடாதுபோதனன்றியன்றுநிந்தைபண்ணினால்
விரவுதோகைவேவவீசும்வேந்தனீடுகாந்தியே. (௨௪)

என்னலோடுமெகினராசனிஃதுரைக்குமோதிமந்
தன்னைநாடியழகிதம்மசாற்றும்வாய்மைசாலவு
முன்னையோரிலுன்னைநேர்முதுக்குறைந்துளாரில
ரென்னையோமருட்கைநின்னையெம்மைவிட்டடைந்ததே. (௨௫)

சிறியனுண்மைதெளிகிலாததிண்சிலைக்கொணெஞ்சினன்
வறிதிலூனுயிர்த்துலாவுபுல்லுணாதமானனு
னறிவிலாதமருளன்மூகனவலன்வஞ்சன்யாரினும்
வெறியனென்கொலிவனையெண்ணிவீணின்மேன்மைகூறினாய். (௨௬)

அரியதாயவறனினுண்மையதனிலொன்றுமறிவதற்
குரியனல்லன்முனிரயுக்குவன்பிறங்குமுலகின்மேற்
பெரியனென்னவமலஞானவீடுமேவுபேறிலான்
றிரியுமட்புனைந்தபாவைபோன்மயங்குசெய்கையான். (௨௭)

அந்தவந்தணாளன்மெய்யகண்டசோதியமாருஞ்
சிந்தைகோடலரிதுவானுடுக்குழாந்தெரிக்கினு
மிந்தமண்ணெழுந்ததூளியெண்ணினுமிருடிதான்
றந்ததானதருமமேருவெண்படாததகையதால். (௨௮)

இறையினீடுமிவனிழைத்ததருமம்யாவுமீறுறும்
பிறையினோடுகட்டும்வேணிசரணிலன்புபெற்றசீர்
மறையினோன்மனத்தினுண்மைஞானமென்றுமாய்வுறு
தறையநாடின்முனிரயுக்குவன்றன்மேன்மையறைதிரீ. (௨௯)

எற்பிறங்குமிரவிநிற்கயார்பழிச்சுவார்விளக்
கற்பமன்னனிவனேநீவழுத்தல்செய்யிலறிஞர்தா
நிற்பழிப்பர்விடுதியோகவாணர்தாமுநிகரிலா
னுற்பவத்தின்முடவனுகியுறையுமந்தவுறுவர்கோன். (௩௦)

இரைத்தெழுந்தலாவியோடும்யமுனேகங்கைகயைகடாந்
திரைக்கரங்குவித்தெழுந்துசெய்யகந்தமாதன்
வரைக்கண்வைகுமாறுமுன்னமற்றவன்றன்வாயினு
லுரைக்குமந்திரத்தின்வன்மையாலழைத்தவுயர்பினுன். (௩௧)

புவனமூன்றிலுயிர்கள்செய்தபுண்ணியத்தின்வகையெலாந்
தவநிரம்புமுனிரயுக்குவன்புரிந்ததவறிலா
நவநயங்கொடருமராசியுள்ளடங்குநம்பிரான்
சிவனகண்டபூரணத்திலுலகடங்குசெய்கைபோல். (௩௨)

யாதும்வாயிசைக்குமென்னிலின்பமொன்றுமெய்திடாப்
பேதைமன்னனின்மைமேன்மைபேசியென்கொல்பெறுதிநீ
மூதுணர்ந்தமுனிரயுக்குவன்சிறந்தமுதன்மையே
யோதுசென்னவோதிமிக்கவோதிமம்மொழிந்ததால். (௩௩)

இன்னவாறுதலைமைசாலுமெகினியம்பிநின்றதன்
பின்னரந்தமுனிவர்தேவர்பிரமலோகமேவினுர்
சொன்னவாய்மைகேள்விபுக்கபோதுசானசுருதியு
மன்னமோதுமன்னமாதவன்கணன்பனுயினுன். (௩௪)

ஆகநொந்தழுங்கிவாடிமீளமீளவயர்வொடும்
போகியென்னவிண்டுமூச்செறிந்துநின்றுபுட்சொலும்
யோகியானமுனிரயுக்குவன்பதத்தையுறமிகும்
வேகியாகியிரவுமுற்றும்விழியுறங்கலின்றியே. (௩௫)

அள்ளல்வாரியகிலமாளுமரசனுகுமெம்மையிங்
கெள்ளிநின்றமுடவனுகுமிருபிறப்பினவனேயே
புள்ளினங்கடாமுமையபோற்றிசைப்பவாதலால்
விள்ளுவேனிவ்வுலகுகாவல்விடுவனில்லின்வேட்கையே. (௩௬)

முடவனுனமுனியையெய்திமுந்தைஞானமடையவே
கடவனென்றுநெடியவேலைகயினிந்துவார்கள்போற்
படரிருட்கழித்தெழுச்சிபாடுவார்கள்பாடல்கேட்
டுடல்வருந்திஞேரின்மெல்லவுற்றெழுந்துபின்னரோ. (௩௭)

மாதலிக்குவலவனுகும்வன்மைசாலும்வலவனேக்
காதலிற்கரைந்துமைந்தகடிதுதேரிலேறிநீ
வீதலிக்குவேடனக்குநல்குமுக்கண்மெய்ப்பொருண்
மூதலிக்குமுனிவர்மேவுபன்னசாலைமுழுவதும். (௩௮)

ஆலயங்கள்வரைமுடுக்கரந்தணுளர்வாழுமூர்
வாலுகந்திரண்டகுன்றமாறுலாவுகானக
மேலையோர்கள்பிறரிருக்கைவிரிதரங்கநதியிடஞ்
சோலையெங்குமிடைவிடாதுதுனேவிஞேடுநேடியே. (௩௯)

பங்குவாயொர்பண்டிமீதுதிரியுமிக்கபடிமையா
னங்கமேயபிரமமன்னவறிவனெண்ணிலறனுளான்
றங்கஞானமுனிரயுக்குவன்பிறங்குதூய்மையா
னிங்குளானெனத்தெரிந்துவருதிபோதியென்றனன். (௪0)

சூதனாடியரசன்வாய்மைதுண்ணெனக்கொடிஞ்சியின்
மீதுகொண்டுதேடியெங்குமெய்தளர்ந்தொர்வைகருன்
மோதுசீதவேலைசூழ்முழங்குகந்தமாதனச்
சோதிவெற்பிலெய்தினானம்முனியிருந்தசூழல்வாய். (௪௧)

உருடையூடுதிரியுமும்பருணர்வகன்றபிரமமென்
றருடயங்குமிறைவனோதுமமலமேனியிஃதெனப்
பொருடயங்கும்வலவனாடியுலகுசெய்தபுண்ணியம்
வருடைதங்குகந்தமாதனக்கண்வைகல்செய்யுமால். (௪௨)

எனநினைந்துவிழிகுளிர்ப்பவின்பமோடுகண்டுதான்
முனிரயுக்குவன்றன்முன்புசென்றுபோக்கின்முண்டகக்
கனைகழற்பணிந்துபோற்றிவினயமோடுகாதலாற்
பனவநின்னைநாமமென்கொல்பகருவார்கள்பாருளார். (௪௩)

போற்றிவைகுதருமம்யாதுபுகலுகென்னமாதவன்
சாற்றுவார்களெனைரயுக்குவன்சயுக்குவனெனாத்
தோற்றுபாரினோர்களென்றுசொல்லினான்குறிப்பினா
லேற்றபாகனினிதுகூறியிருடியெண்ணமெண்ணுவான். (௪௪)

மனைநடாத்துநெறியினுண்டுமாண்பொருட்கண்வாஞ்சையிவ்
வனைநடாத்துமருளின்மாதவற்கெனாவறிந்துதேர்
தனைநடாத்திவலவன்வல்லைசார்ந்துமுன்புதன்னையவ்
வினைநடாத்துவேந்தனோடுசெயலெலாம்விளம்பினான். (௪௫)

கூறுசூதன்வாய்மைநெஞ்சுகொண்டுவந்துகோவுமங்
காறுநூறுகோவும்வாவுமாடல்வாசிநீடுமோ
ரேறுதேருமேமபாரமொன்றுமிந்தமூன்றொடு
மூறுகாதலோடும்வல்லையுறுவர்கோனையுற்றனன். (௪௬)

உற்றிறைஞ்சிமுனிரயுக்குவன்பதத்திலுவகையாய்
மற்றைமூன்றுவகையுமுன்னர்வைத்திவற்றைவாங்கிநீ
யிற்றைவைகலிருளகற்றியென்னையாளுகென்றனன்
சொற்றவாய்மைகேட்டிலிங்கிதுணைவினோடுசொல்லுவான். (௪௭)

ஈறுவென்றளப்பினாளிருக்குமிங்கெனில்லமிப்
பேறுகொண்டுநிறையுருதுபேசவேண்டின்மற்றித
னூறுகொண்டதொகையுமற்பமென்றுவேந்தைநோக்கியே
தேறுமுண்மைமுனிரயுக்குவன்பரிந்துசெப்பினான். (௪௮)

பாலின்வேலைதிவலையொன்றுபடவகன்றுதிரையொழிந்
தேலுஞானவின்பவாரியளறுநீங்கலில்லெனிற்
சேலுலாவுகடலுடுத்தசெகதலப்பொருட்களாற்
சாலுமோனமுனிவர்சிந்தைதானிறைக்கலாகுமோ. (௪௯)

கழைகொள்சாறுநிம்பநெட்டிலைக்கொள்வாரிகாஞ்சிரம்
பழம்வருக்கையுதவுமிக்கபழமரங்கொள்பாவைபா
மிழைகொளேமநாட்டரம்பையென்னுமங்கையாயினும்
விழைவதில்லையாயின்மேருவெற்புமற்பமாகுமால். (௫௦)

மாடியந்தபங்குமார்பின்மன்னன்மீண்டுமற்றிவை
கோடிகோடலொழிதிநீகொடுக்குமின்பபூரண
வீடிலாதமெய்ப்பொருட்குவிலையிதன்றுன்மெய்ப்பதஞ்
சூடியுண்மையருள்புரிந்துதொண்டுகொள்ளுகென்றனன். (௫௧)

பங்குவாயமுனிவினாவியரசன்வாய்மைபரிவினாற்
றங்குமில்லின்வாழ்வுபாவதருமமென்னுமிவைகளி
லிங்கியாவர்நெஞ்சுதூய்மையெய்துவார்களவர்களே
யங்கண்ஞானநிலைமைசேரவருகராகுமவர்கடாம். (௫௨)

இறைவநின்கணிற்கணிச்சையில்லையேனுமிருவினைத்
துறையகன்றிலாயிரண்டுமுற்பவங்கள்சூழுமா
லுறையும்யோகவாணரல்லரவையிரண்டுமொழிகிலா
ரறைவதுண்டுநீயடைந்ததெம்மைநம்பியாகையால். (௫௩)

வாழ்பொருப்பினீடுகந்தமாதனத்தின்மன்னமூன்
றூழ்புனற்றடங்கண்மேவுமவைகடங்கணாடினோ
ரூழ்வினைத்தொடர்ச்சிசாடும்வீடுநல்குமுதவிடுஞ்
சூழ்வுபெற்றபலவுநெஞ்சுதூய்மையாகுமக்கணம். (௫௪)

பின்றையுன்கணொழிவுருவகண்டவாய்மைபிறழ்விலா
வொன்றையோதல்செய்துமென்னமன்னனுள்ளமுவகையாய்
மன்றல்வாரிசத்திருக்கண்மலர்மலர்ந்தவல்லைபோ
யன்றவ்வாவிமூன்றுமாடியமலநெஞ்சனாயினன். (௫௫)

ஆனபின்பசும்புருதடங்கவிண்டகன்றவச்
சானசானசுருதிவந்துதனதுஞானதேசிகன்
மோனவாய்மைமுழுதுணர்ந்தமுனிரயுக்குவன்றனைக்
கானல்வாரிசம்பணிந்துகாதலோடுபேரசினான். (௫௬)

ஒருவராலுமடையொணாதவுணர்வுபெற்றவுறுவனா
விருவராய்வினீடுசோதியிமையமங்கைநாயகன்
கருவராதகதிவழங்குகழலலாதபிறவெலா
மருவராவகண்டஞானியாயினனவ்வரசனே. (௫௭)

வேறு.

இதரயுக்குவன்கண்டமூன்றாவிநீரிறைபவுத்திரன்சென்றுதோய்ந்தாசையா,லது
வெனப்படுபங்கநீங்கிநிலாவருளையுற்றிடுந்துங்கமாண்காதைதான், முதுமறைப்பல
ந்துன்றுநோன்போவிலாமுனிவிரிப்பழஞ்செஞ்சொலிங்கோதுவா,ருதுசெவிக்கொ
ளும்பண்பினுங்கேண்மையோருவர்பிறப்பகன்றொன்றுகாண்பார்களே. (௫௮)

முத்தீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௫௬௬.

# கோடிதீர்த்தச்சருக்கம்.

---

ஆடினோர்கள்பகீரதியாதிநீர், பாடின்மாதவிர்சேகரம்பத்தனைச்
சாடிவென்றவிராமன்றனிச்சிலைக், கோடிதீர்த்தங்குடைவரடைவினால்· (க)

கோசலேசன்குனிசிலைக்கோடிநீர், மாசுதீர்க்குமறத்தின்வடிவமா
யாசையெட்டுமகிலதலங்களும், பேசுகீர்த்திநலத்திற்பிறங்குமால். (உ)

சகலசெல்வந்தனக்குநிமித்தமாய், விகலமின்றிவிளங்கிடும்வெவ்வினைப்
பகலருந்தொடர்ப்பாலனயாவையு, மகலநீத்துபசாந்தியளித்திடும். (ங)

நனவினண்ணுமிடுக்கணுநன்றிலாக், கனவுநீக்குங்களையுங்களையெலா
நினைவுமாத்திரம்போதுநிலையுரு, வினைகள்யாவும்விளிந்துவிடற்கரோ. (ச)

நீர்முகந்திகழ்நீரிதுநித்தன்மே, னீர்முகந்தபிடேகநிரப்புவான்
கார்முகந்தகவின்கொளிராகவன், கார்முகங்கெழுகோடியிற்கண்டதால். (ரு)

எண்ணியாதபிடேகமெம்மீசனைப், பண்ணினானெனிற்கோசலைபாலகன்
கண்ணினீர்வரக்காதலினோதுகேள், புண்ணியந்தலைக்கொண்டபுலத்தினீர். (சு)

கூரம்பார்தனுநீலுருக்கொண்டுலாம், வீரம்போலுமிராமன்மிதிலைசே
ரீரம்பார்விழியேந்திழைக்கள்வனை, யோரம்பாலமரேற்றுயிருண்டநாள். (எ)

பிறைகொண்மூரற்பிரமக்கொலைமருட், கறைகழீஇயகல்காதறுரத்தலா
னிறைபொதும்பர்நெடுங்கந்தமாதனப், பொறையின்மல்குபொருப்பினைமேவினான்.

மேவியாயிடைமின்னிடைபாகனை, மாவிநாதனருட்குறிநாட்டியே
தேவிளம்பிறைச்சென்னியிலாட்டுவான், பூவிளைப்புனல்வேட்டெழும்புந்தியால். ()

அவ்விலிங்கத்தருகினிருந்துதான், கைவிலிற்கடைகொண்டுதன்காழுழாத்
தெவ்விலிப்படிசெய்குவனென்றபோற், குவ்விலிட்டுக்குடைந்தனன்மைந்தினால். ()

ஈன்றபோதுகிலேசம்படைத்திலா, ளான்றபார்மகளப்பணிச்சேக்கையி
லூன்றுமாழியஞ்செங்கையுகிர்நுதி, போன்றதவ்விற்றலைபிலம்புக்கதால். (கக)

ஆங்கிராமனகத்திடையன்பினா, லோங்குகங்கையையுன்னியச்சாபத்தை
வீங்குதோளின்வலிகொடுமீளவும், வாங்கினானவ்வழிவந்தெழுந்ததால். (கஉ)

பிலத்தினின்றெழும்பேரிசைக்கங்கையஞ், சலத்தினாலபிடேகமத்தாணுவி
னலத்தவேணியினண்பினிலாட்டினான், குலத்தகோசலகோமகன்றானரோ. (கங)

கார்த்தமேனியன்கைவிற்கடையினாற், பார்த்தலத்திற்பதிப்பப்பட்டதலாற்
கூர்த்தமூன்றுபுவனமுங்கோடிநற், றீர்த்தமென்னச்சிறந்ததித்தீர்த்தமே. (கச)

கந்தமாதனவெற்பிற்கடிகமழ், பைந்தடப்புனல்யாவும்படிந்தபி
னிந்தமாண்புனலாடுகவென்புசேர், முந்துதீவினைமுற்றுமுடிக்குமால். (கரு)

கூனல்வார்சிலைக்கோடியந்தீர்த்தநீ, ரூனனைத்தவருற்பவந்தீர்த்தலா
லேனைநீர்களினாற்பயனில்லையென், றானசூதனருந்தவர்க்கோதினான். (கசு)

அரியசூதனறைவதுகேட்டலுந், திரிபிஞேடுவிகற்பமுஞ்சேர்கிலாப்
பெரியமாதவராயம்பிறந்ததற், குரியசெய்கைவிஞவியுராசெய்வார். (கஎ)

தத்துவத்தொகையாயசயந்தன, முய்த்துருட்டுமுணர்வுடைச்சூதனே
மெய்த்தவேதவியாதன்விருப்பினல், வைத்தஞானநிதியுடைவள்ளலே. (கஅ)

ஓதுகின்றபுராணமீரொன்பதால், வேதமாண்பொருள்வேறுபடாவகை
யாதுமுண்மையியம்புநின்வாயினும், பேதையோரிற்பிறந்ததோர்வாசகம். (ககூ)

கோவிராமன்கொடுமரக்கோடிநீர், மேவிஞேர்க்கிலைவேறுளநீர்களா
லாவதென்றனையம்புவியோர்பிற, வாவுநீர்குடைந்தாடுதன்மம்மரோ. (உ0)

எங்கணெஞ்சமிரங்கவிளைத்தெழு, சங்கையின்றுதுடைத்தருள்சாற்றெனுத்
துங்கமாதவச்சூதனையேத்தினு, ரங்கண்வைகுமுனிவரவொலாம். (உக)

தொன்றுமுற்றுணர்சூதனவிற்றுவா, னன்றுசாலவுநான்மறையீர்ஃ
தன்றுகேட்டனனுாதனுதியை, யின்றுகேட்டனிர்நீவிரியம்புகேன். (உஉ)

மறிகருங்கடல்சுற்றியவையமே, லெறியுமொண்புனல்யாத்திரைக்கேகுவார்
நெறியினேர்படுநீள்புனலாலயங், குறியினுடுதல்கும்பிடல்வேண்டுமால். (உங)

வணங்கலாடன்மறந்தனர்போயினு, லிணங்குதீமையின்வீடவர்க்கில்லையாம்
பணங்கொள்பாந்தளின்மேற்பயில்பாரக, வணங்குதானுமவர்தமையெள்ளுமால்.()

இக்கணக்கிலிரும்புனலாடுவார், சக்கரத்தடமாதித்தடமெலாம்
புக்குமூழ்கியபின்னைப்புயலன்னுன், மிக்கவார்சிலைக்கோடிநீர்மேவுவார். (உரு)

என்னிமித்தமெனிலவற்றெஞ்சிய, புன்மையுள்ளனபோதற்பொருட்டதா
மன்னமுத்தர்க்கவண்வைகலின்றியே, பின்னையொல்லைபெயருதல்வேண்டுமால். ()

இராமனும்முனமிப்புனன்மூழ்கியே, யிராமநாதனையாட்டியிடரொழித்
திராமலேகினன்யாரொடுமாகையா, லிராமல்வேண்டுமிதுகுடைந்தோர்க்கெலாம்.

வானயாறதுமாண்பிலங்கீண்டெழீஇத், தானிலத்தில்வெளிப்படுந்தன்மையான்
ஞானதாரகநற்பிரமப்பொரு, ளானராகவனங்கிதிலாடலால். (உஅ)

சூட்டுந்திங்கட்சுடர்முடிவேணிமே, லாட்டியப்பிரமக்கொலையண்டிடா
தோட்டுஞ்செய்கையுளங்கொண்டிராகவன்,கோட்டுந்தண்சிலைக்கோடியினுக்கலால்

கோலும்வார்சிலைக்கோடிப்புனல்வள, ஞாலமேலெவர்நாடிநவிற்றுவார்
மாலுமற்றிதின்மாதுலற்கொன்றத, னலடைந்தபழிவிடவாடினன். (௩0)

கண்ணனுடினன்கஞ்சன்பழிகழீஇ, மண்ணினுர்க்குவரந்தருமாறெனு
வண்ணன்மாண்புடைச்சூதனருளலு, மெண்ணின்மாதவர்யாரும்வினவுவார். ௩க

யாதவக்குலமின்புறத்தோன்றினேன், மாதுலக்கொலைசெய்திடவந்ததென்
ஞேதிடப்பழிகோடியிலுற்றதென், சூதசொற்றருளென்றனர்சொல்லுவான். ௩உ

அதுவிரும்பியறிமினறவிர்காள், விதுவிரும்பும்விளங்கொளியானுளன்
யதுவிரும்புமிருங்குலவேந்தல்பேர், மதுவிரும்புமலர்த்தொடைச்சூரனே. (௩௩)

சேயவற்குத்திறல்வசுதேவனென், ருயகாளையவன்மனையாயினு
ளேயுமோமொழிற்றேவகியென்பவ, யேதேவகன்றன்வயிற்றேன்றினுள், (௩௪)

வேறு.

ஆனகதுந்துபிதேவகியென்பாளவளோடுங்
கோனகர்போதும்போதினில்வஞ்சங்கூர்கஞ்சன்
றானகறேரின்சாரதியானான்றனைநோக்கி
வானகமீதோர்வாணியெழுந்ததமருள்கூர. (௩௫)

கேண்மதிகஞ்சாநின்னொடுதோன்றுங்கிளர்சோதிப்
பூண்மடமாதைமைத்துனனோடும்பொற்றேரி
லாண்மையினேற்றிக்கொண்டுபடர்ந்தாயவனல்கு
மாண்மலிவீரமக்களினெட்டாமைந்தன்றான். (௩௬)

உன்னுயிர்கொள்ளும்பொய்யலமெய்யென்றுரைசெய்யத்
தன்னுயிர்காக்குந்தஞ்சம்விரும்பித்தளர்கஞ்ச
னென்னுயிர்நிற்குமிவளுயிர்போனாலெனநாடா
மின்னுயிர்கொள்வானுன்னியெழுந்தான்விரைவோடும். (௩௭)

அத்துணைகஞ்சன்றானமர்வண்ணமருள்கூறி
மைத்துனனோதுமைந்தர்களன்றேவதைசெய்வார்
முத்துறழ்மூரலாவ்முடித்தென்முகிலோதித்
தத்தையளிக்கும்பாலனைநின்கைத்தருகின்றேன். (௩௮)

வஞ்சியையாவிவெளவலையென்றான்மன்றாடா
வஞ்சலைநன்றென்றம்முறைசெய்வானவரோடுங்
கஞ்சனுமீளத்தேரைநடாத்திக்கடிதேகி
மஞ்சிவரிஞ்சித்தன்பெருமூதூர்வந்தற்றான். (௩௯)

ஏறிருகால்சேர்தேரினிழிந்திட்டிவர்மக்கட்
பேறிருகானாலாயிடுகாறும்பெயராமல்
வேறிருகாலினங்கவர்தம்மைவிலங்கிட்டான்
சீறிருகால்சேர்தீயவிலங்கிற்றிரிகஞ்சன். (௪0)

கார்மதமுண்டாமளவுமடங்குங்கரிபோலுங்
கூரிசைதோன்றுந்துணையுமடங்குங்குயில்போலுஞ்
சார்புயர்கண்ணன்றம்மகவாகத்தருகாறுஞ்
சேர்புகழோரிருவோருமிருந்தார்சிறைதன்னில். (௪௧)

அவ்வழிநீடுந்தேவகிகேள்வனவனீனுஞ்
செவ்வழியெல்லாங்கஞ்சனகையிற்செலவுய்த்தான்
வெவ்வழிநின்றான்கொன்றனனெல்லாம்விளிவுற்றா
ரிவ்வழிதானோர்மூவிருமைந்தரிதன்பின்னர். (௪௨)

கருவினிலேழாமதுதனைமாயன்சடிமாயை
குருமலிநந்தகோபனதில்லங்குறுகுற்ற
வுருவுடைரோகிணியுந்தியிலுய்த்ததிவ்வுலகெல்லா
மருவுகருப்பம்வீழ்ந்ததுதேவகிவயினென்ன. (௪௩)

வெந்திறன்மாயாதேவியம்மாயன்விதிநிற்பாண்
முந்துகருப்பம்வேறயல்வைத்தபின்முகில்வண்ணன்
செந்துவர்வாயாடேவகியுந்தித்திருவாலம்
பைந்தளிருற்றான்பண்டுதுயின்றயழக்கத்தால். (௪௪)

மாதமொர்பத்துமுற்றியபிற்றைவசுதேவன்
பேதைவயிற்றின்வந்துபிறந்தான்பிறழ்செங்கைப்
போதொருநாலுநேமியும்வாளும்பொருதண்டுஞ்
சீதநிலாவெண்சங்கமுமாகித்திகழ்கண்ணன். (௪௫)

சூரியகோடிநிலாவுகிரீடச்சுடர்வீச
வேரிகுலாவும்பூவனமாலைமிளிர்தொங்கற்
பாரியதோளிற்பேரொழின்மல்கப்படியுண்ணுஞ்
சீரியவண்ணக்கண்ணனன்மேனிசிறந்தன்றே. (௪௬)

தந்தவர்துன்புமன்பர்பிறப்புந்தலைசாய
வந்தருள்கண்ணன்கண்குடிகொள்ளவசுதேவன்
பைந்தொடிநங்கைதேவகியோடும்படர்நீங்கி
யிந்திரைகேள்வன்பேரிசைநாடியியம்புற்றான். (௪௭)

நீயுலகானாயுலகுடையானுநீயேயா
லேயுநிமித்தந்துணைமுதலாகுமிறையோனே
மேயமகத்தோடப்பிரதானம்விராட்டன்றி
யாயசுராட்டுமெச்சமிராட்டுமானானே. (௪௮)

பூப்புனறீகால்வானிவைநல்கும்புவனங்கள்
கோப்பவனந்தீநீர்நிலனைந்துங்குலையாமற்
காப்பவனீயானின்கணிவற்றின்கண்ணாகும்
யாப்பவைதங்கட்குன்னுழையல்லதையார்பாலே. (௪௯)

வெங்கொலைவாளுந்தண்டமும்வில்லும்வெண்சங்குந்
தங்கியவங்கைச்சீயநிகர்க்குந்தனிவீரா
வுங்கெவர்காண்பார்வையமளந்துண்டுயர்வண்ண
மிங்கிவளுந்திப்புக்கமைவுற்றவிறும்பூதே. (௫0)

நாந்தகையில்லாமக்கண்முகுந்தாஞானநீ
யேந்தலைவேலைஞாலமும்வானுமெல்லாமுந்
தாந்தனிதோற்றுந்தந்தையும்யாயுந்தானாய்நீ
யாந்தரவந்தோனென்னவுநின்றாலென்சொல்கேம். (௫௧)

ஐந்தமரேதிப்புங்கவநீயிங்காள்கென்றா
னந்தமர்செங்கைநாதனுமெல்லெனநகையாடி
வந்தனைகூறுந்தந்தையும்யாயுமகிழ்வெய்த
முந்தையின்ஞாலம்வாய்வழிதோன்றமொழிகுற்றான். (௫௨)

வம்மினிராயுமையனுநீவிர்மருடீர்மி
னும்மைவருத்துங்கஞ்சனுயிர்ப்பாலுண்பான்யா
மிம்முறைவந்தேமெம்பெருமாயையையீன்றாளால்
வெம்முலைமைத்தண்கோதையசோதைவிளக்கன்னாள். (௫௩)

கொய்யுமுறித்தண்கோமளநந்தகோபன்றோய்
தையலளித்தாள்பாயலிலென்னைத்தனையெல்லா
முய்யவிருத்தமாயையையீன்றாளுயர்சேக்கை
வையம்வழுத்துஞ்சீர்வசுதேவாவையென்றான். (௫௪)

அக்கணமப்பனுமப்படிசெய்தனனுய்பாங்கர்
வைக்குமம்மாயைகிடந்தழலுற்றனன்மாமன்றன்
மெய்க்குலமாதரழுங்குறிகாட்டும்விருப்பாள்போ
லிக்குரல்கஞ்சன்வினுயவனுற்றனனிகன்மிக்கான். (ருரு)

உற்றவணங்குடறூக்கியெடுத்தவனுயர்பாறை
யெற்றினனன்பிலன்மானமுமெண்ணிலனிதுபோழ்தின்
வெற்றிகொண்மாயைகரங்களொரொட்டினுமிளிர்தானே
பற்றிமுனிந்தவனங்கையிறுத்திதுபகர்கின்றாள். (ருசு)

துன்மதிமூடரின்முன்வருகஞ்சாதனையாதே
நின்மதிநின்கூற்றுற்றதுவேறூர்நிலையின்க
ணன்மதியில்லாய்நாடுதியென்னாநகைமாலைப்
பொன்மதியானனவல்லியொரொல்லைபுகுந்துற்றாள். (ருஎ)

ஆண்டவள்பூசையளப்பிலகொண்டருளடியார்கள்
வேண்டியநல்வரநல்கியிருந்தனள்விழைவோடு
மாண்டகைகஞ்சனுமம்மொழிகேட்டுளமயர்வாகிப்
பூண்டபதைப்பொடுமுற்றனன்மற்றிதுபுரிகின்றான். (ருஅ)

சீலக்கிரமச்சிந்தையில்கஞ்சன்சினமூளா
வாலக்கிரகப்பூதனைமுன்னுவளர்தானைக்
கோலக்கடியைத்தன்பகையாருயிர்கொள்வானுய்ப்
பாலக்குழுவைக்கொல்லுதியெனென்றான்பரிவோடும். (ருக)

என்றிசைபித்தக்கஞ்சனிசைக்குமிசைகேளா
வன்றவணப்பேயீட்டமிழைத்துமஃதென்னுச்
சென்றுசினக்கும்பேய்களையெல்லாஞ்சிறுபோதிற்
கொன்றனனந்தகோபகுலத்திற்கோபாலன். (சு0)

ஆனபிறனிளைதன்னுள்வளர்ந்தனரடன்மேவுந்
தானிகர்வெள்ளையுமாயனுமைந்தர்கடாம்பல்லோ
ருனமில்சூழலொடேதுபுவேய்ங்குழலூயராவின்
கானமர்கற்றினமேய்த்தனர்தாஞ்சிலகாலங்கள். (சுக)

கண்டவரின்புறராமனும்வண்டறைகாயாவின்
றண்டுணர்வண்ணனுமுள்ளநிரம்புதருக்சோடும்
பண்டையதங்கள்பழக்கமிகுத்தெழுபண்பாலே
யண்டர்குழாத்தொடவ்வானிரைகாத்தனரவர்சின்னாள். (சுஉ)

இந்நிலைவெஃகியவாடலிழைத்தவரிருவோரு
மன்னுயர்கோகுலம்வைகினர்மாதுலன்மற்றந்நா
ளன்னவர்தம்மையுடன்கொணர்வுற்றிவணடைவாய்நீ
யென்னவுரைத்தக்கூரனையேவினனெண்ணுதான். (சுரு)

சேகுலவுள்ளக்கஞ்சன்விடுப்பத்திகழ்தெய்வக்
கோகுலமேலக்கூரனுமேகுபுகுழலூதி
யாகுலநீக்காவானிரைகாக்குமவர்தம்மை
மீகுலவும்பர்வியப்பவழைத்துடன்மீண்டுற்றான். (சுச)

கடமலிமத்தக்கரியுறழ்கஞ்சன்கற்பாலே
வடமதுரைக்கண்வைத்தவர்தம்மைவந்தன்னே
னுடனவனுற்றுக்கொண்டணைசெய்கையுரைசெய்தே
தடமணிமார்பக்கூரனடைந்தான்றனதில்லின். (௬௫)

மற்றையவைகலுச்சியதன்பின்மதில்வெற்பு
முற்றகிடங்குங்கொண்டலுறங்குமுயர்மாடப்
பொற்றெருவெங்கும்புகழ்மதுரைக்கட்பொலிவெல்லாஞ்
சுற்றுபுநோக்கினர்கண்ணனுநீலத்துகிலோனும். (௬௬)

கோலநிலாவொருகுண்டலன்மாலிவர்கோபாலர்
பாலர்குழாத்தொடுபட்டணமாண்பதுபார்க்கின்றார்
மேலவர்பேரொளியல்லதுகாண்கிலர்விரையோதி
வாலநிலாவுறழ்வாணுதன்மான்விழிமடநல்லார். (௬௭)

தந்தையர்தங்களைமைந்தனினுடினர்தனுமுன்னம்
வெந்ததுமேவியதன்றியிரண்டுவிளங்காகம்
வந்ததெவ்வாறெனமாமதுராபுரிமறுகெல்லாஞ்
சிந்தையின்மாலொடுபின்றொடர்புற்றனர்திருவன்னார். (௬௮)

காதலினோடணைகன்றெறிகைத்துணைகாணுமுன்
னேதமில்செங்கையிலங்கியகன்றையெறிந்திட்டார்
தீதுறுபேய்த்தனமான்மிசைவுற்றிடுசெயனுடா
மாதர்கடாமிசைவுற்றனபேய்த்தனமயன்மிக்கார். (௬௯)

இடையர்தமிற்பாலாடைகவர்ந்தானிவனென்று
வடைவுறுதம்பாலாடையளித்தாரணியாழிக்
குடையவனென்பாரங்குவியாழியொருங்கீந்தார்
தொடையவிழ்கூந்தற்றோகையர்மோகமொர்துணையின்றால். (௭௦)

வேறு.

மையுருவத்திருமாயன்மடவியனைத்தானேக்கிவயங்குமுன்னேன்
மெய்யுருவமவர்க்குதவிவிருப்பினெடும்படர்காலைவில்லொன்றுங்க
ளுய்யுமொருநிலைச்சேமத்துறைவதுகண்டோடியருளுததிபோல்வார்
வெய்யவராயவண்காவல்புரியுமவர்தமைவெருட்டிவிரைந்தெடுத்தார். (௭௧)

எடுத்தசிலைதனைநாரியேற்றவளைத்திடமுறிந்ததிரண்டாயோதை
யடுத்ததகிலாண்டமெல்லாமதுவினவிப்பலரடைந்தாராடன்மிக்கோர்
தொடுத்ததனுத்துணியிரண்டாலவர்கடனுத்துணிப்படுத்திச்சொரியுந்தான
மடுத்துலவிவாயில்பயில்வயக்குவலயாபீடமருப்பைப்பேர்த்தார். (௭௨)

உரங்கொண்மதகயமருப்பைத்திருப்புயமேற்கொண்டவர்தாமொல்லைக்கஞ்ச
னரங்கமதிற்புகுந்தனர்களவணிருக்குமல்லர்தமிலதிகரான
வரங்குலவுசாணூரமல்லனையுமுட்டிகமல்லனையுமுன்னு
விரங்குதிறற்படைமல்லரொல்லையில்லாருயிர்கவர்ந்தாரிருவர்தாமும். (௭௩)

விஞ்சுதிறலிருவர்களுமற்றதன்பினவையினடுவிளங்குமம்பொன்
மஞ்சமிசையிருந்தனர்களெதிரிருக்குமாதுலனைமதியாரங்கட்
கஞ்சனதுகளிதெரிந்துவெகுண்டெழுந்துகண்ணனவன்கால்கள்பற்றி
யெஞ்சும்வகையெடுத்துயரச்சுற்றிநிலமிசையடித்தானெவருமஞ்ச. (௭௪)

அடித்தலுந்தன்னுடல்சிதறிக்கஞ்சனுந்தென்றிசையடைந்தானவனைப்பின்னோன்
முடித்ததற்பினவற்கிளையோனொண்மரையுமுன்னவனுமுசலிவானில்
வெடித்தவுருமெனவிழுமோர்குற்றதனுன்முற்றுவித்தான்வெண்சங்கங்கைப்
பிடித்தவன்பின்சிறைவிடுவித்தருள்புரிந்தான்றனைப்பயந்தபெரியோர்தம்மை. ௭௫

பின்புமதுராபுரியிற்கஞ்சனுலலைப்புண்டபெருஞ்சுற்றத்தா
ரன்பிலனுங்கஞ்சனுக்கஞ்சிப்புரியைவிட்டிதுகேட்டணைந்தோர்க்கெல்லா
மின்பமொழிபலமொழிந்ததலையளிசெய்தானிரைகள்யாவுங்காக்க
மின்பிறங்கும்புயலகடுகிழிக்குங்கோவர்த்தனமேவிடுங்கையானே. (௭௬)

இக்கிரமத்தியல்புரியுங்கஞ்சனிலைகுலைந்ததற்பினிருந்தநாட்டை
யுக்கிரசேனனுக்குதவிமாறனைக்காணியவணைந்தவுறுவர்தம்முள்
வக்கிரமினாரதனைமுகந்தெரிந்துமாதுலனைவதைத்தசெய்கை
யக்கிரமமென்குநர்மற்றனையபழிகழுவும்வழியறைநீயென்றான். (௭௭)

நண்பினொடுநாரினொடுநாரதன்கேட்டதற்குவிடைநவிலுகின்றா
னெண்பரமமுதலாகியொளியாகியானந்தவுருவமாகிப்
பண்புசெயல்பேருருற்பவமிறுதிபிணிவீடுபயிலாதாழிக்
கண்படுமாதவனினக்கோர்நல்வினையுந்தீவினையுங்கலப்பதுண்டோ. (௭௮)

எனினுமிஃதுயிர்களெல்லாமிழைப்பவிழைத்திடல்வேண்டுமிராமசேதுத்
தனிலிலகுதடங்கந்தமாதனத்திற்சிவலிங்கந்தாபித்தாட்டற்
கினியபுனலிராகவன்வேட்டிராமேசன்றனக்கயற்பாரிடந்துவில்லி
னுனியதனுற்பாதாளகங்கைதனைவரவழைத்தானென்மைமிக்கான். (௭௯)

உன்றனக்குமுன்னையதாமவதாரத்திராவணனையுயிர்கொள்பாவ
மன்றகலக்கவுசலைசேயழைத்தநெடுங்கோடிதனிலாடினீயு
மின்றொழியும்பழியிஃதென்றியம்பினன்மால்விடைமுனிவர்க்கீந்தபோதே
சென்றனனச்சேதுவினின்மாதுலனைக்கொன்றபவந்தீர்க்குமாற்றால். (௮0)

கோடியிடத்தினிதியற்றிச்சங்கற்பங்கவிகைபலகோடிநல்கி
யாடியடன்மாமனுயிரழித்தவினைக்கரையேறியதற்குப்பின்னர்
நாடியசீருடைராமநாதனிருபதந்தொழுதுநந்தகோபன்
றேடியநற்றிருவனையான்வடமதுரையிடம்புகுந்தான்சிறப்பினோடும். (௮௧)

வேறு.

மெய்த்தவத்தினிர்காளிதுநத்தினோன்வெற்றியிற்கிளர்மாமனையட்டவா
றித்தகைத்துயர்கோடியெனச்சொனீரிச்சைவைத்திஃதேவர்நவிற்றுவா
ரத்தவர்க்கிலைவேதியராக்கொறீதற்பினுற்றிதிலாடியமுத்தர்பான்
முத்தொழிற்குரியோருமுவப்பர்தாமுச்சகத்தினும்வேறிலையொப்பதே. (௮௨)

கோடிதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௬௪௮.

---

# சாத்தியாமிர்ததீர்த்தச்சருக்கம்.

ஒளிவளர்சூதனுவப்பினின்மீளவுமுரைசெய்வான்
றெளிவளர்மாதவிர்கேண்மினிர்கோசலைசேய்நல்குந்
தளிவளர்கோடிதடம்படிவுற்றிடுதக்கோர்சென்
றளிவளர்சாத்தியவாரமுதத்தடமதுதோய்வார். (௧)

ஏத்தியனன்னீரிங்கிதின்மூழ்கினரிடர்வஞ்ச
நீத்தியல்கூருநல்லறம்யாவுநிலைசெய்யு
மேத்தியமாக்கும்புந்தியுமன்னேர்விழைவெல்லாஞ்
சாத்தியமாக்குஞ்சாத்தியதீர்த்தத்தடமம்மா. (௨)

ஆர்கெழுசாத்தியவாவியின்மூழ்கிடுமறமுள்ளோர்
சேர்கதிவேள்விகள்செய்தவர்செய்தவர்சேர்கில்லார்
போர்கெழுமைம்புலனேடுபுறந்தருபுலமிக்கோர்
யார்கதியாயினுமிப்புனலாழ்கதியிணையாகா. (௩)

தானிகர்சாத்தியவாவியினீள்புனறரைமேல்யார்
மேனியிலுற்றதுமற்றதுபற்றியவினைதீரு
மானதடத்தினிலகமருடத்துடனுடற்றேர்
மானிலைபுக்குயர்மேதகுமாண்புடன்வதிவாரே. (௪)

மூற்பருவத்திடைதீவினைமுற்றினர்மூப்பெய்தும்
பிற்பருவத்ததுநீக்கநினைந்ததுமிமையோரா
யற்புறுசாத்தியவாவியின்மூழ்கிடினருணன்சூழ்
புற்பனிபோல்வினைநீங்கிடுமையுறல்பொருளன்றல். (௫)

வன்பவநீக்குவர்சாத்தியநீரின்மகிழ்ந்தாழ்வா
ரொன்பதில்வைகிடுமெத்துணையத்துணையாண்டெல்லை
மின்பயில்பங்கிறைமெய்ப்பதமேவுவர்வினைசாடிப்
புன்படர்கங்குறுரந்தெழுசெங்கதிர்போல்வாரால். (௬)

வம்பவிழ்பூந்தொடைவேந்துபுரூரவாவென்பான்
றும்புருசாபமகற்றியவிப்புனறேய்ந்தந்நா
ளும்பரின்மேவுமுருப்பசிநீக்கமொழிந்துய்ந்தா
னம்புவிமேலிதின்மேதகுசால்புடையறனுண்டோ. (௭)

ஈங்கிதுகூறியசூதனைமாதவரொல்லோரு
மோங்கியசூர்ப்பெணுருப்பசிமணமகனுலகாள்வோ
னுங்குயர்தும்புருசாபமணைந்ததெனவையாவும்
யாங்களுளங்கொளுமாறருள்செய்குதியென்றூர்கள். (அ)

அன்றேர்புரூரவாவெனுமன்னவனமரேசன்
வன்றிறலாண்மையுமந்திரிவாழ்வுமரீஇயுள்ளான்
வென்றிகொள்வேள்வியுமெண்ணிலவீகையும்வினைமுற்றிப்
பொன்றிகழ்பூமியரோத்தமண்ணடுபுரந்தற்றேன். (௯)

செருப்பயின்மொய்ம்பிணையே துணையாவெறிதிரையாடைப்
பொருப்புறுபூண்முலைமண்மகடோளிணைபுணர்காலை
யுருப்பசிமித்திராவருணன்புகலுயர்சாப
நெருப்பில்வெதும்பினள்சேணிலநீத்தனணிலனுற்ருள். (௧௦)

வேறு.

ஊண்டகுமமுதத்தீஞ்சொலுருப்பசிவிருப்பின்மேவி
மாண்டகுபுரூரவாவின்மாநகர்மருங்கோர்காவிற்
காண்டகுவேழவில்லிகாளங்கறங்குமாபோற்
பாண்டகுவீணையேற்றிப்பாடினுள்பவளவாயால். (௧௧)

மாடகமுறுக்கியாழின்மாண்பிணியிறுக்கிப்பத்தர்த்
தாடகச்செவ்விநாற்றித்தந்திரித்தளர்வுநீக்கிப்
பாடகப்பதுமமென்ருட்பாசிழைபாடலுற்ருள்
கூடகம்புக்கவாவிக்குழுவெலாங்குழையவுள்ளம். (௧௨)

மண்டியபுள்ளுமாவுமருங்குறீஇமயங்கிச்சோரத்
தண்டளிர்ப்பொதுளப்பட்டதருக்குலந்தயங்குமாலைப்
பண்டருவீணைவாங்கிப்பாடுவாள்பண்டுசேணி
லண்டவாரமுதைமீளவுமிழ்ந்திடுவாளையொத்தாள். (௧௩)

வெவ்விசையங்கூர்பானுமேனியுங்குளிரமெல்லென்
றிவ்விசையங்கூர்தீஞ்சொலேந்திழைபாடலோடுந்
தெவ்விசைநாடுகொண்டசேனைகாவலர்மாற்றம்போ
லவ்விசைபுரூரவாவினஞ்செவியுற்றதங்கண். (௧௪)

நல்வழியான்பாற்பெய்தநறுமதுத்தாரைபோலச்
செல்வமார்களிப்பினீடுசெவித்துணைபுக்கபாடன்
மல்வளர்புயப்புரூரவாவெனுமன்னன்கேட்டச்
சொல்வழிமடவார்சூழத்துரகமேற்கொண்டுபோந்தான். (௧௫)

போனபின்புரூரவாவப்பொருசிலைப்புரூரத்தாளைக்
கானுறுகாவில்வாழுங்களிமயிற்பெடையிற்கானூஉ
வானசீர்த்தாரமாநீயாகிலாதாரமெய்தி
யானுயிர்பிழைப்பனங்காயென்றுபின்னிரந்துநின்ருன். (௧௬)

அன்னவளதனைக்கேளாவாவல்கொண்டமூங்கித்தானு
மன்னவர்மவுலியன்னுய்வழங்கியமாற்றநன்று
லென்னுளங்கேதந்தீரவெனக்கொர்சங்கேதஞ்சொன்னு
னுன்னுடைமனைவியாவலுண்மையீதெனவுரைத்தாள். (௧௭)

தரணிகாவலனுநன்றேதையலாய்சாற்றுகென்ருன்
புரணவாட்கண்ணிசொல்வாள்புதல்வராந்தகரிரண்டு
மரணமாயளிப்பாய்மிச்சிலளித்திடாயன்றியென்றன்
றிரணெடுங்குறங்கிலாடைதீர்ந்தியான்றெரியகில்லாய். (௧௮)

சொல்லுமிம்மூன்றுஞ்செய்தாற்றப்புத்துப்பாக்கித்தோன்று
வில்லுனக்காவலென்ருளிறைவனுமினிதேயென்று
வல்லுறழ்நறுமென்கூந்தலந்துவராம்பற்செவ்வாய்
வல்லுறழ்முலையினுளைமனைவயிற்கொண்டுசென்ருன். (௧௯)

கிளர்மனைநீங்கிமன்னன்கிஞ்சுகவிதழியோடு
மளகையுற்றெறிநீர்வாணியதன்கரையன்னமாடுந்
தளமலிமலர்நீர்வாவிச்சயித்திரரதமென்றோதும்
வளமலிவனத்துட்புக்கான்மாரன்மேல்வயிரமிக்கான். (௨௦)

அடிபயில்சிலம்புவம்பிலணிந்தனிர்வம்பையந்தோ
வொடிவுறுமருங்குலென்பதுணர்ந்தனன்போலநீக்கிக்
கடிகமழ்கொங்கைபுல்லிக்கலந்தவளோடுமுற்றான்
முடிமிசையொன்றுகொண்டமூவிருபஃதாண்டங்கண். (௨௧)

ஒக்கலுமும்பர்நாடுமுருப்பசிமறந்துவிண்ணோர்
மக்களிற்சிறியரென்பாண்மன்புயமணித்தூண்செய்த
மிக்கசீர்ப்பாவையாகிவிலங்கன்மேன்மயிலாய்வேந்தன்
றக்கதார்மார்பினுளுந்தானுடன்றழுவியுற்றாள். (௨௨)

வண்ணவேற்புரூரவாவாமன்னனோடிணங்கிமண்மே
னண்ணுமிந்நாளின்முன்னுணன்முகன்றந்தைநல்கு
முண்ணமுதுடையதேவருருருப்பசியென்றோதும்
பெண்ணமுததனைவெஃகிப்பெரும்பசியுழந்ததன்றே. (௨௩)

இந்திரனூரேர்செய்வானியல்விசுவாவசுப்பேர்க்
கந்தருவன்றுனின்னோர்கண்டுயில்பாயலெய்திச்
செந்திருப்பசிதீர்காட்சித்திகழுருப்பசிமாடுற்ற
வுந்துதளிரண்டிலொன்றையொல்லைகொண்டும்பருற்றான். (௨௪)

உரங்கொடுபற்றியீர்ப்பவுதளெனுமதலைகூப்பிட்
டிரங்கியததனைக்கேளாவேந்திழையேம்பலித்தென்
வரம்பெறுமகற்கொண்டாரோவானிடைப்படர்வார்மற்றூர்
பரம்புகற்பாலேனிங்கென்பாலனைவிடுத்தற்கென்றாள். (௨௫)

வள்ளிழைமாற்றங்கேட்டமன்னவன்மங்கையெம்மை
நள்ளிருளாடல்செய்யினக்கனுக்காண்பளென்று
வுள்ளமேலமைந்தான்மற்றையுதண்மகவினையுந்தூக்கித்
துள்ளிடக்கொண்டுபோனார்சூழிசைத்தலைவர்விண்மேல். (௨௬)

கரவுசால்கள்வர்கொண்டார்கான்முளையிரண்டுமந்தோ
வுரவுசாலரணமாவாரொருவருங்காணேனென்று
வரவுநேரல்குல்வல்லியாற்றலுமாற்றானண்ண
லிரவெனுமுடுக்கைபெற்றானென்னவாளேந்திநேர்ந்தான். (௨௭)

பட்டிகர்போகல்போகல்பான்மைகூர்மக்கடம்மை
விட்டனிர்போமினென்றுமிடலொடுதொடரும்போழ்தி
லெட்டிசைவீணைவல்லோரோவலாலிருள்விண்டோடச்
சட்டெனவெழுந்தாங்கோர்தயங்கொளிமின்னுத்தானே. (௨௮)

சம்பைசூழ்விளக்கந்தன்னுட்டையலாடனதுகேள்வன்
பைம்பொனீளறுவைநீத்தபடிவினைத்தெரியப்பார்த்தா
ளும்பர்சேரிசைவல்லோருமுதளிரண்டும்பர்விட்டுத்
தம்பதியடைந்தார்சொன்னசபதமுந்தவிர்ந்ததன்றே. (௨௯)

அத்துணையகன்றபோனாளாயிழையவனிகாப்போன்
மைத்துணையோடுமீண்டுமணங்கமழமளிநாப்பண்
பைத்துணையல்குற்காணான்பருவரலுழந்துநீங்காப்
பித்துணைந்துய்க்கையின்றிப்பெயரிலுழிதர்கிற்பான். (௩0)

இருநிலந்தன்னிற்றீராவிடும்பைகொண்டலைவானோர்நாட்
குருநிலந்தன்னிலுற்றான்குளிர்மலரோடைதன்னுண்
மருணிலவோதிநால்வர்வானவர்மகளிரோடு
முருநிலவெழில்கூர்தெய்வவுருப்பசியாடல்கண்டான். (௩௧)

பூவையைப்புணர்ந்துகண்ணாற்புரூரவாவாவாபொன்னம்
பாவைநேர்பவளச்செவ்வாய்ப்பால்வளாய்பசும்பொற்றொடாய்
மேவியங்குறையாதென்னைவிட்டுநீபோந்ததென்னோ
தீவினையிழைத்தாயென்னாச்சிந்தைநொந்தழைத்தான்பல்கால். (௩௨)

காரிகைகேட்டுவீணைகழறலையொன்றுநின்பா
லேரியல்கருப்பமுற்றேனீரைந்துதிங்கட்பின்னர்ச்
சேரிவணறத்தின்சான்றசேயுனக்குளதாம்பின்ன
ரோரிரவணைவேனுன்னையுள்ளலைபோதியென்றாள். (௩௩)

அண்ணறனகரம்புக்கானாயிழைதோழிமார்தந்
தண்ணளிவதனநோக்கித்தையலீர்சார்ந்தவேந்த
னெண்ணியவேடங்காட்டுமென்னொடுபன்னாளின்ப
நண்ணிவீற்றிருந்தான்யானுநண்புகொண்டணைந்தேனென்றாள். (௩௪)

சேடியர்கேட்டெமக்குச்சேயிழாய்வேண்டுஞ்செம்ம
லோடினிதுறைவதென்றாருற்பவமாகும்வேலை
நாடியவ்வரசன்மீண்டுநண்ணினனங்கணங்கை
வாடில்சீராயுவென்னுமகப்பயந்தவன்கையீந்தாள். (௩௫)

அளித்தபின்மன்னனோடுமன்றிராவொன்றுமேவிக்
களித்தனண்மகவோரைந்துகாட்டிடுங்கருப்பமுற்றாள்
விளித்தனள்வேந்தையென்மேல்விருப்பினால்வீணைவல்லோர்
தெளித்தநல்வரங்களீவார்சென்றவர்ச்சேர்தியென்றாள். (௩௬)

கேட்டஃதிறைவன்வல்லேகின்னரர்தம்மின்மிக்கோர்
மாட்டணைந்திறைஞ்சியானோர்வரங்கொளவந்தேனும்பா
லீட்டுமாண்செல்வமிக்கேனெழிலுருப்பசியோடென்றுங்
கூட்டுறீஇயிருத்தல்வேட்டேன்கொடுத்தருள்செய்மினென்றான். (௩௭)

அனையவரதனையீவாராரழற்றாலி*யொன்று
தனையவன்பாணிநல்கித்தார்கமழ்மார்பகேண்மோ
வினையதைமூன்றுகூறிட்டெச்சநீயிழைத்திட்டாயே
லனையகன்றொழிதல்செய்யாளுருப்பசியென்றுமென்றார். (௩௮)

வாங்கியதழலைமீண்டுவருமவன்வனத்தினுப்ப
னாங்கொருநினைவுநேர்ந்தானற்புதமந்தோவந்தோ
யாங்கருத்திழந்தேம்வாளாவெமக்குருப்பசிவந்தெய்தா
ளோங்கழற்றாலிதன்னாலுறும்பயனென்றுமின்றால். (௩௯)

---

* தாலி—மட்பாத்திரம்.

சுடுங்கனலிதனைவீணேசுமப்பதென்னென்றியாரு
நடுங்குறுகாட்டில்வைத்துநரபதிநகரிற்போனான்
கடுங்கனற்றுலியன்னாள் கழுத்தணிதாலியாகிக்
கொடுங்குழையவள்சேர்நாடுகொடுத்திடுங்கொள்கைதேரான். (சo)

காவலன் காதனீடிக்கண் படான்கங்குனப்ப
ணேவிலாதென்றுநங்கையுருப்பசியுலகஞ்சேரத்
தாவில்சீர்வீணைவல்லோர்தருந்தழற்றுலிதன்னை
யாவரும்வெருவுங்காட்டிலிருத்தினேமென்றுநேடி. (சக)

அந்நிலையெழுந்துபோகியடவியுளதனைக்காணான்
வன்னியுட்பொதியோர்போதிமற்றவணிற்பக்கண்டா
னின்னதாயினதாலந்தவெரியுநற்றுலியித்தை
நன்னகர்நாங்கொண்டேகிநலங்கெழுபலகையாக்கி. (ச௨)

வெங்கனலெழுப்பிச்செய்தும்வேள்வியென்றெண்ணிவேந்த
னங்குலியாறுநான்காலரணிசெய்தழலுண்டாக்கிப்
பங்கொருமூன்றுபண்ணிப்பாய்தழலவற்றினெல்லாஞ்
சங்கையின்மகங்கடந்தான்சதுர்மறைவிதிவழாமல். (ச௩)

உயர்மகமிழைத்தபேற்றாலுருப்பசியோடுங்கூடி
யியல்புழியாழ்நர்வாழுமிடமெலாமினிதினேகிப்
புயல்வளர்கவிகைச்செங்கைப்புரூரவாப்புணர்ப்பினீடி
மயலகன்றின்பமெய்திவைகினான்வைகுநாளில். (சச)

வேறு.

சுந்தரவாய்மைத்தும்புருநாதந், தந்திடவிண்ணோர்தாம்புடைசூழ
வந்தரமின்னாராடல்பயின்றா, ரிந்திரனென்பானின்பொடுகண்டான். (ச௫)

தொல்குலவானோர்சூழ்ந்திடவின்ப, நல்கிடுநட்டநாந்தெரிவோமென்
றொல்குமருங்குலுருப்பசிகாதன், மல்குபுரூரவாவுமடைந்தான். (ச௬)

மாமைநலங்கூர்வானகமின்னார், தாமுறைவண்ணந்தந்துநடித்தா
ராமளவின்கணடைந்தவழக்காற், காமருருப்பசிகண்ணுள்புரிந்தாள். (சஎ)

எள்ளலிலாடலிழைத்திடுமாண்பா, லுள்ளமதர்ப்பிலுருப்பசியென்பாண்
மெள்ளநகைத்தாள்வேந்தனைநோக்கா, வள்ளல்புரூரவாவுநகைத்தான். (ச௮)

பாங்குறுபல்லோர்பண்ணவர்நாப்ப, ணீங்கிவரேதுவின்றிநகைத்தார்
நீங்குகவென்னாநீடியசாபந், தாங்கலினுசான்றும்புருவிட்டான். (ச௯)

மாசில்புரூரவாமகவானை, யாசிலடைக்கலமாவடைகுற்றே
னீசிறிதாளநினைந்திடுகென்னா, வேசறவோடுமிரந்தனனங்கண். (௫o)

கட்டறுகாதல்கருத்துறலாலே, மட்டின்மகங்கள்வருந்திவளர்த்தே
னெட்டிமருங்குலுருப்பசிதன்னை, விட்டிடுமாறெனவிண்ணவர்கோவே. (௫க)

இத்துயர்தீரவிரங்கெனவுள்ள, மொத்துயர்கொங்கையுருப்பசிதன்மேல்
வைத்தபுரூரவாவினைநாடா, வித்தகவிண்ணோர்வேந்தனிசைப்பான். (௫௨)

சாபமகற்றுந்தன்மையுரைப்பே, நீபயமெய்தனிலங்கொள்புரூரா
வாபயில்கோசலமன்னர்குலப்பொற், றீபமிழைக்குஞ்சேதுவதன்பால். (௫௩)

ஆழியசாத்தியாமிர்தமென்னுஞ், சூழியதண்டுசூழ்ந்திடவீறு
மேழிசையாழ்நரியக்கர்கள்சித்தர், வாழியல்வானோர்மாதவரெல்லாம். (ருச)

புத்திவழங்கும்புன்பவநீக்குஞ், சித்திகளீயுந்தீதறுசாப
முத்தியுநல்குமொழிந்தவையெல்லாஞ், சத்தியமன்னுசாத்தியநீரோ. (ருரு)

ஞானநலங்கூர்நாடரும்வீடு, தானிதிலுண்டாஞ்சாதனைதன்னுன்
மானிலமன்னுமற்றதனுற்பே, ரானதுசாத்தியாமிர்தமென்றே. (ருசு)

அம்புவியேத்துமப்புனலேய்ந்தாற், றம்புருசாபந்துள்படுமாள்வா
யும்பருமெய்துமுருப்பசிபோகம், வம்பவிழ்தார்புனைமன்னவவென்றான். (ருஎ)

தாழ்ந்தமரோசன்றன்னைவிருப்பால், வாழ்ந்துபுரூரவாவுடன்வந்தே
யாழ்ந்துயர்சாத்தியாமிர்தநன்னீர், வீழ்ந்திடுசாபவேலைகடந்தாள். (ருஅ)

ஊறியவன்பினுருப்பசியோடு, மேறிவிமானமெய்துபுவிண்மேற்
பேறுறுதேவர்பெரும்பதமுற்றான், மாறில்புரூரவாவெனுமன்னன். (ருகூ)

சாற்றியபீடார்சாத்தியநன்னீர், போற்றினர்நீப்பார்புன்மைகளெல்லாந்
தேற்றியவேட்கைசேர்குவர்காம, மாற்றுபுதோய்ந்தார்மாண்டிடியாரோ. (சுo)

வேறு.

அப்பகல்கேட்டனர்சனகராதியோரற்புதசாத்தியவமிர்தமேன்மைதா
னுப்புவியாக்கியநளினன்வாயினுலொப்பறநோற்றுயர்சவுனகாதியீ
ரிப்பகல்கேட்டனிரொனதுவாயினுலெச்சமில்வேட்கையிலினிதுநீவிர்தாங்
கைப்படும்வீட்டுயர்கதியின்மேவுவார்கற்பவர்கேட்பவர்கசடுதீருமே. (சுக)

சாத்தியாமிர்ததீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஎoக.

---

# சருவதீர்த்தச்சருக்கம்.

---

இகலிலாதகுழுவுசாலிருடிநாதர்மகிழவே
புகலுமாறுபின்னரும்பொருவில்சூதனேதுவா
னகலமாசுசாத்தியவமிர்தவாவியாடினோர்
சகமெலாமுமேத்திடுஞ்சருவதீர்த்தமாடுவார். (க)

தருமரூபமாகுநீள்சருவதீர்த்தமூழ்குவா
ருருவினீடுவினைகள்போமுதனிலாடலுற்றிடுந்
திருவினோரையஞ்சிடுந்தீமைதீர்வதின்றெனக்
கருவினெல்லையன்னநீர்காணுமெல்லைதானரோ. (உ)

மகமிழைக்குமாண்பினுன்மந்திரங்களெண்ணலா
லகலும்வேதமோதலாலரணைமாலையன்பினுற்
புகரில்பூசைபுரிதலாற்புசிப்பொழிக்குநோன்பினுற்
றகவினீடுபயனெலாஞ்சருவதீர்த்தநல்குமே. (ரு)

சறுவதீர்த்தமென்றுபேர்தடமிதற்குவந்தவா
றுறுவர்யாரும்வினவினாருணாசெய்மேன்மையுன்னியே
நிறுவும்வேதவாய்மையானிகழ்வியாதனடிகள்சேர்
மறுவில்சூதமாதவன்மரபினாடியோதுவான். (ச)

பேயொடாடியன்பனாம்பிருகுவும்பலாயினா
னாய்வினீடுசுதரிசனப்பெயர்க்கொளந்தண
னேய்விலாதநியதியானுற்பவத்தில்விழியிலா
னேயுழந்துநரையினானேலிழந்தமேனியான். (ரு)

அந்தணந்தவந்தணானதன்மையதனினான்
மூந்துநீர்களொன்றினாமூழ்கவேகுமுரணிலான்
மைந்திலாதிருக்கவும்வசுந்தரைக்கணீரொலாம்
பந்தமோடுமாறுதான்பரிவினாடவெஃகினான். (சு)

கோலமல்குநீரொலாங்குடையநீடுகாதலாற்
காலவாசைவேலைசூழ்கந்தமாதனத்திலே
யாலநீழலண்ணலாரடிவழுத்துமர்ச்சனை
மூலவேதமுறையினான்மூன்றுபோதுமுயலுவான். (எ)

பொழுதுமூன்றுமாடிநீர்புலனடக்கியன்பினாற்
கழுதுசுற்றவாடுவான்கழல்பணிந்துபாடுவா
னிழுதினோடுநறியவூணிழைத்தவர்க்குநல்குவான்
முழுதுமாகநீற்றினான்முண்டமேவுபுண்டரன். (அ)

வேனில்வேலையைவகைவெய்யவங்கிநாப்பணுங்
கூனன்மேனிகுளிர்செயுங்கொன்னிலம்புதன்னிலும்
வானநாளில்வானிலுமருத்தருந்திவைகியே
யீனமின்றிநோற்றனனிருபிறப்பினானரோ. (கூ)

கணிதவாண்டொர்பஃதுதான்கண்டிமாலைமார்பனாய்ப்
பணிசுமந்தபாரில்யார்பண்ணவல்லொன்னவே
மணிதயங்குவிழியிலான்வளர்தவத்தின்வாடல்கண்
டணிகொடிங்கள்வேணியானருள்சுரக்கநாடினான். (க0)

தெள்ளலைக்கொள்கங்கைநீர்சிதறுசீகரத்துடன்
கள்ளிறைக்கவெங்கணுங்கடுக்கைமாலைகண்ணுத
னள்ளழற்கொழுந்துலாய்நக்கவேறுநகையெலாம்
வெள்ளிவெற்புநடவல்போல்விடையுகைத்துவிண்ணின்மேல். (கக)

வெற்பில்வல்லிமென்கைசேர்வெள்வளைத்தழும்புடன்
பொற்புயங்கொளங்கதப்புயங்கராசிபொலியவே
யெற்பிறங்குமேனிமேலெழுந்தசோதிபெண்டிசைப்
பிற்பிறங்கொள்கங்குல்வேர்பிடுங்கிநின்றிலங்கவே. (கஉ)

பிடித்தசூலமொன்னலார்பேருடற்பிளந்துமுன்
குடித்தசோரிமீளவுங்கொப்பளிக்குமாறுபோல்
வடித்தசோதிவீசவேமழுவலங்கைமல்கவே
முடித்ததிங்கள்வெண்ணிலாமுளைக்கொழுந்துலாவவே. (கந)

உடையநங்கைகண்களோடொப்புநோக்குமாறுபோ
லடையவைத்தசெங்கைமானதுகுதித்திறங்கிடா
திடையுடுத்தவெம்புலியிருந்துவக்கனுங்கவே
புடைநெருங்குகூளியும்பூதமுந்தழைப்பவே. (கச)

கால்விரிந்தவெண்ணிலாக்கடிகொணிறுபூசிடு
நூல்விரிந்தமார்பமுநுடங்குமாரமாலையு
நீல்விரிந்தகண்டமுநிலைவிரிந்தவாரண
மால்விரிந்தநீழல்வாயறைந்தவாயுமழகுற. (கரு)

சண்ணனிட்டபார்வையுங்கருந்தலைச்சில்வேடுவ
ரண்ணலிட்டபார்வையுமன்பர்சூழ்ந்துபார்க்கவே
யெண்ணலுற்றவிருவருமிந்திராதிதேவரும்
பண்ணவக்குழாங்களும்பணிந்துபோற்றெடுப்பவே. (கசு)

வேறு.

விதியரியிவர்க்கரியமேனியலதோன்றை
முதலுணர்கிலேனெனமுகிழ்த்தகணிரண்டும்
புதரிதயமாமுளரிபோலமலர்வித்தே
சுதரிசனனென்றுறைசெய்தூயனெதிர்நின்றுன். (கஎ)

நிற்றலொடுநித்தனருளானெடியநோக்கம்
பெற்றவனவன்றெரிபுபேதமறயாண்டு
முற்றசரணங்கண்மிசையோடியடிவேரோ
டற்றமரம்வீழ்வதெனவன்பினொடுவீழ்ந்தான். (கஅ)

வீழ்ந்துவிழிமாமலர்மிலைச்சியுலகெல்லாம்
வாழ்ந்திடவெழுந்தருளும்வள்ளறனைவானோர்
தாழ்ந்திடவுயர்ந்தசிவசங்கரனைநெஞ்சாற்
சூழ்ந்துருகிமெய்ப்புகழ்துதித்திடுதலுற்றான். (கசு)

மங்கையுமைபங்குறையபங்கவரவங்கூர்
கங்கையொடுதிங்கள்புனைதுங்ககனறங்குஞ்
செங்கையணிகங்கணபுயங்கசிரகங்கொ
ளங்கைவிதிகங்குலவலங்கலகளங்கா. (உ0)

அரகரவராகமிலரானவர்பராவும்
வரகரவரானவர்விராவரணவஞ்சப்
புரகரபுராதனகராவையடுபுள்ளூர்
சரகரசராசனதராதரபிரானே. (உக)

ஓலமிடுகோலமறைநாலுமுனிநால்வர்க்
காலநிழலேலுமருளாலுதவுசீலா
பாலணையவாலவிடைமேலபடர்நீலக்
காலனுயிர்காலவொருகாலிடறுகாலா. (உஉ)

நீளமரர்கோளினுயிர்மீளநுகர்காளா
வேளதுடன்மாளவழன்மூளும்விழியாளா
வாளிலகுநாளமலர்நாளலர்செய்தாளா
வாளுநெறியாளர்தமையாளுமருளாளா. (உங)

அம்பரதிகம்பரவகம்புறம்விரும்பார்
வெம்பவபயம்பரிபரம்பரவிரும்புஞ்
செம்பொனணியம்பலசிலம்பொலிசிலம்ப
நம்புமவர்தம்பநடனம்பயிலுநம்பா. (உச)

பாசமறவீசுபிரகாசமறைவாசி
யீசபவநாசவுனதேசில்புகழ்பேசு
நேசர்மிகுநேசநிறைமாசிறுகள்வாசம்
பூசுமமரோசதவர்பூசைபுரிதேசா. (உரு)

கட்டரவுகட்டுமணிபட்டிகையமுட்டாண
மட்டலரில்விட்டொளிரும்வட்டமுகதொட்டே
யட்டுழுவைநெட்டுரிகளட்டவுருநட்டா
திட்டமுமதிட்டமுமில்சிட்டசிவபட்டா. (உசு)

வெற்பவையின்முற்பரவுவிற்சயிலவிற்போர்த்
தற்பரமசிற்படிவதற்பொருவுபொற்பா
வற்பகலுநிற்பரசுமற்புடையசொற்பாக்
கற்பவர்கணற்புலனினிற்புறுமகற்பா. (உஎ)

வையநிலைபொய்யுடையமையலெனவுய்யு
மெய்யருளினையுமுளமெய்யருணர்மெய்யா
செய்யதழல்கையிலணிசெய்யுமொளிர்செய்யா
வையமகலையர்தொழுமையமிசையையா. (உஅ)

வேதவளர்கீதவிதியோதுநெறிமீதா
ரோதுவகலாதிபரபோதகவினோதா
பாதககிராதபடைமோதுமிருபாதா
நாதமிகுசோதிவளைகாதிலணிநாதா. (உகூ)

அன்னையுமளித்தருள்செயத்தனுமெனக்கா
முன்னையலதோர்துணையுமுள்ளமிசைகொள்ளே
னென்னையருள்கூர்தியெனவின்னபலவாகுஞ்
சொன்னிலவுமாலைகடொடுத்தினிதணிந்தே. (௩0)

இன்றுவிழிதந்தருளியெந்தையெதிர்நின்றாய்
பின்றையினிவேறுதெரிபெற்றியிசைகில்லே
னென்றுமெனதம்பகமுனெய்திடுதியின்றேன
மன்றவிழியன்றையின்மறைத்திடுதிவள்ளால். (௩க)

என்பனடிதாழுவனெழுந்துதுதிசெய்தே
முன்பணிவுசெய்ததைமறந்துமுறையாலே
பின்பணிவஞசறுபிறப்பிருமைபெற்று
மன்பினொடுநெஞ்சொருமையாகியறவோனே. (௩உ)

ஆதரவுகண்டமலனந்தணனைநோக்கிப்
போதுமினிவேண்டியபுகன்றிடுதிமேலோய்
நீதவமுயன்றெனைமநினைந்தமைநினைந்தே
யோதியிதில்வந்தனமுனக்கருளவென்றான். (௩௩)

வேறு.

வாண்மதிச்செஞ்சடைமுடியோன்வாய்மையுணர்ந்தவன்கமலத்
தாண்மதிக்குஞ்சுதரிசன்முன்றனைமிசைவீழ்ந்தடிகேள்யா
னுண்மதிக்குநிகர்வெளுத்தநரையுடம்பானலிவுற்றேன்
சேண்மதிக்கும்புனலாடல்செயமாட்டேன்சிவபெருமான், (௩௪)

நன்னீர்கண்முழுதாடுமிசையுடையேனதுபயக்கு
மந்நீர்மையருளென்றுனன்னவனுமங்கதுகேட்டுக்
கொன்னீர்வேற்காகுத்தன்குரம்பதனல்வரம்பறுசீர்
மின்னீர்மைமுகிறவழும்வியன்கந்தமாதனத்தில். (௩௫)

புனன்முழுதும்வரவழைக்கேம்பூசுரனேயெனப்புகன்று
மனமதனினினைந்தருளவந்தனவப்புனலெல்லா
மனையுறழ்தண்ணளியீசனந்தணனைப்பார்த்தருளா
முனிவரனேயித்தீர்த்தமுடிக்குமுனேவினையனைத்தும். (௩௬)

நீர்கள்பலசெறிந்திடலானிகழ்சருவதீர்த்தமெனும்
பேர்பெறுமானதநாமம்பெறுமனத்தால்விளித்தமையாற்
பார்பரவுபுனலின்பம்பரபோகமவையிரண்டு
மேர்பெருகுமிஃதொன்றேயினிதளிக்குமிருபிறப்போய். (௩௭)

கடும்பதகவனக்கழலாங்காமமுதலாறுடைக்கு
நெடும்புயலாம்பிறப்பிறப்பெனிண்முதலைநீங்காத
குடும்பமெனுமளவைபடாக்குநைகட்லின்கரையேற
விடும்புணையாம்வேதாந்தவித்தையன்றிமுத்திதரும். (௩௮)

நிரையவழியடைக்குமிதுநெடுமறையோய்குடைகென்றே
வரையரையன்மடப்பாவைமணவாளனருள்புரிந்தா
னுரைசெய்துணையதிலாடியுததியெழுங்கதிர்போல
நரைதிரைபோயிளம்பருவநல்லுருவங்கொண்டெழுந்தான். (௩௯)

ஏறுடையானுடனணைந்தாரிதின்மூழ்குமவன்கிழவன்
வேறுருவனெழுந்தனனேயிளங்கொள்நீர்ப்பெருமையினுன்
மாறுறுமூப்பினைக்கழுவிவந்தனனேயிவனென்று
வாறுலவுசடைப்பெருமானருள்பரசியதிசயித்தார். (௪௦)

சுதரிசன்முனவண்படைத்தசுடர்ப்படிவந்தனைக்காணூஉப்
பதராறுநூன்முனிவருடன்பங்கயநற்றடமதனைத்
துதிபுரிந்தானிறைவனவண்மேமறையோன்றனைத்தெரிந்து
வதிகுதிநீயெஞ்ஞான்றும்வளங்கெழுநீரிதன்கரைமேல். (௪௧)

ஆடுநினைந்தெமையிதனிலயற்றீர்த்தஞ்செலல்வேண்டாம்
வீடினக்குமிறுதியினின்டுவேதியனேவிளைத்தினிதுன்
னேடுபடிந்திடுமவர்க்குமுதவிடுமென்றுரைத்தருளித்
தேடுமிருவருக்கரியசிவபெருமான்கரந்தகன்றுன். (௪௨)

வேறு.

ஆனதற்பினர்வேதியனப்புனலாடியுற்றுயிராகமகற்றிவிண்
போனவக்கணமேவினன்முத்தியிற்போதநற்றவிர்யாமுமுமக்கிவண்
மானதப்புனல்வாய்மைநவிற்றினமாசிலிக்கதையோதியவுத்தமர்
பானநற்செவியாலடைவுற்றவர்பாதகக்கடறுள்ளெழவற்றுமே. (௪௩)

சருவதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் களருஉ.

# தனுக்கோடிச்சருக்கம்.

பயங்கொள்பவப்படையுடைக்கும்பவுராணிகோத்தமனாம்பண்புசான்ற
நயங்கொள்புகழ்ச்சூதமுனிநன்முனிவருடன்மீண்டுநவிற்றல்செய்வான்
வயங்கொள்புலப்பகைதடிந்தீர்மானதீர்படிந்தோர்கள்வையங்காக்குஞ்
சயங்கொண்மனுக்கோடிநிகர்தசரதன்சேய்தனுக்கோடிதன்னிற்றோய்வார். (க)

பீடுகெழுமதிலிலங்கையரக்கர்தனுக்கோடிபலபிளவுகண்ட
நீடுதனுக்கோடியினைநினைந்தாலும்புகழ்ந்தாலுநேர்கண்டாலும்
வீடுபெறலெளிதாகும்வெந்நரகமெழுநான்கும்விழியிற்காணார்
கோடுமதிமுடியவன்றாள்குறித்துணருஞ்செய்யமதிக்குணத்தினீர்காள். (உ)

குழுமுதமமந்ததமம்ரவுரவமாரவுரவமேகும்பிபாக
மழிவுதருகாலசூத்திரமசிபத்திரவனமேய்ருந்தலாகாப்
புழுவுணவுபுகலரியவிருட்கூபஞ்சந்தஞ்சம்பொருமுட்கூராற்
பிழைபடுசன்மலிசூர்மிபெருகியெழும்வைதரணிபிராணரோதம். (௩)

ஆயவிசசனம்லாலாபக்கணமேயவீசியுடனடருஞ்சார
மேயவுணாவச்சிரகண்டகங்காரவளறரக்கர்வெள்ளவுண்டி
ஆயதழல்சொரிசூலப்பிராந்தவிதோதனந்தந்தசூகந்துய்த்தல்
சேயபரியாவருத்தந்திரோதானஞ்சூசிமுகஞ்செந்நீர்றுங்கல். (ச)

நச்சழலிற்சுழல்கொள்பரிபீடனமென்றிவைநரகநாலேழாகு
மச்சமிவற்றுண்டெனவுமடைவதிலர்புகுந்திடருற்றழுந்துவாரோ
வெச்சவிடைக்கிரங்கலின்றியெழுங்கலசமுலைச்சனகியென்னுமின்சேர்
பச்சைமுகிலிடந்தயங்குந்தனுக்கோடிபடிந்தவர்கள்படிமையீர்காள். (ரு)

மாதர்பொருண்மைந்தரிவர்தமைத்திருடும்வஞ்சகனைவலியகால
னாதர்பிணித்திருள்பெருகுதமத்திடுவரந்ததமந்தன்னிச்சோர்வா
னாதனுயிர்கொன்றுநிதிகொண்டுநுகர்நவையுடையானல்லுயிர்க்குத்
தீதிழைத்துமனைநிறைப்பான்விடவரவாரவுரவத்திற்சென்றுசேர்வான். (சு)

வன்றுயர்கூர்மாரவுரவத்தினிடையடைந்துமனைமாதினோடுந்
தன்றனயர்பசித்திருப்பத்தானுகர்வான்றன்றசையைத்தானேதின்பா
னன்றியுயிருளபறவைவிலங்கிவற்றையருள்சிறிதின்றடுவோனாகு
நன்றியிலாவேடர்தமிவிழிந்தோனைநமன்றூதர்நடுங்கப்பற்றி. (எ)

குன்றுநிகர்புயமுரியப்பிணித்திறுகக்கொடுபோந்துகும்பிபாக
மென்றநரகினிற்றயிலமெரிமயமாமதனிடையிட்டெரிப்பர்பன்னா
ளன்றிமறையந்தணரையன்னையத்தனிவரையவமானஞ்செய்வோன்
றுன்றுமிடமோரயுதயோசனையாங்கொடுங்காலசூத்திரத்தில. (அ)

மேலெறிக்கவிரவிசுடர்கீழெரியவெய்யதழல்விளங்குசுல்வத்*
தாலமைத்தநெடுங்களத்தினாவிகுலைந்தழுங்கியுளமலறிச்சோர்வா
னாலுமறைநெறிமாற்றிநவைநெறியினடக்குமவனாரினீங்குங்
காலனெடுந்தூதுவராலடைவனசிபத்திரவெங்கடறுதன்னில். (கூ)

---

* சுல்வம்—தாமிரம்.

வென்றிபுனைமுடிமன்னனாயிடினுமவனுழையில்வினைஞரேனு
மொன்றுமபராதமுருதவர்கடமைத்தண்டிப்போருயர்ந்தபூமி
துன்றுசுரர்தமையுடலம்வருத்திடுவோரிவரைநமன்றூதர்பற்றிப்
பன்றிமுகமெனுநரகிலாலையிடுகன்னலெனப்படுத்துவாரே. (௧௦)

யாவதுமெம்பரனருளென்றிருக்குநருக்கிடர்புரியுமிழிஞனந்த
கூவமதிற்கண்படைநீத்தன்னவராற்றுயர்க்கடலுட்குளிப்பன்பன்னாட்
டேவர்முதலைவகையமகம்புரியாதுண்ணுமவன்சிறந்தவுண்டி
மேவுசமபந்தியினோர்க்கிடலின்றித்தான்மிசையும்வெறியனின்னோர். (௧௧)

கிருமியுணாவெனுநரகந்தனிற்புகுந்துதாமுநெடுங்கிருமியாகிச்
செருமிவளர்கிருமிகளுக்குணவாகித்தாமுமவைதின்றுநோவா
ரருமறையோராடகத்தைப்பிறர்நிதியைவன்மையினாலபகரிப்போன்
திருடுமவன்றிருடுவிக்குந்தியனெனச்செப்பிடுமித்தீயோரெல்லாம். (௧௨)

காய்கனல்சேர்கருந்தாதுக்குழியதனுளெவ்விடமுங்கலந்துமொய்த்திட்
டீகறிக்குஞ்சந்தஞ்சநரகடைவர்தென்றிசைக்கோனேவலோரா
லாய்கலைதேருண்முனிவீரனாகவொணாவாடவனையணைந்திட்டாளும்
வேய்கெழுதோளிணைபுணர்தற்குரியளல்லாடனைப்புணரும்விதியிலானும். (௧௩)

அழலிருப்புமகன்மடந்தையத்துணையையிருசுடருள்ளளவும்பற்றித்
தழுவியிடருழந்தலைவர்சூன்மியின்பாற்சன்மலிமுட்டைத்துச்சோர்வான்
குழுவுயிரைப்பலவிதத்தான்வருத்திடுவான்வைதரணிகொண்டமிழ்த்து
மொழியுநெறிப்புக்கறத்தின்கரையுடைக்குமரசேனுமுழையரோனும். (௧௪)

மானமிகந்தாசாரவரம்பொருவிவிடலியிதழ்மதுநீர்மாந்திக்
கானவிலங்கெனவிலங்கிமறைநெறியின்மருண்டுழலுங்கடியன்சேர்வ
னூனுதிரமலங்கோழைமூத்திரஞ்சீபித்தமிவற்றெழுபின்றாகி
யானவதிபயங்கரங்கூர்பெருநரகிலடுங்கூற்றினாணைதன்னால். (௧௫)

காட்டுறையும்விலங்கினுயிர்கடுங்கணையான்ஞமலிகளாற்கவர்ந்துநாளும்
வேட்டைமுயல்வெய்யவனைமேதியிறைவிடுந்தூதர்விசிகத்தேற்றி
யீட்டுபிராணா[illegible]கைவாமிருநரகில்வீழ்த்திடுவாரொச்சத்தாவி
வாட்டுமவன்மறைமுறைவிட்டகந்தையினாலரிபடுவன்வைசசத்தில். (௧௬)

தொல்குலஞ்சேர்மனைவியைத்தன்சுக்கிலநீர்நுங்குவிக்குந்துரிசனந்நீர்
மல்குநெடுங்குழிக்கிடந்துகாமவறல்பருகியிடும்வணிகர்தம்பா
லல்குபொருள்கவர்ந்துநகாழலூட்டிவிடமருத்தியாவிக்கீறு
நல்குமவன்வச்சிரதங்கிட்டிரப்பேர்நரகடைந்துநைவன்பன்னாள். (௧௭)

சொன்னவர்களனைவர்களுந்தனுக்கோடிபடிந்தனரேற்சொல்லிவந்த
வெந்நரகமடைவதிலர்வேறுபலநிரயங்கள்விளம்பாநின்ற
வின்னமுளவவையெவற்றுமிதின்மூழ்குமவர்மூழ்காரிவுளிமேதத்
துன்னுபலம்படைத்திடுவாரொருவிசையித்தனுக்கோடியுதகந்தோய்வார். (௧௮)

வேறு.

ஆவியுண்மையறிவுதலைப்படு, மேவுநாலுவிதங்கெழுமுத்தியும்
பாவவள்ளிபடராபழங்களும், யாவுங்காய்படுமின்பமுண்டாகுமால். (௧௯)

ஆடகத்துலையாயிரங்கோதனங், கூடநல்குங்கொடைப்பயன்றந்திடு
நீடுகீர்த்தியுஞ்செல்வமுநீங்கலா, மாடுமேல்குமனத்திருணீங்கிடும். (உ0)

அஞ்சுதீமையிலொன்றிலயுதமாம், புஞ்சமைம்பதினுயிரம்போக்கிடும்
பஞ்சபாவந்தனக்கநுபாதக, மெஞ்சலில்லனயாவையுமெஞ்சுமால். (உக)

பரவுமாசைப்படுகடற்கப்புறம், விரவுமுள்ளம்விரிகடன்மேதினி
புரவுபூண்டபுயவுறழ்கார்முகக், குரவனீள்சிலைக்கோடியிலாடினல். (உஉ)

கொன்னெடுந்தனுக்கோடிநலம்புக, லன்னவாய்மையிலையமின்றையர்காள்
வன்னிவெந்தமழுவினைநாவினு, லின்னமெய்ம்மையென்றேந்துவன்யானரோ. (உங)

யாங்கிளந்தவிருந்தனுக்கோடியி, னேங்குசிருபசாரமென்றோதுவான்
சாங்கரீயமரபிற்சனித்தவ, னுங்கதன்றியறக்கயலாகுவான். (உச)

மைத்தமாமருண்மாற்றிவளங்கெழு, புத்திநல்கிப்புரிந்திடுமாக்கமு
மெய்த்தஞானமும்வீடுமளித்திடு, மித்தகைத்தனுக்கோடியிருக்கவே. (உரு)

வேற்றுநீர்சிலவேண்டிப்படருத, லாற்றுநீர்மையராரினும்பேதைய
ரேற்றநன்றியொன்றில்லாரிவர்மருட், பேற்றின்மான்மியம்பேசவொண்ணுதரோ.

பெருகுநீரிதன்பீடுபழிச்சுவா, ருருகிநோக்குநருள்ளத்தழுத்துவா
ரருகுசென்றுதொடுமவரன்பினுற், பருகுவார்முலைப்பால்பருகாரரோ. (உஎ)

நீரின்மேன்மைநிகழ்த்துழிநீடருள், வாரிசூதன்மறைமொழிமாதவர்
பேரிதற்குப்பெருந்தனுக்கோடியாங், காரணம்புகலென்னக்கழறுவான். (உஅ)

கோனிராமன்குலவுதன்றேற்றமா, மானனன்றனதாவிமுருக்கிமுன்
பானுமைந்தன்பறித்தமவுலியை, மேன்மைவீடணன்சென்னிமிலைச்சியே. (உகூ)

துறைகொணீர்மிசைதோன்றியபோதுபோற், சிறையினீங்கியசீதையுந்தம்பிய
மறையுணர்ந்திடுமாருதிவானரர்க், கிறைவனுதியர்யாரும்வளைப்பவே. (ங0)

சித்தர்சாரணர்சேணியிற்கந்தரு, வத்தர்தேவரரம்பையர்மாதவர்
மொய்த்துவாழ்த்திடமூவெயில்வாட்டிய, வத்தனென்னவில்லங்கையிலேந்தியே.

இலங்கைநீங்கினனிட்டவின்னீங்கிடா, நலங்கொள்சார்தவழ்ஞாயிறுந்திங்களும்
வலங்கொள்வெற்பெனவண்சந்தமாதனவிலங்கன்மேல்விளையாட்டொடுமேவினன்

ஆண்டிருந்துழியண்ணலிராகவன், நீண்டமெய்யுடையாளாச்சிலையினை
மாண்டதன்குணத்தோடும்வருத்ததாள், பூண்டுவீடணனென்றுபுகலுவான். (ஙங)

ஈறிலாதிக்குரம்பிருந்தாலிஃ, தாறதாகவடுவாரடலுளோர்
வீறுசேதுவிடர்ப்படவில்லினுற், கீறல்வேண்டுங்கிளர்மணிப்பூணினுய். (ஙச)

என்னைவெஃகியெனலுமிராகவன், வின்னுனிக்கொடுவென்றிக்கலுழனுற்
பன்னகப்பிணிமுன்றுணிபட்டபோ, லன்னுசேதுவுடைந்திடக்கீறினன். (ஙரு)

ஊக்கமார்தனுக்கோடியுடைத்தலா, லாக்கினுரிதற்கப்பெயராய்ந்துளார்
நீக்கிலாநெடுங்கீற்றிதுநேர்பட, நோக்கினுர்பின்கருக்குழிநோக்கிலார். (ஙசு)

வெய்தெனச்சிலைவெற்பின்கடையினுற், செய்தகீற்றினைக்கண்டவர்சேருவார்
பொய்தவிர்ந்தபுலத்தினைமூழ்குவா, ரெய்துமாண்பயன்யானறியேனரோ. (ஙஎ)

நன்மதைக்களைநற்றவம்போற்றுவான், றன்மனத்தெழுபாதகஞ்சாய்த்திடுங்
கன்மலைத்தெழுகங்கையின்மாண்டவன், புன்மலச்சிறைநீக்கிப்புனிதனும். (௩௮)

குருநிலத்திற்கொடைபுரிவான்செயும், பெருமறைப்பிரமக்கொலைநீங்கிடு
மருவுநோன்புவளமலியீகைமற், றுருவிறத்தலென்றோதியமூன்றையும். (௩௯)

கட்டுஞ்சேதுவிற்கார்முகக்கோடியி, லிட்டமோடுமிழைத்திடக்கிட்டுமேற்
கிட்டும்யாவையுங்கேழகன்முத்தியு, மொட்டுமையமிதற்கிலையுண்மையே. (௪௦)

மாணிநீவினைவாட்டிடுமேற்றிது, காணுமெல்லையிற்கார்முகக்கோடியாற்
பூணுங்கீற்றிதுபொன்னகர்மாலயன், றூணுவூர்க்குப்புகுநெறிதானரோ. (௪௧)

மூள்விருப்பின்முயன்றிடுமாதவம், வேள்வியீகைவிளம்பிடுமந்திர
மாள்வினைச்செயறன்னிலதிகமா, நீள்பெரும்பயனீரிதுநல்குமால். (௪௨)

மோகமல்கியறம்பிறமுன்னியே, யாகம்வாட்டியென்னாழ்யமுனாநதி
நாகமாநதிநாப்பண்சென்றாடுமா, றேகல்வேண்டாவிதிற்படிவார்க்கரோ. (௪௩)

நாணுலாந்தனுக்கோடிநரரெதிர், காணில்வேண்டிலர்காசியின்மாரண
மூணிலான்றினமூன்றுதிலாடியான், மாணுலாம்பொருளீயான்வறியனும். (௪௪)

அச்சிலைப்பெருங்கோடியறலினை, நச்சியாடுநயனுடையார்பெற
வைச்சபேறுவனாவறுதக்கிணை, யெச்சகோடிகளீதலிலாவரோ. (௪௫)

கோளிலாப்பதினாயிரங்கோடிநீ, ராளுமண்மிசையுள்ளவவையெலாந்
தாளுலாமலர்ச்சானகிதன்மண, வாளன்வார்தனுக்கோடியின்வைகுமால். (௪௬)

தேவர்முப்பத்துமூவருந்தேவர்சூழ், மூவராயமுதல்வருமங்கவர்
தேவிமாருந்திணிசிலைக்கோடியுண், மேவிநாளும்விருப்பினிருப்பரால். (௪௭)

முத்திபெற்றமுனிவருமோதுபா, லத்தியுற்றவமுதணுந்தேவரும்
புத்திபெற்றதும்புண்ணியம்பெற்றதுஞ், சித்திபெற்றதுந்திண்சிலைக்கோடிவாய். ௪௮

மூட்டுநாண்சிலைக்கோடியின்மூழ்கியே, யீட்டுதேவர்பிதிர்க்களிவர்தமை
யூட்டுவான்வினையாவுமொழிந்தவன், வீட்டின்வீடுறுமேன்மையின்மேவுவான். ௪௯

செருத்திறங்கெழுதிண்சிலைக்கோடிவா, யொருத்தன்யாவனொருமறையோற்குணு
வருத்தினானவன்யாண்டுமழிவுறா, திருத்தும்பேரின்பநாட்டிலிருப்பனே. (௫௦)

சாகமூலபலமுண்டுதம்முயிர், போகநீர்ப்பவர்புண்ணியமூழ்குவார்க்
காகுமாடுபவாடல்விற்கோடிநீர், யாகமாம்பரிமேதமிழைக்கிலார். (௫௧)

ஆசினற்குலநால்வரினாடினோர், கூசிநீங்கும்பிறந்தைபின்கொள்கிலார்
மாசித்திங்கட்படிபவர்மாண்பயன், பேசிக்காட்டிடும்பீடிலன்யானரோ. (௫௨)

வாய்ந்தமாகமதியினிலாடினோன், பாய்ந்துலாவும்பகிரதியாதிநீர்
தோய்ந்தவன்பலஞ்சொல்லினழிவிலா, தேய்ந்தநாடுற்றுவீடும்பினெய்துவான். ௫௩

புருடனாடினும்பொற்றொடியாடினு, மருடரும்படிவந்திடுநாண்முத
லிருடரும்பயன்செய்தனயாவையு, மருடருந்தனுக்கோடியகற்றுமால். (௫௪)

இறந்திடாவிமையோர்தங்குழாத்தினுட், சிறந்தகோசலைசெம்மலைப்போலவே
வறந்திடாதவளர்புனல்யாவினு, மறந்தருந்தனுக்கோடியதிகமால். (௫௫)

அங்கண்வார்தனுக்கோடியளித்திடு, மெங்கண்வேட்டவுமெல்லொருமுப்பதும்
வெங்கணிந்தியம்வென்றுயர்மாகவான், றிங்கண்மூழ்கிற்சிவபதஞ்சேரலாம். (டுசு)

உரமனத்தெழுசீற்றம்விட்டேனொரு, தரமயின்றுதடந்தனுக்கோடியில்
வரமளித்திடுமாசியிலாடுவான், பிரமகத்தியினீங்கிப்பிறங்குவான். (டுஎ)

மாசிமாதம்வயத்தனுக்கோடியி, லாசுதீரவடைந்திதிலாடியே
யீசர்கங்குலிலீரிருயாமமும், வீசியுண்டிவிழியுறங்காமலே. (டுஅ)

இந்தியங்களடக்கியிராகவன், முந்திறைஞ்சியமுக்கண்முதல்வனை
யுந்தபூசையுஞற்றித்திவாகரன், வந்துதோன்றிடும்வேலையின்மற்றநாள். (டுக)

கோடுசேர்தனுக்கோடிமுன்னீரொலா, மாடிநித்தநியமங்களாற்றியே
நீடிராமன்வழுத்துமிருத்தனைப், பாடியன்பிற்பரவிப்பணிந்தபின். (சு0)

ஒல்லுமாத்திரமொண்பொருண்மண்பசு, நல்லசெந்நெற்றிலமுதனல்கியே
வல்லவாறுமறையவர்க்கூட்டுவித், தல்லநீரவவருள்பெற்றரோ. (சுக)

புகறலின்றிப்புரிகபின்பாரணம், பகருமிம்முறைபண்ணினர்க்கெம்பிரா
னகமடங்கவகற்றியளித்திடு, மிகபரங்களிரண்டினுமின்பமே. (சுஉ)

எவ்வகைத்தவருத்தங்களெய்தியு, மெய்வகுப்புறமுத்திவிரும்பினோன்
றெய்வமாசிநற்றிங்களிலாடுவான், கவ்வைவெண்டிரைக்கார்முகக்கோடியில். சுஙா

மன்னுமத்தவுதயமகோதய, மென்னுமிங்கிவற்றிப்புனலாடினோன்
றன்னதீவினையாவையுஞ்சாய்த்திடு, முன்னுமின்பமுமுத்தியுமெய்துவான். (சுச)

செல்வமுத்தொழிற்றேவருமன்னவன், சொல்வயத்தர்தொகுத்தவிருதிறத்
தெல்வயங்குதயம்படிவார்க்கிலை, நல்வளங்கெழுஞாலத்துதயமே. (சுடு)

மற்றவர்க்குமனுமுதலானநூல், கற்றுச்செய்பரிகாரங்களின்றியே
யுற்றதீவினையோடுமுண்டாயிடும், பற்றுவேள்விப்பயன்கள்பண்ணுமலே. (சுசு)

கதிரிரண்டையும்பாந்தள்கவருநா, ளிதனிலாடிலிருபிறப்பாளர்தம்
வதையின்மாசறுமற்றவர்பெற்றிடுஞ், சிதைவில்பேற்றினைச்சேடனுஞ்செப்பிலான்.

இரவிதிங்களெனப்படுந்தேவரை, யரவமுண்டிடும்வேலையமிழ்ந்தினோர்
பரவுபாவப்பதாகினிபாற்றிடுங், குரவிர்காடனுக்கோடிதனம்பினல். (சுஅ)

காயும்வெண்கதிர்செங்கதிர்கட்செவிக், காயநல்லுணவாம்பொழுதாடினோர்
தூயதீர்த்தமுழுவதுந்தோய்ந்தவ, ரேயுமின்பமிவற்றையமில்லையே. (சுக)

ஆகலாலிங்குமங்குமளப்பிலாப், போகநல்கும்பொருதனுக்கோடியிற்
றேகமாற்றிடுந்தண்புனலாடுமா, றேகுவீரினிநீருமிருடிகாள். (எ0)

விற்பிறங்குமிராமன்விற்கோடியி, னற்பலந்தருபிண்டங்களைல்கினன்
முற்பிதிர்க்களுதாமுடிவிலாக், கற்பகாலமிரம்பிக்களிப்பரால். (எக)

அண்டர்நாதனமர்கந்தமாதனங், கண்டசேதுக்கவுசலைசெய்கரங்
கொண்டவார்தனுக்கோடியிவற்றினிற், பிண்டமீந்தவர்க்கில்லைபிதிர்கடன். (எஉ)

மூவிடங்களுமுன்னிமுனிவிர்கா, டேவணுற்றுந்திறத்தனதென்புல
மேவினோர்தமிருணவிமோசனத், தாவினுமந்தமக்குளவாகுமால். (எங)

வேறு.

ஆதலிற்றனுக்கோடியிலாடுமோருருயிர்க்கிளைப்பாயினுமேகுவீர்
மோதடற்சிலைத்தேசிகனீடுசேய்மூரிவிற்பரித்தாமன்முன்னுடினன்
போதுமித்திராக்காதலினுவிவான்போகவிட்டவத்தீவினைபோக்கவே
யாதனைப்பவத்திதறமாதவீர்தமக்கிசைத்தேமிவண்யாமரோ. (எசு)

தனுக்கோடிச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கஅஉசு.

---

# அசுவத்தாமாச்சருக்கம்.

---

கரகபாணியயனைநேர்கதியினீடுமுனிவராங்
குரகநேருயிர்த்தயர்ந்துறங்குகின்றுளார்தமை
விரகிலாதுகொன்றதுமீளவந்தவெம்பவந்
தரகதாமனீத்ததுஞ்சூதகேட்டல்வேண்டினேம். (க)

வேதநான்குவகைசெயும்வியாதமாணவகவெமக்
கோதுநின்சொலமுதவூணுவட்டலில்லையாகையா
லேதுவொன்றுமின்றிநீயெங்கண்மேலிருத்திடும்
போதுமுதவருளினூற்புகலுகென்றுபோற்றினர். (உ)

என்றபோதுசூதனங்கிலங்குவாதராயணன்
மன்றவாசவனசநேர்மலர்ப்பதங்கள்வாழ்த்தியே
யொன்றுஞானமுனிவிர்காளுவகையோடுகேண்மினென்
றன்றியன்றவாறெலாமவர்க்குரைத்தன்மேயினன். (ங)

பண்டுபாண்டுமைந்தரும்பார்வையில்லிமைந்தருங்
கொண்டவேலைவையகங்கொள்ளுமாறுமாறதாய்
மண்டுபோர்விளைத்தநாள்வைகல்பத்தினளவிலே
விண்டுமேனிவீடுமன்வீடுமன்னினனரோ. (ச)

மேலையைந்துபகலிலேமெய்துரோணன்விட்டன
னலிரண்டொடொன்பதினுகாடுநண்ணினு
னேனுமங்கர்தம்பிரானெட்டுமேல்கொள்பத்திலே
சாலநீடுசல்லியன்றனைதுறந்துபோயினன். (ரு)

பாதிதத்துவத்தொகைபட்டவானியத்திலே
யூதைகாளகதையினுவூருவிண்டுடைந்துதா
னுதனும்பறுஞ்சினனந்தவேலையரசர்தாம்
போதுவார்கண்மெய்விடாய்போக்குமாறுபுரிகுவான். (சு)

மட்டிலாதமகிழ்விஞர்வளைமுழக்கவருகுவார்
திட்டத்துய்மனீடுதிண்சிகண்டிசிஞ்சயன்முனு
மிட்டமேவுமரசருமேனைவேந்தரனைவருஞ்
சட்டெனப்புகுந்துளார்தங்கடங்கள்பாசறை. (எ)

பின்னர்வீரரைவரும்பின்னைகேள்வன்சாத்தகி
யென்னுமந்தவிருவரோடிறங்கிடாதமவுலியான்
மன்னுமாடைமண்டபமருங்குசென்றுமேவினார்
வென்னிடாமிடைந்தகான்வெள்ளிடைக்கணுற்றபோல். (அ)

ஆண்டுறைந்தசண்டருமமாத்தியவிருத்தரும்
பூண்டுதாளிறைஞ்சினார்புயங்கவீரகேதன
னேண்டயங்குமிற்கணோமம்யாவும்வெளவியே
வேண்டுசெய்கையுவகையால்வீற்றிருந்தன்மேயினார். (கூ)

கைவலங்கொடிகிரிசேர்காளமேகமேனியா
னைவரோடுமாயிடையாவதொன்றுகூறுவா
னுய்வதன்பொருட்டுநீருடையிருக்கையின்புற
நைவுறுமனம்மொடுநண்ணுமின்களென்றனன். (க0)

அறிவுகொண்டுசெய்வதென்றைவராழியானொடும்
புறனிலேகியாழ்பிலம்புகுந்துகொண்டபொருளைமீ
தெறிபுனற்கொளோகையாற்றெய்தியங்கணிரவெலாஞ்
செறுநர்மாளவென்றசீர்த்திருவினோடுமருவினார். (கக)

சுரிமுகஞ்சுலாயெழீஇத்துள்ளவீசிப்பாரொலாந்
தெரிவிலாதுசிதறிடுஞ்சீகரக்குழாங்கடா
மரியகண்ணனைவரோடணுகவந்தவளவிலாப்
புரிவினீடுமங்கலப்பொரியிறைத்தல்போலுமால். (கஉ)

ஆகுமந்தநிசியினூடவணிருந்தகண்ணன்மு
னோகையாறுவீசுமாறொலிதரங்கமுவணமூர்
பாகவிண்டுவறிதிரேல்பள்ளிகொள்ளுகென்னவே
நாகநீடுநல்லணைநல்கல்போலமல்குமால். (கங)

அறுவையில்லதன்புறமைவரோடுமைவண
னுறுவதெண்ணியுற்றபினுற்றுளார்கள்கிருபனு
மறுவிலாதகிருதவன்மாவும்வாசித்தாமனுந்
தெறுவியாளதுவசனைச்சென்றுகங்குல்சேருமுன். (கச)

சேருமூவர்கான்மகன்செய்யவெய்யதண்டினா
லூருவிண்டுடைந்துவீழ்ந்துடல்புரண்டுமண்ணின்மே
லாரையும்வணங்குறுவந்தன்மைந்தன்மூழ்குறுஞ்
சோரிவாரிகண்டுதாந்துன்பவாரிமூழ்கினார். (கரு)

கதையின்வீமனறைதலாற்கவான்பிளந்துசோர்கறைப்
புதையுமேனிபூழியாற்போர்த்தநீடுபுரவல
னுதையவெற்பில்வீசிடுமுதைவீசுதாளுடற்
றுதையும்வாலசூரியன்றோற்றமென்னவைகினான். (கசு)

கண்கலுழ்ந்தமூவரைக்கண்டுகண்ணிலான்மகன்
விண்கவிழ்ந்ததாரைபோல்விழிகள்சிந்தவெள்ளநீ
ரொண்கவன்றிரங்கினானினைதல்கண்டழுங்கியே
புண்கனலிறைத்தபோற்புரவித்தாமன்சீறியே, (கஎ)

கடியவீமசேனனுங்காலினும்பல்கைக்கதை
யடியினால்விழுந்தெழாதழுதுநெஞ்சுதழுதழுத்
தொடிவுகூர்சுயோதனற்கொன்றுகூறவெஃகியே
யிடியெனாவெகுண்டெழீஇயிவுளித்தாமனோதுவான். (௧௮)

ஐவர்பாண்டுநல்கினோராயுமெந்தையாருயிர்
மைவழங்குநெஞ்சராய்வஞ்சமாற்றிவெளவினா
ரிவ்வெனாதவத்துயவொன்னும்வேலையேறினும்
பைவியாளதுவசநின்பழங்கணாற்றிலேனியான். (௧௯)

நிருபகேண்மியாவெனைநீவிடுக்கிலின்றிராப்
பரிதிதோன்றுமுன்னரோபாண்டுமைந்தரொருவரு
மொருவலின்றுசிஞ்சயனோடெலாருமாலெதிர்
பொருதுகொல்வன்யான்செயும்புண்ணியத்தினானையே. (௨௦)

வேறு.

இனையதுகூறக்கேளாவிகற்றுரியோதனன்றா
னனையதுசெய்வலென்னாவறல்பொழிவிழியாற்பார்த்து
முனைவனுங்கிருபன்றன்னைமுடங்குவிற்குரவனீன்ற
தனையனைநமதுதானைத்தலைவனாச்செய்தியென்றான். (௨௧)

அன்னவாறவனுமன்னோற்கன்றபிடேகஞ்செய்தான்
பின்னரக்குரிசிறன்னைத்தழீஇவிடைபெற்றுப்போற்றி
யுன்னுசீர்ப்போசனோடுமூவரிருவோருமைவர்
பொன்னெடுந்துகிலின்மாடுபோயினார்பொழுதுபோமுன். (௨௨)

அஞ்சுபேராவிகொள்வானடைந்தவம்மூவர்தாங்க
ளஞ்சுபேராகியன்னோரடலொலிக்கசனிகேட்ட
நஞ்சுகாலரவம்போலநலிவுறீஇநடுங்கிநெஞ்ச
நஞ்சுகாறடுமாறுற்றுநாடிப்பின்னோடினார்கள். (௨௩)

ஓடினாரிளைப்புற்றங்கணொருசிறிதிருந்தார்தம்மு
னோடினார்மீளினம்மைநந்தியாவத்தமாலை
சூடினான்கொல்லுமென்னாத்துண்ணெனவெருவியுள்ளம்
வாடினார்மருங்குகண்டார்வளமலியடவியொன்று. (௨௪)

காம்புடைமலர்கள்பூத்தகாமருதடங்களாலும்
பூம்பணைப்பொழில்களாலும்பொருசிறைப்பறவையாலும்
வாம்பிணையாளியெண்குமனாகரிகவையமாமுன்
னாம்பலவிலங்கினாலுமணிகிளர்வல்லியாலும். (௨௫)

இடைவெளியின்றிமல்குமீர்ந்தளிர்க்கானநோக்கி
யடைவதோரரணமாகவதனிடைப்புக்குத்தண்ணீர்
தடையில்வாம்புரவிக்கூட்டித்தாங்களுமுண்டுபாங்கோர்
வடதருநீழல்காணூஉமான்றடந்தேரிழிந்தார். (௨௬)

இழிந்துடற்புனிதம்பண்ணியிருந்தனர்நியமமாற்றிக்
கழிந்ததுகதிருங்கங்குற்காலமுங்கலந்ததாட
லொழிந்தனபகற்சரிக்குமுயிரொலாமுறக்கமுற்ற
வெழுந்தனவுழிதர்கிற்குமிரவினிலுயிர்களெல்லாம். (௨௭)

ஆயிடையலக்கண் கூருமன்னவர்மூவர்தம்முட்
போயிடர்கிருபன்ருனும்போசனும்பூமியென்னும்
பாயலிற்றுயின்ருரங்கட்பாய்பரித்தாமன்சீற்றத்
தீயினல்வெதும்பித்துஞ்சான்சிந்தைநோய்கொண்டிருந்தான். (உஅ)

கார்ப்புழைக்கரங்களாதிகலந்துறைவிலங்கினேதை
யேர்ப்புழைச்செவியிற்கேளாவிதுமுரசரவம்போலும்
போர்ப்பிறர்கொடிபோலன்றிப்பொறையினேன்புகழ்ப்பதாகை
யார்ப்பரித்திடுங்கொலென்னுவயர்வுறுமசுவத்தாமன். (உக)

தழைத்தடங்கானுலாவுந்தந்தியைக்காணுஉத்தண்டம்
புழைக்கரமாகவீமன்புக்கனனென்னவஞ்சும்
பிழைத்தனமரிதிறந்தபிதாவினிமீள்வதில்லை
யிழைத்ததீதெற்றுக்கென்னுவிரங்கிடுமிவுளித்தாமன். (ங0)

சிசியெரிதாருவின்பானீடுமாலோடுஞ்சேர்ந்த
பசுமுகில்பார்த்தியாரோபடர்வனம்புக்கசெய்தி
விசயனுக்குரைத்தார்பொற்றேர்மீதடைந்திட்டானென்று
வசைவுறீஇமயங்கிச்சோருமாண்டகையசுவத்தாமன். (ஙக)

வயங்கரிமுதுகிலேறிமணித்தலைபிடுங்கலாற்று
துயங்கிநேர்கடுப்பிலோடியுற்றிடுமரையைநோக்கிச்
சயங்கிளர்நகுலனூருந்தாவுபோர்வாசியென்றுத்
துயங்கியுள்வாடியாகந்துளங்கிடுந்துரகத்தாமன். (ஙஉ)

சூழியினீங்கிவான்மேற்சுடர்நெடுவாளைதுள்ளிக்
காழிருள்கிழித்தசோதிகண்ணினுட்கலத்தல்காணு
வாழியசாதேவன்கைம்மருவலார்வரைகொண்மார்பம்
போழொளிவாளினுடிப்புலம்பிடும்புரவித்தாமன். (ஙங)

இரவினிலுறங்காதிவ்வாறிருந்துழியிவுளித்தாமன்
பரவுபல்காகந்துஞ்சும்பணைமலிகோளியின்மே
லுரமிகுங்கரியசெய்யவுருவுடனெலிக்கும்வெய்ய
குரலினைக்காட்டிச்செல்லுங்குராலினைக்குறித்துக்கண்டான். (ஙச)

பெரியவக்கூகைபின்னர்ப்பிறங்கொலியொன்றுசெய்து
விரிசிழற்கொம்பருடுமேனியைமறைத்துவைகித்
திரியவுங்கொடிகளெல்லாந்திடுக்கிடவெழுந்துபற்றிக்
கரியவக்காக்கைக்கூட்டங்கலைத்துயிருண்டதன்றே. (ஙரு)

கலைத்துயிருண்டுகாக்கைக்கால்களுந்தலையுமூக்கு
மலைத்திடுஞ்சிறையும்வாலுமடங்கலும்வேறுவேறு
வுலைத்துடன்பறித்துவீசியொருசிறிதிடமிலாம
விலைத்தடங்கோளியெங்குமிறைத்தினிதிருந்ததம்மா. (ஙசு)

மூற்பகலிழைத்ததீமைமுற்றிடுங்கொடியர்தம்பாற்
பிற்பகலொருகால்வென்றோர்பின்னொருகாலந்தோற்பா
ரற்பர்கள்பலருமாற்றாண்டகையொருவற்கென்னுஞ்
சொற்பொருடெளியயாருந்தொலைந்தனகாக்கையீட்டம். (ஙஎ)

ஆகுமச்செய்கைகண்டவப்பொழுதசுவத்தாமன்
கூகையைக்குரவனாகக்கொண்டிதுகுயிற்றுமாற்றா
லேகியாமொருவனாகவிரவினில்விரவலார்க்கு
மாகநாடளித்துமென்றுமனத்திடைவலித்தான்மன்னோ. (௩௮)

அருமையுண்டைவர்நேர்சென்றமர்விளைத்தாவிகோட
லொருமைசேருபாயம்வேண்டுமுரககேதனன்றனோடும்
பெருமிதம்பேசிவந்தேம்பிறழ்விலாதெந்தவாறும்
வருமிதங்கடைப்பிடித்தன்மன்னுயிரொவைக்குமுண்டால். (௩௯)

மன்னவனெவனிற்பார்மாயவஞ்சனையினாலுந்
துன்னலர்க்கோறன்மாண்பேசுயோதனன்றனையும்வீழ்த்தா
ரொன்னலர்புணர்ப்பினாலேயுங்குதுவன்றிமுன்னம்
பன்னுநூன்மரபுதேர்ந்தபண்டிதர்பகர்ந்ததுண்டால். (௪௦)

உண்பவர்வழிநடப்போரோரிடத்திருப்போர்கங்குற்
கண்படுகின்றோர்மெய்யிற்களைமிகப்படைத்தோரொங்கும்
புண்படவடிபட்டுள்ளம்புழுங்குவார்போரிலாக்கை
மண்படவிழுந்தோர்கையின்மாண்படையிழந்தோர்தம்மை. (௪௧)

இறச்செயலாகும்வேண்டார்க்கியாமுமிவ்வாறுசெய்த
லறச்செயலென்றுதுஞ்சுமைவரைப்படுக்கவெண்ணிப்
பொறைச்செயற்கிருபனோடுபோசனையெழுப்பியாங்கோர்
முறைச்செயன்முகூர்த்தமொன்றுமுன்னுபுமொழியலுற்றான். (௪௨)

மன்னவர்மன்னனாகிவலியரின்வலியோனாகிப்
புன்மைதீர்புனிதனாகும்புயங்ககேதனனைக்கொன்றா
ரொன்னலருபாயத்தாலேயுதைத்தனன்வீமனந்தோ
வெந்நிலையவர்களேனுமிறைஞ்சிடாமவுலிமீதே. (௪௩)

ஆதலினைவர்தம்மையாடைவீடதனைநீங்கிப்
போதுருவகைவளைத்துப்பொருகணைமாரிதூவிப்
பாதிநள்ளிரவிற்சென்றுபடுத்திடல்வேண்டுமென்றா
னீதவனுவலக்கேளாவியல்புழிக்கிருபன்சொல்வான். (௪௪)

பொருவிரிதுரோணனல்கும்புண்ணியப்புதல்வகேண்மோ
தருமமன்றுறங்குவாரைத்தடிந்திடல்சயத்தேர்விட்டுக்
குருமுனையேதியின்றிக்கொய்யுளைநீத்தார்க்கோறல்
பெருமையன்றிழிப்பர்யாரும்பிழையிதுவிடுத்திபிள்ளாய். (௪௫)

வலம்புரித்தாமன்றாதைமனைவிகாந்தாரிமாறா
நலம்புரிவிதுரனின்னோர்நவிற்றிடிற்கோறுமென்றான்
சலம்புரிபுர்வித்தாமன்றானதுமறுத்துப்பின்னு
மலம்புரிகிருபனோடுமடங்கலினறைதலுற்றான். (௪௬)

முந்தைநாளாகவத்தின்மூண்டபோர்ப்பாண்டுமைந்த
ரெந்தையைப்புணர்ப்பினாலேயின்னுயிர்கொண்டசெய்கை
சிந்தைநின்றீருமன்றிச்சிறியனுந்திட்டத்துய்மன்
றந்தையைக்கொன்றானென்றுசபையெதிர்சாற்றலாற்றேன். (௪௭)

மொய்வயப்போரிலெந்தைமுடிந்திடமுடித்ததன்றி
வைவயத்தானைவிட்டவரநதிமகனைச்செற்றான்
செய்வயப்பற்குனன்றான்சிகண்டியைத்தண்டமாக்கொண்
டைவரோயிடித்தார்முன்னரருநெறியறத்தின்கூலம். (௪௮)

மறுத்துரையாடலொன்றுமாதுலவின்றிராவி
லறுத்திடுகின்றேனந்தவைவரையறிதியென்னா
நிறுத்தவாம்பரிகடம்மைநெடுங்கொடித்தேரிற்பூட்டிக்
கறுத்துளங்கடிதிலேறிக்கந்துகத்தாமன்போனான். (௪௯)

இருவருமவன்பின்பற்றியேகினாரிவுளித்தாமன்
கருகிருட்சீனையில்லின்கடைப்புறஞ்சென்றுநின்று
பெருகியகங்கைவேணிப்பிஞ்ஞகன்பாதஞ்சானித்
துருகினனளித்தானொள்வாளொன்றுமைநங்கைகேள்வன். (௫௦)

வாளொளிவிளக்கமேந்திமடிமனைப்புகுவான்வாயிற்
கேளுறுகிருபனோடுகிருதவன்மாவைவைத்துத்
தோளிணைபணைப்பவெங்குஞ்சுற்றுபுதிரியாவல்லே
மீளுநீஇத்திட்டத்துய்மன்வியன்றுகில்வீட்டில்வந்தான். (௫௧)

சென்றிவன்புகுதுமெல்லைத்திரள்புயத்திட்டத்துய்மன்
முன்றருவோர்களெல்லாமுயன்றபோரிளைப்பினாலே
கன்றியதானையோடுங்கண்படைகொண்டாரங்கட்
டுன்றுவெண்டுகிலார்பள்ளித்துயிலும்பாஞ்சாலற்கண்டான். (௫௨)

காண்டலுமுதைத்தான்காலாற்கண்டுயிலமளிநீங்கி
யாண்டெழுந்திவனைக்கண்டானவனவண்புரவித்தாமன்
மீண்டவன்குஞ்சிபற்றிமேதினிதன்னில்வீழ்த்திப்
பூண்டபூங்கழலான்மோதிப்புரட்டினான்புரளவாகம். (௫௩)

அந்நிலைத்திட்டத்துய்மனச்சுரீஇயுறக்கநீங்கான்
றன்னுடல்பதைப்புறமற்றளர்ந்தனனவன்களத்தை
வின்னெடுநாணாற்கட்டிமேழகமறுக்குமாபோற்
கன்னிகர்மார்பிலேறியரிந்தனன்கற்கித்தாமன். (௫௪)

பதாகினிமுழுதுங்கொன்றுபாவைபாஞ்சாலிபால
ருதாமனியுச்சிகண்டியோங்குசோமகார்முன்னானோர்
மதாசலம்புரவிகாலாண்மற்றவனுள்ளவெல்லாஞ்
சதாகதிசேர்தழற்போற்றடிந்தனன்றன்கைவாளால். (௫௫)

ஆடுபோர்க்கலக்கத்தஞ்சியாடைமண்டபத்தைநீங்கி
யோடுவார்தம்மைப்பற்றியுடன்றுரந்துயிர்குடித்தார்
நீடுயர்வாயினின்றகிருபனுங்கிருபன்றானும்
வீடுபேரூழிவேலைபோன்றதக்கங்குல்வேலை. (௫௬)

அந்திலம்மூவரிவ்வாறடுங்கொலையதனைநாடிக்
குந்திதன்புதல்வர்க்கஞ்சிக்குலைகுலைந்தவலங்கூரா
வுந்தியகடுப்பினோடியொருவரோடொருவர்கூடார்
சிந்தினார்சென்றார்செய்ததீவினைக்காறுரப்ப. (௫௭)

வேறு.

வீறுவாம்பரித்தாமன்வெரீஇயுளம், பாறுமெல்லையிரேவையிற்பண்ணவர்
தேறுதொல்கதைவேதசிவாகமங், கூறியங்கட்குழீஇயிருந்தார்களால். (௫௮)

தீர்த்தர்தங்கடிரள்கண்டவருழை, வேர்த்தமெய்யொடுமெல்லெனக்கிட்டினன்
சூர்த்ததீங்கிவன்சூழ்ந்திடுஞ்செய்கையைப், பார்த்துணர்ந்தனர்யோகபலத்தினுல்.

செய்தபாவந்தெரிந்ததபோதன, ரெய்தனுக்கினர்வேதியவீனனே
கைதருந்துயிற்காவலர்க்கொன்றநீ, வெய்தெனப்படர்வேறெருருகுழலில். (௬0)

நோக்கினுலுனையாங்களுநோன்பினே, யாக்குநீதிக்கயலவராகுவே
நாக்கினுலுனைநாடிநவிற்றிடி, னீக்கரும்பிரமக்கொலைநேர்ந்திடும். (௬௧)

கேடுசேரினுந்தான்பிறர்கேட்டினை, நாடுமாறதுநன்மையன்றெம்மையுங்
கூடநின்னெடுங்கூட்டலைநீயிவ, ணீடநின்றிடனீங்குதியென்றனர். (௬௨)

துங்கமாதவர்சொன்மொழிகேட்டலுந், தங்குமானத்தழலில்வெதும்பியே
யங்கணீங்கியேயச்சுவத்தாமனீள், கங்கையாறுகொள்காசியின்மேவினுன். (௬௩)

காசியாதிக்கடிநகரொங்கணும், வாசமேவுமறையவர்நிந்தனை
பேசநொந்துழிதந்துபெரிதுளங், கூசியாவிகுலைந்தலைகின்றநாள். (௬௪)

நித்திரைக்கொலைசெய்பழிநீக்குவான், மைத்திரைப்புவியேத்திடமாமறை
முத்திரைப்பொருள்கண்டமுனிவனை, யெய்த்திரைக்குமிளைப்புடனெய்தினுன். ௬௫

ஏதமுன்னியொருமருங்கெய்தியே, காதலோடுசொரிந்திடக்கண்கணீர்
வேதவோதைவெதரிவனத்துறை, வாதராயணன்ருளில்வணங்கினுன். (௬௬)

மறைவியாதன்வயப்பரித்தாமனை, யிறைதெரிந்துழியெய்தலையிங்குநீ
நிறையிருட்கண்படுக்குநிருபரை, முறையினீங்கிமுடித்தபதகனே. (௬௭)

பெருகும்பாதகமுன்னுடன்பேசினு, மருகுருதெமதாசிரமந்தனைத்
திருமியேகுதியென்றலுந்திண்சிலைக், குருவினும்பல்குலைந்துளங்கூறுவான். (௬௮)

உன்றனைச்சரண்கூறியுறுமெனை, நின்றனைக்கிலைநீத்திடிலானினங்
கன்றனைத்திடாகாளையர்தங்கள்பா, லின்றனைக்குமிரக்கமின்ருகுமால். (௬௯)

நீரம்வாரிநெடுங்கரையேற்றினு, ஞாமாருயிர்நல்குநர்வேறெவர்
சேரவானிற்செழுந்தருவீசினு, லாரவண்பறவைக்கரணுவார். (௭0)

இழித்தியாருந்துரப்பவிரங்கியா, ஞெழித்திடாயென்றுனைப்புகலுற்றனன்
கொழித்தமாமறைக்கோலவியாதநீ, பழித்திடாதருண்மற்றொருபற்றிலேன். (௭௧)

முற்றுமுற்றவுணர்ந்தமுதுக்குறை, வுற்றவேதவியாதவுனக்கியான் [தே.
சொற்றல்வேண்டுங்கொல்சோர்ந்தவர்கண்ணதே, கற்றமேலவர்கண்ணருளென்ப

நீவிடாதெனையாளநினைகெனுத், தாவுவாம்பரித்தாமனிறைஞ்சலும்
பாவியாநின்றுபாணிப்பப்பன்மறை, மாவியாதன்மனங்கனிந்தோதுவான். (௭௩)

யாதினும்பரிகாரமிதற்கிலை, கோதுநீங்குமுபாயமுங்கூறலாஞ்
சேதுவின்கட்செழுந்தனுக்கோடியென், ருேதவாரியிலுண்டொருதீர்த்தமே. (௭௪)

தொன்மைஞாலந்துதிப்பவிளங்கிடு, நன்மையென்னுமுழுவதுநல்கிடும்
புன்மையாவையும்போக்கிடும்புண்ணியத், தன்மையாலுயர்சார்பிற்சிறந்திடும். ௭௫

ஒற்கநீக்குமுளம்வெளிசெய்திடுஞ், சொற்கமீயுந்துயரந்துடைத்திடும்
வற்கநீடுமருட்பவமாற்றிடு, மற்கடிந்தருளானந்தநல்கிடும். (எசு)

அரிசுகாட்டுஞ்சுவன*மொழித்திடுங், கரிசுதீர்க்குங்கடவுளர்போற்றிடும்
பரிசுநல்குந்தசரதன்பாலனுங், குரிசிலேந்துகுனிசிலைக்கோடியே. (எஎ)

சாந்தியாதிதவநெறிதந்திடு, மாந்தர்காலவரைக்கிடைநாளிலே
வீந்திடாமையும்வென்றியுமீமிசை, யேய்ந்தவாயுளுமின்புங்கொடுத்திடும். (எஅ)

ஓங்குமேன்மையுமையிலடங்கிடா, வாங்குவார்தனுக்கோடியின்மாதமொன்
றுங்கணெய்தியிடையின்றமிழ்ந்தினு, னீங்குமித்திரைச்செய்தநெடுங்கொலை. (எகூ)

என்றுவேதவியாதனியம்பலு, மன்றுவாம்பரித்தாமனதனுமைச்
சென்றுவைகலிடையின்றித்திங்களி, லொன்றுமூழ்கினன்சங்கற்பமோதியே. (அ0)

காலமூன்றுங்கவுசலைகான்முளை, மாலொழித்தவரதனைப்போற்றவா
னேனுந்திங்களிறுதித்தினத்தினிற், கூலமார்தனுக்கோடியிலாடியே. (அக)

ஈசனஞ்செழுத்தெண்ணியிருந்துப, வாசமாகவருந்துமின்மாற்றியே
வீசுபானுவிரிந்தெழும்வேலையிற், கோசலேசன்விற்கோடிகுடைந்தரோ. (அஉ)

அன்றிராமனருச்சனைசெய்திடுங், குன்றவிற்கைக்குழகன்றிருமுன
நின்றுமார்பிறைத்திடக்கண்கணீர், நன்றுசேரின்பக்கூத்துநடித்தனன். (அங)

ஆடல்செய்திடுமன்பினைநோக்கியே, பாடல்விஞ்சையர்பண்ணவர்சூழ்ந்திட
வேடுலாங்குழலேழையொடெய்தினன், கோடற்றுமன்முன்கொன்றையந்தாமனே

வந்துநின்றவளர்மறையுச்சிமேற், செந்தனிப்பொருட்செல்வத்தைக்காண்டலு
முந்துவாம்பரித்தாமனுருகிநெஞ், சிந்துவேணியன்றுள்பணிந்தேத்துவான். (அரு)

ஆடுகாலவகாலவன்றம்புய, ஞடுசேகரநற்கருணகர
பாடுசாமமெய்ப்பாதிகொள்சாமமா, னீடுமத்தநெடுந்தொடைமத்தனே. (அசு)

தியகங்கையாய்சென்னியிற்கங்கையாய், தூயசோதியாய்தொண்டரைச்சோதியாய்
தாயினல்லனேசார்புனனல்லனே, யாயகண்டனேயல்லுறழ்கண்டனே. (அஎ)

அன்பர்க்கண்ணியாயம்புலிக்கண்ணியா, யென்பின்றாரினுயெண்கடித்தாரினுய்
பொன்கொள்வேணியாய்போதகவேணியா, யின்பவீட்டினுயென்பவம்வீட்டினுய்.

பாகவில்லனேபற்பதவில்லனே, மாகநாதனேமாமறைநாதனே
வேகவானனேவேங்கைக்கவானனே, நாகநேத்திராநன்னுதனேத்திரா. (அகூ)

கம்புட்காதினுய்காமனைக்காதினுய், செம்பொற்பாதனேசெப்புநாற்பாதனே
யும்பர்க்கும்பனேயோர்முலைக்கும்பனே, யம்புமாலனேயார்தருமாலனே. (கூ0)

என்னையாளவென்றேமுலகின்றிடு, மன்னையோடுமடைந்தனையையனே
முன்னைமாலயன்காணருமூர்த்தியா, முன்னையான்றெழச்செய்தவமுள்ளதே. கூக

போற்றிபோற்றிபுயங்கபுராதன, போற்றிபோற்றிபொருவிரிபூரண
போற்றிபோற்றிபுரவெனப்போற்றினு, னேற்றினுன்மகிழ்ந்துள்ளமியம்புவான். ()

வருதிவாம்பரித்தாமவுறங்கிடு, நிருபரைக்கொன்னெடும்பழிநீங்கினு
யொருவர்முன்புநாமுற்றுழியன்னவர்க், கருமையொன்றிலைவேண்டிற்றறைகென் [றுன்.

---

* சுவப்பனமென்பது—சுவனமென நின்றது.

நிற்பழிச்சிநெடும்பவநீங்கினேன், சிற்பரம்பரமற்றுன்றெரிசன
முற்பிறங்கருணல்லறமுற்றிலார்க், குற்பவங்களிற்கோடியுதவுமால். (கூச)

தூண்டுசோதித்துணையடிநேயமே, வேண்டும்வேறிலைவேண்டுவதிங்கெனத்
தாண்டுங்கொய்யுளைத்தாமன்வணங்கினு, ஞண்டநாதனுமவ்வரநல்கினுன். (கூரு)

வள்ளலன்னவன்காணமறைந்தனன், றுள்ளுகந்துகத்தாமனுஞ்சூழ்வினை
யள்ளனீங்கினனன்றுதொட்டந்தண, ரொள்ளலின்றெதிரேற்றனர்யாவரும். (கூசு)

வேறு.

வருதிர்மாதவிர்வாம்பரித்தாமனேர்வளரிராகவன்வான்றனுக்கோடிநீர்
பிரிவிலாதெழும்வாஞ்சையுற்றுடுநீள்பெருமையாலிடர்தீர்ந்தருட்கூடினுன்
விரிவினுலினிதிங்குமக்கோதினேம்விளைவெலாமிதுதான்றுளைக்காதினுற்
பருகுவாரெவர்தாம்படிப்பார்கடாம்பரமகாரணர்பூங்கழற்சேர்வரே. (கூஎ)

அசுவத்தாமாச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் கசுஉ௩.

# தருமகுத்தச்சருக்கம்.

அரியமாதவர்தம்மையங்கெதிர்சூதனேக்கினனன்பினுற்
றிரியவுந்தனுக்கோடிநீரதன்மேன்மையொன்றதுசெப்புவான்
பரிவினுடிர்பண்டோர்மன்னவனுண்டவன்பெயர்பகருவார்
தருமகுத்தனெனுமதிக்குலநந்தனல்கியதனயனே. (க)

வாளில்வைத்திடும்வென்றிவாம்பரிமன்னன்மன்னவர்சென்னிதன்
ருளில்வைத்திடுநந்தனந்தமிறைமகட்கருடந்திடு
நாளில்வைத்திடுநல்வளங்கெழுஞாலமங்கையைநீடுசேய்
தோளில்வைத்தடல்வாயில்வேடுவர்சூழ்புலப்பகைசாடியே. (உ)

உண்டுணவளியூணெரீஇத்தவமுன்னிநீள்வனமுற்றனன்
வண்டுணறவொழுகுதார்ப்புயமைநதனும்பினர்மாதவீர்
மிண்டுநாடுபுநேருநேரலர்வென்கொடுத்திடமுன்கொடாக்
கொண்டுநாடுபுநீதிநூன்முறைகுவலயம்புரவுற்றனன். (௩)

அமையமன்னதில்வேள்வியெண்ணிலவமரர்நாயகனுதியோர்
தமதுசிந்தனைமகிழ்வுறும்படிதானிழைத்தனனந்தணர்க்
கிமிழ்திரைப்புனலூருமேமமுமீந்தளித்தனனுதலாற்
சுமைநிலத்தவர்தத்தமக்கியறுறைவழாநெறிதுன்னினுர். (ச)

கருகுநெஞ்சுறுகள்வருங்கொலைகளவுசெய்திலர்காசினி
நிருபனுகியதருமகுத்தனுநீர்மையிற்பிறழாமலே
பெருகுபார்மகடுயர்தணித்திசைபெருகவைகுறும்வைகலின்
மிருகவேட்டையின்வெஃகிவாசியின்மேற்கொளாவனமேவினுன். (ரு)

வேரின்வாய்கமழ்பலவுசண்பகம்வெண்டுணர்ப்புனேமாதளங்
காரவேவளர்வேங்கைகோங்கொடுதூங்குதீங்கனியோங்குமாப்
பாரநீபமசோகுபச்சிலைபன்னிபூங்குமிழ்பாடல
மாரமாரகிலாதிநெருங்கிடுமரசுமேவியவடவியே. (சு)

நவசரோருகநாண்மலர்க்கருநாதவண்டினமொய்த்தலாற்
கவருநல்லிசையாழினிற்றிகழ்காமர்பத்தரின்மல்கவே
யிவருநீண்முகைமாடகம்புரையேரிலஞ்சியதெங்கணுங்
குவலயம்பொலிவெய்தவந்தருள்குரிசின்மேவியகானமே. (எ)

கம்பமைக்கடவருவிதூங்கிடுகரவனைக்குலமெங்கணும்
வெம்பழற்பொறிசிந்துசெஞ்சுடர்வெங்கணெண்கினமெங்கணுங்
கொம்பினிற்புரிதிருகினிற்குதிகொண்டுலாங்கலையெங்கணு
மம்புலித்திருமரபினீடுலகாளிமேவியவடவியே. (அ)

பாங்குபூங்கிளிபாடவாடல்செய்பச்சைமாமயிலெங்கணு
ஞாங்கர்வண்டிசையோடுதெள்ளிசைநாடுகோகிலமெங்கணுந்
தூங்குபஞ்சரவூசலாடிபுகுழ்குரீஇயினமெங்கணு
மோங்குதோள்வலியானெர்தங்கவுதாரிமேவியகானமே. (கூ)

புறமகத்துறையாகமேதகுபுண்ணியத்துறையுட்படுந்
திறமகத்துறைபலகலைத்துறைசேர்மறைத்துறைதிரிபுசான்
மறமகத்துறையாவருட்டுறைமருவுமாதவர்வாழ்வதா
மறமகத்தியன்மன்னனத்திரியோடடைந்திடுமடவியே. (க0)

ஆயிடைத்திரிகாலையெல்லியடைந்ததண்ணலுமந்திவாய்
நேயமிக்குயர்சந்தியின்கடனேறிமுடித்தருணினெவொடுங்
காயமேற்றிரிகொண்டமந்திரமெண்ணிவெம்புலிகானமார்
சீயமஞ்சுபுதாருவின்மிசைசென்றிருந்தனனன்றரோ. (கக)

வேறு.

ஆங்கணுளியமொன்றதுதானடங்காமடங்கலதுதரப்ப
வேங்கிநடுங்கியினைத்தோடியிறைவனிருக்கும்பாதவத்தி
னோங்குகடுப்பினுடனேறியுலகமுழுதுமொருகுடைக்கீழ்த்
தாங்குந்தருமகுத்தனெனுஞ்சயவாளரியைக்கண்டுரைக்கும். (கஉ)

வெருவாதொழிதிவேல்வேந்தேவிடபியிதன்கண்விடிவளவு
மிருவேமிருத்துமரத்தடியிலிருக்குமரியொன்றெல்லியிதி
லொருபாதியும்யான்விழித்திருப்பவுறங்குநீமற்றொருபாதி
நிருபாதுயில்வன்யான்விழித்துநீயிங்கிருத்தியென்றதுவே. (கங)

நன்றென்றுளங்கொண்டுயிர்பிழைப்பானந்தன்மகனுநத்தமதி
லொன்றுபாதிவிழிதுயின்றானுளியம்புரப்பவதுபோழ்தில்
வென்றிமடங்கல்விளித்தெண்கைவிடுவாய்தள்ளிவேந்தனைநீ
யென்றுநரரின்மிகக்கொடியரிறைவரொனலுமியற்பல்லம். (கச)

வயமாவதனையெதிர்நோக்கினைத்திற்றிரியுநீயொன்று
நயமாரறத்தின்றிறமறியாய்நம்பினோரைக்கொலைபுரிந்தோர்
பயமார்நிரயப்படுகுழியிற்படிவர்பகரும்பழிநீங்கி
யுயமாமகன்களோரயுதமுழுந்திறனுமொழியாதால். (கரு)

பனவக்கொலைமுன்பாதகங்கள்பாற்றற்குளதுபரிகாரந்
தனைநம்பினரைவதைத்தபவஞ்சாயத்தாக்குந்தவமில்லை
கனகவரையும்பெரிதன்றுகருதுங்காலைக்காதலினன்
மனநண்புடையாருயிர்கவரும்வஞ்சம்பெரிதாமென்றிடலும். (கசு)

பல்லமொழிகேட்டெதிர்மாற்றம்பகராதிருந்ததடன்மடங்கல்
வெல்லுமயில்வேற்றருமகுத்தன்விழித்தானதன்பின்விறலுளியம்
வல்லையிருகண்டுயின்றதவண்மன்னன்மகனைவயப்புலிபார்த்
தொல்லையிதனைத்தள்ளுதிநீயொழிந்தாலிடையூறுனக்கெய்தும். (கஎ)

என்னையெனிலிங்கிசைத்திடுவனிரவியெழுந்தாலியான்போவன்
பின்னையுளியம்பயந்திரும்பிறழ்வாளுகிர்சேர்பெருவிலங்கு
தன்னைத்துணியேலிஃதிறந்தாற்சாரும்பகைவேறிலைவிடியா
முன்னம்விடுதிதள்ளியெனமொழியவிறைவன்முறைதேரான். (கஅ)

மடியிலுறங்குங்கரடிதனைமறங்கூர்வயமாவிருக்குமரத்
தடியில்விழத்தான்றள்ளுதலுமழியாவறனுண்டாகையினு
லொடிவினகத்தாற்பசும்பணைமேலூன்றிக்கரங்களுறத்தழுவிப்
படியில்வழுவாதுய்ந்ததுயிர்பல்லம்விதிக்கார்பதியாவார். (ககூ)

அனைத்தாங்காலையதுசேறியரசன்மதலாயறம்பிழைத்தா
யெனைத்தோர்பிழையுமுனக்கிழைத்தேனில்லையிருவிருங்குலத்தே
னினைத்தாலடைவேனெவ்வடிவுநீடுந்தவத்தாலெண்குருவந்
தனைத்தானெடுத்தேன்விளையாட்டாற்சானகாட்டன்பெயர்கண்டாய். (உ0)

ஊகித்துணராதுறங்குமெனையொழித்தபவத்தாலுன்மத்த
ஞகித்திரிநீவனத்திடையென்றரசனடுங்கவருஞ்சாபம்
வேகித்துரைத்துவிறலுளியமிருகபதிதன்முகநாடி
யோகிற்சிறந்ததலைமையினுலுண்மைதெரிந்தங்குரைசெய்யும். (உக)

அளகைபுரக்குமந்திரியாமவன்மந்திரிமாவரசல்லை
குளகுண்கரிசூழிமகிரிநீகுறுகியொருநாட்குலமடவாள்
புளகமகுடமுலைதோயும்புரிவாலொன்றும்புலங்கொள்ளா
துளகுபுரையுமுன்கையவளோடும்விளையாட்டுற்றனையால். (உஉ)

ஏசுபுனையாக்கௌதமன்றுனெச்சமதற்காஞ்சமித்தொடிப்பான்
காசுபுனையுங்கண்டருக்கோர்கன்னியுதவுங்கரும்பட்டமா
மாசுபுனையும்வரையதன்கண்வந்தானுனதுமணிமருங்குற்
றாசுபுனையாநிலைகாணூஉத்துயர்கூரரியாகெனச்சபித்தான். (உங)

பெற்றுயதனுல்விலங்குருவம்பேர்பத்திரனுமுனக்கந்நா
ளற்றூர்க்கருளுமளகையர்கோனறத்திற்றிரியானவன்பாங்க
ருற்றுரொவருமத்தகையருயிரிங்கெனைநீயுணலாமோ
விற்றுமனைத்துஞ்சமாதியினுலெண்ணினேனென்றியம்பியதால். (உச)

பல்லமினையபல்லமொழிபகரக்கேட்டுப்பத்திரனுய்
வல்லைமடங்கலுருவகற்றிவயங்குந்தனதன்மந்திரியுஞ்
சொல்லுமுளியந்தனைப்போற்றிச்சூழுஞ்சாபக்கௌதமனு
நல்லமொழிநின்னுடனெனக்காநாணீங்கிடுமீதெனநவின்றான். (உரு)

சிங்கவுருவந்தீர்ந்ததனுற்றேர்ந்தேன்சானகாட்டனென
விங்குன்றனேநானெனவணங்கியெண்குமுனியையேமவொளி
யங்கண்விமானந்தனிலேறியளகையடைந்தானதன்பின்னர்த்
திங்குநெறியாலெவ்விடத்துஞ்சானகாட்டன்சரித்தானுல். (உசு)

தருமகுத்தனுன்மத்தன்றுனுய்நகரந்தனையடைந்தான்
கருமந்தெளியுமமைச்சரவற்காணூஉரோவைக்கையிருக்கு
மொருமைமனங்கூர்தந்தையுழையுடன்கொண்டணுகியுளமருட்கை
வருமந்நெறிசொற்றெதிர்விடுத்துமன்னன்றிருமுன்வணங்கினுர். (உஎ)

அரசனவனுஞ்சைமினிதாள்ரியமகனேடணேந்திறைஞ்சி
யுரைசெய்திவனுக்குன்மத்தமொழியுமுபாயமுரையென்றுன்
வரைசெய்தளப்பின்மறைவகுத்தோன்மாணவகன்கேட்டுளப்போதிற்
புரைசெய்மருடீர்பரஞ்சுடரைப்பொழுதுநீடப்புணர்ந்தறைவான். (உஅ)

சானகாட்டன்சாபத்தாற்சார்ந்ததிதுதான்றனிவேட்டை
போனகாட்டிற்கைகேசிபோற்றுருழிஞைபுகுதுபவ
மானகாட்டிற்போதியெனவந்தோன்வயவிற்கோடியிதற்
கானகாட்டைபிறிதொன்றுலகலாதலைகயாகையினுல். (உகு)

நாணிற்சிறந்ததனுக்கோடிநன்றுமெவற்றுநன்றுருகுஞ்
சேணிற்சிறந்தவீடுதருஞ்செல்வம்பெருக்குந்தீங்கொருக்குங்
காணிற்சிறந்தமறைபகருங்காட்சித்ததனுற்கழல்வேந்தே
பூணிற்சிறந்தபுதல்வனெடும்போதியவணீயெனப்புகன்றுன். (௩௦)

வேந்துமுனியுஞ்சைமினிதாள்வீழ்ந்துபணிந்துதனுக்கோடி
போந்துமதலையொடுநியமம்போற்றிப்படிந்தானெழுமுன்னங்
காந்துஞ்சுழல்கட்கடிநீங்கிக்கடிதினகன்றதலைக்கங்கை
யேந்துமவுலிக்கோசலைசேயிறையையிறைஞ்சியிருந்தொருநாள். (௩க)

மகனைவிடைகொண்டிறையிருடிவனத்திற்புகுந்தான்மற்றங்கட்
டகவினீடுந்தருமகுத்தன்றுனுவிராமநாயகனுக்
ககவுள்பலவுமாடகமுமணியாடைகளுமவைபிறவு
மிகவுமுதவிவிப்பிரர்தாம்வேண்டுவனவுங்கொடுத்தன்பால். (௩உ)

ஏனுதியரோடணிநகரமெய்தியிடர்நீத்தின்பினெடு
மானுதளித்தான்கடலாடையகலமறத்தினகலாமற்
கானுர்மருள்கூருன்மத்தங்கடியகுமாரகண்டன்முதற்
கூனுர்கொடுங்காற்றனுக்கோடிகுடையுமவர்பாலடையாவே. (௩௩)

சாதமிதுமற்றிருகாலுஞ்சாற்றுகின்றேந்தனுக்கோடி
வரதமணிநீர்துறந்தயனீர்வாஞ்சைபுரிவான்பத்திநாயி
னிரதநறும்பால்கிடைத்திருக்கவிரந்துதிரிவான்கள்ளியின்பால்
விரதமருவுஞ்சுடர்ஞானவிளக்கிற்றிகழும்விழியுடையீர். (௩௪)

மொழியும்பிறநீர்தனின்முக்கான்மொழியாவிதன்பேர்மூழ்கினரு
வழியுங்கமலமலரயனூர்வாழுந்திருவின்வளமெய்தும்
பொழியுந்தருணநிலாமவுலிப்பொருளிற்பிறிதாம்பொருளனைத்து
மொழியுநிலையுந்தவநெறிநின்றெழியாநிலையுமுடையீர்காள். (௩௫)

வேறு.

முரணகற்றுந்தூயசீர்முனிவிர்மற்றிங்கோதினே
மிருசெவிக்கொண்டோர்கள்பாலிரணியத்தின்சோரமே
பரமகத்தின்கேண்மையோர்பழியனைத்தும்பாறவே
தருமறத்தின்றுதையாந்தருமகுத்தன்காதையே. (௩௬)

தருமகுத்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ககூருக.

---

# பராவசுச்சருக்கம்.

---

பேர்திகழ்சுதன்மரித்தம்விருப்பொடுபேசுற்றுன்
றேருமின்மாதவிரற்புதமேதகுதிருமல்கும்
வார்சிலைநீடியகோடியிலுண்டொருவளனின்னும்
பாரதிலுண்டுபராவசுவென்றெருருபனவன்றுன். (க)

ஆதியநான்மறையோதியுணர்ந்தவனவனேர்நாட்
டாதையையின்னனெனத்தெரியாதுயிர்தானுண்டான்
றீததுதீர்ந்ததுகோசலையேந்தல்சிலைக்கோடி
யோதனநீர்தனிலாடுபுமற்றஃதுனைசெய்கேம். (உ)

அவ்வகைசொல்வுழியந்தணனையனையறியாம
லவ்வகைசெற்றதுவிற்றருகோடியினுதகந்தோய்ந்
திவ்வகைபாவமுருக்கியதென்றதனியல்பெல்லா
மெய்வகைமாதவர்சூதவிரித்துவிளம்பென்றார். (௩)

சென்றுவிளுமொழியஞ்செவியூடுசெலச்சூத
னன்றெதிர்கூறுமவர்க்கடல்சேர்பிருகத்துய்ம
னென்றெருருமன்னவனுண்டவனீள்கடலிடமெங்கு
நன்றுணர்நீதிவழிப்புரவுற்றனனகைவேலான். (௪)

சத்திரவேள்வியினிந்திரனுதியர்தமைவென்றேன்
முத்தியுணர்ந்தரயிப்பியனென்பவன்முடிமன்னன்
சித்தம்விருப்புறுதேசிகனுய்மிகுசெயல்வேள்விக்
கொத்தவைமுற்றுநடத்துமறைத்துறைகொண்டுள்ளான். (௫)

ஏருவாவசுநீடுபராவசுவெனமைந்த
ரோரிருவோருளரன்னரயிப்பியனுதவுற்றே
ராரணநான்கதனங்கமொராறதனளவாகு
நேரியநுண்பொருணூலவையாவுநிறைந்துள்ளார். (௬)

கங்கையினீடுபுகழ்க்கொடைசேர்பிருகத்துய்ம
னிங்கணைவீருயர்சத்திரவேள்வியிழைப்பானென்
றங்கவர்தம்மையழைத்தலுமையனதருள்பெற்றே
பொங்குமருத்துவர்போலொளிமிக்கவர்புக்காரால். (௭)

ஏசறுதந்தைரயிப்பியன்முன்னவனில்லாளோ
டாசிரமத்தினிருந்தனன்மைந்தர்களவ்வேள்வி
மாசறவாற்றினர்மற்றதுகாணியவந்துற்றார்
காசறுமன்னன்விளித்திடமாதவர்கணமிக்கார். (அ)

ஆங்கவர்கோதமனத்திரிகாசிபனணியாழின்
வாங்கிசைநாரதனீடுபராசரன்மார்க்கண்டன்
றாங்குபுலத்தியன்குற்சன்வசிட்டன்சதானந்தன்
றாங்கொலிவேதவியாதனுடன்கிருதுர்த்தக்கன். (க)

வைப்புலகத்தினெனும்புலகன்கவிவான்மீகி
தப்பிலரும்பொருணூலுணர்தௌமியன்சாபாலி
யெப்புவியும்புகழ்கௌசிகனென்பவரிவர்மைந்த
ரப்பெரியோரருண்மைந்தர்தம்மைந்தர்களளவில்லார். (கo)

உற்றிடுபண்ணவர்தம்மையருக்கியவுதகத்தான்
மற்றையநல்லுபசாரவிதத்தினின்மன்னன்ற
னறற்மிலர்ச்சனையாற்றினன்வேள்வியதணிகாண்பான்
சுற்றியநான்குதிறங்கொள்பதாகினிசூழ்போத. (கக)

வேள்விசெயற்கியல்பல்பொருளோடுறும்விறல்வேந்த
ராள்வினைவண்மையரொட்டிகள்வன்னிகளகம்வாழ்வோர்
கோள்வினைநீங்குபுகானிலமாதொடுகுறுகுற்றோர்
சூழ்வினைமுற்றும்விடுத்தவர்தாம்பிறர்சூழ்ந்துள்ளோர். (கஉ)

கூடினர்யாரையுமங்கவர்தன்மைகுறித்தண்ண
னீடியபூசனைசெய்துபருப்பொடுநெய்தேன்பா
லோடியவைவகையுண்டிமணிக்குலமுடைபொன்பூ
ணேடியவேனவுநல்கிமகிழ்ச்சியினிறைவித்தான். (கங)

அச்சபையூடுரயிப்பியன்மைந்தரறத்தாற்ற
லெச்சநடத்தவசிட்டனைமுன்னவரொதிர்காணூஉ
விச்சையின்வல்லுநரிங்கிவர்போலிலர்வேறென்று
வுச்சிதுளக்கினர்தொக்கவர்யாருமுவப்புற்றார். (கச)

ஆயிடைநீடுபராவசுவேள்வியதிற்சில்ல
மேயசெயற்புரிவுற்றனன்மூன்றும்வேலைக்கட்
சாயமகப்பணியீற்றிலகப்பணிதானுடிப்
போயினனாசிரமத்தொருதான்றனிபுரையில்லான். (கரு)

ஏகுழிமாலிருண்மல்கியகாட்டினிலேணத்தோ
லாகமறைப்பவிருந்திடுதந்தையையறியானாய்
வேகவினைக்கொள்விலங்கிதுகொல்லும்விரைந்தென்று
வாகைபுனைந்தபராவசுமித்திரைமயலாலே. (கசு)

உய்ந்துயிர்வாழ்தல்பொருட்டுரயிப்பியனுடல்செற்றுன்
வந்தனையைத்தெரிவுற்றபினெந்தையைவதைசெய்தே
னிந்தமறக்கினியென்செயலென்றழுதிடர்கூரா
வந்தவினைக்கடனாற்றுபுபின்னையவன்றன்பால். (கஎ)

சென்றுணராதுயிர்தாதையைவாட்டியசெயல்சொற்றா
னன்றவனகம்வெதும்பியிடர்க்கடலாழ்ந்திட்டா
னின்றபராவசுவாங்கிளவன்முகநேர்நோக்கி
யொன்றுரைகேண்மதியெம்பியெனாவிஃதுரைசெய்வான். (கஅ)

வாம்பரிமன்னனிழைத்திடுசத்திரமகமாற்றற்
கோம்படைசெய்தனமிப்பணிமுற்றுதலுன்றன்னா
லாம்பரிசன்றறியாதுயர்தாதையையடுபாவம்
போம்பரிகாரமுனாற்றலுமுள்ளம்புரிகிற்கும். (ககூ)

ஒல்லையினீவிரதங்கொளல்வேண்டிடுமொருவேனா
யெல்லையில்சத்திரவேள்விமுடிக்குதல்யான்வல்லேன்
வல்லைகொனீயெனவோதலுமுன்னவன்மற்றன்னோன்
சொல்லைவினாயருவாவசுவாங்கெதிர்சொல்கின்றான். (உ0)

பேதுறல்யான்விரதம்பிரமக்கொலைபிரிவெய்த
வேதமிலாவகைசெய்குவல்சத்திரவெச்சத்தை
நீதவறின்றிமுடித்தியெனாமகிலைநீங்கிப்
போதுதல்செய்தனன்முன்னவன்வேள்விபுரிந்துற்றான். (உக)

வேறு.

ஆங்கணித்தகல்பின்னவனாண்டுபன்னிரண்டு
நீங்கிடாவிரதம்பிரமக்கொலைநீங்கும்
பாங்கிலாற்றுபுதகையொடும்வேள்வியிற்படர்ந்தா
னோங்குமுன்னவன்கண்டவணரசனோடுரைப்பான். (உஉ)

தலைவகேளருவாவசுத்தானிவன்பிரமக்
கொலைபுரிந்தவன்சத்திரவேள்விசேர்கொள்கை
யிலையிவன்றனையிக்கணநீக்குதியின்றே
னிலைமைசான்மகம்பலித்திடாதென்றலுநிருபன். (உந)

இரவினீள்வனத்தையனைத்தான்கொறீங்கிரிய
விரதமாற்றியதம்பியர்க்குரைத்திடும்விரோத
வரவுதேர்கிலன்மன்னவன்மாமகச்சாலை
யொருவியேகெனவாங்கருவாவசுவுரைப்பான். (உச)

யானிழைத்திலனிப்பிரமக்கொலையென்முன்
னானிழைத்தனன்றன்பழிபாறிடத்தனக்கா
வானநோன்பியானாற்றினேனாறிரண்டாண்டு
மானவேலவமற்றிதுபடிறெனமன்னன். (உரு)

ஆர்வமுண்மையாற்பராவசுமேற்பழியாயான்
பேர்வைநீயெனப்பின்னருமிவனையேபிரித்தான்
சார்விலாதகறரணிகாத்தளிக்கினுந்தம்பாற்
சேர்வையோர்ப்புரந்தளிப்பதுமன்னவர்செயலே. (உசு)

நிருபனீத்தபினந்தணர்யாவருநீத்தார்
வெருவுகூரருவாவசுவேறொருவனம்போ
யொருவராற்றருந்தவமுதற்சிலபகலுஞற்றிப்
பொருவில்பானுவைநோக்கியோர்நோன்பதுபுரிந்தான். (உஎ)

நோன்பினுலிவனுதகும்பரிசினைநோக்கி
வான்பெருஞ்செயற்கரியதாந்திருவுளமகிழ்ந்து
தேன்பிறங்குதாரிந்திரன்முதலினோர்செறியத்
தான்புகுந்தனன்றரணியிலிலகுசீர்த்தரணி. (உஅ)

தஞ்சமில்புவிக்கொருதனிநாட்டமாய்த்தலைகெட்
டெஞ்சமாலிருளெழுதருமிரவியைக்காணுஉக்
கஞ்சமாமலர்மலர்த்திடுமவன்கழற்கஞ்சம்
வஞ்சமில்லருவாவசுவாழ்த்தினன்வணங்கி. (உகூ)

வணங்கிநின்றிடும்ரயிப்பியன்மகன்முகந்தெரிந்து
பிணங்கிறேவரும்பானுவும்பேசுவார்பிள்ளா
யிணங்குநின்பிரமசரியநிலைமையாலிழைக்குங்
குணங்கொண்மாதவக்கொள்கையான்மறைபயில்குறிப்பால். (௩0)

புனிதனுயினைபராவசுப்பொய்மொழிபுகன்று
தனியகற்றவும்பொறுத்தனைதந்தையைக்கொன்ற
துனியொருங்கநீள்விரதமற்றவன்றனைச்சுட்டி
நனிபுரிந்தனைநவையுனக்கென்கொலோநவில்வார். (௩க)

தாவிலுன்றனைக்கொள்ளுதுந்தள்ளுதுமவனை
நீவரம்பெறவேண்டியநிகழ்த்துதியென்முர்
தேவருஞ்சுடர்த்திவாகரச்செல்வனுஞ்சிந்தை
நோவுதீர்ந்தருவாவசுவவர்க்கெதிர்நுவல்வான். (௩உ)

ஐயனுருயிர்பெற்றெழுமவ்வரமருளிச்
செய்யவேண்டுவலென்றனனீந்துயின்றேவர்
பொய்யிலாயினமொருவரங்கேளெனப்புகன்முர்
மையறீரருள்சேரருவாவசுவகுப்பான். (௩௩)

தன்னையன்றனைத்தன்கையாற்றடிந்தவத்தவறு
முன்னையோனையும்விடவருள்வீரெனமொழிந்தான்
பன்னுவாரவர்தாதையாம்பனவனைக்கொன்முற்
கென்னையோபரிகாரம்யாமியம்புவதினியே. (௩சு)

பெற்றவந்தணனுருயிர்கொன்றவப்பிழைதான்
மற்றொருத்தர்செய்தவத்தினுன்மாறுமோமைந்தா
சொற்றிடப்புகிற்முன்றவமாற்றினுந்தொலையா
திற்றெனச்சொலுந்திறமிலோம்யாம்பரிகாரம். (௩ரு)

என்னவோதியதேவரையெதிர்குறித்தேத்திப்
பின்னுமாங்கருவாவசுப்பேசுவான்பெரியீர்
முன்னுநும்பெருந்தகைமையாலுய்யவென்முன்னே
னென்னைவெஃகியோருபாயநீரியம்புமினென்முன். (௩சு)

அவர்நெடிப்புறச்சானமுற்றிருந்துணர்ந்தவாசி
யுவரியின்கரையிராகவனுளிர்திருக்கரத்துத்
தவர்கொள்கோடியென்றொருபுனலுண்டதன்றகைமை
யெவரளப்பவரில்லைமற்றதுதனக்கெல்லை. (௩எ)

வரமளித்திடும்வரம்பிலாவறம்பலவழங்கும்
பிரமகத்திதேம்பிரசமுண்பெரும்பவமரும்பொன்
கரவுநீள்குருதற்பகமனங்கலப்பென்னப்
பரவுபாதகமைந்தையும்வல்லையிற்பாற்றும். (௩௮)

நாட்டமின்றியேபடியினுமப்புனனனம்
வீட்டில்வைத்திடும்வெங்கனநரகிவைவிளையா
காட்டுமெய்ப்பொருட்காமமுங்கண்ணுதல்கயிலைக்
கோட்டிலேற்றிடுங்கோசலைமகன்றனுக்கோடி. (௩௯)

முரணுலாந்தனுக்கோடியென்றுரைத்திடின்முக்கா
லரணமாயவற்கறம்பொருளின்பம்வீடளிக்கு
மிருணநீக்கிடுமிப்பழியித்தனுக்கோடி
சரணமாவடைந்தாடினுலொழியுமுன்றமையன். (௪௦)

மந்தணப்பொருளுனக்கிதுவகுத்தனமென்று
வந்தரத்தவர்தாமறைந்தந்தரம்போனு
ரிந்தவாற்றடைவடையவுமிளையவனெய்தி
முந்துநீத்திடுபராவசுத்தன்னுடன்மொழிந்தே. (௪௧)

அண்டர்சூழ்தனுக்கோடியினன்னவன்றன்னைக்
கொண்டுடன்படர்ந்தரியசங்கற்பமுங்கூறி
வெண்டிரைப்புனல்வீழ்ந்தமிழ்ந்தெழுந்திடும்வேலைக்
குண்டலம்பிறந்திட்டதோர்வடிவிலாக்கூற்று. (௪௨)

மாண்பராவசுகேண்மதிதந்தையைவதைத்த
வீண்பெரும்பவநரகினில்வீழ்த்திடாவண்ணஞ்
சேண்படர்ந்ததென்றறுவினைச்சிந்தைநோய்தீர்ந்து
கோண்புணர்ந்திடாவிளவலோடுளங்களிகூர்ந்தே. (௪௩)

சராசனப்பெருங்கோடியைத்தலையினுல்வணங்கி
யிராமநாதனையிணையடியிறைஞ்சிநின்றேத்திப்
பராவசுப்புகழ்த்தம்பியுந்தானுமாய்ப்பயந்தோன்
விராவுமாசிரமந்தனைமேவினுர்விருப்பால். (௪௪)

மாய்ந்ததாதையுமெழுந்தனன்மைந்தனைக்கண்டா
னுய்ந்தமூவருமாயிடையின்பமுற்றமர்ந்தார்
சாய்ந்தமாண்டனுக்கோடியிலாடியதகையா
லீந்துளாரருள்பராவசுவிடத்திலாங்கெவரும். (௪௫)

வேறு.

ஏற்பராவருட்போதவறத்தினீரிப்பராவசுப்பாவமொழித்தவா
றற்பினுலுமக்காகவிற்றினேமற்பமார்சுவைப்பானமுதற்கனர்
பொற்பிலாவினைத்திமைகணத்திலேபுக்கபானுமுற்சேரிருளொப்பவே
கற்பரேலிசைக்காதில்டைப்பரோற்கைப்புருதவிக்காதையகற்றுமே. (௪௬)

பராவசுச்சருக்கமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௨௦௦௫.

# கவிசம்புச்சருக்கம்.

---

ஆங்கண்மீளவுஞ்சூதமாமுனியழிவில்பண்ணவர்குழுவைநாடியே
தாங்குவார்தனுக்கோடிநீர்வளஞ்சாற்றுவானெடுத்தேற்றமாதவீர்
நீங்கள்வம்மினோகேண்மினொன்றுநீடுதெண்டிரையாடைவையமேற்
பாங்கிலோர்நரியோடுநண்புதான்பண்டொர்வானரங்கொண்டுவைகிடும். (௧)

அன்றுமானுடமவையிரண்டுமுன்னந்தநாளினுமளவில்கேண்மையா
லொன்றிவாழ்ந்ததம்முண்மைதேர்தலாலுருவம்வேறுவேறாகமாறியுந்
தொன்றுநாடியேதோழமைக்கொளுந்தொடர்புநீங்குறுசடலைதன்னிலே
நன்றுதாங்களித்துறையும்வேலையினரியைநாடிவானரநவிற்றிடும். (௨)

யாதுபாவநீமுந்தியற்றினையீமமேலிறந்திட்டபேர்கடங்
கோதுசேர்பிணத்தசையருந்துவாய்கூறுசம்புநீயென்றுகூறலு
மாதிதேர்வுறீஇமிகலனுங்கதற்கறையுமுள்ளவாறந்தநாளியான்
வேதநூல்களைகண்டவிப்பிரன்வேள்வியோடெலாவிதியுமோர்ந்துளேன். (௩)

மல்லறேவசன்மாவெனுமமோர்மறையவன்றனக்குதவிவாசகஞ்
சொல்லியீந்திலேன்றோடமன்னதாற்சுடுவனத்தழன்றடியருந்துகே
னில்லையென்றிடாதேவராயினுமிடுதல்செப்பியேயீந்திடாரொனி
லல்லல்கூர்நரியாவரப்பொருளற்பமாயினுமதிகமாயினும். (௪)

நாடிநல்குவோமென்றுநல்கிடார்நச்சும்யாவையுநாசமாயிடும்
பேடிபான்மகப்பேறிலாமைபோற்பிறவிபத்திலாமறமுடன்கெடுங்
கோடியென்றுவேதியனையொன்றதன்கொடைபுரிந்திடார்கொண்டபாதகம்
பாடில்வாம்பரிமேதநூற்றினும்பாறிடாவெனக்கென்றுபாறுமோ. (௫)

ஆகையானரியாவதுண்மையேயந்தணாளருக்கருள்வழங்கியே
யீகைசெய்திடாருணர்வின்மேலையோரீதுமென்றதங்கிதல்வேண்டுவா
ரோகையாலெனாவோதியேநரியொன்றுகேள்கவியென்றுகூறிடு
நீகுரங்குருவானதென்கொலோநீடுபுட்குலஞ்சாடுகின்றியால். (௬)

நவிலுகென்றலும்வேதநாதனென்னுமம்விச்சுவநாதனல்கினோ
னவமில்பேர்கமலாலையம்மனைக்கந்தணாளனானந்தநாளினு
மிவறனண்பினேம்யானுநீயுநீயிஃதுணர்ந்திடாயானுணர்ந்துளேன்
சிவனையர்ச்சனைசெய்ததன்மையாற்றெரியுமுற்பவச்செயலெனக்கநாள். (௭)

கலைகொள்வேதியன்கறியைமுன்னியான்கரவுசெய்தவக்கறைவிடாமையா
லலைகொள்வானரமாயினேன்மறையாளர்தம்பொருளபகரிக்கொணா
விலையதற்குநேர்மிக்கபாதகமிருளுலாங்கடுத்தனையருந்தினோர்க்
கொலைசெயும்புவியமரார்தம்பொருள்குலமடங்கலுந்தொலைவுசெய்திடும். (௮)

அம்புவிக்குலத்தேவர்பண்ணியமபகரித்தவனளவையில்லநாட்
கும்பிபாகமுற்றெஞ்சுதீமையாற்கோடரத்துருக்கோடலுண்மையா
விம்பரும்பர்தங்கூலம்வவ்விடாரியல்புணர்ந்துளோரிருபிறப்பினோர்
தம்புறஞ்சொலார்குறைநினைந்திடார்தவறுசெய்யினுந்தாம்பொறுப்பரோ. (௯)

வாலர்நல்குரவாளரீகிலார்மறையுணர்ந்திலாரெனினுமற்றவர்
பாலொணாதவமானமாற்றுதல்பனவர்சீறினுலனலைமானுவா
ரேலுமன்புசாலினியநண்பினேமிகலகேண்மியாவிப்பிறப்பினிற்
காலமூன்றினிற்சென்றகாலையிற்காரியஞ்சிலகாண்பதின்றியே. (௧௦)

வரவுகாண்கிலேனென்னதீமையோவஞ்சவிப்பிறப்பெஞ்சுமெந்தநாள்
விரவுநோய்ப்பிறப்பிஃதகற்றுவார்வேறியாரெனக்கூறிவெஃகியே
கரவுசேர்நரிகவிபிருந்திடுங்காலையெய்தினன்கண்ணுதற்பிரான்
புரவுசால்புகழ்க்கீதவாய்மைபான்பூதிபூசினன்சோதிமேனியான். (௧௧)

அருவுருக்கொளாவடலுருத்திரனக்கமாமணியணியுமார்பினன்
திருவினீடருட்செல்வமேன்மையான்சிந்துதீபனுந்தெய்வமாதவ
னொருவுமுற்பவத்துள்ளநன்மையாலுவையிரண்டுமங்கவனைநோக்கியே
யிருகழற்பணிந்தேத்தியெந்தைநீயீதுகேளெனுவோதுமொன்றரோ. (௧௨)

மனுதியெய்திடாமறையுணர்ந்திடும்வரதநீயெலாவறமும்வல்லையா
லினதீமைகூறொம்மைநோக்குவாயிழிபிறப்புடலிதுபொறுக்கிலேம்
பினுகியன்பனேபிரியுமாறிதுபேசல்வேண்டுநீபெறுதிவேண்டிடா
ரநாதர்நொந்துளார்சிறுவர்வெம்பிணியாளர்பாலருளறிஞர்செய்வரோ. (௧௩)

எந்தைநின்கணுலெம்மையாள்கெனுவிருபதம்பணிந்திடவியம்புவான்
சிந்துதீபனுநுங்கள்பூருவந்தெரிந்தனம்பெயர்தேவசன்மனு
மந்தமில்லெழில்வேதநாதனுமாதிநாளினுன்களவைகொண்டநெற்
றந்திடாமையாலந்தணர்க்கவர்தங்களிற்கறிதாங்கரத்தலால். (௧௪)

ஏயதுங்கள்பாற்சம்புவோடரியிருவிர்கேண்மினீரிந்தமாசுட
லோயுமாறுமக்காமுபாயம்யாமொன்றிசைக்குவந்தென்றிசைக்கடற்
காயுநீடனுக்கோடியெய்திநீர்கடிதின்மூழ்குமின்கடையுடற்பவ
மாயுமாறெனுவருளிமீளவுமாதவன்பழங்காதையோதுவான். (௧௫)

சுமதியென்றுமோர்சுருதியாளன்முன்சுராகுடித்தனன்கராயில்வேட்கையா
லமைதியின்றியேபுளினமங்கைதோளணைதல்செய்தனனந்தவல்வினை
யிமைகொளும்பொழுதளவிலிற்றதன்றிந்தவார்தனுக்கோடிமூழ்கியென்
றுமைமனுளனன்பினனுரைப்பநேருரைசெயுங்கவிநரியிரண்டுமே. (௧௬)

தேர்மகத்துறைச்சிந்துதீபனேசெப்புமந்தணனிப்புவித்தலத்
தார்மகன்மதுவுண்டதெந்தவாறவனைவெங்கொலைச்சவரார்தங்குலத்
தோர்மடந்தைவந்தெங்ஙன்மேவினுளுரைவிரித்தெனப்படிவனுேதுவா
னேர்மராட்டதேயத்துளான்பெயரொச்சதேவனேரிருபிறப்பினன். (௧௭)

மதிகொள்செஞ்சடைவள்ளன்மாயவன்மகிழருச்சனைமரபினற்றுவா
னதிதியர்க்கவர்நிதியமாகுவானரியநான்மறைமுறைபிறழ்ந்திடாக்
கதியினீடுவானவன்வயிற்றிலோர்காளைதோன்றினன்காமநூலதி
னுதிகொள்சிந்தையான்குமதியாயினுநவலுவார்கள்பேர்சுமதியென்பரால். (௧௮)

இற்கலப்பிலான்றந்தைதாயெனுமிருவர்தம்மையுமொருவியேகியே
புற்கலப்பெயர்நாட்டின்மேவினன்பூசுரக்குலத்தாசினீதியி
னிற்கலாற்றலான்விடருடன்றழீஇநிலையுநாளினிற்கொலைசெய்வேடுவப்
பிற்குலத்துளாளொருமடந்தைதான்பெண்ணுருக்கொள்கூற்றன்னதன்மையாள். ()

அரிவைமிக்கவளையன்மாரினுமாறலைத்திடாளன்புகூறியே
புரிவுசெய்தெலார்பொருளும்வௌவுவாள்பூவையன்னவள்பொதுவின்மேவினாள்
பரிவுகூர்மனச்சுமதிபோற்றினான்பாவைதானிலம்பாட்டினாளொனாத்
திரிபின்மாண்பொருட்டிருடிநல்கியேதெரிவைதோள்புணர்செயலினீடினான். (உ0)

முருகலர்க்குழற்புளினமாதொடுமோகமோவிலான்போகமேவுவா
னொருகலத்தினுண்டுண்ணொணாதவுணவுமற்றவளோடருந்தினான்
றிருகலக்கணோடுறையுமிந்தநாட்டிருடல்வெஃகியேயருடிரிந்திடும்
பொருகலக்கமில்வேடர்தம்மொடும்போதுவான்கொள்வான்வேடம்வேறரோ. உக

வேறுவேடமார்வேடர்போலவேவிறலிலாடர்தம்வேடமேவியே
யாறுசெய்கையானில்லிடம்புகுந்தவனதாவியுமம்பொனீட்டமும்
பேறுகொண்டுதான்பெருகுகாதலாற்பிறைகொணெற்றியாணிறைமதுப்புலா
னூறுமாம்பலாள்புளினமின்னனாணண்ணுமவ்விடநண்ணினனரோ. (உஉ)

வேறு.

திரியவருமவன்பின்னர்த்திணியிருளிற்கரவாம
லெரிகுஞ்சிவிளக்கேந்தியிழைத்தமறந்தருவதுபோற்
கரியதுகின்மருங்கசைத்துக்கடுங்குரலாற்றிசைகலக்கிப்
பெரியகொலைப்பிரமகத்திபிற்றொடர்ந்துபடர்ந்ததுவால். (உ௩)

பிற்றொடர்ந்துவெருவரல்செய்பிரமகத்திதனக்கஞ்சிச்
சொற்றொடர்மாநிலமுழுதுஞ்சுழன்மருத்திற்றடுமாறி
நற்றொடர்பின்வானரமேநரியேமற்றவனந்நாண்
முற்றொடர்பாலொருபகற்றன்மூதூரைவந்தடைந்தான். (உ௪)

வந்தவன்றன்றாதையடிவணங்கிமனமருளுற்றே
னெந்தையெனைப்புரவென்றானின்றவனுமருள்பெருகிச்
சிந்தையினிலச்சமுறேல்சிறுவவெனமருங்கழைத்துப்
புந்திகொடண்ணளிபுரியப்புகுந்தனனப்பொழுதின்கண். (உ௫)

பெற்றவனைமுகம்பார்த்துப்பிரமகத்திநீயிவனைப்
பற்றியருள்புரியற்கபார்ப்பானையுயிர்கொன்று
னற்றமிகுஞ்சுராகுடித்தானடகக்கள்வனுமானான்
முற்றுமிவன்செய்தவெலாமுடிவிலதிபாதகமே. (உ௬)

தன்றனைமுன்சுமந்தளித்ததாய்தனக்குந்தந்தையெனு
முன்றனக்குமில்லவட்குமுதவலிலாப்பெரும்பாவி
யின்றிவனைக்கைப்பிடித்தாலிவனளவன்றீங்குனையுங்
கொன்றிருவர்மாதரொடுங்குலமுழுதுங்கொலைசெய்வேன். (உ௭)

ஒழிக்கிலுமக்கிடர்செய்யேனொருவனுக்காவொருகுடும்ப
மழிக்குமதமரபன்றாலறப்பனுவலாய்ந்துளையாற்
கழிக்குமதேகடனெனலுங்கலைமறையோன்கடிதனைப்பார்த்
திழிக்குநெறியவனெனினும்யான்பயந்தமகவன்றே. (உ௮)

தருக்குமுயிர்தானிழந்ததனயரவர்க்கரைந்தழுதே
யுருக்கியுடலுடன்சாதற்கொருப்படுவருலகுள்ளோ
ரிருக்குமகவிறந்திடுதற்கிசைந்திடுமாறெவன்கொல்லோ
பெருக்குமகக்காதலெனைப்பிரிகிலதென்செயவென்றான். (உ௯)

விதிமரபுமாசிரமமெய்ந்நெறியும்விடுத்தழிந்த
பதிதனைநீவிடுதியிவன்பரிசனமுந்தரிசனமு
மதிகபவமாக்கிடுமென்றறைந்தவனையருள்செய்தோ
னெதிர்கரங்கொண்டறைந்ததுடலென்புநெறுக்கெனமுரிய. (௩0)

பிடித்தகொடும்பிரமகத்திபிறங்குநெடுங்கையதனு
லடித்திடலுமன்னுகோவையயாகோவெனவலறித்
துடித்துநிலத்திடைவீழ்ந்தான்றனைவியுடன்பயந்தோரு
முடித்ததுயிரெனக்கலங்கிமுகத்தறைந்துமிகக்கலுழ்ந்தார். (௩க)

பழங்கணிதுநிகழ்ந்திடுங்காற்பசுபதிதன்வடிவாகுந்
தொழுந்தகையதுருவாசன்றன்னினனன்னவன்மனையி
லெழுந்தவெச்சதேவனுஞ்சென்றிருடியருடருகழற்கால்
விழுந்திறைஞ்சிமகப்பொருட்டோர்விண்ணப்பஞ்செய்திடுவான். (௩உ)

கற்றைநெடுஞ்சடைமவுலிக்கண்ணுதறன்கலையுருவா
நற்றவநீநினைக்காண்டனன்றியிலார்க்கிலையாகு
மற்றெனொருமகனருந்திமதுமறையோற்கொன்றிழைத்தான்
பொற்றிருட்டும்பிரமகத்திபுகுந்தவன்றனைக்கொல்ல. (௩௩)

வென்படரும்பிரமகத்திவினையொருமூன்றுடன்பாற
வன்புபுரிந்துபாயநெறியஃதறைவாயல்லையெனி
லென்புதல்வனிவனொருவனிறக்கின்மரபிலையாகுந்
தென்புலத்தார்கடன்றீராதிருவருள்செய்தருளென்றன். (௩௪)

துருவாசனதுகேட்டுத்தூமறையோன்சுதற்கிரங்கிக்
கருவாசமருளகற்றுங்கனைகழற்காற்கனகநிறப்
பெருவாசமலரிதழிப்பிஞ்ஞகனைப்பெரும்போது
மருவாசங்கொளவிதயமலரிருத்திவகுத்துரைப்பான். (௩௫)

உன்மகன்செய்பவங்கொடியவொருபதினுயிரம்வகையாற்
சொன்மறைநூற்பரிகாரஞ்சூழ்ந்திடினுமதுதீர்த
லின்மையதுக்கொருவகைகேள்யமதிசையிலிராகவன்கை
வின்மருவும்பெயர்க்கோடிவிரிநீரிலாட்டுவித்தால். (௩௬)

பிள்ளையவன்றனைத்தொடுத்தபிரமகத்திபிரிந்திடுமுன்
விள்ளுநெறிவிரும்புதுருவிநீதனெனவொருமறையோன்
கள்ளவிழுங்குழற்குரவன்காதலியைக்கலந்தபவந்
தள்ளினனித்தனுக்கோடிதனிலாடுந்தவவலியால். (௩௭)

என்றுதுருவாசமுனியியம்பவெச்சதேவனுளத்
தோன்றுமகிழ்வுடன்கேட்பானொருமுகவேதனையனையாய்
துன்றுதுருவிநீதனெனச்சொல்லியவன்யார்தோன்றல்
குன்றனையாயவன்குரவன்குலமனையாட்புணர்ந்ததெவன். (௩௮)

வளைந்ததலைத்தனுக்கோடிவந்துபடிந்தவன்பாவங்
களைந்ததெவனவையறியுங்காதலுளேன்கலைவல்லோய்
விளைந்தவகைவிளம்பெனலும்விரித்துரைப்பான்றுருவாசன்
றுளைந்தபுனற்றிரைப்பொருநைசூழ்பாண்டிநன்னுட்டில். (௩௯)

எண்ணினுடனெழுத்துணர்ந்தானித்துமவாகன்பெய
லண்ணல்குலத்தந்தணன்முனவன்மனேவியமரேச
ருண்ணமுதினுருசிக்குமுருவுருசியவளும்பல்
பண்ணுதருவிநீதனவன்பாலகனும்பருவத்தில். (சo)

மாண்டனனித்துமவாகன்மற்றவற்குமாரணத்திற்
பூண்டவினேக்கடன்முடித்துப்புத்திரனுமன்னேயுமா
யாண்டிருந்தாரதன்பின்னராறிரண்டுவருடமழை
மூண்டுபொழிமுகின்மாறமுழுதுயிர்கள்பசித்தனவால். (சக)

கொடைமடம்பட்டவர்வழங்குங்கொள்கைதவிர்சிறுவிலைநா
ளடைதலுமேகோகன்னத்தன்னேயுடனவனேகி
மடையுதவுமணிச்செந்நெல்மாடுறுநாடதிற்சின்று
ளுடையதனேப்பயந்தவளோடுள்ளமுவப்புற்றிருந்தான். (சஉ)

பின்றையவனெருவைகற்பிறிந்தபிறப்பினிற்புரிந்த
கன்றியதீவினேவயத்தாற்காமசரக்கிலக்காகி
யன்றுமரபெனப்பயந்தாளடக்கவடங்கானவள்பாற்
சென்றுமுறைதிரிந்தவினேசெய்தனனச்சிறியோனே. (சங)

மலங்குதுயர்மதனவிடாய்மாறியபின்மைந்தனவன்
கலங்கழிதாய்மணிமுலேயிற்காமப்பாலுண்டமையைப்
புலங்கொடுதானமுதிரங்கிப்பொருட்பாலன்றிஃதென்று
வலங்கருதானதுதீர்க்குமறத்துப்பாறனேயுணர்வான். (சச)

ஊருமவுற்றரவமெனவுலகின்மிசைநடப்பவற்றுட்
கூருகிர்வாளுழுவையெனக்கொடியவினேத்தலேநின்றே
னொனக்கிங்கிணேயாவாரறங்கடைநின்றார்தம்மிற்
பாரிலினமுண்டிடலம்பரித்திடவும்வேண்டிடுமோ. (சரு)

அன்னேயிவளன்றிலத்தாயிழையார்வேறிலரோ
மின்னனேயபரத்தையர்தாம்வேரோடும்வீ்ந்தனரோ
பின்னேயிதிற்பிறரில்லம்பிழைத்தாலும்பிழைப்புண்டா
மென்னேயிதற்குபாயமினியாரருள்கூர்ந்தெனேக்காப்பார். (சசு)

நாடுவதென்வேறிருந்துநானினிப்போய்நற்றவர்க
ளோடுபுகன்றிந்தவினேயொழிக்கும்வகைகேட்பனெனுக்
கோடுதருவிநீதனவன்குலமுனிவர்குழுச்சாமம்
பாடுதபோவனத்தணுகிப்பண்ணவர்தாள்பணிந்திசைப்பான். (சஎ)

ஆயையவலிதணேந்தவினேயதுதீர்தற்கானதொரு
தூயநெறியுரைமின்கடொல்லேமறைமுறையுணர்ந்தீ
ரேயுமரண்பிறிதில்லேனிறத்தியிதன்பொருட்டெனினு
மாயுமதற்குடன்படுவன்வாய்மையிஃதென்றுரைத்தான். (சஅ)

செப்புமொழிகேட்டவரிற்சிலரிவனேத்தெரிந்தாலும்
பொய்ப்பவம்வந்தடுக்குமெனப்பொருவிலருட்கண்புதைத்தா
ரொப்பிறுருவிநீதனுடனுரைத்தாலும்பாதகமென்
றப்பெரியோர்தமிற்சில்லோரதற்குவிடையறைந்திலரால். (சகூ)

இழைத்தமறங்கேட்டமுங்கியிருசெவியுஞ்சிலர்புதைத்தார்
குழைத்தவருட்டுறைமாறிக்கோபித்தார்சிலமுனிவர்
தழைத்ததவப்படிவரவர்தாங்கள்சிலர்தாயிருதோள்
விழைத்தபெரும்பாதகநீவிரைந்தகல்வேறிடத்தென்றூர். (ரு0)

வெருவுதருவிநீதனுந்தான்வெள்கியவணிற்றலுமே
யொருவியவர்தமைக்கருணையுததியுறழ்வியாதன்றூன்
மருவியவித்துமவாகன்மகன்முகம்பார்த்தெழுமன்பா
ஞெருவசனம்பெற்றவளோடுற்றபவங்கெடவுரைப்பான். (ருக)

மறங்கொடுருவிநீதவம்மோவள்ளலிராகவன்செங்கைத்
திறங்கொடனுக்கோடியினீசென்றளித்தாளுடன்குளித்தா
லறங்கெடநீபுரிந்தவினையஃதகலுமாரணங்கள்
பிறங்கியதொல்கதைமிருதிபிறழ்விரிசாத்திரம்பலவும். (ருஉ)

பஞ்சமகபாதகங்கள்பற்பலவும்பலவாற்றூல்
விஞ்சுதனுக்கோடியிடைவீடெய்துமென்விளம்பு
மஞ்சியதுகண்டளவிலகலாதவகமில்லை
நெஞ்சிலெனதுரைவழுவாகியமமெனநினைந்திடுவாய். (ருங)

கோடியவிற்கோடியிதிற்குலையும்வினையெனக்கோடி
யோடியகன்றிடக்கொடுமையொழித்தலதற்கெளிதாகும்
பாடின்மனுநூலினுண்டுபரிகாரமிதற்கெனினும்
பீடிலனையுடன்போதிபேசுதனுக்கோடியினீ. (ருச)

வினைக்கோடிகெடுக்குமெனவிள்ம்புதலும்வியாதனெதி
ரொனைக்கோடியடிமையெனவிறைஞ்சியிருபிறப்போனு
மனைக்கோடியுரைத்தவளோடவனியின்மேற்றீர்த்தங்க
டனைக்கோடிநிகரில்லாத்தனுக்கோடிதனையடைந்தான். (ருரு)

சென்றமறைக்குலத்தோன்றறினகரன்றூன்மகரத்தி
னின்றிடுதிங்களிற்சுருதிநிலைதொகுத்தோன்வகுத்தபடி
யின்றியுஞற்சங்கற்பமிசைத்தமிழ்ந்தியெழுந்திருப்பா
னன்றுமுதன்முப்பதுநாளன்னையொடுமதிற்படிந்தான். (ருசு)

நாட்டொகைமுப்பான்முடிவினவையகற்றிநின்மலனுய்
மீட்டும்வியாதனையடைந்துவீழ்ந்திறைஞ்சிமெய்த்தவநின்
ருட்டுணையேதுணையாகத்தவறின்றித்தனுக்கோடி
காட்டுமரபினிற்படிந்தேன்கண்ணுதருள்கரந்தொழுதேன். (ருஎ)

தாதாவையுனையடைந்தேன்சரணமெனத்தானெனக்கிப்
போதாவைகுரவனினிப்புரியுநெறிபுகலென்றூன்
வேதாவையனையவனும்விழித்தவனைவிப்பிரனே
மாதாவைப்புணர்ந்தபழிமாறியதான்மற்றுனக்கே. (ருஅ)

ஆய்தனக்கும்வினைதீர்ந்ததையமிலையிஃதுண்மை
நீதனுக்கோடியிற்படிந்தநெறியாலுநம்பக்கற்
போதுநலமதனுலும்பூசுரருமாதவரும்
வேதியனேயின்றுமுதல்விரும்பியுனைமேற்கொள்வார். (ருக)

ஏங்கினிநின்குலத்தினிலோரிலங்கிழையைமணம்புணர்ந்து
பாங்கின்மனையறம்புரிதிபல்லுயிர்க்குமிதம்புரிவாய்
நீங்கரிதாந்தருமநெறிநிலைநிற்றிநீங்காத
தீங்குபயில்சிறியவர்பாற்சேரலைநல்லவர்ச்சேர்வாய். (சு0)

சந்திமுறைவழுவாமற்றந்திடுதிதகவில்லா
விந்தியங்கள்வழிநடவேவிலங்குதிரைப்பகீரதியோ
டந்திமதிக்குழவிபுனையண்ணலையுங்கண்ணனையும்
வந்தியுனையாதொழிதிமற்றொருவர்க்கபவாதம். (சுக)

அழுக்காறுமனங்கொள்ளேலயலவரிற்பொருள்வெஃகே
லொழுக்கநெறிவழுவற்கவோதுகலைநூல்வேதம்
பழுக்கமிகும்பொச்சாப்பிற்படாதுபயில்பசித்தவர்க்குப்
புழுக்கலுதவெஞ்ஞான்றும்புரிபுகலுஞ்சிராத்தங்கள். (சுஉ)

குஞ்சமொழிகொடுவாய்மைகூறற்ககொடியர்குழா
மஞ்சுமறையாறங்கமாகமசாத்திரவிதங்கள்
புஞ்சமிகுமிதிகாசபுராணங்கள்புகழ்மிருதி
செஞ்சொனெடுங்கலைபலவுந்தெரிந்துணர்திதிரிபின்றி. (சுங)

காபாலிதிருப்பெயருங்கண்ணனதுதிருப்பெயரு
நீபாடிசமழ்ப்பின்றிநிற்றலும்வெண்டிருநீற்றாற்
சாபாலவுபநிடதத்தாற்றிரிபுண்டரந்தரித்தி
தீபாலத்துடையவரன்றிருவக்கவடம்புனைவாய். (சுச)

துளவதனாற்கூவிளத்தாற்சுரிவளைக்கைநவநீதக்
களவுபுரிகண்ணனையுங்காமனஞ்சுகண்ணனையு
மளவையொருபோதிருபோதன்றிமுப்போதானாலும்
வளமருவுபொருளாற்றிவழிபடுவாய்மறையாற்றால். (சுரு)

சொன்னவிருவோரிருகாற்றூநீரைத்துளவதனோ
டன்னவருண்டருள்சேடவன்னமதிற்பெய்தவர்த
முன்னருந்துபுனிதமுறமூரல்வயிச்சுவதேவ
மென்னுமரும்பலிதருவாயிழைத்திடுவாயுபவாசம். (சுசு)

மனையில்வருந்துறவோரைவந்தனைசெய்தந்தையுட
னனைபிரமசாரிபிணியாக்கையினரநாதர்களா
யுனையடையுமவர்தம்பாலோம்படைசெயோங்காரந்
தனைமுதலாமெழுத்தைந்துஞ்சங்கரன்றாளுணர்ந்துரைப்பாய். (சுஎ)

மாலவனெட்டக்கரமுமற்றையிமையோர்மனுவுங்
கோலமனச்சானமுடன்கூறுதிநீகுலமறைய
ளேனுமறம்பிறவெவையுமியற்றுதியிவ்வாறிழைத்தான்
மேலையுலகுனக்குளதாமேனிமுடிவினிலென்றான். (சுஅ)

தெய்வமறைவியாதமுனிசெப்புமொழிப்படியாற்றி
மெய்விடுநாள்விளம்புதுருவிநீதனுயர்வீடடைந்தான்
மைவிழியித்துமவாகன்மனையவளும்வானடைந்தாள்
பொய்விரவாத்தனுக்கோடிப்புனல்படிந்தபுண்ணியத்தால். (சுகூ)

மேவுதருவிசீதனியல்விளம்பினமாலனக்கெச்ச
தேவமகனுடனீயுஞ்சிலைக்கோடிதனிற்சென்று
லோவுமிடரிஃதென்றனுயர்முனிவன்றருவாசன்
மூவிருதிங்களின்காறுமுனிவன்வன்மொழிப்படியே. (எ0)

சேயினுடன்றிகழெச்சதேவனவன்சிலைக்கோடி
போயதனில்விதிமுறையாற்புதல்வனுடன்படிந்திட்டா
ருயதிங்களோராறுமகன்றதற்பினந்தாத்திற்
றூயமொழியசரீரிதோன்றியதங்கவன்கேட்ப. (எக)

வருதியெச்சதேவவுன்றன்மகன்மறவர்மகட்புணர்ந்த
பெருவினையும்படுதுகர்வும்பிரமகத்தியிழைத்தவும்
பொருள்கரவிற்கொண்டதுவும்புரிந்தமறம்பிறவுளவு
மொருவியகன்றனமுழுதுமுள்ளலையையுறவென்ன. (எஉ)

செவிபுகலுமஃதெச்சதேவனவன்செம்மலொடு
மவிரறல்சூழ்தனுக்கோடியதன்பெருமைநினைந்திறைஞ்சிப்
புவிபுகழுங்கோசலைசேய்பூசைபுரியீசனெனு
நவியமுழைசுமந்தகரநாதனடித்துணைவணங்கி. (எங)

நெடும்பதிக்கட்டான்போகிநீடுபலகாலங்கள்
கடும்பினொடுமகிழ்ந்திருந்தான்கவியுருவுநரியுருவும்
விடும்பரிசாலிருவீரும்விற்கோடியடைமின்க
ளிடும்பைதவிர்சுமதிகதையீதுமக்கிங்கிசைத்திட்டேம். (எச)

வேறளவில்சாந்தியினும்விளியாதிவ்வினையுருவங்
கோறல்புரிகோடரமேகோமாயுவேநீவிர்
தேறுமின்களென்றுசிந்துதீபமுனிதெளிந்துரைத்தான்
மாறுபுரிமற்கடமும்வனநரியுமிதுகேட்டு. (எரு)

வாடுமனமருணீங்கிமகிழ்ந்தொல்லையவையிரண்டுங்
காடுமலையுங்கலந்தகடங்கள்பலகடந்தேகிக்
கோடுதனுக்கோடியிடங்குறுகியதிற்குடைந்தாடி
மூடுமுடைவிலங்குடலமுதற்பவங்கண்முழுதகற்றி. (எசு)

இமையவராயினவதற்பினிலேகரவரிருவோரு
மமையுமணிப்பொன்மவுலியங்கதங்காதணியிலங்கத்
தமையமரர்குலமாதர்தழீஇயிரட்டச்சாமரங்கள்
சிமையவடகுவடுநிகர்செழுங்கனகவிமானத்தில். (எஎ)

புந்திகளித்தினிதேறிப்பூமாரிபுலவர்சூழாம்
வந்திறைப்பவிசும்பினிற்போய்மகம்புரிந்துவான்புரக்கு
மிந்திரனோடொருபீடத்திருந்தனர்களிவரிலிவ
னந்தரநாட்டிறைவனெனவறிவரிதாம்படியென்றும். (எஅ)

வேறு.

சம்புவோடுகவிதனுக்கோடிவாய்த்தங்கள்பாவவினைகெடப்போனதோர்
நம்புகாதையிவணுமக்கோதினோன்றுகூறுமறநெறிக்கேண்மையீ
ரிம்பர்யாருமிதுதனைப்பேசுவாரின்பமோடுசெவிபுகப்பேணுவா
ரம்புலாவுகொடுமரக்கோடிநீரங்கண்மூழ்குபயனவர்க்காகுமே. (எகூ)

கவிசம்புச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் உ0அச.

# துராசாரச்சருக்கம்.

---

மற்றுமுயர்தனுக்கோடிவளமொன்றுசவுனகனைவதனமாக்கி
யுற்றபிறவுறுப்பாகியேனையர்தாமொருவடிவாமுறுவர்கேட்பச்
சொற்றருள்வான்சூதமுனிதுராசாரனென்றொருவன்றொல்லைவாழ்க்கை
முற்றுமசும்பறத்துறந்தமுனிவீர்காளிதுபடிந்துமுத்தனானான். (௧)

யாவதினியிதருடைந்தோர்தமையகலாவகம்பிறிதிங்கென்றானென்ன
வாவதுகேட்டவண்முனிவரவன்யாவன்றனுக்கோடியடைந்தவாறென்
றீவினையாதிழைத்ததவன்விரித்தவற்றைமெய்ம்முழுதுந்தெரிந்தோயுன்ற
னேவறலைப்படவிரும்புமெம்பொருட்டாலருட்சூதவியம்புகென்றார். (௨)

உரைசெயலுமுனிவரதுசூதமுனிகேட்டுவரவோதுகிற்பான்
றிரையெறியுமணித்தரளக்குப்பையினிலுறங்குமெகின்றிரட்சிவெள்ளி
வரைபயிலுந்தவளமுகிலினங்காட்டுங்கௌதமியாம்வளங்கொளாற்றின்
கரையினுளனொருபனவன்றுராசாரனாசாரங்கனவிலில்லான். (௩)

இடுகுறியன்றிவற்கிப்பேர்காரணத்தாலிட்டகுறியிடுக்கண்கண்டால்
விடுவதிலனெவர்மாடடும்புரிவதுளனிழிதொழிலேமேற்கொண்டுய்ப்பான்
கடுவினுடன்றழல்கலந்தகாட்சியெனத்தன்னின்மிகக்கயவராகுங்
கொடுவினைஞருடன்குழுமித்திருமறையோர்குலமரபின்கொள்கைநீத்தான். (௪)

யாரொருவிப்பிரனிணங்காப்பாதகரோடொருதினமுண்டிணங்கினானேற்
பாரமரர்குலக்குரியபண்பதனினாலிலொருபங்குநீங்கு
மோரிரண்டுதினத்திலதிற்பாதிகெடுநாண்மூன்றிலொழியுமுக்கா
லீரிரண்டின்முழுதுமறுமீப்படுமேற்பூரியரோடிரண்டிலானும். (௫)

தக்கவறப்பால்கவிழ்க்குமார்ச்சாரமனையதுராசாரன்றன்னை
மிக்கமறைக்குலவொழுக்கம்விடுத்ததனால்வேதாளம்வெருவப்பற்றி
யொக்கவுடன்றொடர்ந்தலைப்பப்பஃறேயம்வனங்களெங்குமுழிதந்தோய்வான்
புக்கனனித்தனுக்கோடிதனிலொருநாண்முன்புரிந்தபுண்ணியத்தால். (௬)

முன்பிடித்தவேதாளமுறைதிரிந்தபூசுரனைமுளரிமேவும்
பொன்பிடித்தமணிமார்பன்கரம்பிடித்ததனுக்கோடிப்புனலினூடே
பின்பிடித்ததனக்கதனாற்பிரிவுவருநெறியறியாப்பெற்றியாலே
வென்பிடித்தங்கமிழ்த்தியதுவேதியன்றான்முழுகியெழும்வேலைதன்னில். (௭)

கடிதிலவன்றனைவிடுத்துவேதாளமகன்றதுடன்கரையிலேறி
வடிவிலுறுமருணீங்கிமனந்தெளிவுற்றவணிருப்பான்மதிக்கலுற்றா
னெடியதிரைக்கௌதமிநன்னீர்க்கரையிலிருக்குமியானிலவேலைப்
படிபுகழுந்தனுக்கோடியடைந்ததெந்தவண்ணமெனப்பார்க்கும்போழ்தில். (௮)

உத்தமனாயுயர்யோகபராயணனாய்க்கலைமுழுதுமுணர்ந்துளோனாய்
முத்தமிழுஞ்சுரிவளையுங்கரவளையுமெறிந்துறுகர்முகிலைவீசித்
தத்துதிரைத்தனுக்கோடியிடத்தமர்தத்தாத்திரியன்றன்னைக்காணாஉப்
பத்தியுடன்பணிந்தெழுந்துபதம்போற்றியொருமாற்றம்பகர்தலுற்றான். (௯)

தண்ணடைமற்றிஃதேதோகௌதமிப்பாரிருக்குமியான்றனித்திதன்றன்
கண்ணடைந்தநெறியெவனோகழறுகெனக்கருணைநெடுங்கார்கோளன்று
னெண்ணடையுமொருமுகுர்த்தஞ்சித்தநிலைநிறுத்தியவணிருந்துநோக்கி
யுண்ணடைகூர்துராசாரன்முகந்தெரிந்தவரன்முறைமையோதலுற்றான். (௧0)

ஏதமிகுந்துராசாரவிதுகேட்டிபதகருடனிணங்கலாலே
வேதமிகுந்திருக்குலத்தின்விழுப்பமுனக்ககன்றதற்றால்வேதாளந்தா
னீதமியேகௌதமிப்பார்நிலைகுலைவுற்றலையும்வகைநின்னைப்பற்றிப்
போதமிலாயாகையினாற்றுரந்துதனுக்கோடியிடம்புகுந்ததம்மா. (௧௧)

புகுந்துநினைப்புனலினிடைப்புகவமிழ்த்தியெடுத்ததவண்புனிதமேன்மை
மிகுந்ததனுக்கோடியிடைப்படிந்தெழலால்வினைகளுடன்வேதாளப்பே
யிகந்தொருவிப்போயினதாங்கதுவுமதனிலைதெரியிலிலங்குவேத
வகுந்துபயிலறுதொழில்கூர்மறையவனாமுற்பிறப்பின்மற்றந்நாளில். (௧௨)

வேலையினிலுயர்கன்னிவியன்றிங்கள்வெண்டிங்கண்மெலியும்பக்க
மாளயத்தையெரிவளர்த்தலுடன்புரிந்தானில்லையதுமனத்தினாடிக்
கோளகற்றுந்தென்புலத்தார்கோபமுறீஇச்சாபமிட்டார்கொடுமைகூர்வே
தாளவடிவினையடைந்தான்றுராசாரமற்றவனத்தவறுதன்னால். (௧௩)

மேலவனுந்தனுக்கோடிவிழிப்படலால்வேதாளமேனிநீத்து
மாலவன்றன்பதமடைந்தான்மாளயத்தையாவர்கன்னிமாதந்தன்னிற்
சாலுமிவன்றன்மையினாற்றந்திலரோற்றுராசாரசரதமாக
வோலநெடுங்கடலுலகில்வேதாளவுருவுசுமந்துழிதர்கிற்பார். (௧௪)

அத்திங்களபரபக்கத்தவரவர்தம்பிதிர்க்கடமையகத்துணாடி
யுத்தமராமறையவரைநல்லுணவாலூட்டுவிப்பாரொற்கஞ்சேரா
ரித்தகையவிப்பிரனுஞ்சிராத்தமிதுமாதமிதிலிழைத்திடாமன்
மத்தமிகும்வேதாளமாகியறந்திரிந்தவுனைவந்துதொட்டான். (௧௫)

செயலாகுஞ்சிராத்தமிதுகன்னிமுதற்கார்த்திகையாந்திங்கள்காறும்
வியனாரும்புரட்டாதியிவற்றிதனிலபரபக்கமிக்கதென்று
ரியலாருமுனிவர்கடாமுதற்றிதியின்மாளயந்தானியற்றியிட்டாற்
சயமாருந்தழற்கடவுளுளமகிழ்ந்துதனதுலகந்தன்னிற்சேர்க்கும். (௧௬)

சீருலவுஞ்சிராத்தமிதுசெய்திலனேலவன்றிருவைச்சிதைக்குஞ்செந்நெ
னீருலவுசெறுவனைத்துங்கெடப்புரியுந்தென்புலத்தார்நேயங்கூர்வா
ரோரயுதங்கற்பமளவுரைத்தமுதற்பக்கத்தினூட்டினானே
லீரிருநான்மறையவரைப்பக்கமிரண்டாவதனிலியற்றினானேல். (௧௭)

நெற்றிவிழியிறையருள்கூர்ந்துடனிருந்தும்வெள்ளிவெற்பினிறைக்குஞ்செல்வ
மற்றிதனிற்குயிற்றிலனேன்மாளயத்தைக்காலையமர்வயப்பதாகை
யுற்றவுமையுடனிரண்டாம்பக்கமுடையவன்சீறியுலகிற்றேவர்
பெற்றமரபினைமுருக்கிரவுரவத்தின்வீழ்த்திடுவன்பின்னுமாதோ. (௧௮)

தோன்றிடும்பைமிகுங்காலசூத்திரத்தும்புகப்பணிப்பன்சொன்னபக்கத்
தான்றபுகழ்மாளயத்தையாற்றினனேற்கற்பமிரண்டயுதவெல்லை
யேன்றபிதிர்குலங்களிக்குமகப்பேறுநல்குமிகவிந்துகாலு
மூன்றுசுடர்க்கலைகுறையும்பக்கத்திற்சிராத்தமிதுமுற்றினானேல். (௧௯)

பிங்கலன்முனருள்பெருகுநவமிதியுமவனேவல்பிழையாவண்ண
மங்கருளுமயன்மாயனரனிவர்தாங்கருணைபுரிந்தவன்பின்செல்வார்
தங்களுளங்களித்திடுவர்பிதிர்க்கள்கற்பமூன்றயுதந்தந்திடானேற்
பொங்கிடுவராக்கமெலாம்போக்கிடுவராக்கிடுவர்புகர்சேரொற்கம். (உO)

நாலாவதெனுந்திதியினுன்மறையோர்தமையுண்டிநான்கினூட்டின்
மேலாருமதக்கலுழிவிரும்புசுரும்பிருசெவியால்வீசுகாற்றிற்
பாலாருமொழிமடவாராடுமணிக்கழங்கினெழீஇப்படிதல்செய்யுஞ்
சாலாருங்குடவயிற்றுத்தந்திமுகன்மகிழ்ந்துதருந்தனயர்தம்மை. (உக)

இருபதினுயிரத்திரட்டிகற்பமட்டுந்தென்புலத்தாரின்பங்கூர்வார்
தருகிலனேனரகிலுயர்சண்டகோலாகலத்திற்றள்ளுவிப்பார்
திருமகடான்களிசிறக்கும்பஞ்சமியிற்செய்தனனேற்செய்தவன்முன்
மருவுமனைநடம்புரியுமற்றவன்பைங்கூழனைத்தும்வளர்க்குமாதோ. (உஉ)

உம்பருடுபதியுடுக்களுள்ளளவும்புகழ்நிலையுமூவகைசேர்வா
ணைம்பதினுயிரங்கற்பந்தென்புலத்தார்மகப்பேறுமளிப்பர்வெற்பிற்
கொம்புறழ்மென்மணிமருங்குற்கோற்றொடியுங்கருணைசெய்யுங்குயிற்றலின்றேற்
செம்பதுமமகள்பிரியுஞ்சேட்டைபுணர்ந்திடர்க்கலகஞ்செய்வளென்றும். (உங)

மூவிரண்டாந்திதிப்புரியின்முகனொருமூவிரண்டாகுமுருகன்வேற்கைச்
சேவகன்முனருள்பெருகுஞ்செல்வமிகுமாளயத்தைச்செய்தோர்மைந்தர்
வாவுமயில்வாகனன்றன்வாலகிரகக்கடியான்மாழ்கலில்லா
ராவர்மகிழ்வறுபதினுயிரங்கற்பந்தென்புலத்திலமருவாரும். (உச)

ஈதிழையாவிடிற்சினங்கொண்டெரிகுடுமிச்சேவலுருவெழுதும்வெற்றிக்
கேதனன்முன்பிறங்கடைசேர்கருப்பமெலாங்கெடுக்குமருட்கிளர்குழாங்கொள்
பூதனையால்வேதனைதான்புரிவிக்குமயிற்புரவிப்புத்தேள்பின்னும்
வாதைமிகவளர்வன்னிச்சுவாலையெனுங்கொடுநரகில்வைக்குமன்றே. (உரு)

புத்திரரும்பெருவளனுங்கொடுத்தருளுமாளயத்தைப்புரியிலந்நாள்
சத்தமியிலிழைத்திடுமேற்றபனனருடழைத்துடலிற்சார்ந்தநோய்க
ளத்தனையுமறமுருக்கியுரம்பெருக்கியரும்பொருளுமளிக்குமன்றிச்
சித்தமகிழ்ந்தருள்கூர்வரொழுபதினுயிரங்கற்பந்தென்புலத்தார். (உசு)

எஞ்ஞான்றுங்கெடாவழியுமுளவாகுங்கயரோகத்தினைப்பர்மாளு
மஞ்ஞான்றுதீக்கிணதாராத்திரசய்யாநரகத்தடைவர்செய்யார்
மெய்ஞ்ஞான்றின்மிகுமெட்டாந்திதிப்புரியின்மிருத்தியுவைவெல்வானென்று
மைஞ்ஞான்றகண்டனருள்கூருமபவர்க்கமவன்வயத்ததாகும். (உஎ)

ஏழிரண்டாமுலகதனிவவற்கருமைப்பொருளில்லையெண்பதாகச்
சூழுமயுதங்கற்பம்பிதிர்க்களுளங்களித்திடுவர்துடைப்புற்றேவாக்
கோழிளமென்குதலைமொழிக்குமரரையுங்கொடுத்திடுவர்குயிற்றமூடன்
பீழைகொளேம்புலவாழ்க்கைக்கடலேறுனெண்ணியதன்பேறுமெய்தான். (உஅ)

உவவினிறைமதியொளிமீனிலைப்பளவும்வைதரணியுந்திவீழ்வ
னவமிதனிலிழைத்திடுமேனெடும்பாலைக்கிழத்தியருணயர்துநாளுந்
தவமிடல்கூர்குமாகண்டன்குத்திரம்பேய்கயரோகஞ்சார்பிரேத
மிவைபிறவுமுடற்குட்டமுதற்பிணியுந்தீர்த்தெழிறந்தின்பஞ்செய்வாள். (உகூ)

களித்திடுவர்தென்புலத்தார்மூன்றுமுப்பானாயிரமாங்கற்பங்காறு
மளித்திடுவர்சந்ததமுமழிவில்பெருஞ்சந்ததியுமதிற்பண்ணுனேற்
சுளித்தடருங்குமரகண்டன்முதலவற்றாற்றுயருறுவன்றளங்குசீத
வொளித்தவளமதிக்கடவுளுளம்விரும்புந்தசமிதனிலுஞற்றுமானால். (௩௦)

பல்வகையதானியமும்பயிருநனிபலிப்பிக்கும்பதிற்றுப்பத்துச்
சொல்விரவாயிரங்கற்பங்களிதாங்கும்பிதிர்க்கள்குழாந்தோன்றன்மல்கு
மொல்வனகொண்டத்திதியின்மாளயத்தைப்புரியகிலானுழப்பெல்லாமு
நல்வளங்கூர்பயனுதவாநறுஞ்செறுவிற்பைங்கூழுநாசமாகும். (௩௧)

ஒன்றுதலையிட்டதிதியொருபஃதின்மாளயந்தானுவப்பிற்செய்தாற்
கொன்றுலகமுழுதொடுக்குங்குழகனருள்கூர்ந்தருளிக்குறுகலார்பால்
வென்றிதரும்பிரமகத்தியோரயுதம்விடுமுளதாம்வேள்வியெல்லா
மன்றுசெயும்பயனிருநூறாயிரங்கற்பம்பிதிர்க்களார்வங்கூர்வார். (௩௨)

பிறங்கடையும்பெருக்கிடுவர்பிழைத்தனனேற்கூடலர்தாம்பீடைசெய்வார்
திறங்கொடழல்வேள்விமிகுதக்கிணையாற்புரிந்தனவுஞ்சிறப்புநல்கா
மறங்கொள்சுரிமுகப்பணிலமான்மகிழுந்துவாதசியின்மாளயத்தை
யறங்கொளச்செய்திடுமானலரிகளிக்கவெவ்வுயிருமகங்களிக்கும். (௩௩)

பாரியெனும்படிமகளும்பழனமலிபசும்புலெலாம்பரிந்துபோற்றும்
வாரிதருமலர்மகளுநிலயமிடுமவன்மனையின்மாயோன்செங்கை
மூரிநெடுந்தண்டிகவுமோதகிதான்குமரகண்டன்முதற்பேய்வீட்டுங்
கூரியவாய்த்திகிரியடுங்குறுகலனாமுகுந்தனருள்கூர்தலாலே. (௩௪)

ஆயிரநூறாறுகற்பந்தென்புலத்தாரகமகிழ்வாழிவிலாத
சேயினைவழங்கியிடுந்துவாதசியிற்சிராத்தமதுசெய்கிலானேற்
பேயினமாங்குமரகண்டன்முதலியனவிடும்பையினைப்பெருக்கும்பூமி
யாயதிருவவையழியுமடைந்திடுவனவனரகமத்திபேதம். (௩௫)

பதின்மூன்றாம்பக்கத்திற்பண்ணுவரேலிரதிபதிபரிவுகூர்ந்து
மதுவழியுமலரலங்கன்மான்மதஞ்சந்தனங்கலவிமாதர்முன்னும்
புதியநலம்பொருந்துவிக்கும்பிறப்புமுதலிறப்பளவும்போகஞ்சேர்வ
ரதின்மகிழ்வர்தென்புலத்தாரொருபதினாறாயிரமாமளவின்கற்பம். (௩௬)

நீண்மகவின்பரம்பரையுநிவந்தோங்குந்திதியதனிகழ்த்திடானேல்
வேண்மிகவுஞ்சினந்திருகிமெல்லியலாருடன்போகவிழைவைப்போக்கும்
வாண்மலியங்காரசய்யாப்பிரமணமாநிரயமதில்வைக்கும்பக்க
நாண்மருவும்பதினான்கின்மாளயமாஞ்சிராத்தவினைநடாத்தியிட்டால். (௩௭)

வேண்டியவெல்லாங்கொடுக்கும்விடைப்பெருமான்மெய்யுணர்த்திவீடுகாட்டு
மாண்டபொருட்கரவுசுராநுகர்விவற்றொன்றோரயுதம்வல்லைமாயுந்
தீண்டலடாப்புலைமடவாள்விடலியவடோடமுவுந்திங்குநீங்கு
மாண்டுளதாம்பரிமேதமாயிரத்தோடயுதபவுண்டரிகத்தாக்கம். (௩௮)

ஐந்நூற்றைம்பதிற்றிரட்டிகோடிநூறாயிரமாமலகார்கற்ப
மெய்ந்நீடுந்தென்புலத்தார்விருப்புறுவர்புரிந்திலரேல்விளம்புநாளின்
மைந்நீடுமருள்வாழ்க்கைப்பெருங்கிணற்றில்வீழ்ந்துழப்பர்மற்றதற்காங்
கைந்நீடுசாந்தியிலையாயிரஞ்சேர்சதகோடிகற்பகாலம். (௩௯)

பண்ணுமற்பொருட் கரவுபண்ணியவெம்பாதகமும்படுவைவாயா
லுண்ணுமலுண்ணவருந்திவினையுமுணர்விலவர்க்குள்ளவாகு
மெண்ணுருந்தக்கிணைகூர்வேள்விகளும்பயனுதவாவியற்றியிட்டால்
விண்ணுள்வர்நிரயம்விடுத்தவர்பிதிர்க்கள்வழிமரபும்விளிவின்றேங்கும். (ச0)

அமையதனின்மாளயந்தானுற்றுவரோலமுதநுகரம்பொனுடர்
தமைநிகருமானந்தந்தென்புலத்தார்தமக்குளதாந்தரளமூர
லுமையொருபங்குடையபிரான்பக்கமதிலுவப்புடையனுததிருலத்
திமையவரையிதிலருத்திலிறைமகிழும்பிதிர்க்களுந்தாமின்பங்கூர்வார். (சக)

விப்பிரர்தங்கொலேமுதலேம்பாதகமுமுடன்வீடும்வேள்வியாவுஞ்
செப்பரியவறம்பலவுந்தக்கிணையோடிழைத்தநலஞ்சேருஞ்செய்தோர்க்
கொப்பில்பரப்பிரமவறிவுளதாகுமொன்றிரண்டற்றென்றுமொன்று
மப்பொழுதேயவரடைவரமையதனின்மாளயந்தானமைத்திடானேல். (சஉ)

மதியிகந்தமுடனவன்வழிப்பிதிர்க்கண்மலரயனூர்வைகினுலுங்
கதியிகந்தநரகடைவர்கான்முளையுமுளையாதுகன்னித்திங்கள்
விதியிகந்தநரகவிடரினியகனுநம்புதல்வர்வேதத்தோரை
நிதியிகந்துவிடல்கருதாதயிலுவிப்பரொனப்பிதிர்க்கணிருத்தஞ்செய்வார். (சங)

புரட்டாதிநாண்முழுதோர்பூசுரணையருத்திடினும்புரிவுசெய்வா
ரிரட்டாரும்வழிப்பிதிர்க்களெண்ணெய்கறிநெய்பருப்போடிருதராசுப்
பரட்டார்பேர்பயிறிங்கட்பனிமதிதேய்பக்கத்திற்பனவர்க்கூட்டிற்
றிரட்டாழியமுதமொருகற்பநுகர்களிப்புறுவர்தென்புலத்தார். (சச)

சந்திரிகைசுருங்குபக்கச்சத்தமியேதுவாதசியேதான்முன்னுக
வந்தவமையளவாகவொருமூவரந்தணரையருத்துவிக்க
விந்தமுறைபுரிந்திலரேவிலம்பாடுமிகுஞ்செல்வமின்றுமிற்றூற்
றந்தனத்திற்பற்றுள்ளமொரீஇப்பொருவின்மாளயந்தான்றருதல்வேண்டும். (சரு)

பாலினெடுபாலடிசில்பலவகையசிற்றுண்டிபருப்புநெய்தே
னாலுவகைதரும்பருகனக்கல்விழுங்கிடல்கறித்தனறியசெந்நெல்
வாலொளியமூரன்முதனல்லுணவினூட்டுவித்தான்மறையோர்தம்மை
யாலகண்டனரியயனிந்திரன்முதலோர்பிதிர்க்களெலாமடைவரின்பம். (சசு)

மூவுலகுங்களிதூங்குமாளயமாஞ்சிராத்தவிதிமுறைசோன்பாற்
றூவிலிருவழிப்பிதிர்க்கடமையூட்டித்தக்கிணையுந்தமக்கியன்ற
வாவருளவேண்டுமின்றேன்மாளயநல்வினைமாளுமகஞ்செய்வார்க்கு
மேவியதக்கிணைமுதலாமதுபோலும்பிதிர்வேள்விவிரும்புவார்க்கும். (சஎ)

சிறிதெனினுந்தரல்வேண்டுந்தக்கிணைதான்சிராத்தமதுசெய்யற்பாலார்
நெறிதெரிதொன்மகவிலளாங்கைனியுந்தான்றன்கணவனிமித்தமாகப்
பொறிதருதக்கிணையின்றிப்புரிகவதுபெறும்பூரிபோசனப்பேர்
பிறிதுபடிற்றருமமெலாங்கெடுநிரயம்புகுமவடான்பேசுங்காலே. (சஅ)

மரபுகெடும்பிரமகத்திவருங்கன்னிமாதத்தின்மாளயந்தான்
றரலொழிந்தான்மங்கலமுன்சாற்றியமாமொழிப்பொருண்மைதானும்பின்னர்ப்
பரவுமிடப்பொருளுடையமாளயச்சொற்றுராசாரபண்ணினேர்பால்
விரவிடுநன்மங்கலங்கள்விடுக்கிலவர்க்குளதாகும்வெய்யபாவம். (சகூ)

அன்னைபிதாமாண்டதினத்தாற்றலிலையானுலுமறுதியாக
வென்னவகையாலுமிந்தமாளயமாஞ்சிராத்தவினையியற்றல்வேண்டுந்
தன்னைமிடியுறில்விசிட்டமறையவர்பாற்கொண்டிழைக்கதருவாரின்றேன்
மன்னவர்பாற்கொள்கவவரிலையென்றால்வணிகருழைவாங்கிச்செய்க. (௫௰)

வண்மைபெறுவணிகரவரிலையென்றான்மாளயஞ்செய்வதற்காமற்று
மொண்மைபெறுவேளாளருழைவாங்கியானுலுமுஞற்றல்வேண்டுந்
திண்மைபெறுபுவிவளங்கொண்டாறிலொருபங்கிறைக்குச்செலுத்தியைந்தி
லண்மைபெறுபிதிர்தெய்வம்விருந்தொக்கலோம்புமவராரிதென்றாலோ. (௫௧)

பதிதர்கரத்தேற்கவொண்ணாதவுமவரொருவருந்தான்பாரிலின்றேற்
குதிகொண்முலைப்பாற்சுரபிக்கேதேனும்வாயுறையைக்கொடுக்கவன்றே
லதிர்விலங்குதிரிகாட்டிலடைந்திரண்டுகரத்தானுமகட்டின்மோதிக்
கதியிலனென்செய்வலியானெனவாற்றிக்காதலொடுங்கண்ணீர்சிந்த. (௫௨)

பேதமிலாநம்வழியிற்பிதிர்க்களெலாங்கேண்மின்கள்பேதையேன்யான்
யாதுமிலேன்றருவாருமிலரதனான்மாளயந்தானினிதிலாற்று
நீதியிலேன்கருணையுளீரென்பிழையைப்பொறுத்தருண்மினீவிரென்னு
வாதரவிற்புலம்பியழுதிலம்பாடுமிக்கவன்றானறைதல்செய்தால். (௫௩)

அன்பினொடுமோதியுணராரணரிலளப்பிலரையருத்துமின்பந்
தென்புலத்தார்க்குளதாகுஞ்சிராத்தமிதுசெய்திடற்குத்திங்கடன்னிற்
றன்பமிகுஞ்சூதகமேமுதலாகுமிடையூறுசூழ்ந்ததுண்டேற்
பொன்பிறங்குங்கதிர்ப்புத்தேடேளுறையுங்காறுமிதுபுரியலாகும். (௫௪)

வேறு.

இன்னணமீதிழைத்திடுங்காற்பண்புசாலுமெழின்மறையோர்தமைவரித்திட்டிய ற்றல்வேண்டு, நன்னரிலார்தமையூட்டின்மாளயந்தானுசமுறுஞ்சிராத்தமிதுநடாத்துங்காலை; மன்னுபிதாப்பிதாமகர்தம்வழிகுன்றாமல் வரும்பிரபிதாமகராமருவுமூவர், பின்னர்கொண்மாதாப்பிரபிதாமகர்மாதாப்பிதாமகர்மாதாமகராப்பேசுமூவர்.

விளம்பறுவர்க்கறுதொழிலோரறுவர்தம்மைவிருப்பினொடுவரித்திடுகவிசுவதேவர்க், குளம்புரியவிருபிறப்பினோரிலிருவோருமொருவருமாலவற்காகவொன்பதின்மர், வளம்பெருகுமாளயத்தில்வரிக்கப்பட்டோர் வகைந்தவருக்கருத்துவிக்கும்வகையின்றாயிற், கிளர்ந்தபிதாவழிமாதாவழியென்றெண்ணுங்கேடில்வழியிரண்டினுக்குங்கிளர்மறையோரிருவர். (௫௬)

உலகிமையோர்தாமிருவர்விசுவதேவரொளிவளையோனிவரிருவர்க்கொருவராக, வலகுதருமறையவரினல்வர்தம்மையருத்துவிக்கமாளயமீதன்பிற்செய்தா, லிலகுமகம்பலதுலையினீகைசாந்திராயணமுன்விரதங்களிருடிகூட்டத், திலகநிகர்வியாதனருள்வேதநான்குந்திருந்திடவோதிடல்காயத்திரிசெபித்தல். (௫௭)

இதிகாசபுராணங்கள்படித்தல்கேட்டலிவற்றில்வரும்பலமனைத்துமினிதினல்கு, மதியாருஞ்சடைமவுலிமங்கைபங்கன்மாலயனூர்வாழ்வுமுறுமாளயந்தான், கதியாருமிதுமித்தகாமியமாதலினாற்காட்டுநலம்புரியிலின்றேற்கறையுண்டாக்கு,மதிலாகுந்தருமமதற்கொவ்வாதேனையறமுழுதரோன்பெவையுமாயுங்காலே. (௫௮)

ஆனமையாற்றுராசாரமாளயத்தையாற்றுமவர்பாலடைந்தவளப்பில்யாது, தானர்குழாம்பூதவேதாளமண்ணை சாகினிடாகினிபிறவுந்தரியாதோடு, மாநிலமேற்றிருவளரும்வசிட்டன்வாக்கான்மாளயத்தைத்தசரதனுமன்னன்செய்தே, பூநறுமென்குழற்சீதைபதிமுன்னான்குபுதல்வருடன்பெறற்கரியபுகழும்பெற்றான். (௫௯)

இதுபுரிந்துவானடைந்ததன்றிவென்றியதுவைமுதற்பாலகனாயயாதியீன்றா, னது வலதுதிட்டந்தன்பரதற்பெற்றா னமையந்திமதிநுதற்றாளரிவையாம்பன், மதுரா விதழ்த்தமயந்திதோய்நளன்றான்மாற்றலனாம்புட்கரனைமைந்திற்செற்றுச், சதுர நிலங்கலியின்வலிதீர்த்துக்காத்துத்தந்தனனிந்திரசேனன்றன்னைமுன்னாள். (௬௦)

வள்ளலரிச்சந்திரன்றான்கவுசிகன்செய்வஞ்சனையுங்கடந்துலகம்வழுவாவாய்மை, யுள்ளவனென்றெடுத்துரைப்பவிழந்தவில்லா ளுடன்மகவுமீளவடைந்தவகையுற்றான், கொள்ளருந்திவுகளொன்பானிரண்டுங்கொண்டான்குலவியசீர்க்கார்த்தவீரிய மன்காண, நள்ளுறையுநாளிபற்றியிராமன்றானு நலங்கெழுமாளயமந்தநன்மையாலே. (௬௧)

ஓரைம்பானொன்றொருபான்சென்னிநெற்றியுயர்துண்டம்வாய்கண்டமொன்றைந்நான்கா, வீரைம்பான்பிருகுடிகண்செவிதோளங்கையிவையடைந்தவிராவணனை யீறுகண்டு, தாரைம்பான்முகிற்சனகிதன்னைமீட்டான்றருமமகன்மாளயஞ்செய்தருமத்தாலே, போரைம்பானிருவரையுமுருக்கிநீங்காப்புன்கணொழித்தணிமவுலிபுனைந்தான்மாதோ. (௬௨)

கோதமனத்திரிவசிட்டன்பரத்துவாசன்கும்பமுனிபிருகுகுற்சன்கோசிகன்றான், வேதவியாதன்றந்தையங்கிராவேமிருகண்டுகாசிபன்றான்விளம்புமேனை, மாதவர்கண்மாதமிதின்மாதரோடுமாளயஞ்செய்தெவராலும்வழுத்தப்பட்டுத், தீதகலுமணி மாதிசித்திநோன்புசெய்புமுரன்படைத்தானார்சீவன்முத்தர். (௬௩)

அற்றதனாற்றுராசாரமாளயத்தையாற்றகில்லார்க்கிப்பொழுதமச்சமுண்டாம், வெற்றிபயில்பூதவேதாளந்தன்னால்வெருவரவீங்குனைப்பிடித்தவேதாளந்தான், கற்றமறையவர்குலத்தோன்பரத்துவாசன்காளைபெயர்வேதநிதிகடல்சூழ்பாரிற், குற்றமிலாக்குசற்பலியாநகரின்வாழ்வான்குலம்பெருகுமாளயந்தான்குயிற்றனீத்தான்.

அங்கதனால்வேதாளமானானன்னோனகலிற்றுராசாரவறைந்தகன்னித், திங்களினிற்றென்புலத்தார்தம்மைநாடிச்சிராத்தமிதுசெய்திடுநீசெய்திட்டாயேற், றங்கியிடாதிலம்பாடுசெல்வஞ்சாருந்தவிர்தியினிமுசுண்டாவர்சங்கந்தன்னை, வெங்கொடியவேதாளம்விட்டதன்னைமேவுதிநின்புரத்திலென்றான்மெய்த்தவத்தோன். ()

பயம்பிரிந்தாங்கன்னவனுந்தன்னைமுன்னம்பற்றியவேதாளவினைபாற்றிநன்மை, யியம்பியதத்தாத்திரயன்கமலப்பொற்றா ளிறைஞ்சிவிடைகொண்டேகியிருக்குநாட்டி,லயம்புனாயுநெஞ்சனைத்தானன்றிக்கூட்டியறமீட்டிமறமோட்டியடைவார்க்கின்பஞ், சயம்பெருகுந்தனுக்கோடியேதுக்காட்டிச் சார்ந்தனனத்துராசாரன்றனிமை வீட்டில். (௬௬)

தாடலைநேர்பொருளுணர்ந்தசவுனகாதித்தவமுனிவீர்துராசாரன்றனக்குப்பாவ, மோடியவாறுமக்குரைத்தோமென்றுசூத னுரைக்கின்றான்பின்னுமந்தவுயர்துரோணக், கோடியிதசாந்தியினாற்குலையாத்தீங்குங்குலைத்தகற்றுஞ்சூத்திரன்பாற்கொள்ளும்பூசைப், பாடில்சிவலிங்கத்தைப்பதுமைகோனைப்பணிபனவன்றனக்கில்லை பரிகாரந்தான். (௬௭)

அந்தணரைநீத்தோராயாசான்றன்னை யாய்தந்தையவர்தம்மையாரணத்தை, யிந்துவிளங்குழவிதவழ்வேணியானையியம்பிடுநற்காதைகளையெள்ளுகின்றோன், பிந்துகுலமானவர்சோறுண்ணும்பார்ப்பான் பின்பிறந்தோன்முன்பிறந்தோன்பெண்டிர்தோடோய், நிந்தையுளான்செய்ந்நன்றிமறப்பான்றேறுநிலைமையனாக்கொலைபுரியுநேயமில்லான். (௬௮)

வாசியினைக்கன்னியனாமறையைவானோர்வடிவினைகீரினையறத்தைமாண்டநோன்பைப்,பேசிவிலைவிற்குமவனிவரெல்லார்க்கும்பேசாவாம்பரிகாரம்பிறங்குநூல்க,டேசமலிதிருவருள்கூர்தெய்வஞானத் திருமுனிவீராயிரம்வாய்ச்சேக்கைநீத்த, கோசலைசேய்கரங்கொடனுக்கோடிதீர்த்தங்கூறியவித்திங்களைத்துங்குறைக்குமாதோ. ()

வேறு.

வீறுவார்தனுக்கோடிநீர்மேன்மையாமுமக்கோதினேங்
கூறுவார்களிக்காதைதான்கூடுபாதகக்காடெலா
நூறுவார்விடைப்பாகனார்நோன்மைசாலருட்கோலமார்
நீறுவார்நுதற்பாலனார்நேயமாதவத்தீர்களே. (எ0)

துராசாரச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் உகருச.

---

# பாலோடைச்சருக்கம்.

---

சீலங்கொண்முனிசூதனவண்மேவுதவவாணர்திரளைத்தெரிந்தோதினு
னீலங்கவளையேந்திநேமித்தடந்தொட்டுநிகழ்சேதுமீதுநிலவுங்
கோலங்கொள்விற்கோடியிறுவாய்கொளறுநாலுகுளிர்நீரமுறைகூறினே
மேலங்கணவைமிற்றின்மிகுகாதையுணர்மின்கள்வெஃகிற்கிளத்துமெனவே. (க)

துறையுற்றபொருண்மேயதொல்காதைபல்கோடிசொலல்கற்றசூதமுனிவ
னறையுற்றமொழிநாடியறவோர்கண்மகிழ்வோடுமவனைத்துதித்துநவில்வா
ருறையுற்றபுனனேமிநீர்கிரகுண்டத்தினொருசாரதெனவோதினுய்
நிறையுற்றவதனீர்மைபெயர்வந்தவழிமுற்றுநீசொற்றல்வேண்டுநெறியால். (உ)

நன்றுகவிதனுண்மைதெரிகின்றநசையெங்கணன்னெஞ்சுகொண்டததனு
லென்றார்களதுபோழ்துமுனிசூதனுரைசெய்வனெல்லீருமிதுகேண்மினீ
ரொன்றுகுமனனேடுமெனவோதுவானங்கணுமொன்றுமேதிமுகனைக்
கொன்றுவிமுடிமீதுநின்றுடனகரங்கொள்குடதிக்கிலுளதாகுமால். (ந)

புகனுமமுலகெங்குமளவோடுவளனீடுபுல்லக்கிராமமதனின்
மகனுகியொருபத்துவையத்தன்வயின்வந்தமால்வந்திருந்துவனாதி
ரகன்ஞாலமகளாடையதனூடுகனைகட்டினனங்கணுள்ளதறவீர்
மிகநாடுபாலோடையெனுமேல்வையதுகொல்லும்விளியாதவினையாவுமே. (ச)

கண்டாலும்விழிகொண்டுகைகொண்டுதொடலன்றுகாதிற்புகழ்ச்சிமொழியைக்
கொண்டாலுமுளதாகும்விண்டானமுயர்கிரகுண்டத்தையப்பெயரதற்
குண்டானநெறிசொற்றுமறிமின்கண்முனிவீர்களுறமுற்கலப்பெயரினேர்
தண்டாததவனுள்ளனவன்வேதமொழிவாய்மைதன்னிற்சரித்தறவருன். (ரு)

பொய்தீரமுனிதெற்குவேலைக்கரைச்சொற்றபுல்லக்கிராமமதிலே
மைதீருமறையாறுவழுவாமன்மகமொன்றுமாலைக்குறித்தாற்றினுன்
வெய்தீரும்விறலாழிவைகுண்டபதிநாடிவிழைவுற்றுளத்தின்மிகவு
மைதேறியடனீடுகருடன்றன்முதுகின்கணவ்வேள்விதனிலெய்தினுன். (சு)

அப்போதமுனிமுன்னரவிந்தமகளோடுமறலுண்டகொண்டலதனே
டொப்போதுமெழின்மல்கவுலகுண்டசேதாம்பலுமிழ்கின்றமூரலொளிரக்
கைப்போதின்வளையாழிகதைகஞ்சமலர்தங்குகவினீடவகன்மார்பிலே
யெப்போதுமுறைகின்றமணிவானமொடுதுய்த்தவினனீழலென்னவெரிய. (எ)

நிற்கின்றநெடுமாலின்டிமுன்புபணிவுற்றுநிகழ்மெய்ப்பொடிப்பினிறையக்
கற்கின்றபுகழ்பாடுகாதற்கடற்பாணிகண்ணிற்குதிப்பவெனையான்
விற்கினறனன்கோடிதொண்டாகமைவண்ணவிண்ணூதிபூதமெவையும்
பிற்கொன்றுநடுவைத்துமுதலீறுமுருமும்மைபெற்றின்றுநின்றபெரியோய். (அ)

அவதாரமொருபத்துமுல்குய்யவருள்செய்யுமவையிற்றகன்றபிறவி
நவதாரணிக்குளினிவரநின்றதொருக்ளைநகையானனங்கொடிருவுற்
பவதாரகப்பிரமபரமபரமானந்தபாந்தட்கிடக்கைதுயின்மா
தவதாரமலர்மாதுநிலமாதுமாகுமொருதாமோதரக்கடவுளே. (௯)

படிறன்றிமெய்ச்சொற்றபகலில்லைநல்லோர்கள்பழிகூறன்முதலாகவே
கடிகின்றசெயலன்றியினிதென்றபணியொன்றுகற்றற்குமுடனுகிலே
னெடிபொன்றுதுறையன்றிமுடிபொன்றுதுறையில்லையொருநூலகத்துமுணராப்
பிடியன்றிமுழுதுங்கொள்பேயாகினேன்மம்மர்பிரிகின்றபெற்றிதெரியேன். (௧௦)

அவாவஞ்சமறியாமையடுசீற்றமருளின்மையாருவழுக்காறுடன்
றவாவன்மையிவறன்மைமுதலாயகொடுவினைகடலைநின்றுபிறர்மாதரார்
கவானின்கணெரிபட்டுநிலையின்றுதுயர்மேவுகடியேனையாளநினையா
யுவாவன்றுவருகென்னவருசித்ராவென்றுவப்பிற்பணிந்தேத்தினன். (௧௧)

வேறு.

முனிவன்முற்கலன்முற்பணிந்தேத்திய, வினியவாசகமிந்திரைகேள்வனும்
பனிமுகிற்கரும்பண்ணவன்கேட்டனன், நனிவிரும்பிநவிற்றுதன்மேயினன். (௧௨)

மூன்றுமின்றிதுகேண்மகிமுற்கலா, விந்தவேள்வியினுலுமெமைப்புகழ்
சந்தவாய்மையினுலுந்தருக்கினேம், வந்துங்காட்சியின்மாணவிமாந்தவே. (௧௩)

தம்பமார்நின்றழன்மகச்சாலையி, னிம்பரின்கணெனவுமிருந்தவ
னம்புராசியமுதுடன்றேற்றிய, பைம்பொன்மார்பனேமீண்டுபழிச்சுவான். (௧௪)

இல்லநங்கையும்யானுமுயர்தனம், வல்லநோன்புமரபும்பிறந்தையும்
புல்லுமாசிரமத்துறைபோற்றலு, நல்லவாயினமாயநீநண்ணலால். (௧௫)

இருமையோகரிதயமுமிங்கியான், றருமகத்தழற்சாலையுந்தங்களி
லொருமைசெய்தனையுன்னடியேன்பெறக், கருமைவண்ணநின்காட்சியளித்தரோ. (௧௬)

ஈதனந்தம்பலந்தருமெச்சமென், றுதனஞ்சந்தனமலராதியாற்
கோதனக்கிடுகோவர்த்தனக்குடைச், சீதரன்றனையர்ச்சனைசெய்தரோ. (௧௭)

மாசிலாதமகத்தவிவண்புரோ, டாசமாதியளித்தனன்மாவலி
வீசுதாரைவிடுங்கரத்தேந்தியே, யோசைவாரிமண்ணுண்டவனுண்டனன். (௧௮)

உண்டகாலையிலோங்கொளிநீறணி, முண்டமுற்கலனேடமழன்மும்மையுங்
கொண்டநெஞ்சிற்குளிர்ச்சிக்குலமகங், கண்டவந்தணர்யாருங்களித்தனர். (௧௯)

தறையினீடுசராசரம்யாவையுங், குறைதவிர்ந்தனகோவிந்தனேவிலா
நிறைகொண்முற்கலநின்னைவிரும்பினே, மறைதிவேண்டுவதென்றனனங்கரோ. ()

மூள்விருப்பொடுமுற்கலனேதுவா, ஞுள்விருப்பினடித்தொண்டினேன்புரி
வேள்வியுற்றனையின்னமும்வேண்டுமோ, கோள்விருப்பின்வரம்பிறகோடலே. உக

மாயனைவரங்கொள்வதவட்டைவாய்த், தீயகல்லினைச்சிற்றிடையாக்கிடுந்
தூயபேரடிதன்னிற்றுளக்கிலா, நேயமேபிறிதொன்றுமிகழ்த்துகேன். (உஉ)

பாலின்வேள்விபரிதிபடுமிரு, காலமுஞ்செய்யுங்காதல்பெருகினே
னீலமேனியநின்பொருட்டாரண, நாலுமிப்பொருணுடிநவிற்றுமால். (உந)

பீடுசாலும்பெருந்தவத்தோனிலம், பாடுமேயினன்பாலின்மகஞ்செயக்
கூடுமாநிலன்கோவின்மைபாலிது, நாடுநல்வரநல்குதியென்றனன். (உச)

அச்சுதன்புரிந்தாயிடையத்தவ, னிச்சைமுற்றிடவெண்ணியிலேகளூர்
விச்சைமிக்கவிசுவகன்மாவெனுந், தச்சன்றன்னைவிளித்திதுசாற்றுவான். (உரு)

தன்மருங்குறைமெய்க்கிறந்தான்கொளுங், கன்மருங்குகனகத்திற்கட்டியே
பன்மருங்கும்படிக்கணியாம்படி, நன்மருங்கொழுங்கொத்திடநாடியே. (உசு)

சுற்றுநீடெயிற்சூழ்மணிப்பல்சுடர்க், கற்றைவீசக்கடிதினியற்றுவாய்
பற்றுநீரகப் பாடெல்லாம்வெள்ளியா, லூற்றதேமல ரோடையொன்றென்றனன்.

பங்கயத்தடமாயன்பணித்தவா, றங்கண்வானத்தபதியமைத்தனன்
சங்கவேலையிற்கண்படுந்தாமரைச், செங்கண்மால்கண்டுசிந்தைமகிழ்ந்தபின். உஅ

வரவிளித்தவண்வானகநாட்டினுட், சுரபிதன்னையதனெடுஞ்சொல்லுவான்
பரவியாகம்வெண் பாலினிற்பண்ணுவான், கரவிலாமுனி முற்கலன்கண்ணினன்.

காலைமாலைக்கடலிற்கதிர்விழு, மாலையென்னவருமிருகாலமும்
பாலினனிறைபட்டமிதனைநீ, கோலும்வேள்விகுயிற்றும்பொருட்டரோ. (கூல)

சந்தவேள்விதருவதுமென்பொருட், டிந்தமுற்கலற்கார்வமுமென்னுழை
வந்துநீயிருகாலமும்வாவியை, யந்தண்பாலினிரப்பென்றருளினன். (கூக)

மானுவன்றமைகேட்டுமடநடைத், தேனுவும்மதுசெய்வலியானெனத்
தானிறப்படிகப்படிச்சோதியா, லானதாரத்தகநிலக்காந்தியால். (கூஉ)

பண்டும்பாலினிறைந்தனபங்கயத், தண்டடந்தனைத்தன்முலைப்பாலின
லண்டர்தேனுநிரப்பியதாயிடை, விண்டுமுற்கலற்சுட்டிவிளம்புவான். (கூந)

இத்தடப்பயங்கொண்டிருபோதினு, நித்தலும்புரிநீமகமன்னதால்
வைத்தசிந்தைமகிழ்வெனக்குள்ளதாஞ், சித்தியாவையுஞ்சேருநினக்கரோ. (கூச)

ஏடுலாவுமிலஞ்சியிதிற்புகுந், தாடுவார்தமதைவகைத்திணையும்
பாடுசாயுமிப் பட்டமும்பன்னுபா, லோடையென்னும் பெயர்புனைந்தோங்குமால்.

பழுதுபோர்த்தபருந்தவக்காக்கையி, தொழியுநாளெமையுற்றிடுகென்றுமா
றழுவிமுற்கலன்றன்னைத்தபோதனன், வழுவினுநின்வணங்கமறைந்தனன். (கூசு)

அளைகரந்தவனங்கட்கரந்தபின், வளையும்வாவிகொள்வான்பசுப்பாலினல்
விளையும்யாண்டுபல்வேள்விசெய்தம்முனி, கிளைகொள்புல்லக்கிராமத்திருந்தனன்.

மூதுணர்ச்சிகொண்முற்கலன்முற்றுநாட், சேதரன்றன்றிருவுருவாயினு
னேதினேனுமக்கோங்குபாலோடையின், மேதகுஞ்செயன் மெய்த்தவத்தீர்கள்.

பேசுமற்றிதன்பெற்றியுலகெலாம், வீசுபாதகம்வேருடன்வீழவே
காசிலாவிதிற்கத்துருவென்றிடும், பாசிழைக்கொடிகாந்தன்பணியினல். (நுக)

அல்லல்கூருஞ்சலத்துமாற்ருட்டியை, வெல்லுந்தீயவினையறமூழ்கினுள்
வல்லநாவலர்வள்ளியர்க்கொப்புமை, சொல்லுந்தேனுவின்பாலுகள்சூழியில். (சய)

மடைகொடேனுவின்மாண்பயவாவியிற், குடையுமேலவர்கூறுமறையினு
னடவும்வேள்வியினுற்பிறநன்றியா, லடையுறும்பயன்வேறிலையாயிலே. (சக)

பாலினேடைப்பரிமளச்சீதளக், காலுலாய்த்தொடுங்காத்திரம்பெற்றளார்
ஞாலமீன்றவனன்னகர்வாழ்ந்துபின், மூலமாம்பரமுத்தியின்மேவுவார். (சஉ)

கான்றவாதபற்கான்வரலின்றியே, யான்றபார்ற்றடத்தாடினர்சென்னியிற்
ரேன்றுமாரழற்சோதிநற்சீதளந், தான்றரும்வைதரணிநதியுமே. (சந)

ஈனமாரிருள்யாவையும்பாழ்படும், வானமார்பசுப்பாற்றடம்வைகவே
நானகீர்பிறநாடுவர்நாடுவா, ரானின்பால்விட்டருக்கவெண்பாலையே. (சச)

இத்தின்மூழ்கினர்க்கெய்தரிதொன்றிலை, முத்தியேதரும்பல்லமொழிந்தெவன்
சத்தியமிருகாலுந்தவத்தினீ, ரொத்துரைக்குவன்பாணியுயர்த்தியே. (சரு)

வேறு.

நூலோடுபோனநுனிகூர்நோலாருஞானமுனிவீர்
நீலாழிசூழுநிலமேனீள்காதையீதுநுவல்வார்
சாலார்வமோடுதுளைசேர்தாழ்காதினுளுநுகர்வார்
பாலாகுமாசில்புகழார்பாலோடைமூழ்குபயனே. (சசு)

பாலோடைச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் உஉ00.

---

# கத்துருச்சருக்கம்.

---

வேலையதிற்சூதனெதிர்வினவிடுவார்வியன்முனிவர்
பாலினிறைதடத்தாடிப்பவமொழித்தாள்கத்துருவென்
றேலநுவன்றனையதுமற்றெவ்வாறேவிளையாள்பான்
மாலுறுவஞ்சகம்புரிந்தவகையெவன்யார்மகளென்னுள். (க)

எவன்றுணைவியவள்சலமன்றேதுபொருட்டினிலிழைத்தா
னுவன்றருணீபிடர்பிடித்துநுந்துகின்றதவைகேட்பக்
கவன்றெழுசிந்தையிற்பெருகுகாதலென்ருர்கலைச்சூத
னவன்றவளாக்குறித்திசைப்பானதன்வரலாற்றடைவெல்லாம். (உ)

தலையுகத்தின் முன்னுளிற்ருவில்பிரசைக்கிறைபாற்
சிலையுருவநுதலிருவர்சேயிழையாருளரானு
ரலையுததிதனிற்படருமணிபவளமுதலொன்றில்
விலையுலகுஞ்சிறிதாகவிளங்குமிருகவைக்கொடிபோல். (ரு)

முத்துருவமுறுவலினுண் முளரிமகண் மணவாளன்
பத்துருவின்மூன்றுருவம்பார்வையடிப்புறமருங்கா
வைத்துருவமடவரலாம்வஞ்சியிளம்வளர்போல்வாள்
கத்துருவென்றிடும்பெயராள்கன்னியரின்முன்பிறந்தாள். (சு)

பின்னகைமற்றவடனக்குப்பெயர்வினதைகுலைக்காந்த
ளன்னகையாடளவமுகையாநகையாண்மேனகையைப்
புன்னகைசெய்திகழ்ந்திடுவாள்பூவையர்தாங்காசிபற்கு
நன்னகையார்பன்னியராய்நண்ணினாரந்நாளின்கண். (இ)

முளையெயிற்றுக்கத்துருவாமுன்னவடானனந்தன்முதற்
றுளையெயிற்றுவாளரவத்தொகைபலவும்பயந்தளித்தாள்
கிளைகொள்சிறைக்கருடனையுங்கேடில்புகழருணனையு
மிளையளெனும்வினதையவளீன்றளித்தாளிசைகூர. (அ)

பொன்னனையாரிருவருந்தாம்பொருந்தியொருமருங்குறையு
மந்நிலையங்கவர்காணவணைந்துளதுச்சயிச்சிரவா
வென்னுமகவான்புரவியிந்திரையுநிலமகளு
மன்னுநிலைவரும்பெரியமாலுறங்குங்கடற்றிரைபோல். (எ)

வாசியிதனிலாங்கூலம்வான்மையதோகீன்மையதோ
பேசுகென்ருண்முன்னவடான்பின்னவளைமுகநோக்கி
யாசிலெழில்வினதையவளதுவினவியணங்கன்னய்
வீசுசுடர்வாலிதற்குவெண்மையதேயெனப்பகர்ந்தாள். (அ)

பின்னவடான்பின்னவடன்பிழையின்மொழிமறுத்திதன்வால்
வன்னமதுவாலிதன்றுமணிநிறமென்றனண்மடவா
ரின்னணமாறியன்றவழியெவடோற்ருளவள்வென்ரு
டன்னடியாளாகவெனச்சபதமொழிதமிற்புகன்ருர். (கூ)

அவ்வழிக்கத்துருவென்பாளாடுபெணுமுடியனந்தன்
மைவழியும்விடமிடற்றுவாசுகிமுன்மைந்தர்தமை
மெய்வழியன்பினிற்பார்த்துவெண்ணிறவால்கருநிறமா
மெவ்வழியவ்வாறிழைமினிறுகிடச்சூழ்ந்தெனவிசைத்தாள். (௧௦)

அப்பணியைப்பணிப்புதல்வரவர்மறுப்பவாய்சீறி
யிப்பணிக்கின்றயலானிரேந்தல்பரீக்கிதுவென்பான்
கைப்படுசத்திரவேள்விக்கட்செவியாரவியாகி
யொப்புறநீரனைவீருமுடன்முடிவீரெனச்சபித்தாள். (கக)

அன்றுகொடுங்கார்க்கோடனன்னைமுனிவதற்கஞ்சிக்
கன்றிமனங்கலங்கியவள்கமலபதம்பணிந்திசைப்பா
னின்றதன்வான்முழுவதுவுமிருட்பிழம்பின்கொழுந்தென்ன
மன்றவிழைத்திடுவனன்னய்மனமருளேலெனவகுத்தான். (கஉ)

அவளுமதுபுரிகென்ருளாங்ஙனம்வல்விரைந்தேகித்
தவளமிறவாலடங்கத்தனதுபெருங்கருவுருவாற்
றுவளவளைத்துடன்சூழ்ந்துசுரும்பினஞ்சூழ்துணர்நீலக்
குவளைநறுந்தொங்கலெனக்குயிற்றினனக்கார்க்கோடன். (கரு)

ஆயதன்பினவமணிக்குமணிவளைக்குமரவிந்தச்
சேயிழைக்குந்திங்களுக்குந்தேவர்பிரான்மதகரிக்குந்
தூயபிறப்பிடமாகிச்சுடருமிழ்வெண்மடிநெடுமால்
பாயலின்மேல்விரித்தனையபாற்கடலின்புறத்தேகி. (கச)

மண்டுகடுப்பினிற்படரும்வாம்பரியின்வால்கரிதாக்
கண்டனர்களிருவருந்தங்கண்ணிறம்போய்க்கலந்ததுபோற்
புண்டருநெஞ்சினளாகிப்புள்ளரசையீன்றளித்த
வெண்டரளநிரைமுறுவல்வினதையவண்மிகமெலிந்தாள். (கரு)

உடன்பிறந்தசத்துருவாமொண்டொடிகத்துருவென்னு
மடந்தையவண்மற்றவட்குமனைத்தாதிவினைத்திறத்தின்
கடன்பணித்தேவினளாங்கட்கருடனவன்பகிரண்ட
விடம்பிளந்துமிசையெழுந்தானிரணியவெற்பெழுந்ததென. (கசு)

பதைத்துலகமொருமூன்றும்படர்சிறைப்புட்காவலனைத்
துதித்தனகண்டருள்கூர்ந்துதொல்லுயிர்களெல்லாமும்
விதிர்ப்புறுகின்றனவெனத்தன்வெருவருமெய்யொடுக்கியுட
னுதித்தவன்றன்பிடர்மிசைக்கொண்டுற்றனன்பெற்றவள்பாங்கர். (கஎ)

ஆங்கணடித்தொழில்புரியுமரிவைதனைக்கத்துருவாம்
பூங்கொடிபார்த்தரவநிலம்புகப்புரிந்ததுளமெனக்கு
நீங்கருமென்மைந்தர்தமைநின்மகவாங்கலுழனவன்
ருங்கிவரப்பணியென்றுடையல்வன்றனக்குரைப்பாள். (கஅ)

இந்துவுறழ்துதலிவளேயான்சுமப்பலிவளின்ற
மைந்தர்களைநீசுமந்துவருகென்றுளெவனென்று
துந்துவெரின்கொண்டவரையுரகநிலைவழிக்கொண்டான்
பைந்தொடியுமயிலூரப்படுமெகினிற்படர்ந்திட்டாள். (ககூ)

படர்வழியிலழற்கிரணபானுவெதிர்குறுகுதலு
மிடருழந்தார்பணிப்புதல்வரீன்றவளங்கதுகாணூஉ
வடர்தளிர்க்கற்பகநாட்டிற்கதிபனையேத்தினளவனுஞ்
சுடருமிழ்மின்முகிற்றுளைசொரிந்தவர்தந்துயர்தொலைத்தான். (உ௦)

அத்தலையவயக்கருடனனியெருத்தமிசைப்போகிப்
பைத்தலையபாலரவர்பணிநாடுபுகுந்ததற்பின்
மைத்தடங்கண்வினதையருண்மகன்றனைப்பார்த்தெமக்கிந்நா
ளித்தனையிற்பிறதீவினெழில்காணும்விருப்புளதால். (உக)

தாதிமகனுகியநீதாழாமற்சுமந்தொலைப்
போதியெனவோதினரப்போதின்கட்புகழ்க்கலுழன்
காதலனைதனைக்குறித்துக்கவன்றுமனங்கத்துருவா
மாதிவளைநீபரிக்கவந்தவழக்கெவன்கொல்லோ. (உஉ)

என்னையடியாண்மதலையென்றிவடன்மக்கள்பழி
சொன்னதென்மற்றிதனிமித்தஞ்சொல்லுதிநீயெனக்கென்றா
னன்னையவன்றனக்கறைவாளணங்கிவடான்வஞ்சனையான்
முன்னெனைவென்றனளாங்கண்மொழிந்ததொருசபதத்தால். (௨௩)

ஆயினன்யானவட்கடியளாதலினாலென்மகனா
நீயுமிவர்தொழும்பாகிநின்றனைமற்றதனாலே
தாயுமகவுங்கூடித்தாங்கியிவர்த்தளர்கின்றோ
மேயசெயலிஃதென்னாவினதைவிரித்துரைசெய்தாள். (௨௪)

வேறு.

வடிவிழிநறுமென்கூந்தல்வனிதையாம்வினதைமாற்றங்
கடிதுகேட்டவடன்னொடுங்கழறுவான்கருடனன்னே
யடிமையாந்தன்மைநின்பாலகல்வதெவ்வாறதற்காம்
படிபுரிகருமமென்கொல்பகருதிவல்லையென்றான். (௨௫)

பிணிமுகத்திறையைநோக்கிப்பேசுவாள்பெற்றாள்பிள்ளாய்
பணிமகார்க்கிட்டியென்னைப்பயந்தவள்சிறையிற்றீர்தற்
கெணியதீங்கிழைப்பனுங்கட்கென்செயவேண்டுமென்னாத்
துணிபொடுகேட்டியென்றாடோன்றலுமவளைக்கேட்டான். (௨௬)

காரிவாய்மைந்தர்சொல்வார்கருடநீகடவுளூர்ச்சென்
றாரமுதுகொண்டுற்றாலவடுயர்தீருமென்றார்
தீரனுந்தாயைநோக்கித்தீஞ்சுதைகவர்வான்றேவ
ரூரினிறபோவன்வட்டைக்குண்பதொன்றுதவுகென்றான். (௨௭)

உதவினாள்வினவிமைந்தாவும்பரூர்வாரியுண்டி
யதனைநீவேட்டியாகிலறைதிரைவாரிவைகு
மதநெடுவேடர்தம்மைவாரியுண்டமரிவௌவிக்
கதுமெனமீளுகென்றாள்கழறுவாண்மீண்டுமொன்று. (௨௮)

விப்பிரனொருவன்வைகும்வேட்டுவமின்னைவேட்டாங்
கப்பெரியோனைநீப்பாயையநின்பக்கமாதி
யொப்பில்சீரங்கமெல்லாமுலவையங்கடவுண்முன்னாச்
செப்பிடுங்ககனவாணர்தீதறப்புரக்கவென்றாள். (௨௯)

ஆயுளையாசிகேளாவகங்களித்துவனைநாடி
யேயெனப்படர்ந்துமிக்கவெயினர்தங்குழுவையெல்லாம்
வாயினிலடக்கியிட்டான்மலைமுழையொடுங்கும்புட்போன்
மேயினகளத்திலங்கோர்விப்பிரன்கனல்வதானான். (௩௦)

மேதகுகளத்திற்சேர்ந்தவிப்பிரன்றன்னைக்கான்று
போதிநீயென்னலோடும்பொருக்கெனவெழுந்துசொல்வா
னாதரவதனால்வேட்டவணிகிளர்ந்தோங்கும்வேடக்
காதலிதனையுங்கூடக்கருடநீயருளல்வேண்டும். (௩௧)

இனியதேகிராதமாதோடிங்கிராதேகுகென்றான்
பனவனும்விழைந்தநாட்டிற்படர்ந்தனன்பாரியோடும்
வினதைசேய்பின்னரன்பின்மிக்ககாசிபன்றானென்று
மனமகிழிடத்திற்சென்றான்மற்றவன்கண்டுசொல்வான். (௩௨)

தோன்றனீயாங்கட்போதிசொற்றருகென்னலோடு
மீன்றவடாதியாகவெய்த்யவிடும்பைதீர
வான்றருமமுதங்கொள்வான்வந்தனன்வயிற்றின்மண்டிக்
கான்றெழுபசித்தீத்தன்னாற்கருகியசிறகரெல்லாம். (௩௩)

கணக்கிரிபுளினர்த்தின்றுங்களைசிறிதகன்றதில்லை
யுணக்குறுமுடலமுண்பதொன்றெனக்குதவினுயே
லிணக்கிலாவலியின்விண்போயின்சுதைதருவலென்றான்
பிணக்குறுபுலன்கள்வென்றபெரியவனருளிச்செய்வான். (௩௪)

அன்றொருவிபாவசுப்பேரந்தணன்றனக்குமன்னான்
றுன்றுசீரிளவலாகுஞ்சுப்பிரதீகனுக்கும்
பொன்றவில்பொருட்பொருட்டாப்பூசலாயவர்கடம்மிற்
குன்றவில்சாபங்கூறிக்கொண்டனர்குரோதமிக்கார். (௩௫)

கச்சபமானான்முன்னோன்காரிபமானான்பின்னோ
னிச்சிறைநீர்த்தடத்தாரிருவருமிறங்குதானை
மைச்செறிமதநீர்யாறுவரம்பிலவழங்கும்வேழக்
குச்சம்யோசனையோராறுண்டுடற்பருஉவதனிரட்டி. (௩௬)

கூருமத்துயர்ச்சிமூன்றுகொண்டயோசனைவரைத்தாம்
பேருருவிசாலமாயோன்பிறப்பளவாகுந்தம்மிற்
பூருவவயிரநாடிப்போர்வினைத்திரண்டுமுற்ற
வாருதியவற்றையுன்றனகட்டமுலவியமைந்தா. (௩௭)

அயின்றபின்போகிப்போகியண்ணலேயமரரூரி
லியன்றவாரமுதம்வெளவியிம்மெனத்திரும்புகென்றான்
முயன்றருடவங்கூர்தாதைமொழிப்படிவயினதேயன்
வியன்றனுக்கமடத்தோடும்வேழத்தையுகிராற்றூக்கி. (௩௮)

வெய்தெனமேற்கிளம்பிவிளம்பிடும்விளம்பநாமப்
பொய்கையிற்போனனங்கட்புள்ளினுக்கரசைநோக்கி
யுய்தரைத்திரிகைநாப்பணுான்றிகற்றண்டமேய்க்குந்
கொய்தளிருரோகிணிப்பேர்க்கொழும்பணைத்தாருக்கூறும். (௩௯)

நூறியோசனையுயர்ந்தநோன்றலையெனதுகோட்டி
லேறிநீகச்சபத்தோடிபத்தையுண்டிருந்திளைப்பிங்
காறியேகெனவமர்ந்தானதன்மிசையதுபொருமல்
வீறியகொம்பரிற்றுவீழ்ந்ததுவீழும்போழ்தில். (௪0)

வல்லரிப்பணையதன்கண்வாவலிற்றூங்கும்வால
கில்லியமுனிவர்க்காணுஉக்கிழிவர்வீழ்வரொன்று
வொல்லையவ்வுலவைதன்னையுடன்றழீஇயும்பர்ப்போனு
னல்லதீர்காசிபன்றானங்கதுநோக்கியையா. (௪௧)

பாசடைவிடபமித்தைப்பர்ப்புடையசலமித்தின்
வீசிடாதமரமெல்லவிடுத்திடுகென்றான்றந்தை
பேசியமொழிவழாமற்பிறங்கலினதணவைத்துக்
காய்சினக்கவளமாவுங்கமடமோதகமுமுண்டான். (௪௨)

போதநூதனினிகழ்ந்தபொங்குமாண்கவிகைப்பஞ்ச
பாதவநாட்டின்பாலுற்பாதங்கள்பலவவற்றை
மீதிகழ்வேந்தன்காணூஉவிளங்குவானுண்டளப்போ
யாதிதனிமித்தந்தெற்றென்றெண்ணிநீயியம்புகென்றான். (௪௩)

உருவுறீஇப்பலகாற்கேட்குமும்பர்நாயகன்றனோடுங்
குருபரன்கிளப்பான்முன்னங்கோடிரிகாசிபன்றா
னிருடிகளிமையோர்சித்தரியக்கர்கந்தருவர்பின்னர்
மருவுகின்னரர்கள்வாலகில்லியர்தமைவிளித்து. (௪௪)

காலையங்கதனில்வேள்விக்கனற்கிடும்பண்ணிகாரம்
வாலகில்லியனைக்கொண்டுவம்மினென்றேவிவிட்டான்
பாலுறுஞாலமீன்றோர்பதின்மரிலொருவனுதுஞ்
சீலமார்காசிபன்றான்சென்றவர்கவர்ந்துமீள்வார். (௪௫)

பெருவிரலளவின்மெய்யர்பெருஞ்சுமைசிரத்திற்றாங்கி
வருவழியான்கவைத்தாள்வைப்பினுளடங்குநீரி
லுருமுழுதடங்கல்காணூஉவொளிநகைபுரிந்தாயும்பர்
நிருபநீயதனாலன்னோர்நெருப்புமிழ்கண்ணராகி. (௪௬)

இகலுறீஇநின்னைச்சிறியிந்திரவிரோதியாயோர்
மகவுளதாகவென்றுவன்னிமேலவிசொரிந்தா
ரகல்சிறையிரண்டிலொன்றிலகலிடமடங்கமூடுங்
ககபதியன்றுதித்தான்காசிபன்மதலையாகி. (௪௭)

ஆங்கவனமுதங்கொள்ளுமாசைபாலணைதலுற்றா
னீங்கிதனாலுற்பாதமெய்தியதிறைவவென்றா
னோங்கலின்சிறகரிந்தவும்பர்தங்கோமான்றானும்
பாங்குறைதழலோனாதிப்பண்ணவர்தம்மைநாடி. (௪௮)

பதங்கநாயகன்றான்விண்மேற்படர்கின்றானமரிவேட்டுக்
கதங்கொள்போர்த்தானையோடுசாமினீர்கடிதினென்றான்
மதங்கயவரவுநீங்கவனமுயல்குழுமுமாபோல்
விதங்கெழுதானைவிண்ணோர்வேலைவாய்மருந்தைச்சூழ்ந்தார். (௪௯)

போயவர்காக்கும்போதிற்பொருப்புவேர்பறிந்துசாயக்
காயமேலுடுக்களாலாங்கட்டியிற்சிதறக்காத
மாயிரங்கோடிக்கப்பாலண்டமுங்கிடுகிடென்ன
மாயிருஞ்சிறைகள்வீசிவந்தனன்வயினதேயன். (௫0)

அண்டர்தாஞ்சேணிற்காணாவகம்வெரீஇமனிதர்போலப்
பண்டுநாம்விழிமுகிழ்ப்பப்படைத்திலம்பறவைவேந்தைக்
கண்டுளநடுங்காதென்றுகருதினார்கடவுளர்க்கு
மிண்டனும்வினதைசேய்க்கும்விளைந்ததுபூசலங்கண். (௫௧)

விலகருஞ்சங்கிராமம்விளைந்துழிமேலைநாட்டி
விலகுமாரமுதம்போற்றுமிமையவர்தம்மையெல்லாம்
பலகவைத்தருக்கள்வீசும்பாழிவாய்நவியமானு
மலகுசேர்துண்டமொன்றாலலகிரிதுண்டங்கண்டான். (௫௨)

ஊங்குளாரெவ்ரும்வெம்பியொண்படைக்குலாயஞ்செய்தார்
வீங்குபுள்வேந்தன்றன்மேல்வெகுண்டவன்சிறையைவீசி
வாங்கினனொருகாற்பல்கால்வருவதுபோவதானு
ராங்கதிற்பிறந்தகாற்றூடங்கியைமுதலோரெல்லாம். (ருங)

அசைதலுஞ்சிறகர்சற்றேயந்தரர்சிதறியெட்டுத்
திசைகளுங்கடந்துபோனார்தெரிந்திடின்முன்னமண்மே
லிசைதருங்கருடன்வீசுமிருசிறைக்காலெடுத்த
விசையினாலின்றுஞ்சொற்கம்விண்மிசைநிற்பதாகும். (ருச)

வேலையங்கதனில்விண்ணோர்விரைந்தெழீஇவினதையீன்ற
பாலன்மேற்பிண்டிபாலம்பரிதிவாண்முசலம்பாணஞ்
சாலநீடாறுகுந்தந்தடியுடம்பிடிகணிச்சி
வாலியகணையமுன்னாம்வயப்படைகொண்டடர்த்தார். (ருரு)

மீளியர்தம்மின்மிக்கவினதைசேய்துணைவிறோடு
நீளிருஞ்சிறையடித்துநிலமகணடுங்கவீசித்
தாளியையெழுப்பிமூடாச்சுடர்விழிமறைப்பச்சூழ்புத்
தேளிர்கண்கரித்துவாரிசிந்தினார்தியக்கமுற்றார். (ருசு)

திருத்திகழ்ஞாங்கரொன்றுந்தெரிகிலார்தாமோராற்றான்
மருத்துவனவனாற்பூழிமாற்றினார்வயினதேயன்
கருத்துறீஇயதனைமீளக்கதிரவராயுள்வேத
ருருத்திரர்வசுக்கள்யாருமுட்குறவுடன்றுசீறி. (ருஎ)

மூக்கினாலகிலமொக்கமுடங்கிடமுடங்கிநீங்க
நீக்குறும்பக்கந்தன்னானெருங்கிமீதூர்ந்துசீறித்
தாக்கினானிமையோரெல்லாஞ்சாய்ந்தனர்தழலியென்பா
னாக்கமோடொருவனின்றானவனன்மற்றவனைவெல்வான். (ருஅ)

எண்ணுமாயிரமுகங்கொண்டெழினதிநதங்கள்பானம்
பண்ணிமுன்பரவையுண்டபண்ணவன்போலவல்லே
திண்ணெனவவன்மேல்விட்டான்சுடரவன்றக்கன்வேள்வி
நண்ணுநாட்கரிந்தவாபோனகையொழிந்திருந்தையானன். (ருகூ)

வான்கெழுதேவர்தோற்றார்வயினதேயற்கிதற்குத்
தான்கரியென்றுநிற்பான்றயங்குபாவகனுமங்கிக்
கோன்கரியானபின்னர்க்குலைந்தனகடவுட்கூட்ட
மீன்குலங்கதிர்கண்டாற்போல்வினதைசேயெதிர்நில்லாமல். (சுo)

தாமிகல்கழிந்துவானோர்சாய்ந்தபின்கலுழன்றானுந்
தேமிகுமமுதங்காவற்றீப்பொறிசிதறுங்கோடி
நேமியைக்காணாப்பணெட்டுருவொடுக்கிப்புக்கான்
மீமிளிர்பரிதியுள்ளால்விண்புகும்வீரரென்ன. (சுக)

உள்ளுறுங்காலையாங்கணொளிமணிச்சுடிகையோடும்
வெள்ளெயிறிலங்கும்பேழ்வாய்விரித்திருள்விடங்கள்சிந்த
நள்ளுறீஇயாவரேனுநாட்டநேர்பட்டபோழ்தே
தெள்ளுவெண்பலியதாக்குஞ்சினவராவிரண்டுகண்டான். (சுஉ)

பார்த்தவன் மணிப்பைநெட்டைப்பார்தள்வால்பற்றிமூக்காற்
கார்த்திகைஞெகிழியேய்ப்பக்கடிதினிற்சுழற்றிப்பக்கத்
தார்த்தறைந்தாவியுண்டானரவுயிரொன்றுமுண்பான்
கூர்த்தவோர்கோட்டுப்புத்தேள்குறுங்கழல்வணங்குமாபோல். (சுந)

அங்கதமவற்றைக்கண்டித்தலகிலுல்வீசியாசை
யெங்கணுந்தியெடுப்பாரிடும்பலிதூவுமாபோற்
றுங்கவார்வலயம்பீறிச்சுதையெலாம்வாரிக்கொண்டு
மங்குன்மீதெழுந்தான்புள்ளின்மன்னன்மால்கண்டுசொல்வான். (சுச)

வருதியால்வயினதேயமகிழ்ந்தனம்வாங்கிக்கோடி
கருதியவரங்களென்றுன்கருடனுங்கண்ணநின்மேன்
மருவுதல்வேண்டுமன்றிமரணமுநரையுமில்லாத்
திருவுநீயருளுகென்றுன்சீதரனருளிச்செய்தான். (சுரு)

செய்தபின்கலுழன்செய்யாள்சிர்மணமகனையன்பா
லுய்திறந்தன்னிளுடியுனக்கொருவரங்கேளென்றுன்
கைதருபணிலத்தண்ணல்கழறுவான்ககத்தின்வேந்தே
பைதலில்பரியுந்தோமேற்பதாகையுமாகுகென்றுன். (சுசு)

சரிவளைவினதைசெம்மறந்தனனென்றுன்றம்மில்
வரியராப்பள்ளியானுமாசுணவயிரிதானும்
பரிவருத்தனவரங்கள்பகர்ந்தனர்பெற்றபின்னர்
விரிசிறைக்கருடன்போனுன்விண்மிசைமருந்துகொண்டே. (சுஎ)

வேறு.

ஏகுமதுகண்டவழியிந்திரன்வெகுண்டே, நாகமிசைசேனுறநடந்தவனைவென்றே,வாகைபுனைவான்குலிசமாண்படையைவிட்டான், போகிலிறைவன்பெரியபொற்சிறகினூடே. (சுஅ)

விட்டபுருகூதனெதிர்மென்னகைபுரிந்தே, கட்டழகுசால்வினதைகாளைமொழிகிற்பான், பட்டதுவுநின்படைபடாததுவுமொக்கு, மெட்டுணையுமிங்கிதிலெனக்கிடரதின்றால். (சுக)

அச்சமிலையேனுமமரர்க்கரசனுமுன், வச்சிரம்வயம்பெறுகவென்றுயர்புன்மன்ன, னுச்சவடவெற்பினுதிருழிலையதென்ன, மெய்ச்சிறையிலோரிறகைவீழ்த்துபுவிடுத்தான். (எ0)

இற்றவிறகொன்றினிலெழுஞ்சுடரினாலே, பொற்றருவசந்தமொடுபொன்னுலகமெல்லா, மற்றெளிமிகப்பொலிவழிந்தவதுகண்டாங், குற்றவர்கள்யாவருமுளத்ததிசயித்தார். (எக)

எல்லொளிமழுங்கவிழுவித்தவிறகாலே, வில்லனையநெற்றிவினதைக்குரியமைந்த, னல்லவர்வழுத்துடனயந்தனனலங்கூர், தொல்லுலகெலாம்பகர்சுபன்னனெனுநாமம். (எஉ)

அக்கருடனப்பொழுதகத்தெழுமதர்ப்பான், மிக்கவமரோசனுடுமீளவுளைசெய்வா, னிக்கணநடப்பவைவிருப்பவைகளோடு, மொக்கவுனையேந்திடுமுரம்பெரிதுமுள்ளேன். (எங)

அன்றியும்வலாரிகளிலாயிரவரோனு, மின்றெனதமுன்னணுகியேற்றமர்விளைத்தே, நின்றிடுதல்வல்லரலர்நீகொலெதிராவோன், பொன்றிடுகினில்லலதுபோந்திடுதியென்றான்.
(௭௪)

புள்ளிறைசொல்கேட்டெதிர்புரந்தரனிசைப்பான், றெள்ளமுதைநீபிறர்தமக்கிடுதல்செய்தாற், கொள்ளுமவர்யாங்கடுயர்கூரவடுதிண்மை, யுள்ளவர்களாயெமையொறுத்தமருழப்பார்.
(௭௫)

ஆங்கவர்கண்மூப்பொடழிவின்மையுளரானல், வீங்குமிடர்தான்மருவும்விண்ணவர்தமக்கே, யோங்குமுயர்புட்பதியுனக்கிதனிலென்னே, யாங்களுயுமாறமுதையீந்திடுதியென்றான்.
(௭௬)

காண்டவனைநோக்குபுககத்திறைவன்மன்று, யாண்டிதனைவைத்திடுவன்யானவணடைந்தே, நீண்டவமரர்க்கிறைவநீகவர்தியென்றான், சேண்டருநிலைக்குரிசில்சிந்தைமகிழ்வுற்றே.
(௭௭)

ஓதுவரம்வேட்டதெனலுங்கருடனுட்கொண், டேதொருசலத்திலெனையீன்றவளைநாகர், தாதிநிலைகண்டனர்கடாமவரையெல்லாம், வாதைபணியானுணும்வரந்தருதியென்றான்.
(௭௮)

அன்னவரமேறுமயிராவதனளித்தான், றன்னிலையைநாடுபுதயங்குசகுனத்தின், மன்னனுநடந்தனன்மருத்துவனுமன்னோன், பின்னரகலாதவகைபின்றொடர்புசென்றான்.
(௭௯)

வெங்கருடனன்னையுழைமேவியரவங்காள், பொங்குசுதைவந்ததுபுரந்திதனைநீவி, ரங்கமலினங்கழுவியார்மினமுதந்தான், றங்கியதுபைங்குசைதனக்குள்ளிதெ
(௮௦)
புற்றிலுறைவுற்றிடுபுயங்கரவர்யாமுந், துற்றல்புரிதுங்கருடனாவமுதமுன்னைப்
பெற்றவடொழும்புநிலைபெற்றபிழையின்றே,யற்றதெனவோதியறலாடிடவகன்றார்.
தீவிழியபாந்தளவர்தெண்புனல்குளிக்கப், போவதனைநாடுபுபுரந்தரனடைந்தே
தாவிலமுதங்கொடுசடக்கெனநடந்தான்,மேவியதுகண்டிலர்வியாளர்விதியில்லார்.
நீக்குபுநறுங்குசையைநின்றுநெடுநேர, நாக்கினுளர்புத்தமுதைநாடியயர்வுற்றார்
நோக்கியிடுபுற்றலையினுண்ணியதுவாகி, யாக்கமிலர்நாக்கவரடைந்ததுதனாலே. ()
ஆலமதுநல்குமவராரமுதமுண்ணும், பாலுடையராவதுபடிக்சணுளதாமோ
சாலுமதுரக்கனிகடாறுகருவாரோ, ஞாலமிசையெட்டிமரநட்டவர்கடாமே.(௮௪)
அப்பகறொடங்கியமுதத்தியைபினலே, மெய்ப்படுதருப்பையுமடைந்ததுவிளக்க
மொப்பில்கருடன்றனையுகந்தருளினளுக்,கிப்பரிசினல்வருமிழுக்கதுதுடைத்தான்.

அத்தலைதனக்குரியவன்னையெனுமாம்ப, லொத்ததுவர்வாய்வினதையோடுடனுதிக்கும்,பைத்தலையபாம்புகள்பயந்தபயமில்லாக், கத்துருவினைத்தெரிபுதார்க்கியன்கனன்றே.
(௮௬)

யாயடியளாகவொருவஞ்சனையிழைத்தாய், தாயெனினுமற்றெனதுதந்தைபணிதன்னி, னியருகமின்றியயலாகெனநிகழ்த்திப், போயினன்மனத்திடைபுரிந்ததொரிடத்தே.
(௮௭)

ஈதுநிகழ்வுற்றபினரேர்கொளிருவோருங், காதலனெனும்பெரியகாசிபனையுற்றார்
மூதுணருமாதவன்முகந்தருதலின்றிக்,கோதுபுரிகத்துருவைநோக்குபுகொதித்தே

விண்டுவிகர்தோள்வினதைவெள்கமனம்வென்றி, கொண்டனைசலங்கொண்மொழிகூறியதனுலே, யண்டியிவணெய்திடுமதற்குரியளல்லை, கண்டிலமுனைப்பொருவுகையர்தமையாமே. (அகூ)

இந்தவினைசெய்ததனிலென்னபயனுற்ருய்,புந்தியின்முளைத்துளைசெய்பொய்வடிவமாகு, முந்தியினிடங்கொள்கரவோவுனதுபாந்தண்,மைந்தர்கண்மிடற்றுவிடமாகியதுமாதோ. (கூ0)

பஞ்சியுறழ்மென்மைபயில்பங்கயமலர்த்தா, ளஞ்சொன்மடவார்தமையருங்கலையுணர்ந்தோ, ரெஞ்சுநடுவொப்பினிலெடுத்துரைவதல்லால், வஞ்சியர்களென்பதுவும்வஞ்சனையினுலோ. (கூக)

உன்னுடனுதித்தவளுனக்கடிமையாகு, னின்னைவிடுமோவசைநினக்குமுளதாமாற், பொன்னுலகில்வானவர்கள்புள்ளரசினுலே, யின்னல்கொணிமித்தமுனிலெய்தியதையன்றே. (கூஉ)

வேதனைகொணெஞ்சிலமையாமல்வெளியான, சூதுகொலுனக்குமுலையாகியதுதோகாய், மாதரொவர்மைந்தரொவர்வையமிசைவஞ்சப், பேதமினைவாரவர்கள்பேர்நவிலொணுதே. (கூங)

கூறிடினுமின்னகொடியோரொரொடொருகூற்றங், கேறுமகபாதகமிவர்த்தெரிவரோனும், வேறலதொர்பந்தியின்மிசைந்திடுவரோனு,மூறுபடுதீநரகினுட்படிவரன்னோர்.

ஆரிவளைநோக்கினுமவர்க்கிரவிதன்னை, நீளையலதங்கிதனைநேரொதிர்தல்வேண்டு மூரிலிவரில்லினினுறைந்துடனிருந்தாற், கோரநிரயத்திடைகுளிப்பரவர்மாதோ. ()

கோணுதலுளத்தொடுகுளத்துமுளநின்னைக், காணவும்வெருவருகருத்துடையநங்காய், நாணமுதனுல்வகைபநற்குணம்விடுத்தாய், பூணிழையெனக்கெதிர்புகத்தகுவைகொல்லோ. (கூசா)

நன்கிஃதுனக்கெனநகைத்துமுனிநாதன், மின்கரியகூந்தல்வினதைக்கருள்கொடுத்தே, வன்கணரவக்குலமகப்பெறுவயிற்ரு, யென்கணெதிர்நிற்றலொழியேகுகடிதென்ருன். (கூஎ)

என்றமொழிகேட்டுமன்மேங்கியவள்கொண்கன்,றன்றுணையிலாவிருசரண்சரணமாகச், சென்றுவிழிநீர்புடவிசேரவெழுசேற்றின்,மன்றலிருள்வார்ளகமாசுபடவீழ்ந்தாள். (கூஅ)

ஆனபொழுதும்மவனதற்கியைபிலாம, லீனவினைசெய்ததனையெண்ணினனிகழ்ந்தான், மானனையகண்வினதைமற்றவணிரங்கி, ஞானமுனிதன்னெடுநவிற்றியிடுகின்ருள். (கூகூ)

மாதவரின்மிக்கவெமதாருயிரின்வாழ்வே, நீதவறுநாடிடினிலத்தினிலையுண்டோ, தீதுநலமங்கையர்தெரிந்திடவல்லாரோ, பேதைமையினுலிவள்பிழைத்தமைபொறுப்பாய். (கOO)

காண்டகையதங்கொழுநர்கண்ணருண்மறுத்தான், மாண்டிடுவதன்றிமடவார்க்கரணமற்றெள், மீண்டுமுனையேபுகல்விரும்பிடுவதல்லால், யாண்டையிவளேகிடுவளென்றனளிறைஞ்சி. (கOக)

ஆன்றமுனிகேட்டிவளகங்கொடிதுதற்கிங், கேன்றதொருசாந்தியிழையாதிவளையெண்ணேன், மூன்றுவிசைநின்மிசைமொழிந்திடுவனுணை, மான்றருகருங்கண்வினதாயெனமறுத்தான். (கOஉ)

பிற்றைநிலைசால்வினதைபின்னுமுனாசெய்வாள், கற்றமுனிவாவுனதுகட்டளைவ
ழாதிப், பொற்றெடியிழைப்பளொருபொக்கில்பரிகாரஞ், சொற்றருளுனக்குரிமை
தோகைபெறவென்றுள்.
(க0ரு)

கறுத்திடர்புரிந்தவழியுங்கறையகன்றோர்,மறுத்திடர்செய்யார்களெனும்வாய்மை
தனைமண்மே, லொறுத்தவடனக்குதவியுற்றழிவினைத்தே, நிறுத்தினண்மனத்திரு
ணிலாவினதையென்பாள்.
(க0ச)

பாசிழைபகர்ந்தவழிபண்ணவரின்மேலாங், காசிபன்மரீசிதருகாளையோர்முகுர்த்த,
நேசமொடுசிற்சபையினின்றுநடமாடு, மீசனையுளத்தினிலிருத்தியருள்செய்வான்.()

தராதலனில்யாமினியசாகரதடத்திற், பராவுதனிவீடுதவுபண்புபயில்புல்லக், கிராம
மதிலுள்ளதொருகீரநிறையோடை, குராவிரவுகோதையதுகுற்றமகல்விக்கும். ()

சென்றிவளதிற்படிதல்செய்யில்வினைதீரு, மன்றுபரிகாரமயுதஞ்செயினுமாகா,
தென்றனன்விளுவியதுகத்துருவிறைஞ்சி, யொன்றுபுரிகாசிபனையொல்லைவிடை
கொண்டே.
(க0எ)

ஆலமுமிழ்வாயரவமைந்தரொடுமந்தண், பாலினிறையோடைதனைநாடுபுபடர்
ந்தாள், காலமதுதான்சிலகடந்தபினடைந்தே, கோலமிகுகத்துருவிதிப்படிகுளித்
தாள்.
(க0அ)

கோளகல்முப்பகல்குடைந்ததனிலா, நாளுமதிலாடியவணல்லமுதவோடை,
நீளமிகுதிண்கரையினின்றுழிவிசும்பிற்,கேளெனவெழுந்ததொருகேடில்புகழ்வாணி

சலங்கொடுசயித்தவினைதானுனையகன்றே,விலங்கியதுவெங்கருடசாபமுடன்மெ
ய்யே, வலங்கெழுமரீசிமகனுமகிழ்நனேவ, னலங்கொளவியற்றியிடுநன்மையுனை
யாளுய்.
(கக0)

கொண்கனிடைபோதியவனுங்குதுகலத்தோ, டெண்கொளவிரும்புமெனவின்பு
றவிசைத்தே, விண்கொண்மொழிநின்றதுவிடப்பணிகளீன்ற, பெண்கொடியகற்றி
யிடர்பேருவகையுற்றுள்.
(ககக)

காழ்ந்தசலமுற்றவினைகத்துருவொழித்தே, வாழ்ந்தனளவண்ககனவாணியைவ
ழுத்தி, வீழ்ந்துபணிவுற்றினியவெண்பயதடத்தைச், சூழ்ந்தனள்வலங்கொடுதுதித்
தனள்பெயர்ந்தாள்.
(ககஉ)

மக்களொடுகாசிபனைவந்தடிபணிந்தாண், மிக்கவனும்வெவ்வினைவிளிந்ததனைநாடித்
தக்கதனதேவல்புரிதன்மையருள்செய்தா, னிக்கதையுரைத்தனமுமக்கிருடிகாளே,

வேறு.

மீனுலாவுமதிக்குடைமாரவேள்வேகமோடுபிறக்கிடவீறுசேர்
ஞானமாதவிரிக்கதைகாதிறைடுவார்கள்படிப்பவர்நாளுமே
யானுலாவமுதத்தடமாடினோரவர்தாமடைகிற்பர்களாசிலா
வானியாறுகுளித்திடுசேரொடேவாசிமேதமியற்றியபேறுமே.
(ககச)

கத்துருச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் உருகச.

# கவிதீர்த்தச்சருக்கம்.

---

அந்தண்மாதவிர்கேண்மினென்றுயர்சூதன்மீளவுமருள்செய்வான்
கந்தமாதனவெற்பினிற்றிகழ்கவிகள்கூடுபுகாதலாற்
றந்தவோர்தடமுண்டதன்பெயர்சாற்றுவார்கவிதீர்த்தமென்
றுந்துபாரிலுயிர்க்கெலாமுபகாரமாயஃதோங்குமால். (க)

நீடிலங்கைமனுதியாயநிசாசரக்குலமிற்றபின்
கோடரங்கொள்பெரும்பதாகினிகண்டதீதவைகுழுவினோ
டாடியங்கதிலேறிநின்றுபினன்பினுலிதிலாடினோர்
நாடருங்கதிசேர்வரைவகைவினையுமந்நிலைநாசமாம். (உ)

அவர்க்குநல்குரவில்லைமற்றவர்பீடையென்பதுமறிகிலார்
பவர்க்கமேவிலர்படிதரற்கிதுபடர்வமென்றெழுபண்பினோர்
சுவர்க்கமெய்துவவொன்றுமொத்திடுதுணையிதற்கிலையாமெனுக்
கவர்க்கண்வைகிடும்வானரங்கள்வரங்கொடுத்தனகருதியே. (ங)

அன்னிரந்தவினங்களங்கணடைந்திராமனையண்ணலே
நின்னிரந்தனநீயிதற்கொருநீள்வரந்தருகென்றலும்
பொன்னிரந்தரம்வைகுமார்பிறைபுரிவுகொண்டுளநன்றுநீர்
சொன்னிரந்தவரம்வழங்குவலென்றுநண்பொடுசொல்லுவான். (ச)

கங்கைநீர்பிரயாகையாதியகாசினிப்புனலேய்பல
மங்கமாமறைநான்குமோதிடுமப்பலம்பலரடிதொழு
மங்கைபங்கனைமாலைவேதனைவழிபடும்பலமகமெலாம்
பொங்குநூன்முறைசெய்திடும்பலமனுவெலாம்புகலும்பலம். (ரு)

அடையவிப்புனல்குடையுமாண்புடையாதரத்தினரவரொலா
முடையராகுகவென்றனன்றிரளுகம்யாவுமுவப்பவே
புடையமர்ந்திடுபோதனுதபனிந்துவானிறைபொறியழற்
கடவுளந்தகனிருதிநீர்முதல்காவியக்கர்கள்காவலன். (சு)

விசுவதேவர்வசுக்கள்சாத்தியராதிவிண்ணவர்குற்சகன்
வசையிலத்திரிபிருகுகோதமன்மலயமாமுனிகண்ணுவ
னசைவில்கோசிகனெடுசுதீக்கிணனருள்பராசரன்சனகனல்
லிசைபயின்றிடுநாரதன்முதல்யோகமாதவரிவரொலாம். (எ)

வென்றிமேயவிராகவன்றருமெய்வரத்தைவழுத்தியே
யன்றுதாமதின்மூழ்கியேகவிதீர்த்தமென்றிஃதவனிமே
னின்றுநீடுகவென்றுரைத்தனர்நிலவுமாதவமுனிவிர்கா
ளொன்றுமேவிடவுரியர்தாங்கவியுதகமூழ்குவருண்மையால். (அ)

பச்சிலைப்பொழிலன்னகூந்தலரம்பையென்பவள்பவளவாய்
மிச்சிலைப்பெறில்வானநாடர்களமுதுவர்த்தெனுமேன்மையாண்
மைச்சிலைப்புதலாள்படிந்ததில்வந்துகோசிகன்வாய்மையா
லச்சிலைத்தனுவானகுற்றமகற்றியுற்றனளமரரூர். (கூ)

ஆதலாலிதன்மேன்மையான்சொலவல்லனல்லனெனாவருட்
சூதனோதினன்மாதவத்தவர்சொல்லுவாரெதிர்கல்லதா
மாதுதான்கவிதீர்த்தமெப்படிவந்தமூழ்கினள்கோசிகன்
யாதுகண்டுசபித்தனன்புகலிவைவிரித்தினிதென்றனர். (௧௦)

வேறு.

முத்தழற்புரிவார்க்கதுமொழிகுவான்சூதன்
குத்திருப்புணர்குசிகர்தங்குலத்தினில்விசுவா
மித்திரப்பெயர்வேந்தனுண்டாயினன்மேனா
ளொத்தவித்தகர்பிறரிலான்வலியினாலுயர்ந்தோன். (௧௧)

அனையனாகிய கவுசிகனலகிரிதானை
தனைமருங்குறச்சூழ்ந்திடத்தனைமடக்கோதை
புனையுநல்வளந்தெரிகுவான்றிரிதரும்பொழுதில்
வனைபுமேர்வடமீன்மணமகனுழைவந்தான். (௧௨)

கண்டருந்ததிகாதலன்கவுசிகவேந்தற்
குண்டிகூறினனரசனுமிசைந்தவனுபய
முண்டகங்கண்முன்பணிந்தெழீஇமேவினான்முனிவீ
ரண்டமீன்றவன்பிறங்கடையாச்சிரமத்தில். (௧௩)

ஆமவ்வேலையில்விசிட்டனாமருந்தவவசிட்ட
னாமமாமுனியறுசுவையுண்டிநால்வகையாற்
கோமகன்றனையருத்தினான்விருந்தெதிர்கொண்டு
காமதேனுவையுடையனாம்பெருந்திருக்களிப்பால். (௧௪)

அருந்துகோசிகன்பரிசிலர்குறையிலாதளியிற்
பொருந்துதன்குறைசிறிதிலாவளங்கெழும்புலவர்
திருந்துதேனுவைக்கவருவான்சிந்தையில்விருப்புற்
றிருந்தவன்முனஞ்சென்றெனக்கிதனையீகென்றான். (௧௫)

வார்த்தைகேட்டதுவழங்கலான்மறுத்தனன்வசிட்டன்
கூர்த்தவாட்படைக்கோசிகன்மாசிலாக்கொடையாற்
சீர்த்ததேனுவைப்பற்றுபுதிண்புயவலியா
லீர்த்தனன்கொணர்ந்தேகுவானதன்வலியெண்ணான். (௧௬)

ஆனபோதவானளப்பிலாமிலேச்சரையளித்துக்
கோனெடும்படைதொலைந்திடத்தொலைத்ததுகுசிகர்
மானகோத்திரம்வந்தவன்மனத்திடைமயங்கிப்
பானிறக்கொடிவிடையனையவண்வழிபட்டான். (௧௭)

வரமனங்கொளாவழிபடுமன்னவன்முன்னஞ்
சிரமலங்கலாஞ்சிவபிரான்செழுந்தனுப்பினாகங்
கரமிலங்கிடக்காட்சிதந்தருளினன்கமலப்
பிரமவாளிமுன்படையெலாமரசனும்பெற்றே. (௧௮)

கொண்டவெஞ்சினந்திருகுபுகோசிகன்குறுகிப்
பண்டைநான்முகன்மகன்மிசைப்படையெலாம்விடுத்தா
னண்டருந்தவவசிட்டனாங்கேந்துமோர்பிரம
தண்டமற்றவன்முன்னிறீஇயவையெலாந்தடுத்தான். (௧௯)

சாய்ந்ததன்பஃறுளேனயைநோக்குபுதரணி
வேந்தன்வெள்கியேவிளம்புவான்விழுத்தகைமறையோர்
வாய்ந்தவேவலரொருவனைமானுதல்வல்லார்
பாய்ந்தநீர்ப்படிபுரப்பவரணேவரும்பார்க்கில். (௨0)

பாணிதங்கியதண்டினுற்படையெலாம்பரிந்த
வேணிலங்குநூன்முனிவனேயேற்கிலென்னுமோ
நாணிகந்தியான்புரப்பதேயின்னமுஞால
மாணழிந்ததிச்செயலெனவழிந்துளமாழ்கி. (௨௧)

அரியநான்மறையந்தணர்சிறப்பினையடைவான்
பெரியமாதவமேற்கொடுவனத்திடைப்பெயர்ந்தே
திரியலாவகையென்றுமென்றெழுதருதிசையிற்
புரியுநோன்பினைக்கவுசிகன்முன்புதான்புரிந்தான். (௨௨)

ஆற்றலானிடையூறவண்பெருகலானடைந்தான்
கூற்றுவன்றிசையாங்கணுநோற்றல்கூடாமன்
மேற்றிசைப்புகுந்திடுக்கணுளமிகவெதும்பிப்
போற்றுமாதவர்க்குரியதாம்வடபுலம்புகுந்தான். (௨௩)

புக்கிமாசலப்புறத்தினிற்புலனுணுவனேத்தங்
கைக்குமாதவங்கவுசிகன்கவுசிகியாற்றின்
மிக்கமண்ணவர்வியப்புறவிண்ணவர்க்கென்ன
வைக்குமாண்டினிலைந்துநூற்றிரட்டிசேர்வருடம். (௨௪)

ஐம்பொறித்தரக்கிருந்திடுமுழைஞ்சுபோக்கடைத்து
வம்புறுமனக்கயிற்றினுற்றரியமஞ்சிகையிற்
பம்புமூச்செனும்பாந்தளேப்பற்றியேகட்டி
வெம்புசீற்றவெங்கரித்தளைமூட்டுவாய்விடாமல். (௨௫)

மேவரும்பசைவிருப்பொடுவிகற்பெனவிருபா
லாவுரிஞ்சிடுதறியதாயானியாடிகளிற்
றீவிதங்கெழுமைந்தழனள்ளுறீஇச்சீத
வாவிநீரினின்மாசிபங்குனியெலாம்வைகி. (௨௬)

கன்னியாவணியிரண்டினுங்கற்குநூற்கலையே
மன்னுபோர்வையாவெள்ளிடையிருந்துமாதவத்தி
னுன்னுகேதன்மாகத்தன்கைத்தலமுயர்த்திப்
பன்னருந்தவமிழைத்தனன்கவுசிகன்பரிவால். (௨௭)

வேறு.

மேதைகொள்விசுவாமித்திரனுற்றுந், தீதறுநோன்புதெரிந்தமரேச
னேதிலரம்பையெனும்பெயரோரார், மாதைவிழித்துவகுத்திடுகின்றான். (௨௮)

நீலவரம்பாய்நெட்டயில்வாட்கட், கோலவரம்பாய்கோசிகனென்பான்
மாலவரம்பாயன்மிசைமண்மே, ஞாலவரம்பாய்நோன்புசெய்குற்றான். (௨௯)

கொங்கவிழ்போதிற்கோகனதம்போன், மங்கையர்மேலாமாதிதுகேண்மோ
விங்குனையொப்பார்யார்கினைவாயேற், புங்கவர்வீடுபுகப்பெறுவாரோ. (௩0)

மைதருகண்ணுல்வல்லவினேத, மெய்திவிளைத்தேயெவ்வகையானு
மெய்தெரிவிசுவாமித்திரனென்பான், செய்திடுநோன்புசிதைத்திடுகென்றான். (௩௧)

வாசவனேதும்வாய்மைவினவிப், பேசிடுகின்றுள்பேதையரம்பை
கோசிகனுற்றுங்கோதிறவத்தை, நீசிதையென்றனீதியதன்றே. (௩உ)

கோள்படுகாட்சிக்கோசிகனும்மென், வாள்படுகண்ணுன்மால்கொளுவாளே
ஆள்படுமேனிச்சோதியையெய்த, வேள்படுதீமைவிளைந்திடுமெற்கே. (௩௩)

வெஞ்சினவிசுவாமித்திரன்மேனிக், கஞ்சுவனம்மாவன்றிநின்னேவ
லெஞ்சலிலேதுமிழைக்குவலென்னு, வஞ்சிவணங்கிமறுத்துரைசெய்தாள். (௩௪)

காண்டவன்மாற்றங்கன்னிமறுத்தே, யாண்டுரைசெய்யவழைத்தருகாகப்,பூண்டிகழ்கொங்கைபுலங்கொளுமாற்றுன், மீண்டுமுரைப்பான்விண்ணவர்கோமான்.()

அச்சுறுதில்லையரம்பைகரும்பின், மெய்ச்சிலைவேள்ளவேனிலினேடு
மைச்சிறைவாலவரிக்குயில்கூவ, விச்சையிழைப்பானேகுவனின்பின். (௩௬)

பொன்றுணையாகாப்பொற்றெடியானு, நின்றுணையாவேனிநடவென்றுன்
மன்றுணையென்னமறுத்திடமாட்டா, ளன்றுணைவோடுமரம்பையிசைந்தாள்.(௩௭)

கோற்றெடிசென்றுள்கோசிகன்முன்னு, வேற்றமிகுந்தன்னேரொழிலெல்லாந்
தோற்றுறநின்றுண்ணெனவங்கண், மாற்றிரிவானில்வழீஇவிழுமின்போல்.(௩௮)

மேவியதங்கண்மெல்லவசந்தங், கூவினதெங்குங்கோகிலம்வேளும்
பாவையரம்பைபடுஞ்செயறோரா, னேவியலைந்துமெடுத்தயனின்றுன். (௩௯)

தோமறுநோன்புதொடங்கியுளுற்றுங், கோமுனியாகுங்கோசிகனங்கட்
டிமெழுகிற்குழைவுற்றுயர்சிந்தை, காமுறுகின்றமைகண்ணிவிழித்தான். (௪0)

காணுபுரிற்குங்காதலரம்பை, மாணிழைதன்னைமருத்துவனிட்ட
கோணிஃதென்றுகுறித்துணர்வுற்றே, பூணறநோற்போனுள்ளம்வெகுண்டான்.()

மல்கியசீற்றமாதவனங்க, ணல்குலெனும்பையரம்பையைநாடி
வெல்குவனெங்ஙன்வெகுட்சியையென்னு, வொல்குமருங்குலுழப்பனியானே.(௪உ

சேண்டனின்மாதேசேர்ந்திவண்வாளா, மூண்டெழுகோபமுதற்பொருளானு
யாண்டொருபத்தாமாயிரமட்டு, நீண்டெழுகல்லாய்நிற்குதிநீயே. (௪௩)

தோகையிவ்வெல்லைதொலைந்தவதற்பி, ணுகமநான்மறையந்தணனுலே
வேகவழற்சிலைமேனிவிடுத்தே, யேகுதிவிண்ணினிலென்றுசபித்தான். (௪௪)

விஞ்சியவிசுவாமித்திரனுலே, யஞ்சொலரம்பையருஞ்சிலையானு
டஞ்செனநீடுதவத்தவர்தம்பால், வஞ்சமிழைத்தெவர்வாழ்ந்தவர்மண்மேல். (௪௫)

வேறு.

மிகநெறிசேர்முனிவிசுவாமித்திரன்றன்சாபத்தா
லகநெடியகருந்தடங்கணரம்பையெனுமரமடந்தை
திகழுருவஞ்சிலையாகத்திறல்கெழுகோசிகர்பெருமான்
புகலுடசந்தனிலிருந்தாள்பொழுதிறுதிவருங்காறும். (௪௬)

தருமமயமாம்விசுவாமித்திரனுந்தவவேந்தும்
பொருவரியதவமுன்போற்புரிந்துபெரும்புகழுநிறீஇ
யருமறைதேர்வசிட்டமுனிமறைமுனியென்றறைந்திடலாற்
பிரமமுனியாயினுன்றவத்தின்மிகப்பெரிதுளதோ. (௪௭)

ஆசிரமமதிலந்நாளருந்தமிழ்தேரகத்தியன்பா
னேசமிகுமாணவகனிறைதருமநிதியுடையான்
றேசுமிகுஞ்சுவேதனெனுந்திருமுனிவன்சிவகதிவேட்
டீசனடிநினைந்துதவமெண்ணில்பகலிழைத்திருந்தான். (௪௮)

அவனுறையுமிடனுற்றாளரக்கியங்காரகையென்பா
ளுவரியெனக்குமிறியெழீஇயொழிக்குமலசலமவற்றாற்
சிவனருள்சேர்தவராசன்றிருமேனிமாசுபடத்
தவறிழைத்தாள்சுவேதனவன்றனதுதிருக்கண்சிவந்தான். (௪௯)

சீற்றமுறுஞ்சுவேதமுனிசினவரக்கியவடன்மேற்
காற்றினெடுங்கணைய்தனுற்கவானரம்பையரம்பையெனு
மூற்றமிகுஞ்சிலையதனையுடன்றுரந்தானவள்வெருவிக்
கூற்றுறையுந்திசைவேலைக்கோடுகுறித்தோடலுற்றாள். (௫௦)

கடிதுரப்பிறனிபாலுங்காரரக்கியவள்பின்ன
ரிடிதுரப்பதெனமுகிலையெனவிளங்கதிர்மாந்தும்
பிடிதரக்கும்புளினமின்னுர்பெருங்கவண்வீசியசிலைபோ
னெடிதுதுரந்ததுகாமர்நிறையரம்பையெனுங்கல்லு. (௫௧)

பிற்றொடர்ந்துசிலைபடரப்பின்பார்த்துப்பெரிதோடும்
விற்றொடருநுதலரக்கிவீழ்ந்தனளக்கவிதடத்திற்
கற்றொடர்ந்துவிழுந்ததுடன்கடியமுடியுடைந்தரக்கி
யிற்றனண்மற்றவளுதிரமெழுந்துகரைபுரண்டோட. (௫௨)

பட்டமதிலமிழ்ந்ததவப்பயனதனுற்சிலையுருவம்
விட்டரம்பையமார்குழாம்விரைகமழ்பூமழைபொழியக்
கட்டெழிலையணியுமணிக்கலன்மறைப்பக்கத்தூரிப்
பொட்டமுகின்கண்ணேறுபுலவர்குழாங்கொளநீர்ப்ப. (௫௩)

வெள்ளிநெடுஞ்சங்கிலியால்வீக்குண்டவேழமெனத்
தெள்ளியநித்திலவலங்கற்றிரணகிலத்துணைதயங்கக்
கள்ளவிழுமலர்க்கூந்தற்ககனமுகட்டிருள்பரப்ப
வுள்ளமுதற்பொருளனைத்துமும்பர்குழாந்திறையளப்ப. (௫௪)

திருப்பதுமமலர்வாட்கட்செந்துவர்வாய்முகுள்முலை
யுருப்பசிமுன்னரமகளிரொருங்குதிரண்டுவந்தேத்தத்
தருப்பணையின்கடிப்பிணையாற்றபனியதுந்துபிமுழங்க
விருப்புறுசாமரைவீசவிமானமிசைவிளக்கென்ன. (௫௫)

கற்படிவப்பழிதீர்த்தகவிதீர்த்தந்தனைப்பழிச்சி
யெற்படிவச்சுடர்வேணியிராமேசன்றனையிறைஞ்சிப்
பொற்படிமேற்புகுந்தனண்முன்புத்தேளிர்குலப்பாத்தை
யற்படிவத்தரக்கியங்காரகையென்னுமவடானும். (௫௬)

மாதவள்பேர்கிருதாசிமலயமுனிசாபத்தாற்
றீதுபயிலிராக்கதியாய்த்திரிந்தலமந்தனள்சிலநாட்
பாதகந்தீர்கவிதீர்த்தம்படிவுறுமப்பாக்கியத்தான்
மீதுலகந்தனையடைந்தாள்விண்ணவர்தங்களைதீர. (௫௭)

வேறு.

ஒருகிருதாசியரம்பையாகியவுவரிருவோர்களுமும்பருரினி
லிருடிசுவேதனதன்பினான்முனமிடர்படுசாபமகன்றுமேவினர்
வருமுறையாலிகிரந்தவாவியின்மனனெடுமேனிவருந்தியாயினு
மருமுனிவீர்கள்விரும்பியாடுமினறநெறிநீடுநலங்கள்சேரவே. (௫௮)

கவிதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௱௭௨.

---

# காயத்திரிசரசுவதிதீர்த்தச்சருக்கம்.

---

நிரந்தரறும்புனற்பெருமைநிகழ்த்தியபின்சூதனருணையந்தன்னால்
வரந்தருமாண்சவுனகனைமுதன்முனிவர்தமைநோக்கிவகுத்துரைப்பா
னுரந்தருநூலுடையீர்காளுயர்காயத்திரிவாணியுவர்தம்பேராற்
பரந்தநெடுந்தடமிரண்டுண்டவைபுனிதம்பண்ணுவிக்கும்படிகளெங்கும். (௧)

பகர்வரியவீடுதரும்படிப்பவர்கேட்பவர்பாவம்பாற்றுவிக்கு
மிகுதருமந்தருநரகில்வீழ்த்தியிடாவவையிற்றின்மேன்மையெல்லாம்
புகல்வனுமக்கனையவிருதடம்படியுமாந்தரவர்போற்றுந்தாய
ரகலுதரத்தடம்படியாரடைவரபவர்க்கமிதற்கையமின்றால். (௨)

வந்ததெவன்பெயரிவைக்குவளர்காயத்திரிசரசுவதியென்றென்றா
லந்தமுதலமர்கந்தமாதனத்திலயன்மடவாரமர்தலாலே
சந்தமறைமுறையுணர்ந்ததாபதர்காளென்றனனத்தவத்தின்மேலோ
ரிந்தவுரைதருசூதன்றனைமுகம்பார்த்தஃதறிவாரிசைக்கலுற்றார். (௩)

நோக்குநெடும்பாரவர்க்குநோன்றலைவான்றலையவர்க்குநுவறற்கெட்டா
மீக்கணிலைவிழியளவாவியன்கந்தமாதனத்தின்வெறிவண்டாடுந்
தேக்கமலமனையிருப்போன்றிருமனையாரொருபொருட்டாற்சேர்ந்தாரெங்கள்
பாக்கியமாம்புகழ்ச்சூதபகரொன்றாரன்னவனும்பகருகின்றான். (௪)

மால்வயிற்றில்வந்துலகந்தந்தவன்றன்வயிற்றில்வரும்வாக்கெனும்பே
ரால்வயிற்றினவள்பணைத்தோளணையநினைந்தடங்கலின்றியவடன்காமப்
பால்வயிற்றிற்புகுநிறையப்பருகிடுவான்பெருகுமயற்பரவைமூழ்கி
வேல்வயிற்றிற்புகுந்ததுபோன்மிகத்தளர்ந்தான்முன்னரந்தவேலைதன்னில். (௫)

தனைத்தொடருந்தகையுணர்ந்துதகரநறுங்குழல்வாக்கின்றையனுணித்
துனைத்திளமென்பிணையானுளிரலையுருக்கொடுதுரந்தான்சுருதியானு
மினைத்தெனவோரளவைபெறுவியானைமுதலெறும்புகடையென்னாநின்ற
வனைத்துருவும்பிறர்க்காக்குமயன்றனக்கிவ்வுருக்கோடலரியதன்றே. (௬)

அவனிதருமயன்பயந்தமகட்புணரும்வேட்கையுறிலறமார்காப்பா
ரிவனிதனைச்செய்ததுநன்றென்றிமையோரிழிபுரைத்தாரினையகாலைச்
சிவனெயினர்வடிவுகொடுசென்றணுகிப்பினாகமெனுஞ்சிலைவணக்கிப்
பவனனுகர்பணிக்குழைதாழ்காதளவும்பூட்டியொருபகழிவாங்கி. (௭)

உணருமிருங்கலைபலவுமுலகுதவும்பேரகட்டிலுதித்தமாதைப்
புணருமொருகலையுருவாம்போதனுடல்புகத்துரந்தான்புனிதனங்கட்
டுணரவிழ்தேங்கமலமகன்றுணிந்துசிரந்தனைவீழ்ந்தான்சோதியொன்றாங்
கிணரொரிபோன்றவனுடலிற்பிறந்துவிண்போய்மகயிரமாயிலங்கிற்றம்மா. (அ)

ஆதிரைநாளதுவாகியதனைவெரின்றொடர்ந்தலக்கணுற்றியின்று
மாதிரைநீர்வேணியனுமான்றலைநாண்மருங்கும்பர்வயங்குகின்றான் .
போதனுயிர்போனதற்பின்புருடனிழந்துளம்புழுங்கிப்புலமைமாதுந்
தீதிரிகாயத்திரியுந்திரிவுபடுகைனியராய்த்திரிதர்கிற்பார், (கூ)

பொன்மகளுமாயவனும்புரந்தரனும்புலோமசையும்பொருந்திவாழு
நன்மைதெரிந்தகங்குலைந்துநாணமுறீஇயுடல்வெதும்பிநாளுநாளும்
புன்மைபுணர்ந்தயர்ந்திடுவார்புண்டரிகமலர்க்கோயில்புரியுங்கொண்க
னின்மையெனும்பழிநீங்கிமீண்டுதிக்குஞ்செபலதற்காமெண்ணங்கொள்வார். (க0)

உலகமுழுவதும்படைக்குநான்முகனையுளதாக்குமொருமையோரா
யலகிறந்தசிவதலத்துமிக்கதுவாய்விழைந்துளபேறளிப்பதாகி
நிலவுகந்தமாதனத்தேநியமமுடனுமாபதிதாணினைந்துநோற்றார்
திலகநுதற்பாரதியுந்திகழ்காயத்திரியுமெனுந்திருவின்மிக்கார். (கக)

தங்கள்பெயர்த்தடமிரண்டுதந்தவற்றுண்முப்பொழுதுந்தாங்கண்மூழ்கி
மங்கையர்தாமுணுமறந்துமனங்கொள்சினங்காமமயன்மருவாராகிச்
சங்கரனதடிக்கமலந்தமதிதயகமலமிசைதரித்துத்தையல்
பங்கனெழுத்தோரஞ்சும்பன்னினர்பங்கேருகன்றன்பன்னிமார்கள். (கஉ)

வல்லியர்களிருவருந்தம்மகிழ்நனுயிர்பெறற்பொருட்டிம்மரபிற்செய்தார்
சொல்லருமாதவநெடுநாளதுபொழுதிற்செழுங்கனகத்துங்கமேரு
வில்லியுமையிடங்குலவவேழுமுகக்கடவுளுடன்வேற்கைத்தோன்றல்
புல்லியிருமருங்கேத்தமுன்னர்நின்றானெம்மருங்கும்புலவர்போற்ற. (கங)

கண்டனையமொழிமடவார்கண்டனையகண்ணுதலைக்களிப்பினோடும்
வண்டனையகுழல்சாயமலர்சிதறிப்பதறியடிமலர்மேல்வீழ்ந்து
பண்டனையாயகிலசராசரங்களெல்லாமொருவமிற்றிற்பயந்தபச்சைப்
பெண்டனையோர்பங்குடையெம்பெருமானைப்புகழ்ச்சிமொழிபேசலுற்றார். (கச)

வேறு.

மாறுமலவிருளுடொளிரருளின்சுடர்வடிவப்
பேறார்பெறுகிற்பாரவர்பேறாகியபெருமான்
பாறாரிலைப்பின்முத்தலைவேலங்கைகொள்பரமா
வேறார்கொடியானேயெழிலிடமார்கொடியானே. (கரு)

உருவம்பயிலுயிர்யாவினுமுளனாயிலனாய்
பருவம்பகலிரவாண்டிருபக்கம்பலவாக
வருவம்பயில்காலந்தனையளவிற்றருமதலா
பொருவெம்புலியுடையாய்மிசைபுனையம்புலியுடையாய். (கசா)

உள்ளிச்சுடருருவந்தனையுணர்வார்க்கருளுதவித்
தெள்ளித்திரிபிலைநீத்தொளிர்செல்வத்திருவமுதே
வள்ளிக்குரியவனோடிபவதனன்றனையருளும்
வெள்ளிச்சிலையானேபொலன்மேருச்சிலையானே. (கஎ)

அந்திப்பகிர்மதியும்புனையரவின்றலைமணியுஞ்
சந்தித்துமிழ்சுடர்வீசிடுதவளப்புனன்முடியாய்
சிந்தித்தடியவரன்பொடுதிருநான்மறைமொழியால்
வந்தித்தழும்புடையாய்முலைவளையார்தழும்புடையாய். (௧௮)

தாணுப்பரவொளிமெய்ப்பொருள்சம்புத்தனிமுதலென்
றியாணர்க்கழல்புகழ்தொண்டர்களிதயப்பதுமத்தாய்
சேணுற்றமருலகுண்டிடுதிருமான்முதல்விண்ணோர்
காணப்படவெய்தாயெயில்கனலிற்படவெய்தாய். (௧௯)

வசைக்காசுடன்மலினப்பவமாற்றுந்தனிவாழ்வே
திசைக்காழகமொருசுற்றிடுதெய்வத்திருவுருவா
நசைக்காமனதுயிருண்டருணயனுபயினல்லோ
ரிசைக்காதரவுடையாய்குழையிணைக்காதரவுடையாய். (௨௦)

சண்டன்றனதுரமேலுதைகொண்டந்தணர்தலைவன்
மண்டுந்துயர்மரணப்பயமாற்றுந்தனிவரதா
வுண்டம்புதிவருநஞ்சினையும்பர்க்குயிருதவுங்
கண்டங்கரியானேமறைகருதற்கரியானே. (௨௧)

காலைக்கதிர்போலத்திகழ்கவினார்திருவுருவா
மேலைப்பதமெய்தாததுவிழைவார்க்கருள்வேந்தே
பாலைப்புரைநீற்றுயளிபாடுந்துணரிதழி
மாலைச்சடையானேபவமருளச்சடையானே. (௨௨)

யானுமெனதாருன்னருளெல்லாமெனுநல்லோ
ராணுரவருள்ளத்தெழுமறிவின்சுடரொளியே
மீனுமொளிமுதன்மேனிலைவிண்டுன்மனைவிரவா
வானோர்தினகரனேமழுமானேந்தினகரனே. (௨௩)

இலர்தங்களிலுனையல்லதொரிறைகொள்பவருளரோற்
கலர்தங்கிடுநரகின்றுயர்கண்டாரறிகிற்பார்
மலர்தங்கியபதுமக்கதிர்மணிபோலொளிர்வண்கை
யலர்தங்கழலானேநடமாடுங்கழலானே. (௨௪)

வேறு.

நேயத்தெமையாளெனப்பழிச்சிநெடுங்கண்டாளநிரையுகுப்பக்
காயத்திரியுங்கலைமகளுங்காலன்வெருவுங்கழல்பணியச்
சீயத்துரியோனவளைமுகந்தெரிந்துமகிழ்ந்தேஞ்செய்தவத்தால்
வேயொத்திடுதோண்மடவீர்காள்வேட்டவரமேதெனக்கேட்டான். (௨௫)

பொங்குமுலையாரொடுத்துரைப்பார்பொன்னுள்பதியுமெம்பதியு
மங்கண்வராகமன்னமதாயளவாவடியுமணிமுடியு
நங்கையுமையாடனிக்கணவாநாங்கடெரியநல்கினைநீ
வெங்கண்விடையாய்வேறுவரம்வினவத்தகுமோவிளம்புங்கால். (௨௬)

ஆனதெனினுமெங்களைநீயருள்கூர்தாதையாதலினுன்
மேனியதனின்மங்கலமாம்விழுமந்தரியோம்விழிமுகிழார்
தானமளித்தாய்விடநுகர்ந்துஞ்சரமொன்றதனுற்றனதாவி
போனவயனுக்குயிருதவிப்புரத்தல்வேண்டுமெனவிரந்தார். (௨௭)

அந்தமொழிகேட்டருட்கடலாமண்ணலினிதென்றயன்றலையும்
பந்தவடிவுமிவண்டருவீர்படர்வீரொனலும்பஃறலைய
நந்திபிருங்கிமுதற்பூதநாதரவர்போய்நளினமிசை
முந்தைவிதிநான்முகத்தலையுமுடைசேருடலுமுடன்கொணர்ந்தார். (உஅ)

மன்றூர்நடத்தோனவையிரண்டும்வாங்கித்தவளமறைக்கோயிற்
கன்றூர்தளிர்க்கைக்கலைமகளுங்காயத்திரியுமெதிர்காண
வொன்றுப்பொருந்துமிடந்தெரியாதுடனேர்கணத்திணைட்டுவித்தான்
பொன்றுதுறங்கிவிழித்தவர்போற்புலன்கொண்டெழுந்தான்புகழ்ப்போதன். (உ௯)

எழுதந்திடுமக்கமலமகனிந்துமவுலியெம்மானைத்
தொழுதங்கணையாரிருவரொடுஞ்சுருதிமொழியாற்றுதித்திரங்கி
யழுதெங்கருணைவாரிதியேயடியேனறத்திற்றிரிந்தபிழை
முழுதும்பொறுப்பாய்மேலுமதுமுயலாதருள்வாயெனமொழிந்தான். (௩0)

அன்னவரமாங்கரனுதவியயனேயினிமேலவ்வவினை
யுன்னலுமைத்தலுஞற்றலெனுமொருமூவகையுமொழிந்திடுவா
யின்னசெயல்யாரிழைத்தாலும்யாமங்கவரையிடர்கூரச்
சென்னிதடிவோமிதுதெளிவாய்திசைமாமுகனேயெனக்கூறி. (௩௧)

கலைமான்றனைநன்முறைதிரியாக்காயத்திரியைமுகநோக்கி
யலைமான்புணருமான்மகனுக்காவியளித்தோமவனோடுஞ்
சிலைமானுதலீரயனுலகஞ்சேர்மினினியென்றுயர்சிகர
மலைமான்றழுவுமணவாளன்மற்றுமவர்க்குவரங்கொடுப்பான். (௩உ)

பிடியார்நடையீர்நீங்கடரப்பிறங்குந்தடங்களிவையிரண்டிற்
படிவார்படியார்கருக்குழியிற்பரமானந்தப்பயன்பெறுவர்
தொடியார்கரத்திர்நும்மியற்பேர்துறையார்புனலின்பட்டப்பேர்
முடியாதுலகிலெஞ்ஞான்றுமொழியவிளங்குமுகிழ்நகையீர். (௩௩)

தடங்களெவற்றுமிகப்புனிதந்தருமித்தடங்கள்கொடும்பாவ
மடங்கவகற்றும்பெருஞ்சாந்தியளிக்குமாக்கம்பெரிதாக்கு
மிடங்கொள்பணிலமுகுந்தனுக்குமெமக்கும்விருப்பமெய்துவிக்கும்
வடங்கொண்முலையீரிவைக்குநிகர்வாவியரிதாம்வசுந்தரைமேல். (௩௪)

நித்தநியமமைமித்தநியமமுளத்தினிகழ்வேட்கைக்
கொத்தநியமமொருமூன்றுமுஞற்றுதவருமறத்துறையின்
முத்தியுதவுந்தவநெறியின்முயலாதவருமூழ்குவரோ
லத்தன்மையினும்பயனைத்துமளிக்குநும்பேரறல்வாவி. (௩௫)

இக்குமொழியீரொனவருளியெவருங்காணவேறுகைத்து
நக்கன்மறைந்தான்மாதரொடுநள்ளினன்றனதுநன்னகரிற்
புக்குமகிழ்வுற்றினிதிருந்தான்புண்டரீகன்செயலிதுவேற்
றக்கவறத்தின்றுறைபிழைத்தார்தலைமைபெறுவார்தவத்திர்காள். (௩௬)

வேறு.

நனையுலாவனசத்தலர்வேதனூர்நவிரம்வேறுபடுத்ததுமீளவே
மனைவிமார்கள்வழுத்தலுமீசனூர்மறைபனுவியளித்ததுமோதினோம்
வினையிலாததவத்துறைவாணர்காள்விரைகொணீரிவையிற்படிபேறெலா
மினையகாதைபடிப்பவர்கேள்வியாரொதிர்வினுவும்விருப்பினர்சேர்வரோ. (௩எ)

காயத்திரிசரசுவதிதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆகூ திருவிருத்தம் உ௪0௯.

# காசிபச்சருக்கம்.

---

மாதிலயனுர்மனைவிமார்பெயர்கொணிரின், வேறுமொருகாதையது கூறிடுவன் மெய்ந்நூ, லாறுதொழிலோதிமி னந்தணனொருத்தன், பேறுதிகழ்காசிபனெனச் சொல்பெரியோனே. (௧)

ஆடியவைமிற்றின்மகபாதகமகன்றே, பீடுபெருகுற்றன னெனப்பினருமன்பி, ஞேடினிதுரைத்தன னுணர்ச்சிமிகுசூதன், கூடுமுறைமாதவர்வினுவிவிடைகொள் வார். (௨)

யாதுவினைகாசிபனிழைத்திவையிரண்டின், சீதவறன்மூழ்கிடுபு தீர்வினையடைந் தான், சூதவருணியுரைசெய்தொல்கதையெனப்பே, ரோதியிடுமாரமுதுவட்டிடுவ துண்டோ. (௩)

ஆசைபெரிதுற்றனமதன்வரவுதேருந், தேசிகநவின்றிடுதியென்றனர்கடெய்வப், பூசுரர்கள்சூதமுனியஞ்செவிபுகாமுன், மாசுகழுவுங்கதைவகுப்பனெனவோதும்.

பாண்டவர்குலத்துயர்பரீக்கிதுவென்மன்னன், மாண்டகடலாடைநிலமாதினைம ணந்தே, பூண்டறநெறிக்கனொருபுன்மைகலவாம, லாண்டரசிருந்தனன்முன்னத் தினபுரத்தின். (௫)

மாவிசயனல்குசுடர்வாளபிமன்மைந்தன், மூவிருபதாண்டுநிலைமுற்றியமர்கா லை, மேவுதிறலார்மிருகவேட்டைவிளையாட்டிற், றீவிரவுகானினிடைசேனையொடு சென்றான். (௬)

வையிலகுவாளிபடமான்றவனொர்மான்ற, னெய்யெனமறைந்துகடிதோடியது காணான், வெய்யபசிதாகமிகவெம்பியிறைவேட்டை, செய்யும்வனமெங்குமது தே டுபுதிரிந்தான். (௭)

ஆய்ந்துழலும்வேலைமறையாய்ந்துமனவேக,மோய்ந்துடைகொள்வற்கலையினே டுபுலனோடக், காய்ந்திடுசமீகமுனியாங்குறைதல்கண்டான், வாய்ந்தசயவாளபிம ன்மைந்தனுரைசெய்வான். (௮)

ஞானமுனிதன்வதனநாடிநிலநாதன்,றனொருவிலங்குகணைதைத்ததுயர்தன்னுற், போனதுகரந்ததுபுலத்தின்மிகுநும்மான், மானமுறலுற்றதுகொன்மற்றருளுமெ ன்றான். (௯)

கற்றமுனியுள்ளமதுகற்பனைகடந்தே, பற்றகல்பரத்திடைபடிந்தபடியாலே,சொ ற்றிலனதற்குவிடைசூழ்பொறிகொணெஞ்சோ, டொற்றுமைகொளாவழியுணர்ச்சி யிலவாமால். (௧0)

தேட்டுறவினுயவழிசெப்பிலனெனத்தான், மூட்டுபுசினைக்கடையினுன்முனிவன் மேலே, காட்டுறுபிணப்பணிகளத்தினிலெடுத்தி, வேட்டைவினைவிட்டிறைவன்மே வினனகர்க்கே. (௧௧)

சீலமுனிதானருள்சிரிங்கியெனுநாமப், பாலனயலாசிரமமூடுபயில்வுற்றான், மே லவனைநண்புகொடுமேவிடுமொருத்த,னேனுமுயர்பேரினிலிருங்கிருசனென்போன.

அக்கிருசனோர்பகலடுத்துறைசிரிங்கி, மிக்கமுககாடியுளவேயுனக்குமேன்மை
தக்கதிஃதன்றுனதுதாதைகளமேலே, தொக்கருணபப்பணிசுமத்தலுணராயோ. ()

மேதகையபாடவம்விடுத்திடுதியென்றான், நீதிதுசெவிக்கொடுளைசென்றுழிசிரிங்கி
கோதறுமுளத்திலெழுகோபமுளனாகி, யீதுபுரிவேந்தன்மிசைசாபமிடுகின்றான். ()

அத்தன்மிசைகாட்டுறையழன்பணியையேற்றி, வைத்தகொடியோனளவைவாரமவையேழிற், சத்திமிருதக்ககனெனப்பெயர்தரித்த, பைத்தலையினாற் கறிபடேஉவிளிகவென்றான். (௧௫)

வேறு.

தனையனோதியசாபமத்தந்தையாஞ்சமீக
முனைவனுடிபுபுதல்வனுஞ்சிரிங்கியைமுகம்பார்த்
தினையவாய்மைநீயிசைப்பதோவிருநிலக்கிழத்தி
புனைவளோவளப்பெருங்கலன்றலைவனைப்போக்கி. (௧௬)

உறுவர்நோன்பினுக்குறுமிடையூறெவரொழிப்பார்
நிறுவுவாரெவர்நெஞ்சினையறநெறிநிலைக்கட்
பொறுமையின்றியேசினத்தினைப்பொருளெனக்கொண்டோர்
பெறுவரோநலம்யாங்கணும்பகர்திநீபிள்ளாய். (௧௭)

சினத்தினால்வருந்தீமையத்தீமைதீப்பிறப்பு
மனத்தினீடியமருட்கையும்வறுமையுநரகு
மனைத்துநல்கிடுமாதலாலொருபொழுதயர்த்துந்
தனக்குநல்லவன்வளர்ப்பனோசீற்றமாந்தழலை. (௧௮)

நோன்றலால்வருமின்பமென்றுலகெலாநுவலுந்
தோன்றனீயிஃதியம்பினைதுணிபுகுழாதென்
றீன்றமாதவனுளங்கரைந்தருளினாலிரங்கி
யான்றசேர்பயிலளப்பின்மாணாக்கராமவரின். (௧௯)

முகரிமைக்கிளர்கௌரமாமுகன்றனைநோக்கித்
துகளிலாவடற்றனஞ்சயன்பேரனைத்துன்னித்
தகவிறக்ககப்பாந்தளாற்சாச்சொலித்தனையெம்
மகனிசைத்தனன்சாபமென்றுரைத்துவாவல்லை. (௨௦)

எனவிடுத்தனனவனுமப்பரீக்கிதுவென்னு
மனன்மருங்குறீஇமீண்டனன்மற்றதுகூறி
வினைவிளைந்ததென்றிறைவனும்வெந்துயர்மேவி
யினியிதற்கெனோதீர்வெனாவெண்ணினின்றினைவான். (௨௧)

தாலமுற்றவுந்தாங்குறுதனதொருசெங்கோல்
போலமாண்டிகைக்கங்கைநீர்நடுநிறீஇப்பொன்னங்
காலதொன்றதன்மீமிசைமண்டபங்கட்டி
மாலவன்பதவனசமேல்வழாதவன்பினனாய். (௨௨)

இருடருங்கடுமாற்றிடுமெண்ணில்பல்லுறைகள்
கருடனன்மறைவல்லவர்குழாம்பலகாப்ப
வருடயங்கொளிவானவரந்தணரரசர்
பொருடருங்குலத்துற்றமாதவர்கணம்போற்ற. (௨௩)

விண்ணில்வெண்முகின் மேற்றலமெழுகியதவளச்
சுண்ணமேய்ப்பரின்ருளிர்தருஞ்சுடர்மணிக்கனக
வண்ணமண்டபத்தேறியேயபிமனல்வரமா
மண்ணல்வைகினன்றக்ககப்பேரராக்கஞ்சி. (உ௪)

தங்கடொல்குலக்கதிபனுமமுதசந்திரிகைத்
திங்கள்வானவன்சென்றிடுஞ்சேணெறிக்கெட்டி
யங்கவற்கிஃத்தறைகுவான்போலவாண்டரச
னெங்குமொன்றும்வந்தெய்திடாதிருந்தனனிதன்மேல். (உரு)

பெருமனுத்தறைபயின்றவன்காசிபன்பெயரா
லொருவன்விப்பிரனுண்டவனுடையநல்குரவால்
வெருவுதக்ககன்விடங்கொளாதிறைவனைமீட்டுப்
பொருள்கவர்ந்திடுங்காதலான்வழிக்கொடுபோந்தான். (உசு)

சுடிகைநீனிறக்குடுமியின்றுளங்கிடவிளங்கும்
வடிவில்வெள்வரிமார்பின்முந்நூலதாய்வயங்கக்
கொடியதக்ககன்றுனுமோர்குலமறையோனுய்
நெடியகாசிபன்வரும்வழிநேர்படவந்தான். (உஎ)

வாரியஞ்செதிர்பாப்புருமறைத்துறுமறையோன்
சீரியன்றிடுகாசிபன்றனைமுகந்தெரிந்து
நேரிலாயெவண்சேறியோநீயினைந்தேகுங்
காரியம்புகலென்றனன்மற்றவன்கரைவான். (உஅ)

பாந்தளிற்கிளர்தக்ககன்பரீக்கிதுவாகும்
வேந்தனைத்துனைவெள்ளெயிற்றுமிழ்விடமென்னுங்
காந்துகாரழற்கிந்தனமாக்குவான்கருதிப்
போந்துளானஃதவித்திடப்போந்தனனென்றுன். (உகூ)

வேறிசைப்பொறிவிழியலாதுற்றிலான்வினவிக்
கூறுவானெதிர்கோதிலாவேதியர்கோவே
மாறிலாவபிமன்னெனுமன்னவன்மகனை
யீறுசெய்திடவிருந்திடுந்தக்ககன்யானே. (௩0)

மால்படைத்தனைபோலுநீவருடநூறேனு
நீல்படைத்தவெள்விடவலியாவருநீக்கற்
பால்படைத்ததோபமுமரமிதுபடப்புரிவ
னுல்படைப்பையேலரசையும்படைப்பையின்றறவோய். (௩க)

ஓம்படைக்கொணின்மனுத்திறங்காண்பனென்றுரகன்
காம்புடைத்தளிராலிணக்கறித்தலுங்கற்றேர்
மேம்படப்புரிதுலமெய்ச்சுத்தியில்வெந்து
சாம்பராயதத்தொன்மரமொருகணந்தன்னில். (௩உ)

இருவர்மற்றிவரறிவுருததனுழையிருந்தா
னொருவன்மானுடனவனும்வெந்துறுதுகளானு
னருவவந்தரத்தியங்குவாரம்பகஞ்சிமிழ்ப்ப
மருவுவானெலாம்பரந்தனவடமரச்சாம்பல். (௩௩)

அவனியுண்டவன்றன்னையோரிலையகத்தடக்கிப்
புவனம்யாவையுநிழலிடுபழுமரம்பொடித்த
கவனவல்விடப்பெருமையைக்காசிபன்காணூஉப்
பவனமுண்பவன்கேட்கவோர்சபதமுன்பகர்ந்தே. (௩௪)

காண்டியென்றவமுயற்சியின்பெருமையைக்கடுத்தீத்
தூண்டுதக்ககவென்றுதன்மந்திரச்சுருதி
மாண்டசீதளவமுததாரைகண்மிசைவழங்கி
மீண்டும்வெந்ததுபடிறெனவடத்தினைவிதித்தான். (௩௫)

காளகந்தரன்கரந்திடுமதனைவண்கமலத்
தாளுமந்தணன்றிரியவுண்டாக்குமாறறியத்
தாளுடைத்தருத்தழைத்ததுதலைக்கொடாரகையாற்
கோளிவெண்முகைக்கொண்டதென்றதிசயங்கூர. (௩௬)

கதுமெனத்தரும்விஞ்சையர்களதுகம்போல
வதனமொன்றுடைவிதியனுன்வயங்குதொன்மரத்தைப்
புதுமரத்தினிற்புரிதலுந்தக்ககன்போற்றி
யிதுவெனக்கிறும்பூதுதந்திட்டதென்றிசைப்பான். (௩௭)

மரபுநாடிமுன்சமீகமாதவன்மகன்சபித்த
வுரைவழுப்படப்புரிகொணுதனக்குவேந்துதவும்
வரையதற்கிருமடங்குபொன்வழங்குவன்யானென்
றரவநாயகனளப்பிலாநவமணியளித்து. (௩௮)

ஈங்கணின்றுநீதிரும்பினையேகுதியென்றான்
வாங்கிநல்கியமணிகளைமன்னவன்வாழ்நா
ளாங்கணற்பமென்றறிவினுலறிந்தறுதொழிலோ
னீங்கினன்றெனுநடந்தனனிருந்தனனிலையில். (௩௯)

எவரையும்மனந்திரிப்பதுமீன்றவர்தமக்குத்
தவறிழைத்திடப்புரிவதுந்தையலார்தங்கள்
கவரில்கற்பினையழிப்பதுங்கற்குநூற்கலைக
ளவையெலாங்கெடக்கெடுப்பதும்பொருள்விருப்பன்றே. (௪௦)

பின்புதக்ககன்றன்குலப்பேராக்குழுவை
யன்பினுலழைத்தருந்தவவேடநீரமைந்தே
யின்புசால்கனிபற்பலவேந்தியவ்வேந்தன்
முன்புகொண்டுபோய்க்கொடுமினீரென்றனன்முன்னர். (௪௧)

அங்கதக்குழாமங்கதுபுரிந்தனவாங்கண்
வெங்கதக்கொடுந்தக்ககன்மிக்கதோரிரந்தைச்
செங்கனிக்குளோர்கிருமியாய்ச்சினவுருவொடுக்கித்
தங்கியுற்றனனெருவருந்தெரிவுறுத்தகையால். (௪௨)

அரவமாதவரீந்தவப்பலமெலாமரசன்
வரவுநன்றெனுவாங்கியேவளைந்துதற்சூழ்ந்த
வுரவுசான்முனிவோர்களுக்கவைமுழுதுதவிக்
கரவுகொண்டியறக்ககனிருந்தவக்கனியை. (௪௩)

பண்டுகண்டதிற்பரியதிப்பழமெனக்கரத்திற்
கொண்டிருந்தனன்மகிழ்வினாற்குருகுலக்கோமா
னண்டயோனியும்புரவலனழியுநாளழிதல்
கண்டுணர்ந்திடவமிழ்ந்தினன்கதிரவன்கடலில். (௪௪)

யாவதோவினிவிளையுமாறிறுதிகுழோரோ
ழாவதாகியநாளுமின்றருந்தவச்சிரிங்கி
நாவினீடுரைநவையுருதென்றுநற்றவருங்
காவன்மன்னருங்கலங்கினானன்னதோர்காலை. (௪௫)

ஏற்றதன்கையிலிரந்தையின்கனிக்குளோர்கிருமி
தோற்றல்கண்டிதுகறிக்குமோநமையெனச்சொல்லி
யாற்றன்மன்னவன்கழுத்தின்மேலழுத்தினனதனைக்
கூற்றுவந்துதன்மருங்குறீஇநிற்பதுகுறியான். (௪௬)

செழுநறுஞ்சுவையிரந்தையங்கனியினுட்செய்ய
புழுவுருக்கொடுபுகுந்தவத்தக்ககன்பொருக்கென்
றெழுதருஉவெழிலிறைவன்மெய்யிறுகிடப்பற்றி
முழுவதூஉம்வளைத்திட்டனனென்பெலாமுரிய. (௪௭)

பெருகிருந்தவராதியர்பிறங்கொளிவேந்த
ரருகிருந்தவரவலொலாமஞ்சிவிண்டகன்றார்
கருகுபேரணற்கட்செவியுமிழ்கடுக்கனலூ
டுருகிவெந்துநுண்ளியாயினனுலகுடையோன். (௪௮)

நதிக்களுட்டுமோர்கான்மிசைமண்டபநாப்பண்
மதிக்குலத்துயர்பற்குனன்றிருமகன்மகனைக்
கதிக்கொள்பாதலத்துறையராவணைந்துயிர்கவர்ந்தால்
விதிக்குமேலொருதெய்வமுங்கொள்வரோமேலோர். (௪௯)

வெருவுபாந்தளால்விளிகெனவேந்தனைச்சபித்தான்
கிருமியாகெனவரவையுங்கிளந்திலன்முனிவன்
மருவுமாறிதுபழவினைப்பயத்தெனும்வழக்காற்
கருவினூழ்வடிவேகொலாமுலகெலாங்கருதில். (௫௦)

மண்ணினுடுடைப்பரீக்கிதுவென்பவன்வானோர்
விண்ணினாடுகைக்கொண்டபின்வேதியர்வேந்த
ரண்ணியார்தமரமைச்சர்மற்றனைவருங்கூடிக்
கண்ணியாற்றினர்மற்றவற்கிறுதியின்கடன்கள். (௫௧)

மாயுமன்னனுக்காஞ்செயன்முடித்தபின்மதலை
யாயசிர்ச்சனமேசயன்றன்னையன்றவர்க
ளுயகம்பெறமணிமுடிமிலைச்சியேஞாலச்
சேயிழைக்குறுந்துயர்தணித்திருந்தனர்சிறப்பால். (௫௨)

வேறு.

இந்தநாளிலிறைக்குயிர்நல்குவான், வந்துமீண்டமரபினைநாடியே
யந்தக்காசிபன்றன்னையறிவுரு, சிந்தைசெய்தனர்நீணிலத்தோரொலாம். (௫௩)

வனத்திலாசிரமத்தில்வளங்கொள்பட், டினத்தினுச்சியிடத்திலுள்ளோரெலாங்
கனத்தகாசிபற்காணுறுமுன்னரோ, சினத்திழிப்பர்நிமித்தந்தெரித்திடார். (௫௪)

பழிபுகன்றவர்பாற்புகுதேலெனு, மொழிபுசெல்லுமுறையருமோதிடு
மிழிபுங்கெட்டுநின்றேங்கிமறையவன், விழிபுனற்கொளவெள்கிவெதும்புவான். ௫௫

காசிபன்றனைக்கண்டவர்தாமெலா, மேசுகின்றமைக்கேதுவுணர்ந்திடா
னாசையோடுமருகழைப்பார்தமைத், தேசமெங்கணுந்தேடிவருந்துவான். (௫௬)

யாதுசெய்குவன்யானிதற்கிங்கெனுக், காதரங்கொளுங்காசிபன்காசினித்
தாதைபோலுயர்சாகல்லியப்பெயர், மாதவன்றனைக்கண்டுவணங்கியே. (௫௭)

பகலெனுவுலகம்பகர்பண்பினோய், புகலெனுவுனைப்புக்கனன்பூசுர
ரகலெனுவெனைநீக்கினராக்கிய, மிகலெனுற்றெளிவெய்தும்விதியிலேன். (௫௮)

பிரமவெங்கொலைபேசவுங்கேட்டிலேன், சுரைநுகர்ந்திலன்சொன்னங்கவர்ந்திலன்
குரவனிற்குழுமுற்றிலன்கூடில, னுரைசெய்நான்குமுனுற்றினரோடியான். (௫௯)

வீணிலென்னைவிளம்பினர்வெம்பழி, நாணினேன்மிகநான்செயும்பாதகங்
காணிலோதுதிகாட்டுமறைப்பொருட், காணியாமுனிநீயென்றறைந்தனன். (௬௰)

மானமோடுரைகாசிபன்வாய்மைகேட், டேமின்றியொருமுகூர்த்தந்தனிற்
சானமுற்றுயர்சாகல்லியமுனி, யானவாறுணர்ந்தாங்கவற்கோதுவான். (௬௧)

கண்டுணர்ந்தனன்காசிபகேண்மதி, யண்டதற்கொருகாரணமோதுவேன்
பண்டைவேதப்பனவர்பழிப்பரோ, கொண்டதோர்செயற்குற்றமில்லாமலே. (௬௨)

பாய்திரைப்புவிகாக்கும்பரீக்கிதின், சாதலாற்றிடுந்தக்ககன்றன்விடத்
திதணித்திடச்சிந்தனைகொண்டுபோய், நீதிரும்பினைநீணெறிப்பாதியில். (௬௩)

நீக்கலாமுறைநீண்மறைவல்லனுய்த், தாக்கிநஞ்சந்தலைக்கொளுவார்தமைக்
காக்கலாமெனிற்காமமுன்னுறினு, லாக்கினனவனேபவமஞ்சையும். (௬௪)

மையுறுந்துணைவாள்விழிமாதரைக், கொய்யுளைத்திறற்கோடலைவிற்பவர்
செய்யுநன்றிசிதைப்பவர்தாமெலா, முய்யுமாறுமுடையரொருவகை. (௬௫)

வல்லனாகியும்வல்விடமாற்றுத, லில்லனேற்பரிகாரமுமில்லனு
மல்லனொடொருபந்தியயின்றிடல், சொல்லல்காண்டலிம்மூன்றினுந்தோமுறும்.()

அன்றியந்தவரசனருட்டுறை, நின்றநெஞ்சனெடியவற்கன்பினு
னொன்றியோகத்தொருப்படுமுண்மையா, னன்றுகாப்பவனல்வருணங்களும். (௬௭)

நண்ணியேசுகர்நாவினவிற்றிடக், கண்ணன்மாக்கதைகாதலிற்கேட்டவ
னண்ணலன்னவன்றன்னையளித்திடா, தெண்ணம்வேறுபட்டேகினைமீண்டுநீ. (௬௮)

குறியிலாவுயிர்கண்டங்குறுகினு, மறிவுளோர்களளிப்பதுகைவிடார்
வறிதினாலன்றுமன்னனைப்போற்றிடா, நெறியினீயிங்குநிந்திக்கப்பட்டனை. (௬௯)

நீயிழைத்ததீதென்றுநிகழ்த்தினன், றுயெனப்படுசாகல்லியமுனி
காயுமென்கொல்கடும்பெனக்காரண, மாயுங்காசிபனுமென்றறிந்தரோ. (௭௰)

அணைந்ததீமையகலவருளினு, லுணர்ந்துசொற்றியுபாயமிதற்கெனு
வணங்கினன்மறைக்காசிபன்மாதவன், கணந்தியானத்திருந்துகழறுவான். (௭௧)

ஒன்றுபாயமுரைத்துமதனைநீ, யின்றுவல்லையிழைத்தியிருதடங்
தென்றிசைக்கடல்சேர்கந்தமாதனக்,குன்றிலுண்டவற்றின்பெயர்கூறுகேன்.(எ௨)

கஞ்சநாண்மலர்க்காயத்திரிமருள், வஞ்சநீக்குஞ்சரசுவதியென
விஞ்சைவாணர்விளம்புவர்மேலையோ, யெஞ்சுந்தீமையிவையிற்றின்மூழ்கினால். ()

மேற்றலம்புகலாகும்விளம்புநீர்க், காற்றுமேற்படுமோயினுங்காசிப
போற்றியாடுதிபோகுதியாண்டெனச், சாற்றினான்புகழ்ச்சாகல்லியமுனி. (எ௪)

தத்துவம்புகல்சாகல்லியன்பதங், கைத்தலத்திற்றொழுதுயர்காசிப
னத்தடங்களிரண்டினுமாடுவான், வைத்தசீர்க்கந்தமாதனத்தேகியே. (எ௫)

விண்டுறங்கும்விலங்கலதன்கணூர், வண்டுலாமலர்வாவியிரண்டுடன்
றண்டபாணிவடுகனைத்தாழ்ந்தெழீஇக், கொண்டநான்முறைச்சங்கற்பங்கூறியே.

அனகநீரிலடைந்துகுடைந்துமுன், பனவனுற்றியபாதகம்பாற்றியே
தனியிருந்தனன்றன்பவம்போக்கிய, புனலின்கூலத்தொருசற்றுப்போதரோ. (எஎ)

ஆயகாலையழகணிபூண்டென, வாயில்வாழுஞ்சரசுவதிமறங்
காயுங்காயத்திரியெனுங்கன்னியர், மேயினாரவண்வேதியன்காணவே. (எஅ)

வீங்குபூண்முலைமெல்லினல்லார்தமைத், தீங்குதீர்ந்ததிருமறைக்காசிப
னாங்கணஞ்சலித்தன்பினரிவைமீர், நீங்கள்யாரைநிகழ்த்துமினென்றனன். (எ௯)

இலவுநேரிதழ்மாதரிருவருங், கலையின்மெல்லியல்காயத்திரியெனு
முலகின்முதைக்குரியமனைவிமார், நிலையினீரிவற்றென்றுநிலைத்தும்யாம். (அ0)

ஏர்படிந்தபடியிலெடுத்தவெம், பேர்படிந்தபிரசமலர்த்தட
நீர்படிந்தனைநீயெனுங்காதலாற், சேர்படிந்தவரந்தரச்சேர்ந்தனம். (அ௧)

எல்லையிந்தவிரண்டினுமூழ்குவோர், பால்வழங்குவம்பண்ணியபேறெலா
நால்வயங்கொளிமார்பநுவலுநீ, மேல்வரங்கொளவேண்டியதென்றனர். (அ௨)

என்னவேண்டியதென்றசொலின்சுவை, கன்னநுண்டுளைநுங்கியகாசிபன்
பொன்னினீடுகருப்பன்புகழ்மனைப், பன்னிமார்தமைப்பன்னிவழுத்துவான். (அ௩)

பூவிரும்பும்பொலஞ்சுடர்நான்முகத், தேவிரும்புந்திருவுருத்தேவிமீர்
நீவிர்சற்குநெடுங்கலையாயினீ, ராவிரன்றியவற்றின்பொருளெலாம். (அ௪)

சத்தநீவிர்பதங்களிற்றங்கிடும், வைத்தவாக்கியபேதவகையினி
லொத்ததாற்பரியத்தினுணர்ச்சிநீர், முத்திகாட்டுமுகரிமைச்சோதிநீர். (அ௫)

எம்மையாளுமிறைவனிடத்துறை, யம்மையென்பதுமந்திருவென்பது
மும்மையேயன்றிநீங்களுணர்ந்துளோர்,மெய்மைதேர்ந்திடில்வேறிருவோர்களோ

ஆக்குவீருலகங்களனைத்தையுங், காக்குமட்டெனக்காக்கவும்வல்லிர்நீர்
நீக்கியாவர்நிலைப்பவருங்கலை, வாக்கின்மேதகுமாமறையன்னையீர். (அஎ)

தென்புலத்தவர்தேவர்செயலெலா, மன்பினுங்களையன்றியுண்டாயிடா
முன்புஞாலமுளைப்பதையன்றியே, பின்புமீறும்பெறக்கண்டிருப்பிர்நீர். (அஅ)

பூட்டுந்தேர்மிசைப்போதருமாதபன், காட்டுந்திங்களெண்ணுமற்கருவரி
யோட்டுகின்றவொளிகளையுங்கள்சீர், நாட்டமென்றெவர்நாடுந்தகையினர். (அ௯)

விள்ளுநுங்கள்விழியிற்பிறந்திடும, பள்ளமார்கடற்பாரகமெங்கணு
முள்ளுங்காலுமதூற்பலக்கண்ணிமை, கொள்ளும்போதுமுடியுங்குவலயம். (கூ0)

வேதமாகமமென்றுவிடைக்கொடி, நாதன்வாயிலுதித்திடுநங்கையீர்
யாதுநாளுமையேத்திடவல்லஞே, நோதலற்றனனுங்கடங்காட்சியால். (கக)

அறத்துச்செல்லுமறிவுநெறியிலா, மறத்துமீளுமறிவும்வழங்குவீர், அறத்தலின்
றெணச்சூழ்ந்திங்கியாவருஞ், சிறப்புச்செய்யவுஞ்செப்பின்றிருவன்னீர். (கஉ)

நெஞ்சிற்கோளிவையென்றுநிகழ்த்தியே, மஞ்சிற்றுழ்குழல்வேசன்மனைவிமார்
பஞ்சிற்கஞ்சிச்சிவக்கும்பரிமளக், கஞ்சத்தாள்கள்பணிந்தனன்காசிபன். (கங)

மேவுநான்மறைவேதியன்வேண்டிய, மூவரங்களுமுந்துகொடுத்தயன்
றேவிமார்களிருவருஞ்சீதள, வாவிநீருண்மறைந்தனர்மாதரோ. (கச)

வீசுநீரினுண்மெல்லியர்புக்கபின், ஞசிகூறியழைத்தறவோரெலாம்
பேசியின்பம்பெருநண்புகொண்டிடக், காசிபன்றன்கடிநகர்மேயினன். (கரு)

வேறு.

உலகிலன்றுயர்காசிபநாமமாமொருவனந்தணன்மாசறுகாதைபா
தில்வுமிங்கிதுபேசிடுமாசையோர்கிறையுமன்பொடுகேள்விகொணீர்மையார்
பலருமைம்புலவேடர்களோடவேபழுதில்வென்றிகொண்மாதவமேலையீ
ரிலகுபங்கயநீண்மனைமாதராரிருதடங்களுமாடினராவரோ. (கசு)

காசிபச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் உருoரு.

---

# பலதீர்த்தச்சருக்கம்.

---

ஓதுமுணர்சூதமுனியோதநெடுந்திரைவேலைச்
சேதுநடுவுளபலநற்றீர்த்தங்களினமுனிவீர்
பாதகர்திரவையித்தின்பரிசுரைப்பனவற்றென்றை
மூதுணர்விஞெரிருணமோசனமென்றுரைசெய்வார். (க)

மக்கடமிலாரேனும்வந்ததனிற்படிவாரோன்
முக்கடனுநீங்கிடுவர்மொழிந்தகடன்மூவகையு
மெக்கடஞேவெனவினவிலிருடிகள்வானவர்பிதிர்க்க
ளக்கடனுக்குடையோர்களவையாமாறறைந்திடுவன். (உ)

வன்னிதிலெமுயலாதான்மாதவர்தங்கடனுளன்
சொன்னமுறைமகம்புரியான்சுரர்க்கிருணத்தொடர்புடையான்
றன்னுயிராமகவில்லான்றன்பிதிர்க்கள்கடனுள
னின்னகடனெருமூன்றுமிதிற்படிவார்க்கிலையாகும். (ங)

இயற்பிரமசரியத்தினிருவகையாமகப்பேற்றின்
முயற்சியுளரானுலுமுழங்கிருணமோசனநீர்
மயற்பிரியப்படிந்ததனல்வருமகிழ்ச்சிமருவலிலார்
செயற்பெரியசவுனகனுந்திலகநுதற்றிருமுகத்தீர். (௪)

அற்றபொருணல்குரவோனவனுமிதிற்படிந்தக்கா
லுற்றபொருணல்குரவோனெனப்படுவனுலகின்கட்
பெற்றகடன்பிறர்கேட்பப்பேறுவானுதுகுடைந்தாற்
கற்றமுனிவீரவராற்கடன்கேட்கப்படுவானுல். (௫)

மொழிதருபேரிதற்கிருணமோசனமற்றதுசெயலாற்
செழுநறுநீர்த்தடமதனிற்சென்முடியெல்லோருங்
குழுமுனிவீர்கொண்டகடன்குணாகடனீந்திடக்கடவா
ரொழுதுபெருங்கடன்றீர்த்தலிதன்கடனுமிஃதன்றி. (௬)

தருமமகன்முதலைவர்தாம்வேள்விசெயற்பொருட்டான்
மருவலர்நீர்த்தடமொன்றுவகுத்தனர்மற்றதில்வைகு
மொருபதினுயிரகோடியுயர்திர்த்தமுதகமதிற்
பரிதியெனுமாறிரண்டிம்பகலுமிரவும்பயிலும். (௭)

அட்டவசுக்களுமிருப்பரவர்தொகையின்மூன்றதிகம்
பட்டவுருத்திரர்குழுவும்பகரிமையோர்தாம்பிறரும்
விட்டகலார்புனலதனுன்மேதகுநல்லபிடேக
மெட்டரும்வானவர்பிதிர்க்களிருவர்க்குஞ்செயலின்பம். (௮)

துறைப்புனன்மற்றிதமுகந்துசுரர்பிதிர்க்கடமைநோக்கி
யிறைப்பவன்பால்வினைமுழுதுமிரிந்தோடுமினிதிருப்ப
னறைப்பதுமனுலகினவனறுந்தடமீங்கிதன்றடத்தின்
மறைப்பனவன்றனையூட்டில்வளம்பெருகுமிருமையினும். (௯)

நால்வருணத்தெவரோனுநலங்கெழுநீரிதுதோய்ந்தார்
மேல்வருணங்கொளப்பிறவார்மிக்கதினத்திதுபடிந்தார்
நீல்வருணவிழிகாணார்நிரயமிருள்வலிநெடுந்தேர்
கால்வருணன்றிசைமறையுங்காலையினுங்காலையினும். (௧௦)

நினைத்திடுவானிதுதன்னைநெடுங்கங்கைமுதற்றீர்த்த
மனைத்தினுஞ்சென்றுடினவனுவனிதிலையமிலை
யினைத்துயர்வினிதுநிற்கவிந்திரன்முன்னிமையோர்கண்
முனைத்தகுவர்கெடவேள்விமுற்றியதோர்தடமுண்டால். (௧௧)

சிறந்ததடமிதுதேவதீர்த்தமெனுந்திருநாம
மறந்திகழமருவுமதிலாடினவரகமெல்லாம்
பறந்தகலுஞ்சுழல்கான்முன்பஞ்சியெனப்படிந்தவர்தா
மிறந்தொழியாப்பதம்பெறுவரொண்ணரும்பேரின்பமுடன். (௧௨)

சூழியதனீர்தோய்ந்தாற்றுன்றியநாட்டொடுத்திழைக்குங்
காழிரும்பாதகநீங்குங்கடவுளரிற்கதிர்மறைத்த
வாழியவனெனத்தீர்த்தமவற்றின்மிகுமிதினெருநாட்
டாழுமவன்சதவருடந்தழலோம்பும்பலன்பெறுவன். (௧௩)

இயம்பியவற்றருண்முனிவீரிரட்டுறவெண்ணவிரிந்தப்
பயம்படியவிதில்வாசம்பண்ணவரும்பரிசிலர்க்கு
நயம்பெருகுங்கொடைபுரியநண்ணுதிங்கெல்லோர்க்குஞ்
சயம்பெருகும்பரிமேதந்தரும்பேறுதருமிந்நீர். (கச)

வானவர்க்கும்பிதிர்க்களுக்குமாதவர்க்குமகிழ்ச்சிதருந்
தானநுகரிதுசேர்ந்தார்சுரிவளைமால்பதஞ்சேர்வா
ரானியமாறைந்தொருநான் கன்றியொருமூன்றிரண்டு
தானெனினுமிதிற்றரிப்பான்முயுதரந்தனிற்றரியான். (கரு)

பகலொருமூன்றிதிலாடிற்பகர்வாசபேயமெனு
மகமதன்பேறுளதாகுமனத்தினினைத்திடவோடுஞ்
சகலபவங்களுமிந்நீர்த்தடத்தமரர்பிதிர்க்கடமைப்
புகலுமுறைபூசித்தாற்புகுங்காமப்பொருளனைத்தும். (கசு)

இட்டிமுழுதியற்றியபேறெய்துமிதற்செதிராகப்
பட்டதொருதடமில்லைப்பாவமிகபாமிரண்டுங்
கட்டகலும்பெருங்கதியுங்காதலித்தோரிதிற்படிவர்
சுட்டிமிதன்றகையுமக்குச்சுருக்கியுரைத்தனன்றுறவீர். (கஎ)

என்னுரையிலடங்கியிடாதிதன்பெருமையிகல்வாலி
தன்னிளவலிரவிமகன்றன்னுமத்தொருதீர்த்த
மன்னுமதுதனிற்படிந்தோர்மார்த்தண்டனுலகடைவர்
பின்னுமவர்பரிமேதப்பெருவேள்விப்பலன்பெறுவார். (கஅ)

தரமகற்றுமதிற்படிந்தாற்சகத்திரகோதானபலன்
வருமனத்தினினைத்தக்கான்மறையோதும்பலன்பெறலாம்
பிரமகத்திமுதலாகப்பிறங்குபெரும்பாவமெலா
மொருவுமிதன்புனலாடியுபவாசமுஞற்றியக்கால். (ககூ)

தேட்டமுடன்மனமகிழத்தென்புலத்தார்தேவர்தமை
யாட்டியவனந்நீராலத்தோர்யாமத்திருப்பே
னீட்டுமகமிழைத்தபலத்தெட்டுமடங்கெய்திடுவன்
கோட்டமிலிந்நீர்குளித்தோன்குறித்துணருங்குலத்துண்மை. (உ௦)

இன்னதடந்தனிற்படிந்தோரிசைக்கரியபேரின்ப
நன்னலஞ்சேர்நரமேதயாகபலநண்ணிடுவ
ருன்னியவையுளவாகுமுஞற்றுதவமுனிவீர்காள்
சென்மின்களிலகுகதிர்த்தினகரன்சேய்தீர்த்தத்தில். (உக)

கொண்டநளன்பெயர்த்தீர்த்தங்குளிக்குமவர்வினையொழிக்கும்
விண்டலமேற்றிடுமெல்லாவேள்விகளின்பயனுதவு
மண்டரையும்பிதிர்க்களையுமதில்வைகிமூன்றுதின
முண்டிமறந்தருச்சித்தாருதயகதிரோனப்பொலிவார். (உஉ)

காலும்வெரின்படுகடுப்பிற்கடிதாரகமேதமகத்
தாலுளதாம்பயனுமுறுமஃதன்றியமலவன்சேய்
நீலனிருந்தடங்குடைந்தோர்நீள்சொன்னயாகபல
மேலுமதிற்பதின்மடங்கேய்ந்திலங்குமழலுலகடைவர். (உங)

பங்கமில்சீர்ப்பசுக்கண்ணன்பட்டமதிற்படிந்தோர்கள்
புங்கவிர்காளொருநாளும்புக்களத்திலமிழ்ந்தார்கள்
சங்கமிகுஞ்சுரர்கற்பதருநிழற்கீழரசாள்வார்
கொங்கவிழ்தாரங்கதன்பேர்கொண்டபுனற்குளித்தோர்கள். (உச)

கயன்சரபனரன்பனசன்கவயனெடுங்குமுதன்முத
னயன்குலவுவானரங்களல்கியநீர்நானங்கள்
பயன்பெரியவீடுதரும்படிந்தவர்க்கோர்பட்டமுள
தயன்புதல்வன்மகன்சேயாமணிதிகழ்வீடணன்பெயரால். (உரு)

ஒழியுமதின்மூழ்கினர்பாலுற்றதுயர்பிணிபாவம்
பழிபுரிவார்விழுங்கும்பிபாகமெனும்பவர்க்கவிருங்
குழியதனிற்குளியார்கள்கொடியகனுமிடியகலு
மழிவிறிருவைகுண்டமடைவரவரறவீர்காள். (உசு)

தேனறுந்தார்வீடணன்சேர்த்திறலமைச்சரொருநால்வர்
நானநறும்புனற்பொய்கைநான்குவகுத்தனரவற்றின்
பானனேயுமவர்பாவம்பரியுமுபவீதநடு
மானமதுதீர்த்தமெனவகுத்துரைத்தான்மலர்வேதன். (உஎ)

கரையிலருட்கடலாகுங்கவுசலைசேயருச்சித்த
திரையுடைநீர்வேணியனைச்சேவித்தற்பொருட்டென்றுஞ்
சரயுந்தியும்பயிலுந்தடங்கந்தமாதனத்திற்
புரையகலும்படியதனிற்புகுந்தாடும்புடவியெலாம். (உஅ)

தன்னிகராமக்கிரியிற்சரயுமுதற்றீர்த்தங்கள்
பன்னுகின்றகோடிதலையிட்டபதினாயிரமு
மன்னுகங்கைமுதனதியும்வாரிதியேழும்வனமுந்
தொன்னிலைசேர்மாலிடமுஞ்சோதிபயிலாலயமும். (உகூ)

பொன்றருநாட்டவர்சித்தர்புகலிசைக்கின்னரரியக்கர்
நன்றிதெரிமுகரிமைசானற்றவர்மற்றவரோனைத்
தென்றலையபுலத்தருந்தாஞ்சேதுவின்கண்வீற்றிருப்ப
ரென்றும்வரிசிலைக்குருவாமிராகவன்றனாணையினால். (௩௦)

வேறு.

இகலிலாப்பொருள்படநவிற்றிஞேமிரவிகோத்திரவிறைகளைக்கனர்
சகலதீர்த்தமகிமையுமக்கரோதவறுருத்திருமுனிகணத்தரோ
புகலுமாக்கதையிதுபடித்தபேர்புகலிலாச்செவிவழிவிடுத்தபே
ரகிலமாற்பெருவினையொடுக்கியேயளவிலாக்கதிநிலைகொடுக்குமே. (௩க)

பலதீர்த்தச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் உருகூசு.

# இராமநாதச்சருக்கம்.

---

ஏருலாவுசூதன்மீண்டுமுனிவரோடியம்புவான்
ஓருலாவுசெவியினூடுசென்றுபுக்கவளவிலே
காரினீடுமிருடுரந்தகதிவழங்குகாதைபொன்
மேருவில்லிராமநாதன்மேன்மைகேண்மினென்றரோ. (௧)

ஏவர்கண்டகண்ணினோர்களேசிலாதகோசலக்,
காவனம்பியன்பினோடுகந்தமாதனத்திலே
தாவனஞ்செய்முக்கண்மூர்த்திதன்னையன்னதலைமையோர்
மேவனந்தவின்பஞானவீடுசேர்வர்மெய்ம்மையால். (௨)

முதலுகத்திரண்டுபத்தின்முற்றுகின்றபுண்ணிய
மதுதிரேதநல்லுகத்தொராண்டினெய்துமஃதுறுந்
துதிகொடிங்களொன்றினிற்றுவாபரத்தினப்பலங்
கதிருலாவுவாரமொன்றினுதவுநீடுகலியுகம். (௩)

பாடிலாதகலியுகத்தொர்பகலின்மேவுபயனினுங்
கோடிகூறுமிகுதிகொண்டகோதிலாதநல்லற
நாடொறுந்தகுமிடமொன்றினண்ணுமாயனுன்முகன்
றேடிராமநாதனெந்தைதெரிசனத்தினலரோ. (௪)

ஊங்குளார்பிதிர்க்களையருதககோடிபிறவுமா
யீங்கண்வையமுய்யநீடிராமநாதனிருபதந்
தாங்கருத்தின்வாரமொன்றுதானிரண்டுமூன்றுதா
னீங்கலின்றியென்றுமேனும்யாவரன்பினினைகுவார். (௫)

தங்களீறுவீறுமிக்கசண்டனெஞ்சுகொண்டிடான்
கங்கைசூடிபுகழியம்புகாதலோர்கள்காதினால்
வெங்கண்மேதியோதையுண்டுவிழுமமுற்றழுங்கிடா
ரங்கமாயுமன்றுதாமகண்டஞானமாகுவார். (௬)

போரின்மல்கிராகவன்பூசைசெய்தபுனிதனை
யாரிழைப்பரர்ச்சனையவர்நரர்க்குளல்லர்தா
நீரவேணியண்ணலார்நிமலமேனியாகுவார்
வாரமோடுவழிபடார்வீழ்வர்மாயவாரியுள். (௭)

அந்தலிங்கமூர்த்தியையகத்தினுன்னல்செய்கிலான்
வந்துகாணலில்லவன்வரம்பிலீகைதவமகந்
தந்துமிக்கபாவியாய்த்தனயர்மாடுதாரையொரீஇ
யந்தன்மூகன்வதிரன்மண்ணையாய்வருந்துமறிவுபோய். (௮)

அத்திநாகநாரியிற்றுவக்கிவெற்பலைத்தநா
ளத்திநல்குமாலமுண்டவருளிராமநாதன்மேற்
பத்திசெய்யுமக்கடாள்பணிந்துபூசைபண்ணுவார்
புத்திமாழ்குபுன்கணோடுநடுவனூர்புகுந்திடார். (௯)

ஐந்துநூற்றிரட்டிகொண்டபிரமகத்தியயுதமா
முந்துதேறலுண்டதீமையோரிரண்டுமாதியாம்
பந்தமாயகோடிகோடியுற்பவப்பவக்குழாஞ்
சிந்திருலமன்னனுக்குமவ்விலிங்கதெரிசனம். (௧0)

வேறு.

தரும்புகழிராமலிங்கந்தனையெதிர்கண்டுளோருக்
கரும்பவிழ்பதுமன்மாயனுதியதேவர்தம்மா
லிரும்பிரயாகைகங்கையிவைமுதலிலங்குநீரால்
வரும்பயனில்லையுண்டாமானுடப்பிறவியாக்கம். (௧௧)

வருவதோர்தொடர்ச்சிதன்னுன்மனங்கவர்மகிழ்ச்சிதன்னுல்
வெருவினுலோபந்தன்னுல்விளங்குமவ்விலிங்கந்தன்னைக்
கருதினோர்புகழ்ந்தோர்செய்தகடுங்கொடுவினைகளெல்லா
மெரிகொளிந்தனமாமேவுமிகபரமிரண்டிலின்பம். (௧௨)

எட்டியவுருவாய்நின்றவிராமநாதன்பாற்றெண்டு
மெட்டியல்பாகுமிந்தவிலங்கொளியிலிங்கந்தன்னி
லெட்டுணையன்பர்மாட்டுமினியநண்புடையனுத
லெட்டருமகிழ்ச்சிகூர்தலிழைத்திடும்பூசைதன்னில். (௧௩)

அவ்வருளுருவந்தன்னையருச்சனைசெயலதற்காக்
கைவினைவருந்தன்மிக்ககாதையிற்காதல்கூர்தல்
பொய்விரவாதவன்பாற்புகழ்மொழிகுழறிக்கண்ணீர்
மெய்வழிந்திடவடங்காமேனியிற்புளகந்தோற்றல். (௧௪)

கோலமார்வடிவமென்றுங்குறித்திடல்குறிகடந்த
சீலமாரவ்விலிங்கசேவைஃபாற்றமதுசீவ
பாலனம்புரிதலாகப்பத்தியின்கணிதந்தானோர்
நாலிரண்டாகுமுண்மைநவின்றிடினற்றவத்தீர். (௧௫)

மூடனதிடத்துண்டேனுமொழிந்தவையெட்டுமுத்தி
நாடதற்குரியனன்னேனற்றவப்படிவின்மிக்கீர்
நேடருமுன்னில்வேறுநேயத்தாற்பிரமவுண்மை
பீடுசால்காட்சிதன்னுற்பிறங்கிடும்பிறழாமுத்தி. (௧௬)

மொழிதருமுத்திவேதமுடிபுநூற்கேள்வியாலே
யிழிபெலாநீத்தோர்க்கெய்துமிலங்குவேதாந்தஞானம்
வழுவிலாத்துறவுமின்றிவளங்கொளாச்சிரமமின்றி
யழிவினுல்வருணத்தார்க்குமகிலவாச்சிரமத்தார்க்கும். (௧௭)

திருந்துசீரிராமநாததெரிசனமதனினுலே
பொருந்திடுங்கருவின்மீளப்பொருந்திடாப்புனிதமுத்தி
தருந்திருகிலவுமந்தத்தலத்தினிற்கிருமிகீட
மிருந்தவர்தேவரொல்லாமேற்றமுங்குறையுமில்லார். (௧௮)

அனைநிகரிராமநாதனருணிலையொத்தலாலே
வினைபலவிளைத்தோமென்னுவெருவரல்வேண்டாம்யாருந்
தனைமதித்திடலுமாகாதவத்தினேனென்னப்பானுக்
கனையிருளகற்றலொன்றுங்கற்றவர்மற்றவர்க்கும். (௧௯)

சீரணியிராமநாததெரிசனம்பண்ணினுக்
காரணநான்கும்வல்லவந்தணன்ருனுமொவ்வான்
ருரணிவணங்கிராமேச்சரன்றனேக்கண்டோர்தம்மிற்
பேரணியோகவானர்பெறுகதிபேதமில்லை. (உ0)

திங்களங்கண்ணிவேணிச்சிவபிரானிராமநாதன்
பங்கயம்புரையுஞ்செம்பொற்பதந்தொழும்பண்பினுனேத்
தங்கடமவிழியாற்கண்டோர்பாவமுந்தணந்துபோமா
லங்கணனருளாலங்கணுவதோர்கணமதொன்றின். (உக)

மாசிலாவிராமநாதன்மலரடிவணங்கில்லான்
பேசுநான்மறைகற்ருலும்பெருங்கொடைக்கருகனல்ல
னீசனுமிராமநாதவிடத்திலன்புடையோன்ஞாளிப்
பாசகனெனினுமீகைப்பாத்திரமவனேயாவன். (உஉ)

அத்தலத்திருப்போரெல்லாமானனமைந்துமேந்துங்
கைத்தலத்திளையமானுங்கனலுமிழ்மழுவுங்கங்கை
வைத்தவெண்டிங்கள்வேணிமவுலியுமருங்கிலார்த்த
சித்திரவதளும்போர்த்தசிந்துரவுரிப்பிறக்கும். (உங)

பூசியதவளநீற்றிற்பொலிந்தெழுதவளச்சோதி
வீசியவடிவும்வெள்ளைவிடைநெடுங்கொடியுமேவிக்
காசுறுகண்டத்தின்டோட்கண்ணுதற்கடுக்கையந்தார்த்
தேசுடையிராமநாதன்றிருவுருவாவர்திண்ணம். (உச)

இதந்தருமிராமலிங்கமிருக்குமூர்க்கேகுவார்க்குப்
பதந்தொறும்புரவிமேதம்பண்ணியபலமுண்டாகும்
விதங்கெழுமலர்நீர்பன்னமென்கனிவழங்குவாரைச்
சிதைந்திடாதருளுமென்றுஞ்சிவபிரானிராமநாதன். (உரு)

சேதனர்வணங்குஞ்செல்வச்சேதுவிற்றிகழிராம
நாதனன்மகிழ்ச்சிகூரநான்மறைக்குலத்தொருத்தர்க்
கோதனம்பிடியொன்றூட்டுமுத்தமருரகசென்னி
யாதனமிருக்கும்பூமியடங்கலுமளித்தோராவர். (உசு)

நாவினுலிராமநாதனல்லருள்வழுத்தநாளும்
பூவினுற்பூசைசெய்யப்புகழ்ந்திடச்சேதுவின்கட்
சாவுறக்கிடையாதியார்க்குந்தாணுவேநீயேதாணு
வாவதென்றுணர்வார்வென்றியடைகுவரிங்குமங்கும். (உஎ)

கார்த்தருகளத்தினுனேக்கவுசலைமதலைபோற்றுந்
தீர்த்தனேநினைக்கின்றேரோசிறந்தவருலகிலெல்லாம்
பார்த்திருவின்பமுத்திப்பயனுமுர்பணியாரந்த
மூர்த்தியைத்தொழுவார்க்குண்டாமொழிதரும்பலன்கண்மூன்றும். (உஅ)

திருமிகுமிராமலிங்கதெரிசனமதனின்மிக்க
தருமமுமிகருமின்றத்தாணுவைநெஞ்சிலெண்ணு
ரருமறைப்பிரமகத்தியாயிரப்பத்திழைத்தோர்
வருநரகவரொடம்மாமாற்றமொன்றியம்புவார்க்கும். (உகூ)

வேதநூல்சாத்திரங்கள்வேள்விகளெலாமிராம
நாதனேபிறிதொன்றில்லைநம்பனையவனைத்தானே
யாதரவதனாற்போற்றியடிதொழல்வேண்டுமன்னோன்
றூத்விழ்சரோருகப்பூஞ்சரணமேசரணமானோர். (௩0)

இடுக்கணுமெவையுநீங்கியாகங்கடவங்கள்யாவுங்
கொடுத்திடதீர்த்தமெல்லாங்குளித்திடல்செய்யும்பேற்றி
லடுத்ததோர்கோடிகூறுங்கதிசமாமறனுமெய்தி
வடுத்தவிர்சைவநாட்டில்வைகுவனொன்றுமாதோ. (௩௧)

நன்னலங்கூரிராமநாதனையிரண்டுகன்ன
லுன்னல்செய்திடுவனுயிரொருவன்றூவேழுகொண்ட
தன்னிருஞ்சுற்றத்துள்ளார்தம்மையீடேற்றித்தானு
மின்னதீர்சிவபுரத்தில்யாவருமேத்தமன்னும். (௩௨)

பொழுதிலொன்றிராமநாதன்பொன்னடிக்கமலந்தன்னு
ளெழுதினோனிகத்துமின்புற்றீற்றிலவ்விறைவனுவன்
கெழுதகுங்காலையந்தக்கிளரருட்குறியைநெஞ்சாற்
றொழுமவன்சிவனுங்கொண்டதுவக்குடம்பதனிற்றானே. (௩௩)

காலையவ்விலிங்கங்காணிற்கறையெலாம்பறையுமுச்சி
வேலையில்வணங்கிற்றேறன்மிசைந்ததீங்காயிரம்போ
மாலையிற்பணியத்தீருமாதிருகமனங்கீர்த்திப்
பாலையப்போதுகூறிற்பாறுமாயிரம்பொற்சோரம். (௩௪)

கண்டவர்பாவவெற்பைக்கணத்தினுண்டூளியாக்கு
மொண்டிறற்சூலவேற்கையும்பர்கோனிராமநாதன்
முண்டகக்கழற்கால்போற்றிமுற்றிடாக்கருமமற்றை
யெண்டராத்தருமகோடியானவையுமீகிலாவே. (௩௫)

செங்கணேறனவிராமன்றிணிசிலைக்கோடிமூழ்கி
யங்கணனிராமநாதனடிபணிந்தடையும்பேறு
கங்கையிற்கிடையாதன்னோன்கழறொழார்கரவிலன்றித்
தங்குலத்துரியவையர்தம்வயிற்றுதித்தாரல்லர். (௩௬)

எற்படவெழுந்துமுக்காலிராமநாதாவென்றக்கான்
முற்பகற்பவங்கடீருமொழியுமவ்விலிங்கமூர்த்தி
யற்பினர்க்கருளவேண்டுமாதரமேவியென்றும்
விற்பயில்கதிராங்காணும்விழியினர்துயர்ப்பனிக்கே. (௩௭)

ஈண்டுயிர்விடுங்காலுள்ளத்திராமநாதாவென்றெண்ணின்
மீண்டிவண்வாரான்முக்கண்விண்ணவனுருமெய்மெய்
யாண்டருளிராமநாதாவணிகொண்மாதேவாவந்தண்
காண்டகுகடலேயென்பான்கலிவலிநலிதலில்லான். (௩௮)

ஐயர்காள்யாவரோனுமாக்கையஞ்சிறையிற்றீரா
வுய்யுமாறன்பினீலலோகிதாவுலகநாதா
செய்யசீரிராமநாதாசெஞ்சடைமுடியாவென்பார்
வையகவடிவமாருமாயையான்மயங்கலில்லார். (௩௯)

தன்னிகரிராமநாதாசதாசிவாநீலகண்டா
பன்னுமாதேவாவென்பார்பண்ணியபாவம்பாறு
மின்னுவேற்காலகாலாவேலைவாய்விடமயின்ற
யின்னருளிராமநாதாவென்பவர்சினங்கொண்டெஞ்சார். (௬௦)

ஏயசீரிராமநாதாவிளநிலாமுறுவலாலே
தீயவர்புரங்கண்மூன்றுஞ்செற்றமாதேவாசெல்வ
மேயசங்கரனேயென்பார்வேணவாவீக்கமென்னும்
பாயுநீர்வேலைமூழ்கார்பயிறவப்படிவமையீர்காள். (௬௧)

அருளுடையிராமநாதனமர்ந்தருளாலயத்தைத்
தருவினாற்றருவோன்சுற்றந்தன்னின்முக்கோடிசுற்ற
மருவுவான்புகுதுங்கோயில்வளங்கொளிட்டிகையாற்செய்தோன்
திருமறுமார்பன்வாழுஞ்செல்வவைகுண்டஞ்சேரும். (௬௨)

கற்கிளர்கற்கிசெய்தோன்கமலனாராளுங்காம
ரொற்கெழுபளிங்குதன்னிலங்கொளிவிமானஞ்செய்தோன்
பொற்கொடிவிமானத்தேறிப்புகுஞ்சிவபுரத்தன்ஞாங்கர்ச்
சிற்குணனுடனிருப்பன்சேதிமஞ்செம்பாற்செய்தோன். (௬௩)

வெள்ளியானிகேதனத்தைவிருப்பினால்விதித்தோன்முக்கண்
வள்ளறன்வடிவமாகிவரம்பிலாமகிழ்ச்சிகூருந்
தெள்ளுசீராடகத்தாற்சினகரஞ்செய்தமேலோ
னுள்ளுணர்சிவக்கொழுந்தாமொன்றுடனிரண்டின்ருவன். (௬௪)

எல்கெழுதிங்கள்வேணியிராமநாதன்பொருட்டு
மல்குசீராளன்செய்தவரம்பில்பொற்கோயிலுக்கு
நல்குரவுடையோன்றந்தநலங்கொள்மட்கோயிலுக்கு
மொல்கலில்பயன்றானென்றுமுதவிகொண்டோர்வளத்தால். (௬௫)

அருகுசேர்பாடலாடலபிடேசவேளைதன்னின்
முருசமுன்னியங்கள்காலமூன்றினுமியங்கச்செய்வோன்
திருகுவெம்பவங்கணீங்கிச்சிறப்பினோடிமையவெற்பின்
மருகனாமிராமநாதன்வளர்சிவபுரத்தின்வாழ்வான். (௬௬)

அண்ணலாமிராமநாதனபிடேககாலந்தன்னி
னண்ணுசீருருத்திரத்தைநமகமார்சமகந்தன்னைப்
பண்ணமர்பவமானத்தைப்பஞ்சசாந்தியைமுன்னாக
வெண்ணுமாமந்திரங்களியம்புவானிரயமெய்தான். (௬௭)

ஆறணியிராமநாதனணிமுடிக்கபிடேகத்தைப்
பாறயிரானநெய்யாற்பஞ்சகவ்வியத்தாலீசற்
கேறுமற்றவற்றாற்பண்ணுமியல்பினாலெய்துகின்ற
பேறதன்பெருமைகேண்மின்பேசுவன்பெருந்தவத்தீர். (௬௮)

இலவிதழ்முகிழக்கொங்கையிடம்பயிலிராமநாத
னலைபுனன்முடியிலான்பாலதனினாலாட்டுகிற்பான்
றலைமுறையேழுமூன்றுந்தமரொடுந்தருக்கிவாழும்
புலவர்போற்றிசைக்குமுக்கட்புராதனன்சிவபுரத்தில். (௬௯)

அளையினாலாட்டுவிப்போனகன்றதிங்களைத்துமங்கை
வளையினான்வைகுண்டத்தின்வைகுவன்மறுவிலாத
கிளைகொளானெய்யினாட்டக்கிடைக்குமேலொருவர்க்கன்னோர்
விளையுமோர்கற்பத்தாற்றும்வினைக்குழாம்விளிவுற்றோடும். (௫௦)

தேனினாலாட்டுவிப்பான்றிசைமுகனுலகஞ்சேரு
மானவெட்டயிலத்தாட்டுமவன்புகுமளகையந்தண்
மேனிலாமதியூரெய்தும்விருப்பஞ்சால்கருப்பஞ்சாற்றிற்
றுனினிராமநாதன்சடைமுடிதன்னிலாட்டில். (௫௧)

ஈட்டுசம்பீரநல்குமெழினறுங்கனியின்சாற்று
லாட்டுவார்தென்புலத்தாரமருலகதனிற்சேர்வர்
தேட்டுறுமிளநீர்தன்னாற்றிருந்தபிடேகஞ்செய்வா
ரோட்டுவார்முந்நூன்மார்பருயிர்க்கொலைமுதலபாவம். (௫௨)

குரம்புசேரிராமலிங்கங்குளிர்ந்திடவிளைந்தசெய்ய
வரம்பையங்கனிகள்சாத்துமவன்பவமானனாட்டின்
வரம்பிலாவரிசைமேவும்வடித்துவெண்டுகிலினாலே
நிரம்புநீராட்டுவிப்பானீரிறைநிலைமைசேரும். (௫௩)

சந்தனநறுங்குழம்புசாத்துவான்றயங்குபாடற்
கந்தருவத்தர்வாழுங்கடிநகரடைவன்கஞ்சக்
கொந்தலர்வாசமேவுங்குளிர்புனலாட்டுவிப்பா
னிந்திரனோடுமன்னனிருக்கையுற்றின்பங்கூர்வன். (௫௪)

பாதிரியலரிபுன்னைபாசடைக்கழுநீர்பூத்த
போதிவைகமழுமந்தண்புனலினாலாட்டுவிப்பான்
கோதிரிந்தோடுமேனைக்கொழுமலர்மணங்கலந்த
சீதநீராட்டுவிப்பான்சிவபிரானுலகஞ்சேரும். (௫௫)

பொருப்புறமேலங்கோலம்பொலங்கெழுமுசீரம்வண்டோர்
கருப்புரமிவற்றினாற்றங்கட்டியவுதகந்தன்னை
விருப்பினாலாட்டுவிப்பார்மேதகுதிருவினோடு
நெருப்பெனுங்கடவுள்வாழுநீணகர்நிலைமைக்கொள்வார். (௫௬)

மண்ணினாலமைந்தகும்பமாநதிவாவியாதி
நண்ணுநீர்முகந்திராமநாதனுக்கபிடேகந்தான்
பண்ணுமாறுதவுகிற்பான்பதிற்றுப்பத்தாண்டுகாறும்
புண்ணியத்திருவினீடிப்புடவியில்வீற்றிருப்பான். (௫௭)

தாமிரத்தசும்புதந்தோன்சுதமகனுகுந்தாரத்
தாமெழிற்குடங்கரீந்தோனம்புயாசனனூரெய்து
மேமநற்குடங்கொடுத்தோனீசனூர்மருவுமேழை
வாமனாருகிருப்பன்மணிக்குடம்வழங்கினோனே. (௫௮)

நாற்புவிபோற்றிராமநாதனுக்காட்டற்கேனு
நீற்பொலிகண்டத்தன்னோனிவேதனமதனுக்கேனும்
பாற்பசுவுதவுநல்லோன்பரிமேதபலமுமெய்தி
மேற்பரஞ்சுடராயென்றும்விளங்குவன்சிவலோகத்தில். (௫௯)

ஆரமுததனினுட்டுமவன்பயனுண்டுநூறு
நேரயானிகழ்த்தலாற்றேனீடனுக்கோடியாடி
யாரிறையிராமநாதாவென்பவரவர்சென்றெந்த
நாரமூழ்கிடினுஞ்சேதுநனைந்திடும்பேறுநண்ணும். (சுO)

சிவந்தருமிராமநாதன்சிகரநீள்சேதிமத்தை
நவந்தரப்பழமைநீக்கிநலங்கொளப்புரியுமேலா
னிவந்தவக்கோயின்முன்னநீணிலந்தன்னிற்கண்டோன்
றவந்தருமளப்பில்பேற்றிற்சதமடங்குடையனுவன். (சுக)

சின்னமாமிடத்தைமுன்போற்செப்பவன்பிரமகத்தி
தன்னிலோரயுதந்தீர்ப்பான்றுணுவாமிராமநாதன்
முன்னெரிதீபமிட்டோன்முந்துணர்முழுதுமுண்ட
மைர்நிறமருட்கைநீங்காமலவிருடிரக்குமாதோ. (சுஉ)

சருக்கரைசெய்யசாலித்தண்டுலமெண்ணெயானெய்
பருப்பவைவழங்குமன்பர்பண்ணவர்க்கண்ணலாவர்
பொருப்புவிலிராமலிங்கம்பூசனைபுரியக்காண
வுருப்பொலிவுணரத்தீண்டவொழிந்திடும்வினைகளெல்லாம். (சுங)

நாடியபுகழிராமநாதனுமம்பலத்து
ளாடியையுன்னிக்கண்டையாடியையளிக்குமன்பர்
கோடியகனகச்சில்லிக்கொடிஞ்சிநூறுடையராகி
வர்டியமருங்குல்பங்கன்வாழ்சிவபுரத்தில்வாழ்வார். (சுச)

குடமுழாத்திமிலைமொந்தைகுணிலுடைநந்திதட்டை
படகமாகுளிமுன்னுகும்பலவகைவாச்சியங்க
ணடநவில்சரணிராமநாதனுக்களிப்பாரன்னே
னிடமிகுமுலகிற்பன்னுளிருப்பர்பல்லியங்கலிப்ப. (சுரு)

புங்கவனிராமநாதன்பொருட்டகல்புவியினுள்ளோர்
தங்கையாற்றருவதொன்றுதானணுவளவிற்றேனு
மங்கஃதநந்தமாகுமவன்றிருமுன்வசிப்போ
ரிங்கினிமீளவாராரின்பவீடெய்துகிற்பார். (சுசு)

ஆயுளுங்கடிதுசெல்லுமகன்றிடுமிளமைமக்கள்
சேயிழைநிதிநாடெல்லாந்திண்டிறல்வேந்தர்கொள்வா
ரேயிஃதென்னையென்னுயாவையுந்துறந்திராம
நாயகன்றன்னைநெஞ்சினுடுவார்ஞானமிக்கோர். (சுஎ)

இடுக்கணென்றிட்டவெல்லாமிரிந்திடுமிராமநாதன்
கடுக்களத்தெந்தையெம்மான்கண்ணுதல்சடியவேங்கை
யுடுக்கையான்சரணமேன்மையுணாப்பதேயுயர்நெறிக்கண்
மடுக்குநூன்மரபினுய்ந்தமதிப்பயன்மாதவத்தீர். (சுஅ)

மராமரமேழுமங்கோர்வாளியாற்றுளைத்தவள்ள
லிராமனுதரத்தாலர்ச்சித்தேத்தியவிறைவற்கேற்ற
கிராமமீகுநர்தாம்யாக்கைக்கேட்டினிற்கேடிலாத
வராவணிவலயத்திண்டோளையனதுருவமாவார். (சுகு)

தங்குமித்தரையில்வானிற்றலைமைசால்பாத்திரத்துப்
பங்கயன்றலையாற்செய்தபாத்திரங்கையிலேந்து
மங்கணனிராமநாதனதிகபாத்திரமாமந்தச்
சங்கரற்குதவுமற்பந்தான்பெரிதளப்பின்றாகும். (எ0)

குடைகொடிவிசிறிசாந்தங்குக்குலுக்கொடுக்குமன்ப
ரடையவிஞ்ஞாலமெல்லாமளித்திடுமரசராவர்
தொடைபுனைவதற்காம்வாசத்தூமலர்வழங்குவார்க்கு
நடைமிகுபுரவிமேதநன்மகப்பேறுண்டாகும். (எக)

சிட்டர்சூழிராமநாததெரிசனமேவர்க்கேனுங்
கிட்டுமேற்றீர்த்தம்வேதங்கிருதுமாதவங்கள்வேண்டாங்
கொட்டமான்மதந்துருக்கங்கொடுப்பவர்சுருதிவேலை
யெட்டருங்கைலைக்கண்டாக்கமெண்ணிலவெய்துவாரே. (எ௨)

நரைவிடையூரிராமநாதனுக்கிலங்குசோதித்
தரளமாரலங்கலீவார்தாங்கணல்குரவிற்றாழா
ரரவமார்கங்கைநீராலவ்விலிங்கத்தையாட்டும்
வரமுளார்தம்மைமுக்கண்வள்ளலும்வரிசைசெய்யும். (எ௩)

இந்தியம்பிறழுமுன்னேயிரங்குடறிரங்குமுன்னே
சிந்தனைதியங்குமுன்னேசிரோருகம்வெளுக்குமுன்னே
யந்தம்வந்தணுகுமுன்னேயருச்சனையினைழத்திறைஞ்சி
நந்தமர்குழையிராமநாதனைநண்ணல்வேண்டும். (எ௪)

முன்புளசாத்திரங்கண்முறைசெழுபுராணமெல்லா
மன்பினுலிராமநாதனருணனைந்திறைஞ்சுவார்கள்
பின்பயில்கின்றதங்கள்பிறங்கடையும்பலோடு
மின்பமுற்றிருப்பரும்பொய்துவர்முத்தியென்னும். (எ௫)

வேறு.

நற்காதையீதுபேசுநாவினர்நட்போடுகேள்வியூடுநாடுவார்
விற்கோடிமூழ்குபேறுமேவுவார்மெய்த்தாணுவாமிராமநாதனூர்
பொற்கால்கள்காணுநீரராகுவார்பொய்ச்சார்பிலாதஞானமாதவீ
ரெற்கேழிராமநாதன்மேன்மைதானிப்போதுகூறினேமியாமரோ. (எ௬)

இராமநாதச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௨௬௧௨.

## இராமனருச்சனைச்சருக்கம்.

பல்லாறுபடுஞ்சமயப்பொருள்பற்றிநின்றோ
ரெல்லார்களுமேத்தியிறைஞ்சுமிராமநாதன்
சொல்லார்புகழ்கூறியசூதனைமாதவத்தோர்
நில்லாதெழுநாரின்வினாவிநிகழ்த்தலுற்றார். (க)

நீயேமறைமெய்ப்பொருளுண்மைநிலைப்படுத்தோ
னீயேபலதொல்கதைவாரிதிநீந்தியிட்டோ
னீயேயுயிர்கட்கருள்கூர்ந்திடுநேயமிக்கோ
னீயேநினையொப்பவன்யாருனைநேருகிற்பார். (௨)

வேதத்துறைகண்டவியாதனற்பாதநண்ணிக்
கேதத்துறைநீக்குபுமேற்படுகேள்வியானே
சேதுத்துறைமேன்மைகணீயுரைசெய்தலாலே
போதத்துறைபெற்றனம்யாமிதுபோதுமாதோ. (௩)

முந்தப்படிவந்தவிராகவன்முக்கண்மூர்த்தி
சந்தப்படிவப்பிரதிட்டைதனைப்புரிந்தா
னெந்தப்படிமற்றதுகேட்டுணரிச்சைமிக்கே
மந்தப்படிசொற்றருளென்றனரையரானோர். (௪)

அறிவாலுயர்சூதனுமப்பொழுதாரணத்தீர்
மறிவாரிதிசூழ்தருகந்தநன்மாதனப்பேர்
நெறியார்வரைமுன்னரிராகவனீடிலிங்கம்
பிறியாமைநிறுத்தமைபேசுவனென்றுபேசும். (௫)

முனையாடிறல்வேற்கையிராவணன்முன்புகாட்டின்
மனையாடனைவஞ்சமிழைத்தனன்வெளவியேக
நனையாடொடைராகவனண்புறுதம்பியோடுஞ்
சினையாடருமேலுறைவானரச்சேனையோடும். (௬)

கானேறுமிடத்தினைநீங்குபுகைவிலேந்தி
வானேறுமகேந்திரவெற்பினில்வந்ததன்மேற்
ருனேறுபுசானகியென்பவடந்தமால்போன்
மீனேறுகடற்றிரைவீசிடுமேன்மைநோக்கி. (௭)

வேலைக்கரைநின்றுவினைக்கடலேற்றுதன்றன்
காலைப்புரைநீள்கரையொன்றதனூடுகட்டி
மாலைக்குழலைச்சிறைவைத்தவன்வாழிலங்கைச்
சோலைக்கடிஞாயின்மதிற்புறந்துன்னியங்கண். (௮)

புரைபாய்நிலவெண்மதியந்தியம்போதுவாவின்
விரைபாய்சுருட்சீதையைவிண்டமர்வெம்மையாற்றுன்
வரைபாய்பவனுமெனவேறினன்வானரத்தி
னிரைபாய்படையோடுசுவேலைநெடுஞ்சிலம்பின். (௯)

ஒப்போதருமாண்பினிராகவவுன்னைநீங்கா
வப்போதெனைவென்றிகொள்சானகியானனந்தா
னிப்போதெனையொத்ததுகாணுதியென்றுதிங்கண்
மைப்போதனையாளொடுசொல்லியவந்ததும்பர். (௧௦)

நிறைபட்டநிலாக்கதிரொங்குநிரம்புகாட்சி
யறைபட்டபயோததிதன்மகளாங்கரக்கர்
சிறையிட்டிடவாடியிருந்திடுசெய்தியெல்லா
முறையிட்டிடவந்ததுபோன்றதிராமன்முன்னம். (௧௧)

சாய்தற்குடனெஞ்சுதளர்ந்துதவித்திராம
னேய்தற்களவேதகல்சீதையையுன்னியுன்னிக்
காய்தற்கெழுதிங்களுமேனிகரிந்துநாளுந்
தேய்தற்குளம்வைத்தவனின்றதுசேணிலம்மா. (கஉ)

கன்மேனிலையுற்றழியாதவன்காளையீசன்
வின்மேனிலைகாரிலிராவணன்மேனிலத்தின்
முன்மேன்மையினின்றமைகாணுபுமுன்னியன்னோன்
றன்மேன்மகுடத்தினைவாங்கினன்மீதுதாவி. (கங)

சிலையார்கையிராக்கதர்காலறுசெய்கைகாட்டத்
தலையார்சயமெய்தினன்வானரத்தானைமன்னன்
றெலையாவொளிவீசிடுசூரியன்றோன்றலுற்று
னிலையாயிடுமேகொலிராவணனீர்மைதானே. (கச)

மாலாருயிர்சென்னிவழிக்கழிவெய்துமாபோன்
மேலார்முடிபோனபினில்லிடைமேவிவென்றி
யேலாதவிராவணன்வீரரினத்திழிந்தா
னீலார்முகில்வண்ணனும்வெற்பிடைநின்றிழிந்தான். (கரு)

வேறு.

தாழவந்தபின்றசரதனொருதிருத்தனயன்
காழில்கோடரப்பதாதியைக்கருங்கடன்மருங்கின்
வாழிலங்கையையகவயின்வெண்டிரைவளர்பா
லாழிசூழ்ந்தெனவதற்கருகணிபெறவமைத்தான். (கசு)

ஒட்டுடன்றிரள்வானரர்தமைத்திசையும்ப
லெட்டும்வென்றவனேவலாலிரும்படைத்தலைவர்
மட்டிருளையினோடும்வந்தேற்றனர்வானை
முட்டுமேனியரோதியங்கையர்பன்முகத்தர். (கஎ)

அனையராமவர்பருப்பணன்பூதனனரிசன்
சினமிகுங்குரோதவசனீள்கரனெடுசிரும்பன்
வனைகழற்பிராரிசனரிமுதலினோர்வஞ்ச
வினையின்மிக்கவரவர்செயல்விளம்பலாந்தகைத்தோ. (கஅ)

பல்லுருக்கொடுபாதகமெழுந்தெனப்படர்ந்த
கல்லுருக்கெழுமொய்ம்பினரவர்தமைக்காணூஉத்
தொல்லுணர்ச்சிகொள்வீடணன்மறைந்தொருசூழல்
வில்லுயிர்த்திடுகணைகடேய்த்தரைப்படவீழ்த்தான். (ககூ)

மேதினிப்படவீழ்ந்தவர்தங்களைமீண்டுங்
கோதிலாக்கவிவீரரிற்சிலவர்தாங்குறுகிக்
காதிவெண்பலாற்கறித்தலுமவணுயிர்கலங்கிச்
சாதியாதமர்மாண்டுயிர்மெய்ந்நிலைசாய்ந்தார். (உ0)

ஆவியெஞ்சினரன்றியேயெஞ்சினரடங்க
மேவினார்நகரிலங்கைகோனெயிற்புறமேவி
வாவுகோடரத்தானைமேற்கொடுமரம்வணக்கித்
தூவினன்கணைமாரியெண்டிசைகளுந்தூர்த்தான். (உக)

இரந்தரம்பிறிதின்றியேபகழிகளேவ
விரந்தவீரர்தாநீங்கினர்நின்றனனெடுவிற்
கரந்தரும்புயலன்னவன்கண்டுகண்சிவந்து
வரந்தருந்திறலிராவணன்றனக்கெதிர்வந்தான். (௨௨)

வருமிராகவற்றெரிதலும்வரம்பிலாமுகமாத்
தருமிராக்கதர்தானையைத்தசமுகனிறுவிப்
பொருமுறைச்சமர்தொடங்கினனன்றவர்போரி
லிருமதக்கரிதம்மிலேற்றெனவெதிரேற்றார். (௨௩)

பகரிராவணன்பாணியோரிருபதாற்பண்ணு
மிகலிலெண்மடங்கிராகவனிருகையாலிழைப்பப்
புகரில்வானவர்கண்டிறும்பூதுளங்கொள்ள
நிகரிலாதவரிருவருநேர்ந்துழியங்கண். (௨௪)

கனமிரண்டெனக்கருங்கடலிரண்டெனக்கனலி
யனையராற்றிடுஞ்சமர்க்கயலரக்கர்கோனளித்த
தனயனிந்திரன்பகைஞனுமிராகவன்றம்பி
யெனுமிலக்கிலாவிலக்குமன்றானுநேரெதிர்ந்தார். (௨௫)

செருவடங்கிலாவிரவிசேய்திறல்விரூபாக்கன்
வெருவடங்கிலாதுடைந்திடவேறெதிரேற்றான்
கருவடன்றனையங்கதன்றானெதிர்கலந்தான்
பருவுடம்புடைப்பவுண்டரனளன்றனேர்படர்ந்தான். (௨௬)

பனசனேர்ந்தனன்படசனைவென்றிசைபடைப்பா
னினையவாற்றினிலெண்ணிரியிராக்கதரெவருஞ்
சினவுவாட்கவிவீரருமெதிரெதிர்செறிந்து
முனையினேர்புரீஇத்தொந்தமாஞ்சமர்வினைமுயன்றார். (௨௭)

தொடங்குதொந்தவெம்போரினிற்கவிகளாற்றுலைந்தே
யடங்கவோடினரிலங்கையையடைந்தனரரக்கர்
கடங்கொள்வேழநேரிராவணன்கௌசிகன்பகையா
மடங்கலேற்றினையேவினன்வானரப்படைமேல். (௨௮)

மைந்தன்மற்றவன்மைந்தினல்வானரவீரர்
சிந்தியோடினரிராமனுஞ்சுமித்திரைசேயும்
பந்தமுற்றுளமயங்கினர்பன்னகக்கயிற்றா
லந்தமாண்பிணியகற்றினர்பறவைவேந்தருளால். (௨௯)

கடியகிப்பிணிதீர்ந்ததன்பின்பிரகத்தன்
றடியெடுத்துவந்தெதிரிலாவீடணன்றன்மே
லிடியெனத்தெழித்தெறிந்தனனெறிதலுமிமைய
நெடியவெற்பெனமற்றவன்கலங்கிடாநின்றே. (௩௦)

கட்டுவான்பிரகத்தனைக்கருதியேகனல்கா
லெட்டுமாமணியிறுக்கியவெஃகினையேந்தி
விட்டுரப்பினனவன்றலைமேலிடியென்னப்
பட்டதாலுடல்வீழ்ந்ததுபராரைமாமரம்போல். (௩௧)

மாமினிற்சுடர்வேலினுற்றன்னுயிர்மாய்ந்து
போமிகற்பிரகத்தனைக்கண்டுளம்புழுங்கி
நேமியிற்கிளர்சிரந்தமாவீரர்மேனெருங்கித்
தூமிராக்கனுங்குழிஞைசேர்சூறையிற்றுரந்தான். (௩௨)

அஞ்சுகோடரங்கண்டொருதருவினையனுமான்
றுஞ்சுமாறெதிர்தூமவெங்கண்ணன்மேற்றுரந்தா
னெஞ்சமற்றவனெஞ்சினுரிராவணன்மருங்கு
தஞ்சமென்றுபோயுரைத்தனர்புகுந்தவத்தன்மை. (௩௩)

மண்படைத்தவன்மதலைசேய்மைந்தனுங்குருத்துக்
கண்படைக்கொளுந்தம்பியையெழுப்பியேகலந்த
திண்படைத்திறஞ்செப்பியேசெல்லெனச்செலுத்த
வொண்படைக்களங்குறுகினன்குடச்செவியுரவோன். (௩௪)

இலங்கைகோனிளையானெடுமிராகவற்கிளையான்
வலங்கொள்போர்நெடிதாற்றியேவனசமாளிகைமேற்
பொலங்கொணுன்முகனீர்முகச்சிலீமுகப்புத்தேட்
குலங்கொண்மொய்ம்பினனுயிர்ப்பலியூட்டினனுவப்பால். (௩௫)

கும்பகன்னனுண்டிறந்தபின்குளிர்மதுப்புகட்டுந்
தும்பியன்னவரிருவர்தாந்தூடணனென்பான்
றம்பிமார்தமையொத்திடார்தசமுகனல்லார்
வெம்புநீலனுல்வாயுவின்சேயினுல்விளிந்தார். (௩௬)

வயிரதந்தனைவானவர்தபதிசேய்வதைத்தா
னுயிர்கவர்ந்தனனகம்பனைக்குமுதனுமுரவோ
னயர்வுகூர்ந்திரண்டாவதாநந்தைநாளடர்போர்ச்
செயறிரிந்துபோயிராவணனகரியைச்சேர்ந்தான். (௩௭)

பின்றையாகவத்திலக்குமன்பெருஞ்சிலையெழிலி
நின்றுகான்றிடுஞ்சரமழைநனைந்துயிர்நீத்தார்
கன்றுளத்ததிகாயனுங்காலனைக்கவளந்
தின்றுதேக்கிடுந்திண்டிறற்றிரிசிரத்தவனும். (௩௮)

இகனராந்தகன்றேவவந்தகனெனுமிருவர்
பகலவன்மகனுற்குடக்குழையினன்பயந்த
தகவிலோரிருதனயர்கண்மாருதிதன்னுன்
மகரநேத்திரன்வீடணனுலவண்மாய்ந்தார். (௩௯)

ஆற்றலாலுயரிராவணனதன்பினந்தரர்கோன்
மாற்றலான்றனையேவினன்மற்றவன்வந்து
போற்றலார்படைத்திரளொடுமிருவரும்புலத்திற்
றேற்றலாமருள்வாளிதூய்மம்மர்செய்திட்டான். (௪0)

அங்கணங்கதன்சிதியேயன்னவனூரும்
வெங்கணூர்தியைவீட்டலுமேதினியதன்மேற்
றங்கலின்றியாகண்டலன்றண்டலன்றனிப்போ
யெங்குமாகியவிசும்பினுட்கரந்துபுக்கிருந்தான். (௪௧)

சாம்பவன்னளனங்கதன்றரணிசேய்தன்பே
ராம்பலான்முதலனைவருமவன்கையத்திரத்தாற்
சோம்பிவீழ்ந்துணர்வழிந்தபின்கோசலைசுதன்ருள்
கூம்புசெங்கையான்வீடணன்கூறுவான்குறுகி. (சஉ)

கோசலாதிபகேண்மதிகுய்யகன்கரத்தி
லேசிலாவொருதெய்வநீரியக்கர்கோன்விடுத்தான்
காசிலாவதுகொண்டுகண்கழீஇயினுற்ககன
மீசுலாவுறும்யாவையும்வெளிப்படத்தெரிக்கும். (சங)

அளிக்கநின்கையேற்றம்பகங்கழுவினரொவர்க்குந்
தெளிக்குமென்றனனென்றலுஞ்சிறப்புடன்வாங்கிக்
களிக்கும்வாரிசமலர்மிசைக்காம்புநீள்கஞ்சந்
துளிக்கும்வேரியிற்கரங்களாற்பெய்துகண்டுடைத்தான். (சச)

எழிலிராகவனிந்திடக்கொண்டிலக்குமனும்
பழுதில்சாம்பவன்பரிதிசேய்வாலிதன்பாலன்
வழுவின்மாருதிமயிந்தனேதுமிந்தன்மற்றெவருங்
கழியினூர்விழியப்புனலான்மருள்கடிந்தார். (சரு)

ஆயகாலையிலந்தரநிலைக்கொளுமரக்கன்
சேயையாவருங்கண்டனரிலக்குமன்சீறித்
தாயடித்தனனவன்றனையன்றவர்தமக்கு
மாயிருஞ்சமர்விளைந்ததுவானவர்மருள. (சசு)

தேவர்கோன்மருவலன்றனைவல்லவாசெருவி
லோவிலாதுளந்தரித்தொருவகையினுலொருமூன்
றுவதாகியவைகலினணிமதிலயோத்தி
காவலன்றனக்கிளையவன்கொன்றுயிர்கவர்ந்தான். (சஎ)

மூலமாகியபலமெலாமிராகவன்முடித்தான்
காலமன்னதிலிராவணன்கடுஞ்சினந்திருகிக்
கோலமெல்லிடைச்சீதையாங்கொம்பராயொசிப்பான்
மாலுளங்கொடுபடர்ந்தனன்மதங்கயமன்னான். (சஅ)

அந்திலன்னவளாவிசென்றழித்திடாதரக்கன்
விந்தியன்றகைந்திடுதலுமீண்டுதேர்மிசைக்கொண்
டுந்துமாண்படையிருணடுவதன்பிழம்பொப்ப
வந்தனன்களத்தவண்மகவானனுமதியால். (சகூ)

சயந்தனக்கிணைதீர்பசும்புரவியிற்றயங்குஞ்
சயந்தனங்கொடுவந்தனன்பரிதிதாழ்ந்தென்னச்
சயந்தனன்புறுதாதைதன்சாரதிகருப்பா
சயந்தனன்பருக்கொழித்திடுமிராகவன்றன்முன். (ரு0)

இடிஞ்சிறூண்டிடவெழுஞ்சுடர்மூலநேரிராமன்
கொடிஞ்சிமற்றதிலேறியேகொடுமரங்குனித்து
முடிஞ்சிடாமுடிபத்தையுமுண்டகன்கணையாற்
றடிஞ்சிராவணற்கொன்றுடல்வீழ்த்தினுன்றரைமேல். (ருக)

வேறு.

ஆங்கணிமையோர்களுமருந்தவருமாகி
யேங்கொலியிலங்கைமனிராவணனையாவி
வாங்கவரிவிற்குவடுவாங்கியவிராம
னேங்குதிறல்வென்றியையுவந்தினிதுரைத்தார். (ருஉ)

நேரியபொருட்கொடைநெடுந்தருவினெண்பூ
மாரிகள்சொரிந்தனர்வழுத்தினரவ்வேலை
யேரியலிராகவனியாவரொடுமெந்தண்
வேரிகமழ்புட்பகவிமானமிசையேறி. (ருங)

சீதையைமணம்புரிதினத்தின்மகிழ்வெய்தி
யோதமெறிவாரிநடுவூடமரிலங்கை
நாதனெனவீடணனைநல்கியுயர்கந்த
மாதனமடைந்தனன்வரம்பில்படையோடும். (ருச)

அண்டரொதிரவ்வரையழற்கரியதாக
வண்டமர்குழற்சனகிமாசுதெளிவித்தே
கொண்டகுழுவோடுதிகழ்கோசலைமகன்பாற்
றண்டகவனத்துறைதபோதனர்புகுந்தார். (ருரு)

பாடுறுதமிழ்த்துறைபகுத்தமுனிமுன்னாக்
கூடிவருமாதவர்கள்கோதைபுனைசீதை
வீடணனிலக்குமன்விறற்கவிகள்விண்ணோ
ரோடமரிராமனையுகந்துபுகழ்வுற்றார். (ருசு)

அப்புகழ்மொழித்திறமதிந்திடும்விருப்பா
லெப்பரிசெனக்கடவினீரிருடிகாணீ
ரொப்புறவுணர்ந்திடுமினென்றுமொழியாதே
செப்புவன்முனித்தலைவர்செப்பியவையெல்லாம். (ருஎ)

எந்தையிவைகேண்மதியிலங்கொளியிராம
சந்திரவிராகவதயாபரதரங்கச்
சிந்துவுடையாளையருள்செய்குதல்பொருட்டால்
வந்தனையுனைப்பதம்வணங்குதுமியாமே. (ருஅ)

அராவணன்முடித்தலையதன்கணமர்ஞால
மராவணமதாவவதரித்திடுமெருட்சி
தராவணமுலைத்தெரிவைதாடகைதன்னாவி
தராவணர்சிலைத்தலைவதாழ்ந்திடுதும்யாமே. (ருகூ)

காதிமகன்வேள்விநிலைகாத்தருள்சுரந்தோய்
மாதருறவந்திடுசுவாகுவைவதைத்தோய்
மேதகையதானதிறன்மாரிசனைவென்றோய்
கோதமன்மனைக்கருடாள்கும்பிடுதும்யாமே. (சூ0)

ஓர்சிலைகுனித்துடனொடித்திலகுசுட்டி
வார்சிலைநுதற்சனகிவாஞ்சைதணிவித்தோய்
சேர்சிலைவயப்பரசிராமனிகல்சிந்தக்
கூர்சிலைவளைத்தமுகில்கும்பிடுதும்யாமே. (சூக)

மாதவள்கைகேசிகொள்வரத்திருமையாலே
தாதைசொல்வழாமலொருதம்பியொடுமெம்பொற்
சீதையொடும்வாசமதுசெய்திடவனத்தே
போதுமுனசேவடிகள்போற்றுதுமியாமே. (௬உ)

பிற்பரதனன்னைசெய்பிழைக்குளமிரங்கு
மற்புநெறிகண்டருளடித்துணையினானே
யெற்புருவகன்றுசரபங்கனினிதேறப்
பொற்புவிகொடுத்தபுகழ்போற்றிடுதும்யாமே. (௬௩)

வெற்றிகொடிறற்படைவிராதனைவதைத்தோய்
குற்றமில்சடாயுவொடுகொண்டமிகுநண்போய்
மற்குலவுமானுருவமாரிசனையட்டோய்
பொற்கமலநின்னடிபுகழ்ந்திடுதும்யாமே. (௬௪)

இடுக்கணிலிராவணனெடுத்தசனகிக்காத்
தடுத்தமர்விளைத்திடுசடாயுவுயிரேக
முடித்திடுகனற்றொழிலைமுற்றிடுபுமுத்தி
கொடுத்தநின்னடித்துணைகள்கும்பிடுதும்யாமே. (௬௫)

கவந்தனைவதைத்தனைகடக்கரியவென்றித்
தவந்தருநலத்தினொடுதாவிலருணைய
முவந்தரியவந்தனையுடன்சவரிபோற்றுஞ்
சிவந்தகழல்சென்னிமிசைசேர்த்திடுதும்யாமே. (௬௬)

மேலிரவிமைந்தனொடுமேவரியநண்பாய்
வாலியுயிருண்டனைவயக்கவியினத்தாற்
கோலியொர்குரம்பதுகுயிற்றினையளக்கர்ப்
பாலினையநின்னடிபணிந்திடுதும்யாமே. (௬௭)

எண்ணிரியரக்கருமிராவணனுமாளத்
திண்ணவரிவிற்குனிவுசெய்ததிறல்வீரா
வுண்ணினையுமன்பரிடரோடவருள்கூரு
மண்ணலுனசேவடியடைந்திடுதும்யாமே. (௬௮)

நாசமறுபூரணமெய்ஞ்ஞானசுகரூபா
மாசறுமிராமமுதன்மந்திரமுலாப்பா
ராசறுபவக்கடலினம்பியெனவந்த
கோசலைதருங்குமரகும்பிடுதும்யாமே. (௬௯)

முத்தொழிலிழைத்திடுமுதற்கடவுளாகி
மெத்துகருணைச்சலதிமேனியொடும்வந்த
தொத்தருளியன்பர்கணுவப்புறுமுளங்கூ
ரத்தவுன்னடிக்கபயமாயினமியாமே. (௭௦)

வெங்கொலையரக்கர்கிளைவேரொடுமகழ்ந்தே
சங்கையறநோன்புபுரிதன்மையருள்செய்தா
யெங்களையளித்திடுதியென்றுமெனவேத்தி
யங்கைமலர்கூப்பினரருந்தவர்களெல்லாம். (௭௧)

வேறு.

சீதைசேர்மார்பினனைத்திருமறைமுனிவர்கூடி
யோதியபுகழ்முப்போதுமுரைப்பவருலகில்வேண்டுங்
காதலினின்பமார்ந்துகதிநிலைகாண்பர்வட்டை
போதிடிற்புகல்வார்க்கச்சம்புந்தியிற்புகுவதில்லை. (௭௨)

படிப்பவர்தம்மைச்சேராபாரிடம்பிசாசுமற்று
முடிக்கரும்வியாதிபாவம்யாவையுமுடிவுற்றேடும்
வெடித்தசொல்லரக்கர்வாணுள்வீட்டினேன்புகழ்ச்சிராவி
ஞெடித்தவரடைவரம்மாதுண்ணறிபுதல்வர்தம்மை. (௭௩)

படித்திடிற்கன்னிதானும்பங்கயக்கண்ணன்சீர்த்தி
கிடைக்கருங்கொழுநன்றன்னையடைகுவள்கிளர்ந்தசெல்வ
மடிக்கழலடையுமுத்தியன்றியும்வேட்டயாவு
முடிப்பர்களிராமன்சீர்த்திமொழிந்திடுமொந்தர்தாமே. (௭௪)

அத்தவமுனிவர்தம்மையஞ்சலிபுரிந்திராமன்
பத்தியினடியிங்கென்பங்கயவிழியிற்பட்டோர்
முத்தரோயெனினுமென்னைமுதல்வனேயென்றியாரும்
வைத்திடற்குரியனேனும்வரந்தரவல்லனேனும். (௭௫)

உற்றிடுமுயிரிலாபத்துவகைகூர்ந்தொறுப்பில்சாந்தி
பெற்றுயிரொவைக்குமன்புபெருகியானெனதின்முகி
வெற்றவைம்புலனடக்கிமேம்படுமறையோர்தம்பாற்
பற்றுளனுதலாலேபகர்வதொன்றுண்டுகேண்மின். (௭௬)

பொருணிலைதெரிந்துநன்றுப்புகலுமினிலங்கைபோற்று
நிருதனைக்கொன்றபாவநீங்கிடவெனக்குநீங்க
ளொருபரிகாரமென்றுனுரைசெய்வாருறுவரானோர்
வருதியாலிராமவாய்மைவிரதனேயகிலமன்னு. (௭௭)

ஓதியவாறுநன்றேயுமையொருபாகன்றன்னைப்
பூதலமுய்யப்பூசைபுரிதிநீயிந்தக்கந்த
மாதனமுத்திநல்குமற்றிதினிலிங்கமூர்த்தி
நாதனைநாட்டிற்றீருநண்ணியநவைகளெல்லாம். (௭௮)

இங்கிதிலிலிங்கந்தாபித்திடும்பலமியம்பலாற்றுன்
பங்கயன்றுனுமாக்கள்பாலதோபகருந்தன்மை
கங்கைசேர்காசிலிங்கங்கண்டதிற்கோடிபேறு
அங்கநீசிறுவிலிங்கச்சோதியைத்தொழுவார்க்குண்டாம். (௭௯)

நயங்கெழுமிந்தலிங்கஞாலமேலுன்றன்பேராற்
றயங்கொளிவிளங்கிராமேச்சரமெனத்தழைக்கநாளு
முயங்கிருவினையாங்காட்டக்குதவகனுகுமற்றிவ்
வயங்கருளிலிங்கமையாவல்லையிற்புரிதியென்றூர். (௮௰)

ஒண்ணுதல்சீதைகேள்வனுளமகிழ்ந்துறுவரோடும்
புண்ணியப்பொழுதிரண்டுபுந்தியிற்றெரிந்துபோரோற்
றண்ணல்வாழ்கயிலைமேவியருட்குறிகொணருமாற்றுற்
கண்ணியதமைக்கும்வென்றிக்கான்மகற்குறித்துச்சொல்வான். (௮௧)

அஞ்சனையஞ்சனக்கணருமணியனையசெல்வ
மஞ்சனேமாதுபாகன்வடகுலகயிலைக்கேகித்
தஞ்சமாரிலிங்கமூர்த்திதருதியாற்கடிதினென்றுன்
கஞ்சமார்கண்ணன்காலிற்கான்முளைகரங்கள்கூப்பி. (அஉ)

கடவுளர்முனிவர்காணக்கந்தமாதனமெனும்பேர்த்
தடவரைபிலத்திற்றழ்ந்துதான்சிறிதெழுந்துவிண்ணிற்
படிமிசைநிலைப்பவுந்திப்படர்ந்துவான்பனிவெண்டிங்கண்
முடியவன்கயிலைமேவ்முக்கணுற்றெழுதுவெற்பின். (அங)

குணதிசைநுனியாவேய்ந்தகுசையிருந்தங்கைகூப்பிப்
பணவரவனையவைவாயுளம்பதைப்பதையடக்கி
யுணவினையின்றியாற்றியுயர்தவமுலைமயாணங்கை
கணவனதருளாற்பெற்றுன்காண்டகுமிலிங்கமூர்த்தி. (அச)

ஈதிவன்செய்கையாகவிவன்வருவதற்குச்சற்றுப்
போததின்முன்னிராமன்புதுமதிவதனநாடி
மாதவர்வகுத்தவேலைவந்ததுநிறுப்பாய்வல்லை
சீதைவாலுகத்தாற்செய்தசிவனருட்குறியையென்றுர். (அரு)

ஆற்றுவனழகிதேயென்றருந்தவரமரரேனே
ரேற்றமார்சனகிபின்னேனிவரொடுமெழுந்தவேட்கை
மாற்றருமகிழ்ச்சியோடும்வரிசிலைக்குரவன்வெள்ளை
நீற்றரனருளின்சின்னநிறுத்துவானினைந்தெழுந்தான். (அசு)

சூரியன்மிதுனம்வைகச்சுக்கிலபக்கமேவுங்
கூரியன்றினத்தோடத்தங்கூடியதசமிதன்னிற்
சீரியவெதிபாதத்திற்றிகழ்தசயோகந்தன்னிற்
காரிகைமதியோடுற்றகாலையிற்கடுவினீற்றில். (அஎ)

சங்கரனூர்திநாமந்தாங்கியபவனந்தன்னிற்
பொங்குநீராடிநித்தம்புரிசெயன்முறையிற்போற்றிக்
கங்கணங்கரத்திற்சேர்த்திக்கண்டிவெண்ணீறணிந்திட்
டங்கரன்பதிட்டைக்கேற்றவாகமக்கடன்களாற்றி. (அஅ)

அதிர்திரைக்கங்கைநீரிலணிபெறவளர்ந்தவேணி
முதிர்சுடர்ப்பவளக்கொத்தின்முகிழ்த்தவெண்முகிழம்போலக்
கதிரிளநிலவுதோன்றக்கடியராக்கயிற்றிற்கட்டுஞ்
சதுர்மறைக்கரோடிமுட்டாட்டாமரைவாசம்வீச. (அகூ)

அஞ்சுடர்முகங்களைந்தினலங்குதண்சுடர்க்கணென்றும்
வெஞ்சுடர்விழியிரண்டும்வேறுவேறொளிவிளங்கச்
செஞ்சுடர்மணிப்பைநாகத்திருக்குழைவயங்குகாது
நஞ்சுடைக்களமுங்கண்டோர்நற்றவப்பேறுநல்க. (கூ0)

ஐயிருதடந்தோள்வெற்பிலாடராத்தொடிதயங்கக்
கையிரண்டைந்திலேந்துங்கவின்படைக்கலன்றழைப்பச்
செய்யதார்மார்பிற்றுன்செய்திருப்பணியாகும்பன்றித்
துய்யதோர்கோடுமாமைத்துளங்கொளியோடுந்தூங்க. (கூக)

கடுவுமிழ்வெள்ளெயிற்றுக்கட்செவிக்கச்சியாத்த
வடுவறுமருங்கிற்சாத்தும்வயவரியுரிவயங்கத்
தொடுகழலமரர்சென்னித்துணைப்பதந்தன்னிற்முன்மு
னிமெலர்நயனமாழியெய்தியபேறுணர்த்த. (௯உ)

எழுமனத்தன்பிற்பாவித்திராகவனிதயநின்றுஞ்
சுழுமுனைநெறியிற்கொண்டுதுவாதசாந்தத்திற்போகி
வழுவறுமந்திரத்தால்வந்திடப்பிராணமார்க்கந்
தழுவுதன்கரத்திற்முங்கிச்சத்தியோசாதந்தன்னில். (௯௩)

வடம்பிரியாதகொங்கைமலைவளர்காதன்மங்கை
யிடம்பிரியாதகாட்சியிலிங்கமாமீசன்றன்னைக்
கடம்பிரியாவிலங்கற்கந்தமாதனமாங்கார்கோட்
டடம்பிரியாதசேதுத்தன்னிலேதாபித்திட்டான். (௯௪)

தாவனஞ்செய்ததாணுத்தனக்கபிடேகஞ்செய்வான்
கூவலொன்றகழ்ந்தான்வில்லின்கோடியாற்குழகன்முன்னிற்
சேவுருமருவுநந்திதேவையும்பதிட்டைசெய்தான்
காவலனயோத்திவேந்தன்கவுசலைகண்களன்னான். (௯௫)

ஆசனைவருக்குந்நீர்க்குமக்கிணற்றுதகமேன்மை
பேசினமுமக்குமுன்னேபெருந்தவமுனிவீர்பின்ன
ரீசனையிலிங்கமூர்த்தியிசைந்தருளெம்பிரானைப்
பூசனைபுரியலுற்றுன்புரவலனிராகவன்முன். (௯௬)

பரவுமானைந்துசெந்தேன்பலகனியிளநீர்முன்னு
விரவுசீரபிடேகங்கள்வேண்டியவாறியற்றிக்
கரமலர்முகந்துகூவற்கமழ்நறுந்தெண்ணீராட்டி
யரனையொற்றுடைசேர்த்தியாடகவறுவைசாத்தி. (௯௭)

சிந்தையால்வருந்தித்தானேதேடியன்றளக்கலாகா
வெந்தையார்பாதங்காணுஉவிளநகைமுகத்தனுகி
முந்துதானிட்டநாட்டமுண்டகமலர்த்துவான்போற்
பைந்துணர்மலர்தோய்நன்னீர்ப்பாத்தியந்தான்கொடுத்தான். (௯௮)

கலைநெறிமறைகளோடாசமங்களாங்கருணைவேலை
யலையெறிமுகங்கடோறுமாசமனங்கணல்கித்
தலைமையோரொளினுஞ்செய்யுந்தகுதிசெய்திடுவதென்னு
வலையுறழ்சடிலச்சென்னிக்குதவினனருக்கியந்தான். (௯௯)

கோதிலாக்கலவைகூட்டிக்குங்குமக்குழம்பினுட்டிச்
சோதிமாமகுடஞ்சூட்டிச்சுடர்மணியாரம்பூட்டி
யோதனஞ்சுவைகளாறுேட்டிநல்லுதகமூட்டி
நாதனுக்கினியதூபநகையொளித்தீபங்காட்டி. (௧௦௦)

எண்ணிரண்டுபசாரங்களெஞ்சிடாவகையியற்றிக்
கண்ணிநூன்முறையினுள்ளகருமங்கள்பிறவுமாற்றி
யுண்ணிறையன்பினூற்றெட்டுருச்செபித்தஞ்செழுத்தைப்
பண்ணியபூசைப்பேறுபரமனுக்குதவினனே. (௧௦௧)

ஆற்றினீள்குரவன்றன்னையருச்சனையங்கிதிக்கின்
மேற்றிசையோகபீடம்வித்தியாபீடம்பூசித்
தேற்றவஞ்சலியான்முக்காலெழின்மலரிறைத்திறைஞ்சிப்
போற்றினனிராமன்வேதபுனிதமந்திரங்களாலே. (க0உ)

மும்முறைவலங்கொண்டீசன்முன்பினின்றன்பினடிக்
கைம்மலர்த்தட்டமிட்டுக்காகுத்தன்கண்ணீர்காலச்
செம்மனங்கொண்டுநின்றன்சிவபிரான்கவுரியோடு
மிம்மெனவெளிவந்தங்கணிராகவற்கருள்வதானன். (க0ங)

கேட்டியாலிராமநம்மைக்கிளர்தனுக்கோடிநீரி
லாட்டியேயன்பினனீயகன்றுறைச்சேதுவின்க
ணுட்டியவிலிங்கந்தன்னைஞாலமேற்காணப்பெற்ற
நீட்டியபாவம்யாவுமில்லையாமுண்மையென்றான். (க0ச)

அன்றிநின்கையிலேந்துமத்தனுக்கோடிமுந்நீர்
சென்றதிற்படிந்துநின்னாற்செய்திடுமிலிங்கங்கண்டோர்
முன்றருபவங்களெல்லாமுடித்துடன்பெறுவர்முத்தி
யுன்றனக்குரைத்தவாய்மையுண்மையீதுண்மையென்றான். (க0ரு)

அந்நிலைமுனிவரானோரரம்பையரமரர்சித்த
ரின்னிசையாணரோனோரிராமனூடேற்றொல்லாந்
தன்னிகரிலிங்கமூர்த்திதனித்தனிதாபித்திட்டுப்
பன்னுநூன்மரபிற்பூசைபண்ணினாரண்ணலானா. (க0சு)

வேறு.

இந்தவேலைதன்னிலேயீசன்வெற்புநீங்கியே
யந்தண்மூர்த்திலிங்கமாமவையிரண்டுகொண்டுதான்
கந்தமாதனப்பெயர்க்கடவுண்மால்வரைக்கணே
வந்துவல்லையெய்தினான்வந்துவந்தமைந்தனே. (க0எ)

காதலாலிராகவன்கழல்வணங்கியன்பினாற்
சீதைதாள்பணிந்துபின்சென்றுதாழ்ந்திலக்குமன்
பாதகஞ்சமிரவிசேய்பதமிறைஞ்சியுற்றவா
றேதுமொன்றுமுணர்கிலானெய்தநின்றுநோக்குவான். (க0அ)

சனகிவாலுகத்தினாற்றந்தலிங்கமூர்த்தியிற்
கனகமேருவில்லினான்காலனஞ்சுகனைகழற்
பனகநீத்தபாயலான்பண்ணுபூசைகண்ணுறீஇ
யனகசிந்தைமாருதியழன்றுசீற்றமாயினான். (க0கூ)

நாணிலாவியுட்குறீஇநாமுழந்திளைத்ததும்
வீணினென்றுவெம்பியேவிழிகணீர்ததும்பவே
தாணிலாவுகுனிசிலைத்தருமநீதியாய்ந்தசீர்க்
கோணிலாதகோசலைகுமரனோடுகூறுவான். (கக0)

யானெடுத்தவிப்பிறப்பிடும்பையின்பொருட்டலா
லூனெடுத்தசெய்கையாலொன்றுமின்பமுற்றிலேன்
றேனெடுத்தசின்மொழிச்சீதைகேள்வசேருமோ
வானெடுத்தகோடுவாழ்மார்க்கடக்குமாட்சியே. (ககக)

தீயவஞ்சநிலைமைசூழ்தேவரோடுநிருதரா
லேயதுன்பமளவுறுவென்னையன்னமகவினோர்
தாயராதல்வேண்டிலார்தையலார்கண்மையலார்
காயவாழ்விலெய்தினேன்களைபடாதகவலையே. (௧௧௨)

முன்புசேவைநிலைமைசேர்முயற்சியால்வருந்தினேன்
பின்புநீடுசமரிலேபீழைமம்மர்பெருகினே
னன்பிலன்னையன்னநீயாரிடத்துமவமதிப்
பென்பொருட்டியற்றினாயானிழைத்ததீதெனோ. (௧௧௩)

பெண்ணினாசைகொண்டுநின்பிரிந்துழன்றன
னண்ணல்வாலிதம்பிதானரக்கர்கோன்றனநுசனு
மண்ணினாசையாலுனைவந்துசேவைபண்ணினா
னெண்ணியாதிராமநின்னேவல்யானிழைத்ததே. (௧௧௪)

நிரந்தவீரரளவிலார்நிற்கநீடுகங்கைநீர்
பரந்தவேணிமௌலியான்பருப்பதத்திலேகியே
வரந்தயங்கருட்குறிவல்லைகொண்டுவருகெனாத்
துரந்ததென்னையெள்ளிநீதுயர்விளைக்கவெண்ணியோ. (௧௧௫)

திருகிவேறுசெய்யுநின்றிருவுளத்தையறிகிலேன்
பெருகுவானினூடுபோய்ப்பேதைபாகனங்கணன்
கருகுகண்டனெம்பிரான்கழல்பணிந்துநோன்பினாற்
சருகிலங்கம்வாடினேன்ருணுவுள்ளமகிழவே. (௧௧௬)

தேவதேவர்போற்றிடுஞ்சிவபிரானுநல்கினான்
மேவிலிங்கமூர்த்தியைவிரைந்துகொண்டுமேவினேன்
மாவினாதவைத்துநீமணலிலிங்கமூர்த்தியை
யேவர்காணவர்ச்சனையிழைத்திசொல்வதென்னியான். (௧௧௭)

இன்றுசெய்வதென்னினியிவ்விலிங்கமூர்த்தியை
முன்றவத்தினுரனிலான்முன்னியொன்றைமுயல்வுழி
நன்றுருதன்றியேநவையுமெய்துமென்றிடு
மன்றைநூலின்வாய்மையென்னளவிலேபலித்ததே. (௧௧௮)

பொன்னிலங்குமார்பனேபுரியுமாறுவேறெவன்
பின்னையெங்ஙனேகுவன்பிழையிதாற்றிலேனியா
னென்னிடும்பைகருதிலேனெனைச்சுமக்குமிருநில
மின்னிடும்பைகருதியேமெய்வெதும்புகின்றனன். (௧௧௯)

இறையிராமவுன்றனாலிகழ்வுபெற்றவிவ்வுடற்
பொறைபொறுக்கநெஞ்சகம்பொருந்திடாதுநின்னையான்
குறையிரப்பதொன்றினிக்கூடுநீங்குகொள்கையே
யுறையுமிந்தவவையினோருவகைகூருமாறரோ. (௧௨0)

என்றுபல்லமாருதியிசைத்திரங்கியேங்கியே
நின்றுதேம்பியழுதுதானெடிதுகூவியலறியே
கன்றியாகநெஞ்சகங்கவன்றயோத்திகாவலன்
வென்றிமேவுசரணமுன்வீழ்ந்துமண்கிடந்தனன். (௧௨௧)

வேறு.

துளங்கிவிழுமாருதிதன்சோகமிகைதனைநாடி
விளங்குகருங்கதிர்த்திங்கள்வெண்ணிலவுபொழிந்தென்ன
விளங்கருணைநகையாடியிருந்தவர்முன்னிராமன்றான்
வளங்கொண்மொழிபுகன்றவன்றன்மனந்தேறும்வகையுரைப்பான். (கஉஉ)

என்னிலையும்யானறிவனென்னையலாப்பிறவுயிரின்
றன்னிலையுமறிகுவன்யானறியாததகையில்லை
பன்னுதிறன்மாருதியேபட்டவற்றின்படுபவற்றின்
மன்னுநிலத்தொழிந்தவற்றின்மரபென்றுமுணர்ந்துள்ளேன். (கஉங)

ஒற்கமில்சீர்மாருதியேயுயிரொன்றேயுற்பவிக்கு
முற்கருமநெறியதனான்முடிந்தகலுமுடிவில்லாச்
சொர்க்கமொடுபவர்க்கமுறுந்துகளில்பரம்பொருளென்று
நிர்க்குணமாய்நிற்குமிந்தநிலையறிந்துதுயர்நீப்பாய். (கஉச)

சோதியுருவாயொன்றாய்த்தொடர்பின்றியாண்பெணலி
யாதிதருங்குறியின்றியாதாரம்பிறிதின்றி
வேதனைகள்விகாரங்கண்மேவாமல்விளங்கியிடு
நீதியிஃதான்மாவினிலையென்றேநினைந்திடுவாய். (கஉரு)

தானவனாந்தனிநிலையிற்றவறலொழிந்தனுதினமெய்ஞ்
ஞானநெறிக்கவிரோதநண்ணும்வகைநன்றில்லா
வூனதனிலகங்காரமொழிந்திடுதியுயிர்க்கிஞ்சை
யானவினைதணந்திடுதியறம்புரிதியாதரவால். (கஉசு)

புல்லரையுமடங்கலிலாப்புலங்களையும்புறங்கூறு
மல்லலையுமகன்றிடுதியரனைமுதலமரேசர்
மல்லலிருங்கழல்வணங்கிவந்தனைசெய்வாய்மையதே
சொல்லுதிநீசதாகதியின்றொல்லையருந்தவத்தோன்றால். (கஉஎ)

புறமகமேல்கீழின்றிப்போதவடிவாம்பிரம
நிறைவதனிற்பிரிவின்றிநிலையுமுணர்வின்மையினான்
மறைமுறைதேர்மாருதியேவையமருட்பொருடோன்றித்
திறமருவுநல்லதுவுந்தீயதுவாம்பிராந்தியினால். (கஉஅ)

மருளுறுகற்பனையதனான்மாண்புடையதெனக்கருதும்
பொருளதனாலிராகமுறும்புணர்ந்தவெறுப்பாசையினாற்
றருமமொடுபாவமிவைதாமுளவாமவற்றெய்தும்
பொருவிலுயிர்நரர்நரகர்புத்தேளிர்முதற்பிறந்தை. (கஉகூ)

இந்தநெறியறியாமலிடும்பையுறலெவனாகுஞ்
சந்தனம்பாளிதமகருத்தண்புழுகுநானமுதற்
கந்தமிவையாதொன்றின்கலப்பதனான்மலினமுறு
மந்தவழுக்குடற்றிரட்சியதுமதிக்கற்பாலதுவோ. (கங0)

ஆனமுதுஞ்சருக்கரையுமருங்கனியும்பசுந்தேனு
மூனமுறுமலமாதலுதரமதிற்புகுந்தன்றே
கானுலவுநறுந்தெண்ணீர்கடியுமுவர்ப்புனலாத
லீனமிகுமுடைக்குரம்பையிதிற்புகுதப்பெய்தன்றே. (கஙக)

நறுந்தவளத்துகிலழுக்காய்நாறுதற்குநவையுடம்பி
னுறுந்தவறுதனையன்றியொருநிமித்தம்பிறிதுண்டோ
விறுந்தனையுமுடற்சுமையாமிதுசுமத்தற்கிளையாமற்
பெறுந்தகையதெனக்கருதிப்பேணுவரோபெரியோர்தாம். (கஙஉ)

மெய்யாகவிளம்புகின்றேம்வினைநெறியால்வரும்புலனு
முய்யாதோவொன்றாகியுறுமஃதுமுறங்கலிலை
பொய்யாகும்வினையனைத்தும்பொறிமூன்றின்றடுமாற்ற
மெய்யாதசிறையுடம்பாலின்படைவதெவ்வகையோ. (கஙங)

ஊறியெழுஞ்சுக்கிலமுமுதிரமுமுற்றூன்றிரளாய்க்
கூறுபடுமுறுப்பினொடுங்குழவியிளங்குமரனென
வேறுபடாநாடோறுமிகப்பலிதமெய்திரங்கி
மாறுபடுநிலைவந்தால்வாராததோமரணம். (கஙச)

இப்பிறப்பிலிடும்பையன்றியின்பமிலையேயிறந்த
வப்பிறப்பும்வருபிறப்புமடங்கலுமப்படியன்றே
மெய்ப்பொருணூல்விரித்துணர்ந்தோர்வேண்டுவரோவிறன்மருத்தின்
வைப்பனையாயினிமீண்டுமண்ணுலகில்வரும்பிறந்தை. (கஙரு)

விழியிழந்தான்போம்பொழுதுவிழுங்குழியின்மீண்டடந்த
வழியதனில்வரும்பொழுதுமறித்தும்விழுந்திடுவதுபோ
லிழிபுறுமச்சானத்தாலிறந்துபிறந்தெஞ்ஞான்று
மொழிபிலிடருயிரெய்துமுதுநீங்கிலுறுமின்பம். (கஙசு)

துளங்கலில்சீரருட்கதிராற்றுகளாகுமஃதன்றிக்
களங்கமதுகான்மதலாய்கழியாதுபிறிதொன்றால்
விளங்கொளியஞானமதுவேதாந்தந்தனில்விளம்பு
முளங்கவர்மாவாக்கியங்களொருமூன்றாலுளதாகும். (கஙஎ)

ஆம்போதுமருங்கலைநூலவையுணர்ந்தவாசிரியன்
றேம்போதுபுரைநயனத்திருநோக்காற்றிகழில்லம்
வேம்போதும்விழித்தொன்றும்விரும்பாமல்வெறுந்தனியே
தாம்போதுமவர்போலச்சகமுழுதுந்துறந்தவர்க்காம். (கஙஅ)

மடங்காதசுடர்ஞானமருவாமல்வயின்பெருக
வடங்காதவுணவருந்தியருமறைநூற்சடங்கொன்றுந்
தொடங்காமல்விழித்துறங்குந்தொழிலினராய்த்திரிவாரைக்
கடங்காலுங்களிறனையகாலனவன்கவர்ந்தேகும். (கஙகூ)

சூழ்ந்தனவெல்லாம்பிரியுந்தோன்றினவெல்லாநசிக்குந்
தாழ்ந்திடுமற்றுயர்ந்தவெல்லாந்தனிநகருமாளிகையும்
பாழ்ந்துடவைப்படுமனுமான்பழுத்தபழந்தனக்கென்றும்
வீழ்ந்திடலேகதியானல்விளியாதோசரீரந்தான். (கச0)

இன்றொழியினளையென்பதிருந்திடுமோவித்திங்கள்
சென்றிடுமேல்வருமாதந்திரமாமோவருடமிது
பொன்றிடுமேலெதிராண்டுப்போமிதுதான்புதிதன்றே
மன்றநிலையுடனிலையுமாரணமுமாருதியே. (கசக)

அடவிதனிற்புகுந்திடினுமடுக்கன்முழைநுழைந்தாலு
மிடைநிலவுசேய்மைநிலத்தெய்திடினுமெறிதரங்கக்
கடலதனின்மூழ்குறினுங்காலமதுவருங்காலை
யுடலொழியுமிறப்பதனோடொற்றுமையதாகலினால். (கசஉ)

எழுந்தரங்கந்தனிற்கூடியிந்தனங்களிரண்டுமேகன்
றொழிந்திடல்போல்வழிபோவாருடன்போகிப்பிரிவதுபோற்
செழுந்தமர்நாடிருந்தநகர்சேயிழையார்மகப்பிறவு
மழிந்திடுங்காண்மாருதியேயதற்கில்லைபரிகாரம். (கசங)

ஓரிடத்தோருயிர்நெடுநாளுறைவதிலையுததியெனு
நீரிடத்துப்புரிவினையானிலையிலுடம்பிதுபோனாற்
பாரிடத்திற்சுவர்க்கத்திற்பவர்க்கமதிலெங்கெனினுஞ்
சேரிடத்திற்சேருமிதுதிண்ணமெனத்தெளிந்திடுதி. (கசச)

தன்றனைத்தானுணர்ந்திடுங்காற்றான்றனியன்பிறிதில்லை
யென்றறிந்தநீயுமிதற்கினைந்திசைத்தற்பாலினையோ
மன்றமருளிதுமறந்துமாருதியேமறைமுடிவி
னின்றபொருளொன்றினையுநினைந்திடுதிநீங்காமல். (கசரு)

யான்செய்தேன்பிறர்செய்தாரொனுமிரண்டுமில்வழக்காங்
கூன்செய்தமருட்கையினாலுளதேனுமுயர்நட்பா
னான்செய்தவருட்சின்னநலங்கெழுசீர்மாருதிநீ
தான்செய்தவஃதாமாற்றளருமிதுதகையன்றே. (கசசு)

மனமடைந்தவேற்றுமையால்வந்ததன்றுமாருதியே
தினமடைந்தசெவ்விநலஞ்சேர்ந்ததனாற்செழுந்தொங்கற்
கனமடைந்தகுழற்சனகிகண்டமணலிலிங்கத்தை
யினமடைந்தமுனிவருடன்யாநிறுத்தேமிஃதுண்மை. (கசஎ)

எள்ளியிஃதிழைத்ததெனவெண்ணிமனத்தெழுஞ்சீற்றங்
கொள்ளலைநீவெள்ளிநெடுங்குன்றதனினின்றுகொணர்
வள்ளலருட்குறியதனைமண்புகழநின்பெயராற்
றள்ளருநல்வேலையினிற்றாபனஞ்செய்வேறிடத்தில். (கசஅ)

வந்துவந்துதந்தலைமந்தவானரவேந்தேகேட்டி
சிந்தையினைந்திடனின்னாற்சேர்பிரமராக்கதர்க
ளந்தமதுற்றனரதனாலத்தோடமகற்றிடுவா
னெந்தையருளாற்கொணர்ந்தவிலிங்கத்தையருச்சிப்பாய். (கசகூ)

பாரோர்களனுமேசன்பதமுன்புபணிந்தெனது
பேராற்செய்பெருமானைப்பின்வணங்கியிடக்கடவா
ராரானுமடக்கரியவருமறைப்பேய்முதலலகை
சேராதுமாருதியேசிவகதியுமவர்க்குளதாம். (கரு0)

யோசனையாயிரமகப்பாடுறுந்தூரத்துறைந்துமனு
மேசனதுதிருவடியுமிராமேசன்றிருவடியு
நேசமுடனினையுமவர்நெடுந்தருமத்தலைவர்களாய்ப்
பாசமருளிருணீங்கிப்பரமபதந்தனையடைவார். (கருக)

எதிர்மருவுகிரனிறையாலிராமேசனனுமேச
னதிர்கழற்கான்முன்பின்னராதரவிற்பணிந்திடுவார்
மதிகுலவுமாருதியேவாஞ்சையெல்லாம்பெறுகையினுற்
கதியுதவுந்தவம்வேள்விகவிகைபிறசெயவேண்டா. (கருஉ)

யானிலக்குமணன்சீதையிரவிமகனளன்சாம்பன்
வானிகலங்கதனீலன்வளரனந்தன்வானவர்தங்
கோனிவர்செயொருபதருட்குறியிடத்தும்வீடணன்பே
ரானமணித்தாணுவினுமரனென்றுமமர்ந்திருப்பன். (கருங)

தீதகலும்படிநீயுந்திருக்கயிலைதனிற்கொணர்ந்த
நாதனைநற்பதிட்டைபுரிநானிறுத்தசிவலிங்க
மோதுபிலமோரேழுமுருவியுளததுபெயர்த்து
நீதருமத்தாணுவினைநிறுத்தவலையேனிருப்பாய். (கருச)

பண்டாழிக்கரன்றேடும்படரழற்றூண்டனக்குநிலை
கண்டாலுங்கர்ண்பரிதுகனகவரைமுதலெல்லாந்
திண்டாடத்திரித்தாலுஞ்சிறிதசைக்கொணுதிதனை
யுண்டாகிலுரம்பெயர்ப்பாயொழிதுயரொன்றுரைசெய்தான். (கருரு)

வேறு.

கேளாவிறலனுமானிதுமுன்கேட்டுளகேள்வி
மூளாதெதிராய்வாலுகமுதல்வற்பெயர்த்திட்டே
தாளாண்மையிற்முன்றந்திடுதாணுக்குறிதனையந்
நாளாதரவுடனுயிடைநாட்டுநசைமிக்கான். (கருகூ)

அருமாதவர்பிசிதாசனரமுதாசனர்சனகற்
கொருமாமகளவள்கோனவனுடன்வந்தவன்முந்திப்
பொருமாகவியனிகர்க்கெதிர்புயவன்மையின்முயல்வாற்
பெருமானருளுருவந்தனையனுமான்பிடித்தசைத்தான். (கருஎ)

பசையுற்றிடுமனமைந்தொடுபலகாலிருகையால்
விசையிற்பெயர்த்திட்டானதுவிடைதந்திலதனுவு
மிசையுற்றிடுகீழ்மேல்புடையின்றென்றுபுயாண்டு
மசைவற்றதற்கிறும்பூதுகொலசையாநிலையம்மா. (கருஅ)

பின்னுங்கிலுகிலுவென்னெலிபெருக்காவுரநிமிர்த்தே
யுன்னுஞ்சுடர்வான்மேலெடுத்தூற்றத்துடனசைத்தான்
பன்னும்பரமுதலென்பதுபாரான்பவனன்சேய்
மன்னும்முயிர்மருந்தோங்கலின்மனங்கொண்டனன்போலும். (கருகூ)

தோலாவலியனுமான்பினுந்துணைத்தோணிலத்தூன்றி
வாலாலருட்குறியைப்பலவலயம்படச்சுற்றி
மேலார்கதிர்வெருவக்கிளர்விண்மேலெழுந்திட்டா
னுலர்திசையோடெங்கணுநடுங்குற்றனஞாலம். (கசூ0)

அலைவுற்றிடவெல்லாஞ்சிவனருளின்குறிசிறிது
முலைவுற்றிலதனுமானவனொருகூப்பிடுவழிபோய்
மலைவுற்றிடுதன்றுதைதன்வலியாற்பெயர்வடபாற்
சிலையிற்கொடுமுடிவீழ்ந்தெனவீழ்ந்தான்கறைசிந்த. (கசூக)

பவனன்மகன்விழிவாய்செவிபாயும்வழிபாயுங்
கவனங்கெழுகுருதிப்புனல்கடல்போன்றதுகண்டா
ரிவனீள்கறைக்குழியாழ்ந்தனனென்னும்படிவிசையா
லவன்விழிடமிகுசோரியின்கயமாயினதந்நாள். (கசுஉ)

ஊற்றுகியகுருதிக்கிடங்குறைமாருதியூரு
மேற்றுனருட்குறிகொண்டணைகென்றேவியிராமன்
போற்றுதிகழ்ந்திட்டானெனப்புலனுண்டெழுபுன்மை
யாற்றுதழற்குவைசேர்குழியதிலாழ்ந்தவனுனன். (கசுங)

சத்தாய்நிறைந்தசரத்தொடுசேரமுந்தனதுருவா
மைத்தாழ்மணிகண்டற்கதுமரபாகலின்மணலா
லுய்த்தாற்றியவருளின்குறியுலையாவகைநிறுவுங்
கைத்தாமரைக்காகுத்தனைவியந்தாருடன்கலந்தார். (கசுச)

வேறு.

சுடுபுனற்கட்டுளைந்துகிடந்திடர்ப், படுபுமாழ்குஞ்சமீரணன்பாலனை
வடுவில்வானவர்மாதவர்கண்டுமெய், வெடுவெடென்னநடுங்கிவெதும்பினர். ()

கொண்டல்வண்ணனுங்கோரவிராவணன், பண்டரிந்திடப்பக்கம்பரிந்துவீழ்
புண்டரத்தின்குரிசிலைப்புண்படக், கண்டகாட்சியிற்கண்டுகலங்கினன். (கசுசு)

அலையுஞ்சோரியமுந்திற்கிடந்துமெய்க், களையினீடியகான்மகற்கண்ணுநீஇ
யிளையனுயவிலக்குமன்றுனுநெஞ், சுளையவாடியுறுதுயர்மேவினன். (கசுஎ)

சோரிசிந்திடுமஞ்சனைதோன்றலைக், காரிசிந்திடுங்கட்செவிப்பாயலான்
பாரிசிந்தைபதைத்திடக்கண்டுகண், மாரிசிந்தினள்வாய்விட்டரற்றினள். (கசுஅ)

தையல்பூண்முலைச்சானகிபின்னரு, மையவையவென்றம்புயத்தோட்டினுஞ்
செய்யகைகள்கறைபடத்தீண்டியே, துய்யமேனிதடவித்துளங்கினள். (சகூக)

கோவினேடுகுரக்குப்படைஞரும், பாவியேமிதுபார்க்குந்தகையதோ
வாவிகூடவகற்றுதும்யாமெனுத், தாவிவீழ்ந்துதரையிற்புரண்டனர். (கஎ0)

அடித்துவீழ்தலுமங்கணிராகவன், றடித்ததோளிற்றழீஇயழுதேந்தித்தன்
மடித்தலத்தனுமான்றனைவைத்துளங், துடித்துச்சோரிதுடைத்திதுசொல்லுவான்.

உன்னைமீனுமுயர்தவமாற்றிய, வன்னையஞ்சனைக்காருயிர்மைந்தனே
பின்னைநின்வினைப்பேறுநுகர்தியின், றென்னைநோக்கியெனதுரைகேளையா. ()

காற்றின்மைந்தகடுந்திரைப்பம்பையா, மாற்றின்கூலத்தணைந்தெனயர்வினைத்
தேற்றிச்சூரியன்சேய்க்குமெனக்குமன், றேற்றநண்புதந்திட்டவனீயன்றே. ()

அந்தநாண்முதலாய்த்தந்தையன்புசால், பந்தமென்றுளபற்றுமறந்தனன் [தே.
மைந்தவென்பொருட்டன்றுகொல்வால்வலி, சிந்துசிந்துவைத்தாவினைசென்ற

வங்கவாரிமைநாகமென்னுகத்தை, யங்கைவீசியறைந்தனைதள்ளினுய்
தங்குவெற்பதுதந்தசுரசையை, மங்குவித்தனைவந்ததுனக்கெனே. (கஎடு)

தடிகொணெட்டுடற்சாயையென்றேதிடுங், கடியசெய்கையரக்கியைக்கட்டினுய்
மடிவிலாவிறன்மாருதிமற்றதின், முடிவதோர்பயனீபெறமுன்னியோ. (கஎசு)

வேறுநின்றுசுவேலையின்மாலைவா, யேறிவைகியிலங்கையிற்றேவியை
தூறினுயவனுங்கள்குலக்குமுன், னீறிழைத்தபகைத்திறமெண்ணியோ. (கஎஎ)

மூடிமுற்றுமுயங்கிருட்கங்குல்வாய், நீடிலங்கைநிருதனிற்போகியே
தேடியெங்கனுஞ்சீதையைக்கண்டிலா,தோடியெய்த்ததுமுன்பொருட்டாகுமோ.

நனையசோகவனத்தினைநண்ணியே, யனையசோகத்தமர்ந்தவட்கண்டதன்
றுனையசோகமுறுதலைவேண்டியோ, வெனையசோகனெனச்செயவெண்ணியோ.

சின்னமற்றவடேறவென்செங்கையின், மன்னுமாழிவழங்கிச்சூடாமணி
தன்னைமாருதரக்கொண்டுதந்தபோ, தென்னநீயதற்கென்னுழிப்பெற்றதே. கஅ௦

இலங்கைகோனிகரொண்பதினுயிரஞ், சலங்கொள்வென்றியரக்கலாச்சாடினுய்
கலங்கறீர்பிரகத்தன்றன்காளையாம்,வலங்கொள்வேற்சம்புமாலியைவாட்டினுய்.

தாழுந்தானைத்தலைவரிலைவர்க, டாழுமாவிதடிந்தனையன்றியே
யேழுநாவினமாத்தியரீன்றிடு, மேழுமைந்தராயின்னுயிர்வாங்கினுய். (கஅஉ)

தொக்கதேர்படைவேழந்துரகதந், திக்கில்வேறுசிதையத்துரத்தியே
யக்கமைந்தனைமண்ணிலரக்கினுய், மிக்கநின்வலிகாட்டலைவேண்டியோ. (கஅங)

பின்னரிந்திரசித்துப்பிணித்தலுந், தென்னிலங்கைநிருதன்முன்சென்றனை
மன்னவன்றனைவைதிடற்கன்றியே, யன்னபந்தமகற்றரிதாகியோ. (கஅச)

தசமுகத்தன்றனைச்சவைமுன்னரோ, வசைமுகத்தில்வடுப்படக்கூறினுய்
திசைமுகத்திலுந்திண்புயவென்றியின்,றிசைமுகத்தலையெண்ணினையல்லையே. ()

அந்தவஞ்சனிலங்கையடங்கலு, முந்துவெந்தழன்மூட்டிமுருக்கினுய்
தந்தைநண்பன்றனக்குணவீந்திடச், சிந்தைசெய்துகொல்செப்புதிசெம்மலே. ()

சுட்டிலங்கைதுகள்படச்செய்தபின், விட்டகன்றுவிலங்கலொன்றெய்தினுய்
பட்டவுன்றன்பழங்கணளவையா, லெட்டலாகுங்கொலென்பொருட்டாகவே. ()

காரணங்கருதாவுபகாரிகிற், கூரிணங்குவேற்கூற்றங்குறுகியே
பாரணஞ்செயுமாகிற்படியில்யான், மாரணஞ்செயலன்றிவதிவனே. (கஅஅ)

தேய்ந்தநூலிடைச்சீதையிலக்கும, ணேய்ந்தபின்னரிருவரிறைமையா
லாய்ந்தபோதெனக்காவதெனையநீ, மாய்ந்தொழிந்திடிலஞ்சனைமைந்தனே. ()

இன்றியாருமிருந்தெனிறக்கினீ, சென்றுசெங்கதிர்சேருந்திசையெலா
நன்றுகண்டுணர்நாட்டமிழந்ததன், பின்றையேனையுறப்பினிற்பேறெனே. (கக௦)

கட்கிருட்டுக்கடியுங்கதிர்மக, னெட்கின்வேந்தனிவர்முதலோரொலா
முட்கிவாடுறவுன்னையிழந்தியான், வட்கலின்றிமகுடம்புனைவனே. (ககக)

காய்க்குங்காட்டிற்கனிகிழங்காமுண, வாக்கினுயிலையின்னுமருமந்த
யாக்கைமண்படவென்கிடக்கின்றிநீ, சேக்கைகண்படச்செய்யகில்லாமலே. ()

தெற்பைகுண்டிகைசீரைகொண்டென்னுட, னற்புனற்றடநானக்கணைகுவா
யற்பினீந்தன்றமுதசஞ்சீவினி, யெற்பினேனுயிர்நல்கியவேந்தலே. (ககங)

ஐயிரட்டிசிரத்தனகந்தையுஞ், செய்யசீதையிடும்பையுந்தீர்த்திடுந்
துய்யநின்னைத்துணைமைகொண்டல்லவோ, வெய்யர்பாலியான்வென்றிபடைத்
ததே. (ககச)

பொன்னையென்கட்புணர்த்தியவாறுபோ, லன்னைமார்கண்ணயோத்திமிற்றம்பி
யோ, டென்னைக்கூட்டலையீண்டுப்பிரித்திடி, னின்னையிந்தநிலத்தவரொன்சொல்
வார். (ககரு)

பன்னியின்னபலவுமிராகவன், வன்னிநண்பன்மகன்முகநோக்கியே
தன்னிரண்டுசெலசக்கண்ணீர்களாற், றுன்னுமேனியிற்சோரிகழீஇயினன். (கசுசு)

காதன்மாருதிகாகுத்தன்கண்மலர்ப், பூதநீரமிழ்புண்ணியத்தாலவன்
சேதுவிற்செய்சிவமுதற்காற்றிய, கோதுநீங்கியுணர்வுடன்கூடினன். (கசுஎ)

வேறு.

சோகவல்லிருள்கழிதலுங்கான்மகன்றெடர்மூல
மோகநீங்குழிப்புலன்கொளாதருணிலைமுகப்பார்போ
னுகணைப்புறம்பிரிந்துலகுய்ந்திடுநசையாலே
யோகநித்திரைநீத்தமரொருவனையுடன்கண்டான். (கசுஅ)

கண்டுசீதையுந்தம்பியுமிறையொடுகவியீட்ட
மண்டுதானையும்வளைத்திடவாழ்த்திடவானோர்கள்
புண்டைமாதவர்புகழ்ந்திடத்தன்னருட்பௌவத்தின்
விண்டவாரிசம்போலிருகண்மலர்மிளிர்வெய்த. (கசுகு)

பாரொனப்படுபொரிதோய்சுவடெனப்பரிவில்லார்
போரினிற்படுபூழிகண்மெய்ப்புறம்பொலிவெய்தக்
கூருருத்திரனுருவமேதானுமாங்குறிதோன்ற
வேருறப்புனைசடாமுடிமண்டலமெழில்செய்ய. (உ00)

வீற்றிருந்தருளிராமனையடிமலர்மிசைவீழ்ந்தே
யாற்றலாதெழுமன்பினுலகங்குழைந்தருண்மேன்மை
போற்றலுற்றனன்மாருதியாதலிற்பொதுத்தன்மை
பாற்றிக்கான்முளையெனும்பெயர்சிறப்பினுற்படைத்துள்ளோன். (உ0க)

வேறு.

அடலாரரிவிண்டுவெனும்பெயராதிதேவே
மிடலார்கதையேந்தியசெங்கைவினோதவென்று
மடலார்நறைமல்கியபுட்பவிமானமன்னுங்
கடலார்வணமாசுணப்பள்ளியிற்கண்படுப்போய். (உ0உ)

நாராயணநான்முகநம்பியைநாபியின்கண்
வேராயெழுபோதிலளித்தருண்மேன்மையானே
யோராயிரம்வாய்செவிகால்கரமுத்தமாங்கம்
பேராயிரமுற்றபெருந்தகையோர்பிரானே. (உ0ந)

போர்மேல்கொளிராக்கதராருயிர்பொன்றவாட்டிப்
பார்மேல்கொளுயிர்க்கருள்கூர்ந்தருள்பான்மையானே
தார்மேலமர்கூந்தலள்சானகிதன்னவண்ண
வார்மேல்வளர்கொங்கைவளங்கவர்மாலைமார்பா. (உ0ச)

கனிதாழ்பணைவாழ்கவிசூழ்படைக்காட்சிநோக்கி
யினிதாதரவெய்திடுமாதவவெற்குமன்பர்
தனிதாமுறுவெம்பிறவித்தளைசாடியாளும்
புனிதாவளையாழிகொள்செங்கரபுண்டரீகா. (உ0ரு)

நாலாமறைதந்திடவுந்தலைநாரவேலைச்
சேலாய்வருகாரணபொன்மலைதிண்புறத்தின்
மேலாகவெடுத்தருள்கச்சபவெள்ளெயிற்றின்
பாலாழ்படியேந்தியகேழலின்பான்மையானே. (உ0சு)

வயமாவலியைச்சிறைவைத்திடவாமனப்பேர்
நயமாரவதாரமெடுக்குமுன்னரசிங்கச்
சயமார்வடிவங்கொடுபொன்னனைத்தாக்கியன்னேன்
பயமார்மகவுக்கருட்பார்வைசெய்பண்பினனே. (உ0எ)

வேந்தர்க்கிடர்செய்மழுவாட்படைவீரனுகி
யேந்தற்குலமுய்ந்திடமீண்டுமிராமனென்னுஞ்
சாந்தக்கருணகரமூர்த்திதரித்துமண்மேன்
மாந்தர்க்கிமையோரினுமாண்டகைவைத்தவள்ளால். (உ0அ)

தாதார்குழற்கோதமனில்லவள்சாபநீத்த
பாதாபதிஞுயிரமும்பல்பலத்தின்மானு
மாதாடகையாருயிர்சிந்தியமைந்தவாலி
மீதாரகன்மார்புகிழித்திடுவீரவீரா. (உ0கூ)

மாயாமிருகத்திறன்மாரிசற்செற்றமாயா
சேயாயொருபத்திரதன்றுயர்த்தியவித்த
நேயாசுகரூபதயாபரநித்தசுத்த
காயாமலர்வண்ணகடற்கரைகட்டினனே. (உக0)

மாறேதுமிலின்பவகண்டிதவாழ்வுசேர்வார்
பேறேபிரியாதமர்பூரணப்பெற்றியானே
வேறேயுடனேயிவையின்றமர்மிக்கவிண்ணே
ரேறேதுணைநீயெனக்குன்பொருட்டென்வணக்கம். (உகக)

புனலாடுதலாசமனத்தொடுபோசனத்தி
னனவோடுகனுநிலைநண்ணுசுழுத்தியென்னு
நினைவோடுமவத்தைகண்மூன்றினுநின்னையன்றி
யெனையாள்பவர்வேறிலைநின்பொருட்டென்வணக்கம். (உகஉ)

உன்பாலுறுசீர்த்தியையிம்பரிலும்பர்தம்மாற்
கொன்பான்மதிகொண்டுவகுத்தனர்கூறலாமோ
வன்பாலடைவாரவர்பாலவர்தம்மிலன்பா
வென்பாலருள்கூருதிநின்பொருட்டென்வணக்கம். (உகங)

வேறு.

நின்னிலையுணர்வைநீயேநிகரிலாநிருபரேறே
யிந்நிலையென்னையாள்கென்றிராமனையேத்திக்கற்பின்
செந்நிலையுருக்கொண்டன்னசீர்பயில்சீதையென்னு
மின்னிலைமரபிற்போற்றிவிளம்புவான்கவியின்மேலோன். (உகச)

அம்புயமதனிற்றேன்றியங்கையிலதனையேந்துஞ்
செம்பொனின்விளக்கேமாளாச்செல்வமேதேவர்மாதர்
தம்பணிவிரும்பியாளுந்தையலேசெய்யதண்பூங்
கொம்பரினுடங்கிவாடுங்குற்றிடைநெடுமென்கோதாய். (உகரு)

எதிர்வினையிலம்பாடென்னுமிரண்டிற்குமொருமருந்தே
மிதிலையர்வேந்தன்முன்னோர்மேதகவிரும்பிநோற்ற
முதிர்தவமுடிவேதிங்கண்முகத்தினய்முதியவட்ட
மதிநிலையிடங்கொண்மானேமறுவிலாவாழ்வின்வாழ்வே. (உகசு)

கோசலைநாடன்காதற்குராகடற்பிறந்தகோல
வாசிலாமதுரவின்பவமுதமேயழகணிந்த
மாசிலாமணிப்பொற்பூணேமண்மகள்வரத்தின்வந்த
தேசுடைத்திருவேயன்பர்சிந்தையாற்பருகுந்தேறல். (உகஎ)

தருமத்தின்வடிவேவானிற்சந்திரனுடன்பிறந்த
கருமைத்தண்கயற்கணல்லாய்கவுத்துவமழுங்கக்கண்ணன்
மருமத்தின்மருவுமாதேமலவிருட்படலைமாலைக்
குருமத்திற்கதிரோனின்கணுவமனும்பொருளுமாவாய். (உகஅ)

வானகத்தரிவைமாராமண்ணகமடந்தைமாராத்
தேனகக்கமலப்போதிற்றிருவனுமொன்பதல்லாற்
றூநகைக்கொடியேநின்னைச்சொல்லிடாரவர்போலென்றால்
யானகத்துணர்ந்துநின்னையேத்திடும்புகழ்மையாதோ. (உகக)

வற்சமாருயிராயெல்லாம்வளர்த்திடும்வளங்கொண்ஞாலப்
பொற்கொடிமகணீகாக்கும்புரவலன்றேவியன்றி
யற்கெழுகூந்தலாரோடாடவர்க்கின்பநல்கும்
விற்கழைவேளையீன்றாய்வியப்பினிவேறுமுண்டோ. (உஉ0)

பொருளிடமுதலவெல்லாம்பொலிவுளதாயகாலத்
திருவுளதானதென்பர்தெருண்டவர்செல்விநின்பொ
னுருவுறுகாட்சியின்னதொன்றுடைத்தென்பதின்றாற்
றருநிலத்தணிகளெல்லாந்தையனின்றன்மையாமே. (உஉக)

அலைமலிகடல்சூழ்ஞாலத்தாருயிரவைகட்கெல்லா
நிலைமலிஞானவீடுநிறைதிருப்பேறுநல்கு
மலைமகள்பார்வையென்றான்மற்றவளவயவத்திற்
றலைமைநீயுண்டோநின்னைத்தணந்தொருசெய்கைதானே. (உஉஉ)

கணவனோடுடன்பிறந்தாள்கவுரிநின்காதன்மைந்தர்
மணமலிமனைவிமார்கள்வாணியுமிரதிமாது
மிணையில்சீரோரகத்தாளிந்திரன்றேவியென்று
லணியிழையணங்கினோரிலயலுனக்கேவரன்னாய். (உஉங)

ஆயிழாயடியனேனையாண்டருளென்றிவ்வாற்றாற்
சேயவள்சனகியோடுதிண்சிலையிராமன்றன்னை
வாயினாற்புகழ்ந்துகண்ணீர்வார்ந்திடவிறைஞ்சிநின்று
னேயெனப்படருங்காற்றினிறையவனீன்றசெம்மல். (உஉச)

தருவமர்விலங்கின்மேலோன்றையலாடவனென்றோது
மிருவர்போன்றொருவராகுமிராகவன்சீதையென்னும்
பொருவிலார்தம்மையேத்தும்புகழினைப்புகழவல்லார்
கருதியவெல்லாஞ்சேர்வார்காரிருணிரயஞ்சேரார். (உஉரு)

செந்நெனீர்நாடுமோதர்சேயினோர்சேதாவாழ்நாண்
முன்னைநூற்கல்வியின்பமுழுவதூஉமடைவர்வேதம்
பன்னுசீரந்தணாளர்பழிமுதற்பாவநீங்கி
மின்னுறழ்தொள்ளையாக்கைவிடுநிலைவீடுசேர்வார். (உஉசு)

மருத்துவின்செம்மல்போற்றும்வாய்மைகேட்டுளமகிழ்ந்து
திருத்தகுமிராமன்றேவிசீதையோடவனைநோக்கி
யருத்தியாலுனைப்பன்பிள்ளையாற்றினையச்சானத்தால்
விருத்தமாஞ்செய்கையிந்தவினையுளங்கொள்ளலாமோ. (உஉ௭)

மூவுலகோரின்மிக்கமுப்பத்துமூன்றுகோடி
தேவராற்றேவர்கோவாற்செங்கண்மாலயனான்மற்றை
யாவராலேனும்யானீண்டிருத்தியவிலிங்கம்பேர்க்க
லாவதோவென்னைசெய்தாயஞ்சனைக்குரியமைந்தா. (உஉஅ)

வலத்துயர்நின்னையென்னைவானரர்க்கிறையைமற்றென்
குலத்துயர்தம்பிதன்னைக்குலைந்திடப்பொருதகொற்றச்
சலத்தினீடரக்கனெங்கோன்றங்கியகயிலைவெற்பைப்
புலத்தினாற்பெயர்த்துப்பட்டபாடுமுன்கேட்டிலாயோ. (உஉகூ)

அருள்விளையாட்டினாலன்றமரர்களகந்தைதீர்ப்பான்
திருமுனர்த்திருணமொன்றைச்சிவபிரானிரீஇயகாலைப்
பெருமிடல்கூர்ந்தநின்னைப்பெற்றவன்பெயர்க்கமாட்டான்
மருளுறுகாதைதன்னைமாருதிமறந்திட்டாயோ. (உ௩0)

படியிலர்வண்டமாகிப்பல்லுயிர்க்குயிராய்வேறாய்
முடிவிலாமுக்கண்மூர்த்திமுன்னவனின்றதன்மை
நொடிகொணூற்றெளிந்தநின்கணுவல்வதோவினையவாய்மை
யடியவர்க்கெளியனீசனயலவர்க்கயலான்கண்டாய். (உ௩க)

அம்பிகைபாகற்காற்றுமபராதமிதனாலையா
வெம்பிமெய்சோர்ந்துவீழ்ந்தாய்மேலினிவிடைப்பதாகை
யெம்பிரான்றன்பாலன்னேனிணையடித்தொண்டர்தம்பா
னம்பிநீபிழைக்குஞ்செய்கைநயக்கலையெந்தஞான்றும். (உ௩உ)

நிறுத்தசீர்மணலிலிங்கநீக்கிவேறமைப்பநீயுட்
குறித்ததுமவன்றன்ஞானக்குறிதனையாதலாலே
பொறுத்தருள்புரிவானின்பாற்புரிசடைப்புராணனன்னேன்
வெறுத்திடினுலகமுண்டோமிடலுறுகவியின்மேலோய். (உ௩௩)

வைகலின்முதியாகமாருதிநீவிழுந்த
பெய்கறைக்கிடங்குமண்மேற்பிறங்குகவுன்றன்பேராற்
பொய்கெழுதீமையெல்லாம்போக்கியேபுனிதனானாய்
மொய்கவிக்கரசேநீயுமூழ்கலாற்குழியிதன்கண். (உ௩௪)

இக்குழிமேன்மைகூறினீசனார்வேணிநின்று
மக்கவுதமியாமுந்தியதுவெளிப்பட்டதந்நீர்
புக்கினிதாடுவார்க்குப்புரவிமேதங்கடம்மின்
மிக்கவாயிரத்தாலெய்தும்விழுத்தகுபேறுண்டாகும். (உ௩௫)

சதகுணமதனிற்பேறுதருஞ்சரசுவதிகங்கை
யதிர்புனல்யமுனைமூன்றுமாடினோர்க்கந்தமூன்று
நதியுமோரிடத்திற்கூடிநண்ணியாங்கொழுகுகின்ற
புதுநறும்புனிதத்தெய்வப்பூம்புனலதனிற்றோய்ந்தால். (உ௩௬)

தாயெழுநதிகண்மூன்றுந்தனித்தனியாடும்பேற்றி
லாயிரமடங்குண்டாகுமறைந்தவையனைத்துமாடு
நேயர்தாமடையுமந்தநெடும்பலமுழுதமுண்டா
மேயதோர்விசையினிபோய்விழுங்குழிமூழ்கினோர்க்கே. (உகஎ)

பிறந்திடற்கரியமக்கட்பிறந்தையிற்பிறந்துநின்பேர்
சிறந்தவிக்கிடங்கின்பாங்கர்செய்கிலார்சிராத்தமென்று
லறந்திகழ்தென்புலத்தாராதரவவர்பாலின்றித்
துறந்துளம்வெகுண்டுபோவார்துணைதருகாலின்றோன்றல். (உகஅ)

நீகுதித்தமிழ்ந்துமிந்தநெடுங்கிடங்கதனின்மூழ்கா
ராகுதிதடத்தினல்காரவர்கள்பாலருந்தவத்தோர்
மாகமேலவர்களெல்லாமனத்திடைச்சினப்பரன்றே
ராகமேயினதும்வீணேயவர்துயரடைவரெங்கும். (உகக)

தென்புலவாணர்நாடிச்சிறந்தநின்பெயர்க்கயத்தின்
முன்புறவெள்ளுநீருமுகந்துதர்ப்பணம்புரிந்தா
லன்பினுலானெய்யாருமவர்தமக்கதுதானென்றே
பொன்புணர்தோளயோத்திப்புரவலன்புகன்றுன்மன்றே. (உசய)

தயரதன்மதலைவார்த்தைசதாகதிமதலைகேட்டு
மயர்விலாமகிழ்ச்சியெய்திவடதலையிராமநாதற்
கயலுறத்தாபனஞ்செய்தருச்சித்தானன்றுதான்போய்க்
கயிலையங்கிரியிற்பெற்றகண்ணுதன்மூர்த்திதன்னை. (உசக)

காலினுற்கூற்றஞ்செற்றகடவுண்மேற்காலின்மைந்தன்
வாலினுற்சுற்றுமூன்றுவலயமுங்காணலாகு
மேலைநாள்போலவின்றும்விளம்பிடுமெரபாலியார்க்குங்
கோலமாரிராமநாதன்குறித்தபேறுடன்கொடுக்கும். (உசஉ)

வேறு.

இருடீரந்துலகத்தைவிளக்கியேரகுகுலந்தழைவிக்கவுதித்தகோ
னருளிலிங்கமிறுத்திவழுத்துமாறதுநுவன்றனநற்றவிர்கற்றுளோர்
பொருவினன்கதைமிக்கசெவிக்கொள்வார்புகலிலிங்கமுதற்றரிசித்தலால்
வருபயன்றனைமுற்பெறுகிற்பர்மேன்மறுவறுஞ்சிவமுத்திபடைப்பரோ. (உசங)

இராமனருச்சனைச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம். உஅ௱ரு.

---

# பிரமகத்திச்சருக்கம்.

---

அவ்வழிமாதவர்சூதனுனனமுண்டகநோக்கி
மெய்வழிசால்விருப்பினெடுவினவிடுவார்விதியுணர்ந்தோ
யெவ்வழியோபிரமகத்திபிராகவனைத்தொடர்ந்தவழி
மைவழியுமனத்தரக்கன்மரபின்மறையவனல்லன். (க)

அணைந்தவர்பால்வினைதீர்க்குமளப்பில்புகழிராமன்பாற்
புணர்ந்ததஃதென்பதுவும்பொருந்திலதுபுகுந்தவகை
யுணர்ந்தறியுமுபாயமிலேமுன்னருளாலுளந்தெளிவு
மணந்திடுமாறருளன்றேல்வருமுன்பின்மலைவென்றார். (உ)

சீரியலுந்திருமுகத்திற்சிறுமுறுவல்கொண்டருளி
யேரியலும்புகழ்ச்சூதனேதுவதற்கியம்பிடுவா
னாரியநூன்முழுதுணர்ந்தீரறியார்போலறைந்ததெவன்
காரியமிக்காசினிமேற்காரணமின்றுளதாமோ. (௩)

பூங்கமலமலர்க்கோயிற்புனிதனருள்புலத்தியன்பால்
வீங்குமலவிருடுரக்கும்விச்சிரவாவியன்ஞாலந்
தீங்ககலும்படியுதித்தான்றிசைமுகத்தன்றிருப்பேர்
றூங்கவன்றனிலையினன்பண்டருந்தவத்தினெடுங்காலம். (௪)

மாமுனிவீரொவராலுமதிப்பருமாதவமிந்தத்
தூமுனிவன்செயுநாளிற்சுமாலியெனுந்தொல்லரக்கன்
பூமியின்மேற்கீழ்நிலத்தின்புடைநின்றும்புறப்பட்டுத்
தீமைவிடுந்தூதனெனத்திரிதந்தான்சிலவைகல். (௫)

மற்றவன்றன்குலம்பெருகவானவர்தங்குலஞ்சுருங்கப்
பெற்றதொருபிடிநடையைப்பிறைநுதலைநறைமருவுங்
கற்றைநறுங்குழலணங்கைக்கரத்தினிற்கொண்டுழிதருவான்
சுற்றுமிருட்பிழம்பஃதோர்சுடர்கொண்டுதிரிவதுபோல். (௬)

மதிக்குமதங்கயமனையவாளரக்கன்மால்வயிற்றி
னுதிக்குமகன்றிருமதலைக்கொருகுமரன்பிறங்கடையாய்ப்
பொதிக்கொழுமென்முகையவிழ்ந்தபுட்பவிமானத்துலவு
நிதிக்கிறையையொருபகற்றனேர்படவந்திடக்கண்டான். (௭)

கண்டிவன்போனங்குலத்தோர்காளையுதித்திடுமானுன்
மண்டுமனப்பயநீங்கிமண்ணுலகும்வானுலகுந்
தண்டலின்றியரக்கரொலாஞ்சரித்திடுவரொனக்கருதிப்
பண்டருமென்மொழிமகளைப்பார்த்தொருசொற்பகர்ந்திடுவான். (௮)

என்னுடைமாண்குலந்தழைப்பவெழுந்தவிளங்கொடிபோலும்
பொன்னுடைமாண்டிதலைமணிப்பூணகிலக்கைகசியே
யுன்னுடைமாணெழில்காணினுருப்பசியுமுளநாணுந்
தன்னுடைமாண்குலைந்தயருந்தடங்கமலச்செழுந்திருவும். (௯)

ஆங்கதன்றிநீயுமராவவாவுமுவாமதியதுபோற்
றாங்கிசையமணிநிறமென்சுரும்பினங்கள்பலவிரும்பும்
பூங்கமலநாண்முகைபோற்பொலிந்தனையாலுனைக்கண்டோர்
நீங்கரியபெருங்காதனெடுங்கடலின்கரைகாணார். (௧0)

மன்னுலகிலருவிலைசான்மாமணிபெற்றுலதனைப்
பொன்னணியினடுவமரப்புனையாக்காற்புரிகுழலாய்
தன்னியல்பும்விளங்காதாந்தகைமையதுதனைநாடி
யுன்னையுனக்குரியவன்பாலுதவுநெறியுளங்கொண்டேன். (௧௧)

பாணியலுமொழியாளைப்பயந்தார்க்குப்பங்கயப்பொன்
ஞணியனுயவர்விழையுமாடவரோடுடனுகக்
காணினுளங்களிகூருங்காணுேற்கலையுருவாம்
வாணிநலங்கோடலிலாமகற்கண்டாலெனவருந்தும். (௧உ)

அருங்கனியுஞ்செவ்வியின்கணருந்துமவர்க்களிப்பனவாங்
கருங்கலபமயிற்சாயற்கைகசியேகன்னியரு
மிருங்கலைதேர்மகிணர்தமையிளம்பருவத்தடைவாரேற்
பெருங்குரவருடன்ருமும்பெரிதின்பம்பெறுவார்காண். (௧௩)

நல்லமுதஞ்சுரரளவோநரரும்விரும்புவரதுபோ
லெல்லவருமுனைப்புரிவரோமொழிலின்சிறப்பதனுன்
மெல்லியனீபொருந்தலின்றிவிலக்கிடுவையெனுங்கருத்தாற்
புல்லநினைந்தணுகாமற்புந்திவெரீஇயிருக்கின்ருர். (௧௪)

பான்மதியையவிழுங்கவரும்பாந்தளெனவுன்றனக்கோவ்
வான்மணமாமகனுகவரினும்வருமதன்முன்னர்
மேன்மைகெழுபுலத்தியன்சேய்விச்சிரவாவினைமேவி
யான்மனையாளுனக்காவலெனைக்கோடியெனப்புகலாய். (௧௫)

தனதனெனவுனக்கினியதனயர்பலருளராவ
ரெனநவின்ருனிலங்கிழையுமீன்றவன்வாய்மொழிகேட்டு
மனமகிழ்வுற்றிளநிலவுவதனமுழுமதிவழங்க
வனையநெறிபுரிகுவலென்றருந்தவன்பாற்செலநினைந்தாள். (௧௬)

தாதையுமைமனங்கொண்டுதையலவடாழாமற்
போதருவாள்கொடுமாலைப்பொழுதின்கட்புரிசாலைச்
சோதிமகத்தழன்முன்னர்ச்சுடரிரவியெனச்சுடரும்
வேதனருண்மகன்மகனும்விச்சிரவாவினையடைந்தாள். (௧௭)

விளக்கொளியமின்னென்றுவிண்ணிழிந்ததெனவணுகி
வளர்க்குமகத்தழல்கதுவவாடியமென்கொடிபோல
வுளத்தெழுந்தநாணதனுலொல்கியுடலுயர்கொங்கைக்
கிளைக்குநுணங்கிடைதளரவிருந்தவன்றனெதிர்நிற்பாள். (௧௮)

ஓதிநெடுங்கருமுகிலூடொளித்தமதிமண்டலம்போற்
சீதமலர்முகங்கவிழ்த்துச்சேவடிமாண்விரலுகிரான்
மேதினியைத்தானுதவும்விறலரக்கர்வடுப்படுத்து
நீதிதெரித்திடுவாள்போனிலங்கீறிநின்றிட்டாள். (௧௯)

மேல்விழுங்கார்வண்டினத்தின்மிகுதிபொருதசைந்துபசுங்
கால்வளையத்தாழுமலர்க்கமலம்போன்முகஞ்சாய்த்து
மால்விளையமருங்குநிற்கும்வனைதொடியைமுனிவினையின்
பால்வகையின்றகையுணர்ந்தபண்ணவன்ருன்கண்ணுற்ருன். (உ0)

பதப்பதுமந்தொடுத்தமுதின்படிமையளாம்பணிமொழியைக்
கதத்தரக்கர்குலமுதற்குக்காரவுணர்தமையுதவு
முதற்றிதியின்வரல்காணூஉமுறுவலிளநிலவினனுய்
மதத்தொடவாமருள்கடிந்தமறையவன்ருனறைகின்ருன். (உ௧)

அணியிழைநீயாருன்னையளித்தவராரணைந்தமனத்
துணிபெவனோபொருள்விளங்கச்சொல்லென்றான்வல்லுறழு
மணிமுலைவெண்ணகைத்துவர்வாய்வஞ்சியிடையஞ்சநடைப்
பணிமொழியும்வந்தபணிபணிந்தவனைப்பகர்கின்றாள். (௨௨)

புலத்தியன்றன்குலத்திலுயர்புண்ணியமேபுணர்ந்திடுமைம்
புலத்தியங்குமயல்கடந்தபுங்கவனேபொருளுறுமப்
புலத்தியைவாரெனவனைத்தம்புரிதவத்தின்பெருமைபயில்
புலத்தியல்பாலுணர்ந்தோய்க்குப்புகல்வதிலையானாலும். (௨௩)

அறையென்றபணிமறுத்தலறமன்றாலமருலகந்
திறைகொண்டசுமாலிமகள்சிலைத்தாதையவனாணைத்
துறைநின்றேனாதலினாற்றொக்கனனின்பக்கலியான்
மறைகண்டமாதவநீமற்றனைத்துமனங்கொள்வாய். (௨௪)

குணமொன்றுமலையனையாய்குறித்தருள்கூரெனக்கோதை
மணமொன்றுமலர்க்கூந்தல்வகுத்துரைத்தாண்மாதவனுங்
கணமொன்றுதியானமுறீஇக்காரிகைசேர்காரியமின்
னணமென்றுதெரிந்தவளோடறிந்தனனென்றறைந்திடுவான். (௨௫)

மகப்பேறுகருதிவந்தாய்வருநேரம்வளைகடலிற்
புகப்பெருங்கதிரிரதப்புன்மாலைப்பொழுததனான்
முகப்போதும்விழிப்போதுமுன்னியவைமுடிக்கலுறு
மகப்போதுங்களிப்பவியாமறைவதுளததுகேட்பாய். (௨௬)

வெய்யசுடர்வேலைவிழும்வேலையினீமேவுதலாற்
றையலைநின்றளிர்வயிற்றிற்றனயரெனத்தாமுதிப்பர்
கையர்களாய்க்கயவருடன்கையாதகலப்பினராய்ப்
பொய்யுரையுங்கொடுந்தொழிலும்பொருந்துபுலையூணரக்கர். (௨௭)

கருவயத்தாலிடவயத்தாற்காலவயத்தாலுலகிற்
பொருள்கள்பலபேதமுறும்பொற்றொடியாய்நின்புதல்வர்
மருவுமந்திமாலையினில்வருங்காலவயத்தாலே
நிருதர்களாகுவரென்றானெடியவன்சேய்மகன்மைந்தன். (௨௮)

சொல்லாடுமதுகேட்டுச்சுமாலிமகள்சுரர்முனிவ
ரெல்லாருந்தொழற்குரியாயெனக்கெவரெனுனக்குலகிற்
பொல்லார்கள்புதல்வரெனப்புணருமதுபுகழாமோ
வல்லாய்நீயெவையுமெனாமாதவன்றாண்மலர்பணிந்தாள். (௨௯)

வரக்கருணைமுனிவினவிமைந்தரவர்தமிலிளையோ
னரக்கர்குணமிலனாகியறிவுகொடைதவநீதி
யிரக்கமொழுங்குளனாகியெமதுகுலக்கியைந்தெவையும்
புரக்குமருள்பூண்டுதிப்பன்புரிகுழலாயெனப்பகர்ந்தான். (௩0)

வேறு.

பின்னரகன்றனனாள்சிலவாள்விழிபெயராமன்
மன்னினளாயிடைமாதவனீடியவரனாலே
யன்னவளுந்தியில்வந்துபிறந்தனனகிலாண்ட
மின்னல்கொளும்படிசெங்கணிராவணனென்பானே. (௩௧)

அங்கைசிரங்களிரண்டொருபத்துடனலர்நீலப்
பங்கயநாண்மலர்செங்குமுதத்தொடுபயில்காட்சி
தங்கியவாயிதழோடுமுகங்கடயங்கச்சூன்
மங்குலின்மேலுறுசெக்கரின்வாள்விடவளர்குஞ்சி. (௩௨)

மந்தரவெற்புறழ்மேனியுமங்நெடுவனாஞாங்கர்க்
கந்தரநேர்பகுவாய்களுமதன்மீசைகலையெல்லா
மிந்துவினின்றுதனித்தனிநீங்கியெழுந்தென்ன
வுந்தியவெண்பலும்வீங்கியபண்டியுமுளனாகி. (௩௩)

உயங்கிடஞாலமுமெண்டிசையும்பலுமுயர்வானு
நயங்கொடையன்பருளின்றியறம்பயினல்லோர்கள்
பயங்கரமாகவடுங்கொலைதிவினைபழிமல்க
வயங்கினன்வஞ்சவிராக்கதர்மேதகவருமன்னோன். (௩௪)

அம்புவிதந்தவன்மைந்தனளித்தவனருளாலே
வம்பவிழோதியதன்பினர்வாளரிவருமுந்தி
வெம்புலிதோன்றியதென்றிடவென்றிகொண்மிடல்வீறுங்
கும்பகனன்றனையீன்றனள்வானவர்குலமஞ்ச. (௩௫)

பேர்ப்பரும்வென்றிகொண்மைந்தனைநல்கியபின்னன்னோ
ரேர்ப்புயமேறுசயத்திருவம்பகமிடனாட
வார்ப்படுபங்கயமங்கைதன்வாள்விழிவலனாடச்
சூர்ப்பநகைப்பெயர்மாதினையீன்றனடுணையில்லாள். (௩௬)

தோடணவுங்குழல்பின்றையறம்புரிதொடர்பங்கோர்
நாடணவாதவொழுக்கமுரங்கொடைநயவாய்மைப்
பாடணமன்பருள்கல்விநலம்பிறபயில்செய்கை
வீடணனென்றொருகான்முளைதந்தனள்வினைதீர்வாள். (௩௭)

அன்றவண்முன்கொடியோர்தமைநல்கியதன்பின்னா
நன்றிகொள்வீடணனைத்தருமிக்கநலத்தாலே
துன்றியகாரிபிறந்தபின்மேதகுசுதைதோற்றும்
பொன்றிகழ்நாடர்கடைந்தபயோததிபோலானாள். (௩௮)

பாலரின்முன்னிருவோருயிர்கொன்றபவத்தாலே
காலனுமஞ்சவரும்பிரமக்கொலைகாகுத்தன்
மேலடைவுற்றதுதன்பெயராலுயர்விடையீசன்
மூலவிலிங்கநிறுத்தலின்விண்டதுமுனிவீர்காள். (௩௯)

ஆசிலிராமனுமீசனருட்குறியதுதன்னைப்
பூசைபுரிந்துயர்புண்ணியவாவிபுகுந்தாடி
யேசறுசீதையிலக்குமனோடுமிரும்பாவ
மாசுகழீஇயினனாயிடைவைகினன்மகிழ்வோடும். (௪0)

வேறு.

தோமோடியலாவிராகவனைத்தொடரும்பிரமக்கொலைநீங்கிப்
போமோரிடத்திலொருபுனிதப்புனலுண்டதன்பேர்பிரமகத்தி
யாமோசனியாமதின்மூழ்கிலந்தப்பவமுன்னானவினை
தாமோடிரவியெதிரோடுந்தமத்தினோடுந்தவத்திர்காள். (௪௧)

தாழுஞ்சடையீரிப்பொழுதுந்தானமதனிற்றன்வடிவி
னீழலதுவாயிராவணனுமிருதன்காணப்படுகின்று
ணுழும்பிலமொன்றத்தடத்தினருகுண்டாகுமதனிடையே
வீழவிடுத்தானயோத்தியர்கோன்விரவும்பிரமக்கொலைப்பேயை. (சஉ)

அன்னபிலத்தின்வழியடைத்திட்டதன்மேல்வகுத்தோர்மண்டபத்தை
மன்னுஞமலிப்பரிதரக்கும்வடுகன்றனைமற்றதனுப்பண்
முன்னர்நிறுத்தான்பசும்பொகுட்டுமுளரிக்கோயில்வீற்றிருக்கும்
பொன்னின்கொழுநன்மீண்டலகைபுறப்பட்டுலகைவருத்தாமல். (சங)

அண்ணல்கரியகஞ்சுகன்றனுணையதனுலெழுந்துலகி
னண்ணும்வலியின்றப்பிலத்துணடுங்கிக்கிடந்தததுவறிதே
யெண்ணுமிராமநாதனமர்ந்திருக்குங்கோயிலதன்றென்பால்
வண்ணமுலையாளிமையமலைவளர்காதலியுமகிழ்ந்திருந்தாள். (சச)

அந்தமுதல்வற்கிடம்வலமுன்னுமூன்றிடத்துமவன்விழியா
மிந்துவிரவியெரிக்கடவுளென்பாரிருப்பரிந்திரனை
முந்தையவராந்திசைக்காவன்முதல்வர்குணபான்முதலாக
வந்ததிசைநாலிரண்டிடத்தும்வணங்கியீசன்றனைவதிவார். (சரு)

ஒற்றைமருப்பன்குகன்வீரனும்பர்முனிவருரகரிசை
கற்றயாணர்சித்தர்முதற்கணங்கள்யமுனைகங்கைகயை
யெற்றுஞ்சரயுவாணிமுதலிலங்குநதிகள்பிறர்யாருந்
தெற்றுஞ்சடிலத்திராமேசன்றிருத்தாள்வணங்கியாங்குறைவார். (சசு)

எய்யுஞ்சிலைக்கையிராகவன்பினிராமநாதன்றனைப்பூசை
செய்யும்புனிதவேதியர்கள்சிலரையழைத்தாங்கவர்தமக்கு
வையம்புகழுஞ்செழுஞ்சாலிவளத்தின்மலிந்தவயலூரும்
பொய்யிலறவோரவர்வேண்டும்பொன்னுமணியும்புரிந்தளித்தான். (சஎ)

அனகனிராமநாதனையங்கவர்தாம்புரியுமருச்சனைக்குக்
கனகமகுடங்குழைகடகங்கதிர்வெண்டரளத்தொடைகதிர்கால்
பனகமணியினிரையமுத்தும்பதக்கமுதலாம்பணிபலவுந்
தனகங்குழையும்விருப்பதனுற்றந்துவேண்டுந்தனமுதவி. (சஅ)

நறியகூலம்பன்னிறங்கூர்நாகம்பிறவுநல்கிலஞ்
செறியுஞ்செழுநீர்நதியுடுத்ததேயம்பலவுங்கொடுத்துமறை
நெறியின்வழுவாவகைநடத்துநிலையினிறுவியொருமறிய
மெறியுமழுவும்பயிறிருக்கையிறைதாளிராமனிறைஞ்சினன். (சகூ)

வேறு.

காதையீதுபடிக்குநர்காதினூடுமெடுக்குநர்
தீதெலாமும்விடுத்தணிசேயவாரிசமட்டவிழ்
போதில்வாழ்வுபடைத்தமர்பூவைமேவுபுயத்துணை
யாதிமேனியிலொற்றுமையாவராசிறவத்தரோ. (ருo)

பிரமகத்திச்சருக்கமுற்றிற்று.

ஆகதிருவிருத்தம், உகூoரு.

# தோத்திரச்சருக்கம்.

வடங்கொள்புரிநூன்மணிமார்பின்மறையோர்வதனமலர்நோக்கித்
திடங்கொள்சூதனருள்செய்வான்றெய்வமுனிவீர்சிலம்பின்மக
ளிடங்கொளிராமநாதனிணையிகந்தசீர்த்தியியலிசைப்பன்
மடங்கொள்பாசங்கடிந்தின்பம்வழங்குங்கேண்மின்மனத்தன்பால். (௧)

அலைவில்சேதுவதனுப்பணருளின்குறிநட்டிறைஞ்சியபின்
றலைவனிராமனிலக்குமணன்சனகியிரவிதனயன்முத
லுலைவில்கவிகள்விரிஞ்சன்முதலும்பர்கும்பமுனிமுதலா
மலைவின்முனிவர்தனித்தனிதாம்வழுத்தினார்கண்மரபதனால். (௨)

அன்னமுறையேநுமக்கறைவனவரிலயோத்திநகரளிக்கு
மன்னனிராமநாதனடிமலரின்பெருமைவல்லபடி
சொன்னபுகழ்யானறிந்தபடிசுருதிவகுத்தோன்கழல்போற்றி
முன்னமொழிகேன்சவுனகனேமுதலாமுனிவீரொனமொழிவான். (௩)

உலகிலுயர்ந்தாய்பெருமாயையுடையாயிலைமூன்றுடைக்கழுமு
ளிலகுபடையாயிணைமலர்த்தாளிறைஞ்சுமடியாரிளைப்பனைத்தும்
விலகும்பரனேயெப்பொருளும்வீட்டுமுதலேவிண்ணுறையு
மலகிறேவர்தந்தேவேயருமாமறையின்சிரத்தறிவே. (௪)

யோகமுனிவர்க்குண்மைநெறியுலாப்பாயென்றுமொருங்கெவையு
மாகநிறைந்தவானந்தாவகிலநாதாவுலகளிக்கு
மேகமுதலேசுகவடிவாமிறைவாவணங்குமெழிற்றொண்டர்
சோகமருவும்பயநீக்கற்றுணையாஞ்சரணமலர்த்துகளாய். (௫)

பேராருயிரோயிறும்பூதுபிறங்கும்வீரப்பெற்றியினாய்
சோராமகபாதகந்தீர்க்குந்துணைவாவவிச்சைதுடைப்பானே
காரார்காலகாலனேகாலமானுயதுகடந்தாய்
சாரார்போக்குவரவிரண்டாற்றவிக்குந்தாபந்தணிப்பானே. (௬)

இலங்கைநிருதன்பிரமகத்தியென்கணிலையாம்வகையருளால்
விலங்கமுனிந்தவேதியனேவிடமுண்டிருண்டமிடற்றானே
யலங்கன்முருகுகமழ்கூந்தலரிவைபாகாவமரநதிச்
சலங்கொண்முடியாயிறுதிபடாத்தலைவாவிரூபத்தழற்கண்ணா. (௭)

வணங்கும்பினாகபாணியினாய்மதனையெரித்தாய்மாதவத்தோர்
கணங்கொளிமையோர்கழறொழற்காங்காலங்கருதிக்கடைத்தலைவா
யுணங்குகயிலைத்திருக்கோயிலுடையாய்நமவென்றுளத்தன்பா
லிணங்குமிராமனெடுத்தேத்தியிராமநாதன்றாள்பணிந்தான். (௮)

இளவலிலக்குமணன்பின்னரிராமநாதாவெயின்மூன்று
மளவிறுகளாம்படிநகைத்தாயடுக்கன்மகளாமந்துவர்வாய்த்
தளவநகையாளுயிர்க்கணவாதனிவேற்கரனைச்சடிலமதிப்
பிளவுநிகருமொருகோட்டுப்பிரானைப்பயந்தபெரியோனே. (௯)

படர்செங்கதிர்வெண்மதியழலாற்பயிலுநயனமூன்றுடையாய்
சுடருமகுடகோடீராசோமரூபாமார்க்கண்டற்
கடருங்கூற்றின்பயங்கடிந்தாயண்டமனைத்துமாக்கியளித்
தடனங்கழிக்குமுக்கிரனேயொன்ருய்முழுதுமுணர்ந்தோனே. (கo)

வரனேவரதாவைவகையாமறங்களொழிப்பாய்வாய்மைபயி
லுரனுரின்பவுருவினனேயுழலும்பவநோய்க்கொருமருந்தாம்
பரனேபயமில்பட்டிகர்க்கும்பண்புள்ளவர்க்கும்பதியாஞ்சங்
கரனேகணக்கில்கணத்தலைவர்காடுபுரக்குங்காவலனே. (கக)

காட்டுமகிலத்திருவுருவாகாணுமவற்றின்கரியானு
யீட்டும்வினையாலெங்கெங்கேயான்போய்ப்பிறப்பனங்கங்குன்
ருட்டண்பதுமத்துணையிலன்புதருவாயவலந்தருநெறியில்
வேட்டுநடத்தலருளாமல்வேதநெறியில்விருப்பருளாய். (கஉ)

என்றுபரசியெதிர்பணிந்தானிதன்பின்பவளவிதழ்திறந்து
மன்றலளகமயிற்சீதைமலையாண்முலையிற்குங்குமச்சே
ருென்றிவிளங்குங்கவினுருவாவுலகமெவைக்குமொருமுதலே
துன்றுசடிலசேகரமேற்சுமக்குந்திரைவானதியானே. (கங)

தேவதேவேயொருபாலிற்செம்மையொருபாற்கருமையதாய்
மேவுமேனிச்சங்கரனேவேருேர்வடிவாம்விழிநுதலா
யோவில்கருணையாலயனேயுடல்கொண்டுலகிற்பிறந்துழன்று
சாவவருந்தீவினைக்கஞ்சுந்தவத்தோரச்சந்தவிர்ப்பானே. (கச)

என்கணிணைநின்றெழும்பார்வையெந்தனுான்றுமிராகவனு
மன்கண்படரமற்றவர்பான்மருவாதொழியவரந்தருவா
யுன்கணடைந்தமார்க்கண்டனுயிருண்கூற்றையுதைத்தவன்றன்
புன்கண்டீர்த்தவுனைச்சேரும்புனிதர்க்கரியபொருளுண்டோ. (கரு)

இறையின்றுயர்ந்தபேரிறைவாவிராமநாதாவின்புருவா
மறைவந்தடைவார்தமைப்புரக்கும்வள்ளாலெனக்கென்மகிழ்நன்பா
லுறையுங்கருத்துமவனேவலுவக்குஞ்செயலுமுதவுதியென்
றறையுங்கழல்பூண்டேறுகைக்குமம்போருகங்களாதரித்தாள். (கசு)

வேறு.

அளியினீடுநிதியமேயகிலலோகநாதனே
யொளிகொடேவதேவனேயுன்பொருட்டிறைஞ்சுகேன்
விளிவிலாதவன்புநின்மெய்ப்பதத்தினல்கியே
யெளியனேனையாளுமாறிரங்கிராமநாதனே. (கஎ)

உனையலாமலுலகிதனுண்மைதோன்றிநின்றிட
லெனுமிரண்டுமின்மையாலிவ்விரண்டினுருவமா
முனைவஞானவின்பமாமுதல்வவென்றுமுண்டக
மனையதாள்கள்போற்றினனஞ்சனைக்கொர்மஞ்சனே. (கஅ)

கோளினீடுமுலகமுன்குணமகன்றகுறைவிலா
வாளினல்வயங்கிடாமற்றதன்கணன்றியே
யாளிராமநாதனேயகண்டசம்புவேயெனுத்
தாளில்வீழ்ந்துபரசினன்சயங்கொள்வாலிதனயனே. (கக)

இன்பமென்னும்யாவையுமிறைவநின்கணின்பமாம்
புன்புலங்கடிந்தநூற்புலவருண்மைகாண்பரோல்
வன்பவங்கணீக்கெனுவாளிராமநாயகன்
றன்பதங்கள்வாழ்த்தினன்றலைமைநீடுசாம்பவன். (உ0)

ஆளுமாசைதேசமோடமையமென்னும்வகைமையா
ளும்வேறுபோலவாய்ஞாலமெங்குமாகிய
தாளிராமநாதனேதவறுதீரநல்கெனு
நீளுநேயநெஞ்சினனீலனேத்தினனரோ. (உக)

எவனொருத்தன்மாயையாலிமைப்பிலாருமாயனும்
புவனிபெற்றதாதையும்போதமம்மரெய்தினு
ரவனவித்தையஃதிலானருளிராமநாதனுஞ்
சிவனெவர்க்குமிறையெனுச்செப்பிவாழ்த்தினனளன். (உஉ)

ஞானமாகிநின்னுருநாடிலாமையாற்பிர
தானமுன்னதாகவேசாற்றுவார்கள்கற்பனை
யானவார்த்தையஃதொரீஇயறியிலாதிநீயெனுக்
கோனிராமநாதனைக்குமுதனேத்தினனரோ. (உங)

தோன்றுமிக்கசாக்கிரஞ்சுவனமேசுழுத்தியா
மூன்றுமாக்கிமாயையான்முடிவின்ஞானரூபமாய்
மான்றவத்தையெய்திடாவள்ளலென்றுபனசனுங்
கேன்றவன்பினேத்தினனிறையிராமநாதனை. (உச)

நின்னையோர்கிலாமையானியாயவாதமூடர்தா
முன்னுகாரியங்களின்முதலணுக்களென்குந
ரன்னசீரிராமநாதாவகண்டசோதியே
யென்னையாளெனுக்கசனெதிரிறைஞ்சியேத்தினன். (உரு)

கலக்கநீடவிச்சையாங்கயிற்றினுலியாப்புறீஇ
யலக்கணெய்துவார்கள்பாலருள்வழங்குசாந்தனே
யிலக்கிலாதசெல்வனேயிராமநாதனேயெனு
மலக்கணீங்கவாழ்த்தியேவணங்கினன்பசுக்கணன். * (உசு)

தனையகன்றுநிலைபெருச்சகலலோகதாரகன்
வினைகளைய்மருத்துவன்விளங்கிராமநாயகன்
புனையும்வேணிமதியினன்பொருப்பின்மங்கைகோனெனுக்
கனைகழற்பழிச்சினன்காதனீடுகவயனே. (உஎ)

காணலின்றியுன்றனைக்கரணநான்குமுயிரொனு
மாணிலார்கள்கூறுவார்மருவுமன்னமரபுசா
லேணிலங்குமாவிநீயென்றிராமநாயகன்
ருணிலாவுமுண்டகஞ்சரபனின்றுபோற்றினன். (உஅ)

வெள்ளமார்கணங்களின்வேந்தமூன்றுவிழியினுய்
கள்ளுலாவுகூந்தலாள்கவுரிகொண்கபவமெலாந்
தள்ளியாண்டுகொள்ளெனுத்தயங்கிராமநாதனும்
வள்ளல்சீர்வழுத்தினன்மன்னுகந்தமாதனன். (உகூ)

* பசுக்கணன்-கவாக்ஷன்.

பிறவிநீரிறப்பெனும்பெரும்பயம்பிறங்குசே
யுறவுமாதர்பூமிபொன்னுகண்டெழுந்தரங்கமாய்
மறையவண்டகோடிசூழ்வரம்பிலாதவாழ்க்கையென்
றறையும்வேலையள்ளல்புக்கழுந்தியேங்கியலறியே. (௩0)

ஐம்பொறிக்கொள்பாந்தளாலழுங்குநோயிடங்கரால்
வெம்புதாபமும்மையாமீன்களாலும்வாடினே
னெம்பிரானிடத்துமாதிலங்கிராமநாதனே
வம்பனேனையாளனுவாலிதம்பிவாழ்த்தினன். (௩௧)

கரவரோடுவாளரிகடியவெய்யபிணிகளா
வுரகமாரணங்களாவுழுவையுற்பவங்களா
விரவுபாலர்தருணர்நீள்விருத்தரென்னுநீரிலாப்
பரவுகூவல்விடயமாம்பருப்பதங்கண்மல்கியே. (௩௨)

கனலினீட்டநீடமுக்காறுசீற்றமிவறலா
முனைகொள்கண்டகம்பயமுயங்குபுன்கணாகியே
துனைவிலுண்மைநெறியெலாஞ்சூழல்கொண்டடைத்தமா
வினைசெய்கானநடுவுறீஇவேறுதஞ்சமின்றியே. (௩௩)

புரைகுலாவுதுயருறும்பூரியேனையாளனு
நரைகுலாவுபோர்விடைநடவிராமநாதனை
வரைகுலாவுபுரிசைசூழ்மாவிலங்கைமன்னனும்
விரைகுலாவுதொங்கலான்வீடணன்வழுத்தினன். (௩௪)

ஒன்றைநாடின்மேலதாயொன்றுபின்றையொன்றின்மே
லன்றுகீழதாய்வருமளப்பில்யோனிவகைதொறுஞ்
சென்றுதோன்றிமாண்டுபோய்த்தியங்குகும்பிபாகமுன்
னென்றுகூறுநரகின்வீழ்ந்திளைத்திரங்கிமீளவும். (௩௫)

தலத்தின்மேல்வினைக்குறைச்சண்டவாயுவெற்றவே
நலத்தினீங்குபவமுறீஇநாங்கள்சாலநொந்தனம்
புலத்தவீடுதருகெனுப்புகழிராமநாதனை
நிலத்திறைஞ்சியேத்தினர்நிரந்தவீரரனைவரும். (௩௬)

வேறு.

சம்புவேயுலகநாதாதமியனேன்மருட்கைதீரொன்
றம்புயன்புகழ்ந்திட்டானேரடுக்கல்வந்தகிலமீன்ற
வெம்பெருமாட்டிகேள்வனெவனவற்பணிகேனென்னு
வும்பர்கோனிராமநாதனுவமனில்சீர்த்திசொற்றான். (௩௭)

ஏற்றினாய்தந்தாய்கந்தற்கிபமுகற்கெனப்புகழ்ந்தான்
கூற்றுநீள்குற்றந்தீரக்குடதிசைத்தலைவன்றன்முன்
போற்றினன்றன்னைவென்றான்பூசுரனெவன்றாட்பூசைப்
பேற்றினாலவனையேத்தப்பெறுகுவனெனப்பணிந்தான். (௩௮)

அணிகுழைக்காதினானையலத்தநேர்மேனியானைப்
பணிவனென்றளகைவேந்தன்பரசினன்பரிதியென்பான்
மணிவிழிமூன்றென்னோடுமருவுமாதேவாதக்கன்
றணிவிலாவேள்விசெற்றசதுரனேயென்றுதாழ்ந்தான். (௩௯)

நெடியசூல்கரத்திலேந்திநிலவுறழ்நீறுபூசிக்
கடியராவலங்கல்சாத்திக்கனையிருண்மயானத்தாடு
மடிகளேபோற்றியென்னுவம்புலிக்கடவுடாழ்ந்தான்
படிபுகழிராமநாதன்பாதபங்கேருகங்கள். (சo)

இந்திரனெழுவாயென்னேடெண்டிசைகாக்குமெண்மர்
வந்தனைவிரும்புந்தாள்கள்வணங்குகேன்வம்பற்றுனை
யந்தமிலமலாவென்றுனங்கிகாற்கடவுண்மாலே
வெந்திறலரனேயாடைவேங்கையாயெனப்புகழ்ந்தான். (சக)

நள்ளுறீஇயெவையுங்காணுநானெனுங்கரியாய்நாளு
முள்ளுறநோக்குங்காலையுன்னையன்றின்மையானே
வள்ளலேசிறியேன்மம்மர்மாற்றெனவிராமநாதன்
றெள்ளுமாண்கழல்கள்போற்றிசெய்தனன்றேவராசான். (சஉ)

வஞ்சகர்க்கரியாய்நீங்காமந்திரப்பொருண்மையானே
தஞ்சநீயென்றுபோற்றித்தயித்தியர்குரவன்றாழ்ந்தான்
விஞ்சுசீரிராமநாதாவேற்றவர்க்கெட்டாயோக
ரொஞ்சலிலுயிரோயென்னுவேத்தினுராயுள்வேதர். (சங)

ஆதியேயகிலநாதாவம்பிகாபதியேதிங்கட்
பாதிசேர்சடையினுனேபாய்விடைப்பதாகையானே
சோதியேயழிவிலானேதுங்கவானவனேவேத
நீதியேதிரிந்தகுற்றநித்தலும்பொறுப்பாய்நீயே. (சச)

எனதெனுமுடம்பையானேயானென்றுமீன்றமைந்தர்
மனைமுதல்வினைக்கீடாகவந்தவற்றளவினீங்கும்
புனைதரும்படிற்றுவையப்பொருளினையென்னதென்று
நினையுமாலகற்றென்றேத்திநெடுங்குறுமுனிவன்றாழ்ந்தான். (சரு)

ஆடைபொன்பூமிசேதாவாயிழையரியதோன்றல்
கூடுறுநண்பரெல்லாங்குவலயத்துதவியாகா
வீடுறுந்துறவேயென்றும்வேண்டுமென்றிராமநாதன்
றோடவிழ்கமலபாதஞ்சுதீக்கணன்றொழுதான்மாதோ. (சசு)

மேவுநூலுணர்வுமோதும்வேதமும்பிறவுமெல்லாந்
தேவநின்னிடத்திற்பத்திசெய்கிலாமனிதர்க்கென்று
மீவதொன்றில்லையென்றுவிறைவனேயிராமநாதா
தாவுனதடிக்கன்பென்றுதாழ்ந்தனன்கவுசிகன்றான். (சஎ)

மேலவாமீகைநோன்புவிதிநெறிநியமம்வேள்வி
யோலமார்கங்கையாதியோணநீராடலெல்லாம்
பாலவாம்பயனென்றீயாபணிந்திடார்க்குன்னையென்னுக்
காலவனிராமநாதன்கனைகழல்போற்றிசெய்தான். (சஅ)

பண்ணினுமனந்தகோடிபாவங்கள்பரிதிமுன்ன
நண்ணிடுமிருள்போற்பாறுநம்பனேயிராமநாதா
வண்ணலேயுனைவணங்குமவர்க்கெனவசிட்டனுன
புண்ணியமுனிவர்கோமான்போற்றிசெய்திறைஞ்சிநின்றான். (சகூ)

இகத்தினிலிராமநாதனிணையடிதொழுவார்காண்பார்
சகத்தினிலொருகாற்சூழ்வார்தாமொருதாயருந்தி
புகத்தகாரகண்டவின்பப்பூரணராவரென்று
வகத்திரிபில்லாமேன்மையத்திரியேத்தினனே. (ருo)

சங்கரனிராமநாதன்சந்நிதிவணங்கியங்கட்
பொங்கியகிளைஞர்தம்மைப்புந்தியிற்கொள்வார்தங்கள்
வெங்கொடும்பவந்திர்த்தன்னோர்வினைகளுங்கெடுக்குஞ்செய்கை
யங்கவர்க்கெளியதென்னுவங்கிராமுனிபுகழ்ந்தான். (ருக)

நிருமலாவிராமநாதாநின்னடித்துணையடைந்தார்
மருவியதுயரந்தீர்க்குமந்திரப்பொருண்மையாகுந்
திருமலரதனைத்தாமுஞ்செல்வனாவணங்குவாரும்
பருவரதீர்ப்பாரென்னுப்பரசினன்கவுதமன்முன். (ருஉ)

வேதநூன்முடிபுதேர்ந்துவீட்டினையடைவார்க்கேனை
யோதுநூற்கலைகளெல்லாமொருவியேயிராமநாதன்
பாதபங்கயங்கள்போற்றிப்பணிதலேயமையுமென்னுப்
போதமார்சதானந்தன்முன்புகழ்ந்தனன்புனிதவாக்கால். (ருங)

நின்னையார்நினைப்பரன்னோர்நெடும்பவமுழுதுநீங்கும்
பின்னையானந்தஞானப்பெருகொளித்திரளாய்நிற்கு
முன்னையேயடைவரென்னுவுணர்வுசால்பிருகுவென்பா
னென்னையாளிராமநாதனிணையடியேத்தியிட்டான். (ருச)

நச்சணிமிடற்றிராமநாதநின்பாதசேவை
யிச்சையினிங்குவேண்டுமின்பமும்வீடுநல்கு
மச்சமார்நரகில்வீழ்த்தாதார்சொலோவணங்காரென்னுக்
குச்சகன்போற்றிசைத்தான்கோதிலாமுகமன்கூற்றால். (ருரு)

எழுகதிரனையமேனியிராமநாதனைவணங்கித்
தொழுமவர்க்கீகைநோன்புசுரநதியாடல்வேள்வி
வழுவிலாச்செபந்தியானம்வழங்குவதென்னேவென்னுப்
பழமறைபயின்றநாவாற்பழிச்சினன்காசிபன்முன். (ருசு)

ஏகனேயிராமநாதாயானுனையேத்தாநின்றே
னுகநீத்திடுநாட்பாகத்தம்பிகையோடுந்தோன்றி
மோகமிலகண்டஞானமுண்டகக்கழுவென்னுத்
தாகமிலங்கிராவாந்தபோதனன்முன்புகழ்ந்தான். (ருஎ)

இந்துவாழ்மகுடவேணியிராகவநாதாயாங்கள்
பந்தமாராசைநீரும்பழங்கணெட்டலையும்பல்கு
மந்தமில்பிறந்தைவேலையாழ்ந்தனமளிநீயென்னுக்
கந்தருவத்தரொல்லாங்காதலினேத்தியிட்டார். (ருஅ)

பொன்னவிர்செய்யமேனிப்புனிதனேயிராமநாதா
வுன்னையன்றியாரோவெந்நோயுழவையச்சங்கூர்யாக்கைக்
கன்னெடுவனத்தினீங்குங்கதிநெறிபுகல்வாரென்னுக்
கின்னரர்சீர்த்திவார்த்தைகிளந்தனர்வளர்ந்தவன்பால். (ருகூ)

வாயில்வேட்டுவராம்பொல்லாமாற்றலரூற்றமாரூத்
தீயவெம்பவத்தைவென்றுசிவகதிசேரவெங்கட்
காயநற்றுணையாருன்னையன்றியென்றிராமநாதன்
றூயதாள்வனசஞ்சூடித்துதித்தனரியக்கர்தாமே. (சு0)

விற்படைவிறலிராமன்வினைகெடவருச்சித்தேத்துஞ்
சிற்பரம்பொருளேயுன்றன்சிந்தனைக்கரியசீர்த்தி
யற்பராமடியேம்போற்றற்கறிதுமோவருள்கூறொன்னுச்
சற்பமாமுருவர்போற்றித்தாழ்ந்தனர்வீழ்ந்தநெஞ்சால். (சுக)

துணையிலாயோனிதோறுந்தோன்றிநின்றிறவாவண்ண
மணைதருமவிச்சைநீக்கியடியரோமுய்யநல்கென்
றிணையில்கிம்புருடர்போற்றியிறைஞ்சினரிராமநாதன்
பிணைவளர்கரத்தெம்பெம்மான்பிரசநாண்மலர்ப்பதங்கள். (சுஉ)

மங்கைசேரிடத்தாயூருமால்விடையுடையாய்மன்னி
யெங்குமாயல்லையானுயேற்றமுங்கருமில்லாய்
பொங்கொளியிராமநாதாபுலங்கொளத்தோன்றியாள்கென்
றங்கெதிர்வணங்கிவித்தியாதரராதரித்தார். (சுங)

புஞ்சமார்கணத்தின்வேந்தேபூசனையவர்பாற்கொள்ளுங்
கஞ்சநேர்பதத்தாய்சூடுங்கங்கையாயிராமநாதா
செஞ்சொலினளவைநீத்ததேவராசியமேயென்னு
வஞ்சமில்வசுக்கள்வாழ்த்திவணங்கினுர்மாதர்மிக்கார். (சுச)

போதமேவடிவாகிட்டைபுரிந்திடுமியோகர்க்கேயும்
வாதகமில்லாமுத்திவரதனேமங்கைபங்கா
நீதகன்றேடவெம்பாற்றிருவருள்செய்தியென்னு
மேதகுபுகழ்ச்சிவாய்மைவிளம்பினுர்விசுவதேவர். (சுரு)

தத்துவமெவற்றினுக்குந்தத்துவமாகித்தானே
மெத்துபேரொளியாய்மேலைமெய்ப்பொருளாகிநிற்கு
மத்தனேயிராமநாதாவடியரேந்தொழுதுமென்னு
வைத்தசீர்வழுத்தியிட்டார்மருத்துக்களென்னும்வானேர். (சுசு)

முனைத்தமர்பொருள்வேறில்லாமுதல்வனேமுயங்குமோக
வினைத்தொடர்பறுக்குஞ்சோதிவிமலனேவிரிந்தஞால
மனைத்துமுண்டென்னக்காட்டுமத்தவென்றிராமநாதன்
றனைத்தொழுதன்பினேடுஞ்சாத்தியரேத்தினுர்கள். (சுஎ)

தயங்குபேரொளியாய்த்தானேசச்சிதானந்தமாகி
வயங்குபூரணமாய்த்தோன்றன்மறைந்திடல்சுருங்கலின்றி
முயங்குமோர்பொருள்வேறின்றிமுதனடுமுடிவிலாமற்
றுயங்கிடுவிகாரமின்றிச்சுத்தமாய்நித்தமாகி. (சுஅ)

பற்றெருடுபிராந்திநீங்கிப்பல்லவாம்பிரமாணங்கட்
குற்றறிவளிப்பதாகியுதித்திடவுலகந்தன்பான்
மற்றதுதனக்குத்தானேமருவுமோர்கரியாய்நிற்கு
முற்றிலாவகண்டஞானமூர்த்தியேபோற்றிபோற்றி. (சுகூ)

போகமும்வீடுமில்லாப்புனிதனேபோற்றிபோற்றி
யாகுமாறவையிரண்டுமடியவர்க்களிப்பாய்போற்றி
மோகமார்மாயைதன்னுன்முகுந்தனுயயனுய்த்தோன்று
மேகனேபோற்றிபோற்றியிராமநாயகனேபோற்றி. (எ0)

எந்தையேயிணைமேலில்லாவிறைவனேபோற்றியாங்கள்
புந்தியின்மருளான்முன்னம்புரிந்தவெம்பாதகங்கள்
சிந்துமாசிந்தித்துன்றன்சேவடிபணிதுமென்ன
வந்தனைசெய்தாரோனைவானவராேனாரெல்லாம். (எக)

மறங்கொண்மூவிலைவேற்கையாய்வரதனேயிராமநாதா
நிறங்கொண்முக்கண்ணுஞானநிலைபயில்புனிதயோகா
திறங்கொண்மாண்சிந்தையானேதிருவடிதாழ்துமென்ன
வறங்கொள்வீடணன்றன்காதலமாத்தியரோத்தினர்கள். (எஉ)

வேறு.

இன்னுரிவர்தாம்பலரீண்டியிராமநாதன்
பொன்னர்கழலேத்தொலியூழியிற்பொங்குமோதை
மன்னுழ்கடலேழெனமண்டிசைவானமெங்குந்
துன்னுமிகவிம்மிநிறைந்துதுதைந்ததம்மா. (எஙு)

பரவுற்றிடுபேரிசையுன்மனைப்பாங்கர்நீங்கி
யிரவிற்பொலிகூந்தலிடத்தனிராமநாத
னரவிற்புரிபொற்குழைதாழ்திருவஞ்செவிக்கண்
விரவுற்றதுமற்றவர்காதலின்மேன்மையாலே. (எசு)

அவர்கண்மொழிதஞ்செவிக்கின்பமளித்தலாலே
யிவர்கண்மகிழ்செய்தலையெண்ணியிராமநாதன்
கவர்கண்ணினர்காணருந்தன்னுருக்காட்டியங்க
ணுவர்கண்ணெதிர்நின்றனனம்பிகையோடுமன்பால். (எரு)

அங்கார்வமிகுந்திடவன்னவரண்ணல்வேணிக்
கங்காநதிகண்டனர்திங்களங்கண்ணிகண்டார்
பைங்கார்முகவேளுயிர்பாற்றியபார்வைகண்டார்
வெங்காளவிடம்பயில்கந்தரமேன்மைகண்டார். (எசு)

எரியார்மணியங்கதந்தோளிலிலங்கல்கண்டா
ரரியார்நறவங்கமழ்கொன்றையலங்கல்கண்டார்
கரியாரதள்வென்பயில்போர்வையின்காமர்கண்டார்
வரியாருமுவைத்துகில்சாத்துமருங்குகண்டார். (எஎ)

இணையார்மலர்போலொளிர்பாதமிரண்டுகண்டார்
பணையார்முலையம்பிகைதங்கியபங்குகண்டார்
துணையாதுமில்பேரெழில்கண்டனர்துன்பவேலைப்
புணையாமருள்கண்டனரேனையர்புன்மைகண்டார். (எஅ)

மாணுதனதிவினையஞ்சிவருந்தல்கண்டார்
நாணுதனவெம்பவமெல்லநடத்தல்கண்டார்
கோணுதனஞானசுகோதயங்கூடல்கண்டார்
காணுதனகண்டனர்மண்டுகளிப்பின்மிக்கார். (எகூ)

பாடாமகிழ்வுற்றனர்பங்கயப்பாணிகொட்டி
யாடாவயர்வுற்றனர்நெக்குளமன்புதானே
கூடாயினரன்றவர்பாலருள்கூர்ந்துசொல்வா
னேடாரிதழித்தொடைமார்பனிராமநாதன். (அ0)

வாராய்மதில்சூழுமயோத்தியின்மன்னரேறே
வாராய்ரகுவின்குலமுய்ந்திடவந்தமைந்தா
வாராய்வளர்சீதைமணந்திடுமாலைமார்பா
வாராய்தருமத்துருவாகிவயங்கிராமா. (அக)

வாவார்குழற்சீதைசுமித்திரைமைந்தவம்மோ
மீவாழ்கதிர்சேய்முதல்வானரவீரர்சேர்மின்
பூவாரயனுதியதேவர்கள்போதுமின்க
ணுவார்தமிழ்க்கோன்முதன்மாதவர்நண்ணுமின்கள். (அஉ)

வேர்செப்பருநம்பெருமெய்ப்புகழ்மேன்மைநாடி
நீர்செப்புமொழித்தொடையன்பொடுநீணிலத்தின்
யார்செப்புகர்கேட்குநர்கேள்வியிழைக்குநீரார்
சீர்செப்பருமன்னவர்சேர்நலஞ்செப்புகின்றும். (அங)

நேசித்தருநூன்முறைநம்மைநினைந்துதாமே
பூசித்திடுபேறுமொர்வற்சரம்போதமிக்கோர்
வாசித்திடுசீர்த்திகொள்சேதுவில்வைகுபேறு
மூசித்திரைசூழ்தனுக்கோடியின்மூழ்குபேறும். (அச)

போமாதவர்தேர்புரவிக்களைபோக்குகந்த
மாமாதனமேற்புனிதப்புனல்வாவியாவுந்
தாமாடியபேறும்விருப்பொடுசார்வர்பின்னை
யாமாகுவரொன்றனன்மற்றிதிலையமின்றே. (அரு)

வேறு.

மகிழ்ந்திராமநாதர்சீர்வயங்கிராமனுதியோர்
நெகிழ்ந்தகாதலோடுதானிவந்தவீடுகூடவே
புகழ்ந்தவாய்மைகூறினேம்புலன்கள்சாயவேரொடே
யகழ்ந்துபாசமாசெலாமகன்றஞானயோகரோ. (அசு)

தோத்திரச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம், உகககக.

---

## சங்கரபாண்டியச்சருக்கம்.

---

மறையைநால்வகைகண்டருள்வரதன்வாதராயணன்மலரடிவணங்கி
யிறைமிராகவன்வழிபடுகழற்காலிராமநாதனையெண்ணியோர்காதை
யறைவனின்னமுமுனிவிர்காள்செவியினகம்புகுந்திடிலதற்குமுன்னகத்து
ளுறையகந்தையொழித்திடுமதுநீருணர்மினென்றுயர்சூதன்மீண்டுரைப்பான்.

ஒழுகுசீதளமதுரவெண்கதிர்காலுடுபதிக்குலமுய்ந்திடவுதித்த
வழுதிசங்கரன்பேரினலவனேர்மன்னன்முன்னுளன்மற்றவன்மனுநூன்
மொழியுநீதியின்முறைபிறழாமன்மோதுதெண்டிரைமுழுதலகாள்வா [ன். (௨)
னெழுதிடாமறையதின்சிரத்துண்மையிசைகொள்பல்கலையிவைபிறதெருண்டோ

வேந்தன்வேதியர்மேல்விருப்புடையான் வேள்வியெண்ணிலவிதியினற்செய்தோ
சாந்தநால்வகைவருணமாச்சிரமந்தத்தநீதியிற்றவறிடாதளிக்கு [ன்
மேந்தன்மாற்றலர்குருதியிற்சிவந்தவிலைகொள்வேலினனெழில்பெறுமிரதி
காந்தனன்னவன்கவுரியோர்பாகன்கண்ணனுதியர்கழல்பணிந்திடுவான். (௩)

திருவில்வாய்மையிற்சீர்மையிற்கொடையிற் திறலின்மேன்மையிற்றிண்மையிற்
பொறையி, லொருவர்நேரிலான்றன்னையன்றுயிர்வேறுண்மைகொண்டிடானுள
த்தருள்பூண்டு, மருவுநாளினின்மதமலையிரலை மடங்கலெண்குழைமரைபுலிகட
மை, வெருவிலாளிசேர்வனத்திடையொருநாண் மீனகேதனன்வேட்டைமேற்ப
டர்ந்தான். (௪)

கன்னிநாட்டினன்வேட்டைமேற்சென்றகாடுகோடுடைக்கரியரிமுதலா
மன்னுபல்விலங்கினத்தினற்குடிலைஞமஞ்ஞைகோகிலம்வரிப்புறக்கிள்ளை
முன்னரஞ்சிறைப்பறவையினிறைவான்முளரியுற்பலமுருகுமிழாம்ப
லின்னநன்மலரிலஞ்சியின்செறிவால்யாண்டும் வெள்ளிடையின்றிநின்றிலங்கும்.

சிலைமுழைஞ்செலாந்திகழ்மணிப்பாந்தள்சென்னிமேலெலாஞ்சீயவெங்குருளை
யிலைகொள்காவெலாமாதவரீட்டமெழுங்கொடிச்செடியிடமெலாமினமா
னலைகொணீரெலாமறைகுரற்பறவையவைசெய்பஞ்சரத்தகமெலாமண்ட
மலையரூரெலாம்வளர்துடியரவமாறன்வேட்டைமேற்சென்றவவ்வனமே. (௬)

புழைக்கரத்தினலுரிஞ்சுருத்தருவின்பொங்கர்வேறிலைபொறிவயப்புலியின்
றழைத்ததோகையாற்றளைப்படப்புடையாத்தண்டமற்றிலைதபோதனர்சாத்தற்
கிழைத்தவற்கலைபுலர்ந்திடாப்பதுக்கையென்பதொன்றிலையிருஞ்சிலைமறவ
ரழைத்தகைவிளியிசைபுகாத்திசைகளங்கணில்லைவேந்தவன்செலுமடவி. (௭)

கறுவுசிம்புள்சேர்சரியகேசரிகள்கடியகோளரியுளியகாருளியங்
குறவர்நேர்வரமுயல்வமாமுயல்கள்கொடிகொள்சேக்கைசேர்குடியநீள்குடிஞை
பறவைமன்சிறையளையபாம்பளைகள்பாயும்வெய்யபுல்வாயபுல்வாய்க
ளறுகையாளிசேருழையனவுழைகளவனிகாவலனடைந்தபேரடவி. (௮)

அருவிநீர்கள்பாய்புனமெலாமருவியாடுசாரலெல்லாம்வரையாடு
கிரியின்மேலெலாங்கிளர்தளிர்த்திகிரிகிடங்கரங்கெலாங்கிளைநெருங்கிடங்கர்
கரியகோடரமிசையகோடரங்கள்கடங்களெங்கணுங்களிறுமிழ்கடங்கள்
விரியும்வேங்கையினிழலெலாம்வேங்கைமீனகேதனன்மேவியவனமே. (௯)

மலையின்மாடெலாமழைமுகிலமலைவளங்கொடாழ்வரைவயினெலாமவரை
கலைகொண்மாதவர்களனெலாமகளங்கள்ளியிற்படுகருவெலாமகருத்
தலைகொள்வெள்ளிடைநிலமெலாமனிலஞ்சலமெலாம்படிதழைசெவியசல
மலைகொள்காவதியெலாம்விலங்கவதியகிலமன்னவனணியவாரணியம். (௧0)

வேறு.

வழுதியவ்வனம்புக்கபின்மன்னவர்தாங்க
டொழுதுசூடியசுடர்முடித்தொகுதிசணீக்கிச்
செழுமென்வாரினற்கட்டியசெருப்பணிந்தொளிசேர்
கழல்புனைந்தனன்தான்வழியிருள்வெளிகாண்பான். (௧௧)

நெடியபார்வளைபற்றியேநீங்கிடாநிகர்வாற்
கொடிகொண்மீனவனுடும்பின்வார்க்கோதைகைக்கட்டிப்
படிமடந்தையுங்கமலையுந்தழுவுமைம்படையோன்
வடிவுகாட்டுவானணிந்தனன்மரகதச்சட்டை. (கஉ)

செய்யதாயநுண்ணூற்கலைதலைப்படுஞ்செயலாற்
றுய்யசெந்துகில்சென்னிமேற்சுற்றுபுவீக்கி
வையமோம்பிடுநெடுநிலைவலிந்திடுமரபாற்
கையினாலுடைமருங்கினிற்கச்சியாப்புறுத்தான். (கங)

வண்ணமார்புகழ்நிலவினைமானினந்திரியுந்
தண்ணறுங்கழைக்கானினுஞ்செலுத்திடுந்தகைபோற்
கண்ணினுங்கடுங்காற்றினுங்கருத்தினுங்கடிய
வெண்ணிறத்தவாம்பரிமிசைக்கொண்டனன்வேந்தன். (கச)

துடிமுழக்கினார்கம்பலைப்பம்பைகடுவைத்தா
ரிடிமுழக்கெனவூதினாரிரலைகைக்கதையாற்
செடியுழக்கினார்வலைபலதிசையெலாஞ்சூழும்
படியொழுக்கினாருடன்வருமெயினர்தாம்பல்லோர். (கரு)

நளியுடைக்கொடுவிலங்கினம்படர்நெறிநாடி
யொளியிருப்பவர்சிற்சிலரொருங்குடன்றிரண்டு
வெளியினிற்பவர்சிற்சிலர்தீவகமிருகந்
தளிருடைக்கரங்கொடுநடப்பார்சிலர்தாமே. (கசு)

கோடுவாளுடைஞமலியைக்கொண்டுடன்கயிற்றி
லோடுவார்பலரொண்டழையாற்றமதுருவை
மூடுவார்பலர்தருமருப்பேறியேமுழுது
நேடுவார்பலர்வீரர்கணெருங்கினாரங்கண். (கஎ)

உழையெழுந்தனவொண்கலைகலைந்தனவும்பன்
மழையெழுந்தனமடங்கல்கணிமிர்ந்தனமலையின்
முழையெழுந்தயல்சென்றனபன்றிகண்முதிருங்
கழையெழுந்தலைவிண்டொடுவேட்டைசெய்காட்டில். (கஅ)

அவையமிட்டனகவயமாவடங்கலுந்திரண்டு
குவையினோடினகுறுமுயன்மரைநிலைகுலைந்த
சிவல்கபோதகஞ்சாதகஞ்சிச்சிலிசேன
முவணமாதியபுள்ளெலாம்பறந்தனவும்பர். (ககூ)

மந்தரங்கொடுமதித்தநாண்மறிகடன்மகர
முந்துமீனினந்திசைதொறுமிரிந்திடுமுறைபோ
லந்தமன்னனோடணைந்தபோர்மள்ளராங்கலைப்பச்
சிந்தியோடினவிலங்கொடுபறவையின்றிரள்கள். (உ0)

மறங்கொண்மானினம்படர்வனகாண்டலும்வழுதி
திறங்கொள்வார்சிலைவளையினைக்குனித்துமுன்சிறுநாண்
கறங்குபேரொலிகாட்டிவென்கட்டியதூணி
நிறங்கொள்பூங்கணைவகைவகைநிரைபடவாங்கி. (உக)

புணரியுண்டெழுகருமுகிற்ருரையிற்பொழிந்தா
னணையுமவ்வனத்திலைமலர்காய்கனியனைத்து
முணர்விலுலளந்தானெனவொன்றினுமொழியா
திணரொரிக்கணைசென்றனவீழ்ந்தனவெங்கும். (உஉ)

துளைக்கைமாமுகந்துளைத்தனதுண்ணெனப்பாய்மா
வுளைக்குமான்பொறியுழுவைமெய்ப்பொறித்தனவோடி
யிளைக்குநீடறுகையுடலறுத்தனவேங்கிக்
களைக்கும்வாளரியரிந்தனகைதவன்கணைகள். (உங)

சிரமிழந்தனசிலபுலிசிந்துவெங்கடத்தின்
கரமிழந்தனகரிசிலகடிந்தெதிர்காது
முரமிழந்தனசிலவரியுடன்பலவிடினுஞ்
சரமிழந்ததொன்றில்லையக்காவலன்சாபம், (உச)

மிடலழிந்தனகேழல்கள்விசைத்தெழுந்தோடு
மடலழிந்தனமரைத்திரளணங்குறீஇயவணின்
றிடலொழிந்தனவன்பகடெண்கினமிரங்கி
யுடலொழிந்தனவொழிந்தனமுழுவதுமுயிர்கள். (உரு)

வலியுடைடக்கரிக்கும்பமேன்மடிந்தனமடங்கல்
புலியுடற்புதைமருப்புடன்றுஞ்சினபுழைக்கை
கலைநிலத்துறப்பாய்ந்துடன்மாய்ந்தனகருமா
வுலைகவித்திரள்பிடித்தறைந்தெஞ்சினவுளியம். (உசு)

காகம்வீழ்ந்தனபுண்டரப்பெரும்படைகலந்த
மேகம்வீழ்ந்தனவேங்கையெண்கிருளிவெஞ்சிய
நாகம்வீழ்ந்தனமீமிசைஞாலமேலவற்றி
னுகம்வீழ்ந்தனவாகியகுணபவெற்பதன்மேல். (உஎ)

கரியபொன்மையவெளியனபசுநிறங்காட்டற்
குரியபன்னிறமுள்ளனவுயிருடம்பெல்லாஞ்
சொரிகொள்சோரியாற்செந்நிறமாயினதொன்னீர்ப்
புரியுமுப்பளத்துற்றபல்பண்டமேபோல. (உஅ)

குருமணிக்குடர்கொடிக்குலங்கவ்விநீள்கோட்டி
னிருபுறத்திலும்வளைப்பனபாவினையெய்ப்ப
தருமணிக்குடர்வாய்ப்பருந்தூடுபோய்த்தம்மின்
மருவுநுண்டுகிலாக்குவார்குழுவினைமானும். (உகூ)

தருகண்மானினமுழுவதுஞ்சாதலிற்றம்மிற்
செறலொழிந்ததுபகையுயிர்சிந்திடச்சீற்ற
முறுவதாகலிற்றம்பணியுலகின்மேற்ருமே
பிறர்முடித்திடப்பெறுவதிற்பெரும்பயன்பிறிதோ. (௩0)

பரியிளைத்ததுபாணடியன்புயத்துணைப்பைம்பொற்
கிரியிளைத்தனகார்முகத்தேற்றியகிளர்நாண்
புரியிளைத்ததுதின்றுதின்றழனெலாம்புல்வாய்
நரியிளைத்தனவிளைத்தனன்கவுரியர்நாதன். (௩க)

நறியவேம்பினுன்புவிக்குறுநன்மையின்பொருட்டான்
முறியவேட்டைசெய்காட்டொருசார்மறைமுனிவன்
பொறிகடந்தவன்பொறியுடைப்புலியதள்போர்த்துப்
பிறிவிலாதுதன்பன்னியோடிருந்தனன்பெரியோன். (கூஉ)

அவனையெண்ணிலானுமுவைகொலிருந்ததென்றவன்மே
லிவனெர்வாளியையேவினனிருந்தவனிறந்தான்
றவனலங்கெழுமாதுமச்சரத்தினுலிறந்தாள்
புவனமேலெவர்விதிக்கடல்கடத்திடும்புணையோர். (கூகூ)

வேறு.

இறந்திடுதந்தைதாயாமிருவரையவர்வயிற்றிற்
பிறந்திடுமைந்தன்காணுஉப்பெருநிலத்தறைந்துவீழ்ந்து
துறந்தனிர்போலுமாவிதுணையெனக்கேவரந்தோ
மறந்தனிரொனையுங்கூடவாவென்னீர்வாளாசென்றீர். (கூச)

உணவினையூட்டுவார்யாருண்டிடாதொழிந்துசீறி
லணையவந்தணைக்கின்முர்யாரருமறையாதியாகு
மிணையிரிகலைகள்கற்பித்திடுநர்யாரிருக்குநாளின்
கணிதநீரறிவிரொன்னைக்காளையாப்பயந்ததென்னே. (கூரு)

அன்றிநீரொன்னைவைத்திங்கமருலகடைந்திராயி
னின்றியான்கடவும்வாய்மைக்கெதிர்விடையியம்பிச்செய்யு
நன்றிகள்பணித்துப்பின்றைநடமின்கணடவீராயின்
மன்றநீர்சுமந்திரம்மாமகப்பழிவாரிமண்மேல். (கூசு)

தன்னிகர்தபோவனத்திற்றுபதர்தனயரொல்லா
மன்னையரத்தர்சீராட்டளியுடையோர்களாக
வென்னுளந்தரிக்கலாற்றேனென்செய்கேனிங்குநீங்கிப்
பின்னையோரிடத்திற்சேறல்பிள்ளைமையதனுன்மாட்டேன். (கூஎ)

இருவரிலொருவர்முந்தியிறந்துசின்னுளிருந்திங்
கொருவர்பின்பிறந்தீராயினுளத்துயர்சிறிதுதீருங்
குரவிர்நீரொருங்குபேசிக்கொண்டனிர்போலமாய்ந்தீர்
திருவிலேனுங்கட்டோன்றுஞ்செவ்வியின்றீமையென்னே. (கூஅ)

பெற்றிடும்பெற்றமாண்டபெற்றியாற்பிழைபெற்ற
கற்றினந்தன்னைநீங்கள்கண்டிலிர்போலுங்கண்டான்
மற்றெனைவருத்தங்காணமாய்ந்திடீர்மைந்தன்வேறோர்
பற்றிலன்பாலனென்னும்பரிவுடைப்பண்பினுலே. (கூகூ)

துஞ்சியதுண்மைகொல்லோசுதனிலைகாண்டுமென்னும்
வஞ்சமோதெளியகில்லேன்மனத்துயரொனக்கிழைத்தாற்
கஞ்சமேலயனர்க்கின்பங்களுலுமோகழறுவானே
னெஞ்சுதல்புரிந்தகூற்றையென்றுநின்றிரங்கியேங்கி. (சo)

பொத்திரம்பாய்ந்துமாய்ந்தீர்பொருகணைப்பரியாயப்பே
ரத்திரமென்பதாவிக்கழிவுசெய்திடுதலாலோ
குத்திரமறியீர்செய்தகுற்றமற்றெவனேவென்னுப்
புத்திரன்பொருமிக்கண்ணீர்பொழிந்திடப்புலம்பலுற்றுன். (சக)

இன்னலீதுற்றகாலையிரும்புடைமுழஞ்சினின்றுந்
தென்னனுமிரங்குமோதைசெவியுறீஇயங்கட்சேர்ந்தா
னந்நெடுவனத்தினீடுமாச்சிரமத்திலுள்ளார்
பன்னியரோடும்வந்தார்பட்டதன்பரிசுதேர்வார். (சஉ)

நங்கையோடாவிநீத்தநற்றவன்றனையுமாற்று
தங்கணித்திலங்கள்சிந்தவழுமகன்றனையுமங்கட்
செங்கைவில்லேந்திநின்றதென்னவன்றனையுங்கண்டப்
புங்கவர்புழுங்கியுள்ளம்புதல்வனைத்தேற்றலுற்றார். (சங)

ஏம்பலித்திரங்குஞ்சேயையெடுத்தணைத்தெரிவளர்க்குந்
தேம்பனிமலர்க்கையாலேசிந்திடுங்கண்ணீர்மாற்றிச்
சாம்புதலொழிதியையாசாதலின்றிருந்தார்தம்மை
யாம்படித்தறிந்தநூலினிவரொனவியம்பக்காணேம். (சச)

கேட்டதுமில்லைமேலோர்கிளந்திடக்கேடிலாத
நாட்டுறையமரர்தாமுநான்முகன்கற்பத்துள்ளே
கோட்டியகாலமுள்ளார்குறைவிலைப்பாணியானுக்
கீட்டியவாயுளுள்ளேயிறந்திடுமவனுமென்பார். (சரு)

மேனிலையோர்விளிந்தால்வேண்டியதவஞ்செய்தாலு
நானிலத்திறந்திடாமைநம்மளவுள்ளதாமோ
வேனையவுயிர்க்குமாய்வுண்டென்பதெனுன்னையீன்ற
மோனமாமுனியுமாதுமுடிந்தனர்முன்னையூழால். (சசா)

நீயுநின்வினையின்காறுநிலத்திடையிருந்தாற்பின்னை
வீகுதலுனக்குமுண்டாம்விளிந்திடவிருப்போர்முந்தி
யாயுணீத்தொழிந்தார்தம்மேலறைந்துவீழ்ந்தலறியிட்டாற்
பேயெனப்படுவதல்லாற்பெறும்பயன்பிறிதொன்றுண்டோ. (சஎ)

உலகமேலிறந்திடாதவுபாயமிங்கொருவற்குண்டேல்
விலகுமோர்கிருமியானும்விளிந்திடற்கேதுவுண்டோ
விலகுமிப்பொருண்மேலையமென்பதொன்றில்லையிந்த
வலகிலாவுயிருநிற்பதந்தகனாணைதன்னில். (சஅ)

பழித்திடுங்கோழைமூளைபற்றியவழுக்குமற்றை
யொழித்திடுமலநீர்வெண்ணீருவையிற்றினுலகத்தொன்று
மிழிப்புறுபண்டமில்லையிவற்றினுக்கிடமாயென்று
மழிப்புறுமியாக்கைகாப்பாரறிவுளாராகுவாரோ. (சகூ)

அருவமாயகண்டஞானவனந்தவானந்தந்தானே
யுருவமாயருளினாலேயுலகெலாநிறுத்திநீக்கி
வருவதுஞ்செய்தவற்றால்வரும்பயனின்றிநின்ற
பெருமுதற்பிரமமொன்றேபிறப்பிறப்பிலதுபிள்ளாய். (ருO)

சின்மொழிநவின்றிட்டாலுந்தெளிந்தநூற்புலமையாலே
பன்மொழிபகர்ந்திட்டாலும்பரிவுடைப்பண்பினாலே
யின்மொழியிசைத்திட்டாலுமெதிர்மறுத்தியம்பினாலுஞ்
சொன்மொழிவகையேமைந்தாதோற்றியகெடுதறிண்ணம். (ருக)

ஈன்றவரோடுனக்குமியைபுடைத்தாகிலன்னோர்
தோன்றுநாட்டோன்றிநீயுந்தொலேயுநாட்டொலேவாயன்றேன்
மான்றிடாதவனையுன்கண்வளர்பவத்தொன்றுநல்கு
மான்றதொல்விதியின்வேடமஃதறிந்தவலநீப்பாய். (ருஉ)

பணைத்தவன்பினர்போற்கண்ணீர்பாய்ந்திடவழுதந்நீரைப்
பிணத்தின்மேலுகுத்தாலந்தப்பிணத்துயிர்பருகும்பிள்ளாய்
குணத்துயர்குரவர்மேனிக்கொடுங்கண்ணீர்மழைசிந்தாம
லுணர்த்துநூன்முறையின்மாண்டோர்க்குறுங்கடன்புரிவாயொல்லே. (ருங)

அன்பினுலுன்னேயீன்ருராசுகத்திறத்தலாலே
வன்புடைமரணமாகும்வழுவதுநீங்கவன்னே
ரொன்பினக்கொடுபோய்முத்தியீந்திடுமிராமநாதன்
றன்பெரும்புரத்திலோர்பாற்ருபனந்தனையிற்செய்வாய். (ருச)

மயற்கடன்மூழ்கிமைந்தாவறிதிராதத்தலத்திற்
செயத்தகுஞ்சபிண்டியேனேச்சிராத்தமுன்னுனவெல்லா
முயத்தகுமரபிற்செய்தியொழிதுயரொன்ருர்தங்கள்
வயத்திலேம்புலனடாத்துமாதவவாணர்மன்னே. (ருரு)

சாகலன்றனயனுனசாங்கலன்ருனுமந்த
மோகமின்முனிவர்கூறுமொழியுளங்கொண்டிறந்து
போகியதந்தைதாய்க்குப்புரிகடன்புரிந்துபின்ன
ரோகினுன்மற்றைவைகலெறிதிரைவைகைக்கூடல். (ருசு)

இருந்தவணீங்கிச்சென்ருனிறையிராமேச்சுரத்தி
லருந்தவரருளுமாற்ருலத்தியுஞ்சேமித்தங்கட்
டருந்தகைச்சிராத்தமாதிதந்தொருவருடங்காறும்
பொருந்தியகடன்களெல்லாம்புரிந்தனனப்புரத்தில். (ருஎ)

ஆங்கதுபுரிந்தபின்னரன்னேயோடத்தன்றன்னேச்
சாங்கலன்கனவிற்றண்டஞ்சங்கொடுநேமிதாங்கி
யோங்குபொன்னுடைசாத்தியுவணமூர்ந்துவகையோடுந்
தேங்கமழ்துளபத்தாருந்திருமலர்த்தொடையுஞ்சேர்த்தி. (ருஅ)

மகரகுண்டலங்கண்மின்னமார்பினிற்கவுத்துவந்தான்
மகரவாரிதியிற்ருேன்றும்வளர்கதிர்ப்பரிதிமான
மகரவாகாரநங்கைமணமகனுகக்கண்டான்
மகரகேதனனேவென்ருேர்வாழ்கந்தமாதனத்தில். (ருக)

துயிலெழுந்தவந்துமீளத்தொன்னகரொய்தியங்கட்
பயின்மறையோர்க்குச்சொன்னுன்பழுதில்சொப்பனத்தின்பான்மை
மயலிலார்தாமுங்கேட்டுமகிழ்ந்தனர்மைந்தன்ருனு
மயர்வுதீர்ந்தினிதிருந்தானவன்செயலன்னதாக. (சு0)

கைத்தனுவோடுநின்றகைதவன்றன்னேக்காணூஉ
மெய்த்தவர்வெகுண்டுசொல்வார்விரகிலாவேந்தரோறே
யித்தவநாதன்றன்மேலெரியுமிழ்கூர்வாய்ப்பல்லங்
லுதத்திடவெய்தாயென்னதவறிழைத்திட்டனேந்தாய், (சுக)

அடங்கலில்சீற்றத்தாலேயந்தணற்கொன்றதன்றி
யுடங்குறைமுனிவனில்லாளுயிரையுமுண்டாயன்றே
யிடங்கெழுஞாலத்துன்போலியாரிதுசெய்யற்பாலார்
மடங்கலேறனையாயிந்தவல்வினைக்கென்னைசெய்வாய். (௬௨)

செற்றமுஞ்செயிருமின்றிச்சிந்தையாற்செயலால்வாக்காற்
குற்றமொன்றடையாவண்ணங்குவலயம்புரப்பதன்றே
வெற்றிசாலரசர்நீதிவேடரும்விலங்கேகொல்வார்
மற்றிதுபுரிந்தவாறேமன்பதையளித்தவாறும். (௬௩)

தொன்னிலங்காக்கவென்னுஞ்சொன்முதனெட்டெழுத்தைப்
பன்னியேகுறிலிரண்டாப்படித்தனைபோனுமுன்ன
நின்னிலைவேண்டிற்றுகநிகழ்ந்தவித்தீமைநீக்க
வுன்னிநுன்னுடலையின்னேயுதவகற்குதவல்வேண்டும். (௬௪)

நீறெழத்தழலின்மூழ்கிநின்னுயிர்விடுத்தலன்றி
வேறொருபரிகாரத்தால்வினையிதுவிளிவதன்று
கூறினுமுன்னைநாடிக்கொடுஞ்செயற்பிரமகத்தி
யேறுமோரயுதநில்லாதேகுதியிறைவவென்றார். (௬௫)

வழுதியுங்கேட்டுநெஞ்சமருட்கையோடெம்பாடெய்திப்
பழியிதுபறையுமாறுபடிமையீர்நுங்கண்முன்ன
ரழலிடைவீழ்வனீங்களனுமதிசெய்யினென்னக்
குழுவுசாலமைச்சர்தம்மைக்குறித்திதுகூறலுற்றான். (௬௬)

மறையவன்பழியுமன்றிமங்கைதன்பழியுமுற்ற
திறையுநான்றேரகில்லேனென்விதியிதுவேயானு
லறைவதெனமைச்சின்மிக்கீரடுங்கொலைத்தோடமின்னே
பறையுமாறியற்றினல்லாற்படுநரகளப்பின்றாகும். (௬௭)

ஆவியையழலின்றேவுக்கவியுணவாக்கிலிந்தப்
பாவம்விட்டோடுநீங்கள்பழங்கணுற்றழுங்கவேண்டாந்
தீவளர்த்திடுமின்மற்றென்சேயைமுன்கொண்டுதெண்ணீர்ப்
பூவணங்கணங்குறுமற்போற்றுமினெனப்புகன்றான். (௬௮)

செவித்துளைபுகுதலோடுந்தேர்ச்சியின்றுணைவர்சிந்தை
தவித்தழுதிரங்கிமன்னுதனயரில்வளர்த்தாயெம்மை
யவிக்குதுமுயிரையாமுமழலின்வீழ்ந்துன்னையன்றிப்
புவித்தலம்புரத்தன்மாட்டேம்போதுமிவ்வாழ்க்கையென்றார். (௬௯)

மாதுயர்கெழுமிநின்றமந்திரித்தலைவர்தம்மை
யாதரவதனுனுடியரியணையதனில்வெய்ய
பாதகர்தாமிருத்தல்பான்மையன்றதனாற்பார்மான்
காதலன்றனக்கேகாதற்காதலியாதற்பாலாள். (௭௦)

என்னிடைவைத்தநண்பினெண்மடங்கென்கணன்னான்
றன்னிடைவைத்துஞாலந்தாங்குமின்றாழ்த்திடாமன்
மின்னிடைவெந்தித்தம்மின்விரைந்தெனவிளம்பிவேந்தன்
பொன்னுடைப்புரிநூன்மார்பிற்புங்கவனொவருங்காண. (௭௧)

புனல்படிந்துவந்துசித்தம்புனிதனுய்முனிவரோடு
மனல்வலங்கொண்டிறைஞ்சியம்பிகாபதியைநெஞ்சந்
தனிலுறவிருத்திச்சற்றுந்தளர்ந்திடாதெழுந்துவீசுங்
கனலிடையரசன்வீழ்வான்கருத்தினுட்கொண்டகாலை. (எ௨)

அங்கரனருளாற்ருேன்றியந்தரவாணியொன்று
சங்கரமாறவம்மோதழலினீதாழ்வாயல்லை
புங்கவன்பழியுமன்னன்புனேயிழைபழியும்போதற்
கிங்குபதேசம்வேருண்டியம்புவதிறைவகேண்மோ. (எ௩)

மாமறையுண்மைமானுமந்திரமதனைமன்னு
நீமனங்கொண்டுதென்பானெடுந்திரைவேலைஞாங்கர்க்
காமருசேதுவின்கட்கவுசலைகானேநட்ட
தாமமாரிலிங்கமூர்த்திசந்நிதிதன்னிலெய்தி. (எ௪)

கைதவவருடமொன்றின்காறுநீகாலையுச்சி
மைதவழ்மாலைமூன்றும்வலங்கொடுவணங்கியன்பாற்
பெய்திடுந்துரோணந்தேனெய்பெறுங்கலத்திரட்டியாவி
னெய்தருமளவையான்பானிலாவணிமவுலிக்காட்டி. (எ௫)

அல்லதும்பலவற்ருலுமாட்டுவித்தரியசாந்து
நல்லபாளிதமுஞ்சாத்திநறியபாலடிசிலாதி
சொல்லியநிவேதனங்கள்சுவைபடப்புரிந்துமூன்று
மெல்லொளிநயனந்தோறுமெண்ணெயாற்றீபங்காட்டி. (எ௬)

மனந்தனில்வேண்டுமாற்ருல்வழுத்தியிவ்வாறுமாறுத்
தினந்தொறும்வழிபட்டாயேற்றீவினையிரண்டுந்திருங்
கனந்தரும்பூதமெல்லாங்கடியவைம்பாதகங்கள்
சினந்திடுமிராமநாதன்றெரிசனமொருகணத்தில். (எஎ)

உற்றிடும்பிரமகத்திகள்ளுண்டலுறுபொற்சோரங்
கற்றிடுமாசானில்லிற்கலத்தலாம்பவங்களுன்காச்
சொற்றிடுமவற்றிலோரொன்றயுதபாதகந்தொலைந்தே
யற்றிடுமிராமநாதன்றரிசனமதனுலன்றே. (எஅ)

கொலைகளவாதிசெய்வோர்தம்முடன்குழீஇயபாவந்
தொலைவுறுங்கணமதொன்றிலவைக்கனுதோடந்தானுஞ்
சிலைபயிலிராமன்பூசைசெய்ததேவாதிதேவர்
தலைவனுமிராமநாதன்றரிசனமதனுற்சாயும். (எ௯)

செங்கணேற்றிராமநாதன்றெரிசனநரர்க்குண்டாயிற்
கங்கைநீரதனிஞடிக்கயைபிரயாகைமூழ்கி
யங்கிசால்வேள்வியாற்றியாவதொன்றில்லைவேந்தே
யிங்குநீதாழாதங்கணேகெனவியம்பிற்றம்மா. (அ0)

முனிவருமுருவிற்ருேன்றுமொழியினைக்கேட்டுவந்து
நனிமிகவிறும்பூதெய்திநன்றுநன்றென்றுமன்றற்
பனிமலர்வேம்பிஞணேப்பார்த்தருட்பான்மையீதே
லினியிவணிற்றல்சேறியிராமநாதன்பாலென்று, (அ௧)

இப்பொழுதிராமநாதன்பெருமையையெண்ணாதேயாஞ்
செப்பினமரசரோறேசெந்தழல்புகுவாயென்று
மைப்புயலனையமாயோன்வகுத்தசேதுத்தலந்தான்
செப்பருமுத்திநல்குஞ்சேருதியொல்லையென்றார். (அ௨)

அரசனுங்களிகூர்ந்துள்ளமருந்தவருண்மேற்கொண்டு
விரைசயந்தனம்போர்வேழம்வெம்பரிபரியாளங்க
டரையிடமின்றியீண்டத்தனக்குவைபலவுங்கொண்டு
நரைவிடையூரிராமநாதனைநண்ணினானே. (அ௩)

சென்றிறையிராமநாதன்சேவடிசென்னிசேர்த்தி
யன்றுதொட்டொருபோதுண்டியாக்கியோராண்டினெல்லை
முன்றனக்கும்பர்வாணிமொழிந்திடுமுறைவழாம
னன்றுறவியற்றியிட்டானரபதிபொருநைநாடன். (அ௪)

வைகலுமிராமநாதன்மலரடிவணங்கியான்பா
னெய்கலந்தபிடேகங்கணிவேதனஞ்செய்தான்பின்னும்
பொய்கலவாதவன்பாற்பொன்றசபாரமீந்தான்
செய்கலந்தோடுநன்னீர்த்தென்றமிழ்ப்பாண்டிநாடன். (அ௫)

மறுதொழில்புரியும்வாழ்க்கைவஞ்சகநிருதராவி
தெறுதொழில்வில்லின்கோடிதினந்தொறுமாடித்தென்ன
னறுதொழிலாளரொல்லாமைந்தொழிலாளராக
வுறுதொழிலுண்டியைந்துமுவகையாலூட்டுவித்தான். (அ௬)

வற்சரம்போனபின்னைமறையவனோடுமாதை
விற்சரந்துரந்துகொன்றவினையொரீஇவிமலனாகி
யெற்சரற்காலத்திங்களெனப்பணிந்திராமநாதன்
பொற்சரணிரண்டுமன்னன்போற்றுதன்மேயினானே. (அ௭)

ஒருவனேநித்தாமுத்தாவுத்தமாமத்தவேழம்
வெருவரவுரித்துப்போர்த்தவீரனேசூரனஞ்சுங்
கருவமரங்கிநெற்றிக்கண்ணனேகணிதமில்லாத்
திருவனேயிராமநாதாசெங்கணேறுகைக்குஞ்செல்வா. (அ௮)

ஐயனேயிரவிகோடியவிரொளிவிளங்குஞ்சோதி
மெய்யனேவிரிஞ்சனுச்சிவிளங்கொளியுகிராற்கிள்ளுங்
கையனேகாலனஞ்சுங்காலனேகடுக்கையந்தார்ச்
செய்யனேயிராமநாதாதிங்களங்கண்ணியானே. (அ௯)

அரையனேயயன்மாலுள்ளத்தளவையினளக்கற்கந்தக்
கரையனேமகுடவேணிக்கற்றைமேற்கங்கைவீசுந்
திரையனேபுரங்கள்வேவச்சிறுநகைபுரிந்தவெள்ளி
வரையனேயிராமநாதாவாசிநான்மறையினானே. (௯0)

நீற்றனேகண்டிமாலைநிமலனேநினையுமெல்லைக்
கீற்றனேயிறுதியில்லாவிறைவனேயில்லையென்னாத்
தேற்றனேதெருண்டோருள்ளத்தேறலேகருணைத்தெண்ணீ
ரூற்றனேயிராமநாதாவொப்புயர்வின்மையானே. (௯௧)

அறவனேயறத்தின்பேறேயசும்பறவகன்றஞானத்
துறவனேதுறந்தோர்காணுஞ்சோதியேதொழும்பர்க்குற்ற
வுறவனேயன்பர்பாவமொழித்திடுஞ்செயலிலஞ்சா
மறவனேயிராமநாதாமலைமகள்பாகத்தானே. (௯௨)

அடியனேன்முனியினேடுமொயிழையொருத்தியாவி
முடியநேரொய்துசெற்றமூர்க்கனேன்முறைதவிர்ந்த
கொடியனேனுன்னைவந்துகுறுகினேன்குணத்திற்சால
மிடியனேன்புரிந்தபாவம்வீட்டுவாயன்றிமேலும். (௯௩)

நான்மறைநெறிவழாதநடவையுநல்குகென்னுப்
பான்மறைதவளநீற்றுப்பசுபதியிராமநாதன்
வான்மறையாதசீர்த்திவழுத்தினன்வழியுநிம்பத்
தேன்மறைநறையார்மார்பன்செந்தமிழ்ச்செழியர்கோமான். (௯௪)

புலங்கொளப்புகழுங்காலைப்புரவலன்முகத்தினின்றும்
விலங்கரும்பிரமகத்திவெளிப்படலுற்றதந்நாள்
வலங்கெழுதோளயோத்திமன்னவன்பின்றொடர்ந்த
விலங்கைமன்பிரமகத்திக்கிளையதுபோலமாதோ. (௯௫)

செந்நிறப்பங்கிபொங்கச்செழுந்தவன்பிரமகத்தி
மைந்நிறவுருவைசுற்றிவருதலும்வடுகனென்பா
னன்னிறக்கிரீவத்தீசனுணையாலக்கணத்திற்
கொன்னிறச்சூலவேலாற்குத்தியாருயிர்குறைத்தான். (௯௬)

இறந்தபின்பிரமகத்தியீசனெம்மிராமநாதன்
சிறந்தமால்காணுப்பாதந்தென்னவன்காணத்தோன்றி
யறைந்தநின்புகழ்மைவாய்மைமக்கமிகமகிழ்ந்தேமன்ன
பறந்தனதுகளாய்நின்னைப்பற்றியபழியிரண்டும். (௯௭)

மாயிருஞாலமுன்போன்மன்னநீபுரத்திநம்மை
மேயினேரித்தலத்தின்மீண்டுதித்திறவாரீனாந்
தாயிரம்பிரமகத்தியகற்றுவரளப்பின்ஞானச்
சேயொளிகாட்டுமேலாஞ்சிறப்பிணைச்சேர்வர்திண்ணம். (௯௮)

மதிக்குலநிருபநம்மைவழுத்துநின்வாய்மையாலே
துதிக்குநர்பாவந்தீர்ப்போஞ்சொற்றியாலுனக்குவேண்டுங்
கதிக்குநல்வரங்களென்றுன்ககனமேற்படருங்கங்கை
நதிக்குலமடந்தைதோயுநாயகனிராமநாதன். (௯௯)

பாண்டியன்கிளப்பான்றிங்கட்பவளவார்சடையாயுன்னைக்
காண்டலினதிகமானகதியுளதாகிற்பின்னை
வேண்டுவனின்றுகூற்றம்வெருவுமார்க்கண்டனெஞ்சின்
மூண்டெழுபழங்கண்டீர்த்தமுண்டகந்தொழுதேனன்றே. (௧00)

நவந்தருசெய்யதோட்டுநளினமுங்கரியதாகச்
சிவந்தசீரடியிலன்புந்திரிபிலாவீடுமுன்க
ணுவந்தியானுரைத்தசீர்த்தியுரைத்திடும்புனிதர்க்குன்னைத்
தவந்தரக்காணும்பேறுந்தந்தருளென்றுதாழ்ந்தான். (௧0௧)

அவ்வரங்கொடுத்திராமனுதாரத்தருச்சித்தேத்துஞ்
செவ்வருட்குறியிலீசன்றிரோபவஞ்செய்தான்பின்னர்
மெய்வரம்பெற்றுயர்ந்தமீனகேதனனுமேந்து
நவ்வியங்கரத்திராமநாதனைவணங்கிவாழ்த்தி. (௧0௨)

தானையம்பரவைசூழத்தன்னகரடைந்தெல்லாமு
ஞானமாமுனிவரோடுநவின்றனனவருங்கேட்டு
மானகைமுகத்தராகிமகிழ்ந்தபிடேகஞ்செய்தார்
நானிலம்புரப்பாயென்னநரபதிவழுதிதன்னை. (௧0௩)

மாறனுமமைச்சர்மாதர்மைந்தர்கண்மருவுநண்பால்
வேறுளதமர்களோடுமேதினிபுரந்துபன்னு
ளீறுசேர்காலந்தன்னிலிறையவனிராமநாதன்
பேறுசால்பதங்கணுடிப்பேரின்பவீடுபெற்றான். (௧0௪)

வேறு.

சங்கரமாறநாமன்மேயதோர்தண்டலில்சீர்கொள்பேறுகூறினேம்
பங்கமிலாதவாதிமாதவீர்பண்டையகாதையீதுபாடுவார்
பொங்கொலிநீடுகோதினுடுவார்புன்கணெலாமுமோடநூறியே
யெங்குநிலாவுதேவதேவனுமெந்தையிராமநாதனுவரோ. (௧0௫)

சங்கரபாண்டியச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம், ௩0௧௬.

---

## சேதுமாதவச்சருக்கம்.

சேதுமாதவன்காதைசெறியிருண், மோதுமாதவமாகுமுனிவிர்கா
ளீதுமாதவமென்றுணர்வீரொனு, வோதுமாதவச்சூதனுரைசெய்வான். (௧)

நதியினீடும்பொருநைநன்னாட்டினன், பொதியவெற்பன்புகன்றிடுபுண்ணிய
நிதியெனும்பெயர்கொண்டுநிலவுமோர், மதியருங்குலமன்னவன்முன்னுளான்.()

பொரும்புயத்துணைப்புண்ணியமாநிதி, யரும்புதிங்களணியுஞ்சடாடவிச்
சுரும்புலாங்கொன்றைச்சுந்தரபாண்டியன், விரும்புங்கூடல் வியனகர்போற்று
வான். (௩)

மாறுகொண்டமருவலர்சாய்ந்திட, வேறுவாம்பரியேந்தலவன்றனைத்
தேறுநாவலர்தீதறுசெய்கையாற், கூறுவார்கள்குணநிதியென்னவும். (௪)

நிலம்புகழ்ந்திடுநீள்கயிலாயமாஞ், சிலம்புகாத்திடுநந்தியந்தேவுபோ
லலம்புநீர்வைகையம்மதுராபுரித், தலம்புரக்குந்தராதிபனோர்பகல். (௫)

முந்தைஞாலவணங்கைமுயங்கெனு, மைந்தன்றன்னைமணிமுடிசூட்டினன்
கந்தமாதனநேர்படக்காகுத்தன், றந்தசேதுவிற்சாருந்தகைமையான். (௬)

அக்கணிந்தவனுலவாய்நீங்கியே, முக்குணத்தின்முதற்குணமாநிதி
தக்கநால்வகைத்தானையுந்தன்புறந், தொக்கவைம்பெருஞ்சுற்றமுஞ்சுற்றவே.(௭)

நாலிரண்டெனநண்ணியவாயமுங், கோலுமைவகைக்கூட்டமுஞ்சூழவே
சாலுமன்புதலைக்கொளத்தானெழீஇச், சீலமன்னன்வழிக்கொண்டுசெல்லுவான்
சேயசேதுவின்றிண்மைதெரிந்திடப், போயராகவன்மீண்டும்புக்கானெனத்
தூயகாதற்றுணைவியுந்தானுமா, யேயெனுவிரைந்தேகினனேந்தலே. (௯)
வேழமேகம்விடும்பரிநெட்டலை, தாழும்பேனந்தவளக்கதலிகை
பாழிவையம்படர்கலனாகவே, யாழிபோன்றதரசன்பெரும்படை. (௧0)
தேரும்யானையுந்திண்சிலம்பீட்டமா, வோரொழுங்குசெல்வீரர்களுந்தியாக்
காருலாங்கொடிக்காடுமருவியே, பாருடன்படர்ந்தன்னபதாகினி. (௧௧)
பல்லவீரரிராகவன்பாங்குளா, ரல்லதீர்த்தவருளின்குறிக்கெலாம்
புல்லுநீழல்புரிந்திடக்கொண்டுடன், செல்லுமாலயம்போன்றனதேர்களே. (௧௨)
ஆதிநாளிலிராகவனூற்றிய, சேதுவின்கணறைகுறைதீர்த்திடு
மாதராற்பலமால்வரைமன்கொடு, போதல்போன்றதுபோதகம்போவதே. (௧௩)
கைகலந்திடுகாதலனின்றமர், செய்கைதிதெனத்தென்கடற்சேர்ப்பன்பான்
மெய்கொண்மங்கலம்வேட்டவன்கொண்டுசெல், வைகையன்னதுவாசிப்படர்ச்
சியே. (௧௪)
தாவுதென்கடற்றன்னிலயோத்தியர், காவலன்கரைகண்டிடுமாசையா
லோவிலுத்தரவாசைநின்றுற்றிடும், வாவுமாகடல்போன்றனர்மள்ளரோ. (௧௫)
உலகமுற்றுமொருங்குதிரண்டென, விலகரும்படைமேதினியீண்டவே
யலகில்சீர்த்திக்குணநிதியாடவர், திலகமன்னவன்சேதுவிற்சேர்ந்தனன். (௧௬)
சென்றபின்னர்ச்செழுந்தனுக்கோடியி, னன்றுசங்கற்பநாடிநவிற்றியே
துன்றுகாதலிற்றோய்ந்ததிலாயிடை, நின்றநீர்களுநீதியிலாடினன். (௧௭)
கோவிராமன்கொடியவிராவண, னுவியுண்டவரும்பழிசூழ்ந்திடும்
பாவநீத்தபசுபதிபங்கயச், சேவடித்துணைசென்னியிற்றாழ்ந்தனன். (௧௮)
அன்றியங்கணமர்ந்திடுநாளவன், வென்றிமாயன்விரும்பிடும்வேள்விக
ளொன்றுமுள்ளத்துவகையினாற்றினன், றொன்றுவேதத்துறைபிறழாமலே. (௧௯)
வேள்வியீற்றினிலாடும்விதிப்புன, னீள்விற்கோடியினேயத்தினுடியே
மூள்விறற்படையெண்டிசைமொய்த்தெழ,வாள்விழித்துணைமாதொடுமன்னவன்
மீளவந்தவண்வெய்யநிசாசரர், மாளவந்தசனகிமணாளனை
யாளவந்தருளண்ணலையாரவெண், டோளவந்தனையென்றுதொழுதனன். (௨௧)
கோயில்சூழவலங்கொண்டுகோமகன், வாயில்வந்தனவாழ்த்திவணங்கினன்
பாயுமால்விடைப்பண்ணவன்றன்விடை, மேயதன்பினரில்லத்தின்மேவினன். ()
விராவுதானையினோடும்விரிசினைக், குராமலர்க்குழற்கோதையுந்தானுமாய்ப்
பராவுசேதுவிலிவ்வணம்பார்த்திவ, னிராமநாதனையேத்தியிருக்குநாள். (௨௩)

வேறு.

சேலோடிகல்விழியிந்திரைதென்றற்சிறுமன்றற்
காலோடசைகமலாலயமேவுந்திருக்கன்னி
பாலோடலையெறிவேலையிற்பாந்தட்டுயில்பயிலு
மாலோடொருகலகந்தனைவாளாவருவித்தாள். (௨௪)

சங்கேதமுமொன்ருேதினள்சர்ப்பக்குலமஞ்சும்
வெங்கேதனன்விடைகொண்டனண்மிகுசேதுவைநாடி
யங்கேதனிவந்தாளிறையறமாகிநிநெஞ்சிற்
பொங்கேதமிலன்பின்செயலதுசோதனைபுரிவாள். (உ௫)

தாளுற்றிடுதண்டாமரைதங்குந்திருவங்கண்
வாளுற்றிடுபுருடோத்தமன்மணிமார்பமும்பிரிந்தே
கோளுற்றிடுமெண்மேற்குணக்குன்றன்னவர்பாலு
நீளுற்ருெருதலைதான்றனிநில்லாமையைநிறுத்தாள். (உ௬)

விற்கோடியினிடைநின்றனள்விந்தாவலியென்னு
மிற்கோடிரிபில்லாளொடுமெழுதானையினேடு
மற்கோடிமுன்னெதிர்தோளுடைமதியின்குலமன்னன்
பொற்கோடிசெய்துலைமுற்கொடைபுரிவானவண்புகுந்தே. (உஎ)

வரையார்திரையெறிவாரியின்மரபிற்புனலாடி
யுரையார்கொடையுதவித்தனதுறையுட்புகவுய்ப்பா
னிரையார்கடலுடன்கொண்டெனவிகல்வெம்படையிடைய
விரையார்தொடைவேந்தன்னவன்மீண்டேகிடும்வேலை. (உஅ)

பொன்னிற்பஃறளிர்மல்கியபுதுக்கொம்பரிற்புயல்சேர்
மின்னிற்படர்கொடிபோன்மணிவிளக்கின்சுடரதுபோற்
பின்னிற்பொலிகலபத்தொடுபிறழ்மஞ்ஞையினெருபெண்
முன்னிற்பதுகண்டற்புதமுதல்வன்பெரிதுற்ருன். (உகூ)

சீரார்பதவிணைநின்றெழுசெஞ்சோதியினியல்பா
னீரார்மலர்நீத்துமதினிற்பாளெனநிகழ்வா
ளேரார்வயதெட்டாகியவெழிலாடனையெதிரே
பாராவருகுறல்கண்டவன்பார்த்திங்கிதுபகர்வான். (௩0)

யார்நீயுனையீனுந்தவமெவருஞ்செயவல்லா
ரூர்நீணிலத்தென்ருலஃதொவ்வாதுளமுனக்காம்
பேர்காரணச்சிறப்பாலிடுபெரியோரிலையெவனே
போர்வேல்விழிபெறவேண்டியதென்ருனவள்புகல்வாள். (௩க)

பெற்ருரிலைமண்மேலெனைப்பிறழாமதனேடே
மற்ருருமென்னுடன்மேயினரிலர்மாலளவன்றி
யுற்ருருமங்கணுகாவகைபுரப்பாயிறையோய்நின்
பற்ருமனைமனைக்கேநிலைபயில்வேன்சிறுபாவை. (௩உ)

உனக்கோர்மகவாவேன்றிரையுததிப்புவியதன்மே
லெனக்கோர்துணையிலவொன்றனளெவர்க்குந்துணையாவா
டனக்கோரளவில்லாமகிழ்தானெய்துபுதலைவன்
வனக்கோகிலமன்னுடிருவதனங்குறித்துரைப்பான். (௩௩)

என்பாலுளதொன்ருண்மகவினியென்குலமுய்ய
வன்பாலுனையருள்பெண்மகவாகப்புரந்தளிப்பே
னுன்பாலெவர்பாலாதரவுளதாமவரன்றி
வன்பாலுறவருவாரெவர்மண்ணுண்டிடுவாரோ. (௩௪)

அந்தரமமைமலர்மேற்றிருவன்னுயகத்தரிவை
விந்தாவலிமகளாகுதிமேவென்றனன்வேந்தன்
செந்தாமணபிரியாளவற்பிரியாதுடன்சென்றே
கந்தார்கடமலைசூழ்கடைக்கடிமாளிகைபுகுந்தாள். (௩௫)

திகழ்புண்ணியநிதியாயிடைத்திருவைத்திருமனையா
ணிகழ்பொன்முகமதிநாடுபுநீபோற்றுதியெனவே
புகழ்தன்குலமுன்னோரவர்புரிபுண்ணியநிதிபோன்
மகிழ்தந்திடக்கொடுத்தான்கரமலர்மேன்மகளென்றே. (௩௬)

வேந்தற்கொருமனையாளிருவிழிமாமலர்மலரா
வேந்திக்கரத்தினிதென்றனைத்தெடுத்துச்சியைமோந்தே
காந்திக்கிளர்மணிப்பூண்கலைகவினப்புனைவித்தே
மாந்தக்கனியமுதூட்டினண்மகவின்மிகவளர்த்தாள். (௩௭)

நெய்த்தோர்கமழ்வேற்புண்ணியநிதிமாளிகைநீங்கா
முத்தார்நகைவிந்தாவலிமுரல்வண்டினநிரைசேர்
கைத்தாமரைதானேபுழற்காற்றுமனையாக
மைத்தாழ்குழன்மயிலிந்திரைவளர்வுற்றிடுநாளின். (௩௮)

வேறு.

மூடுவான்முகிற்கூந்தன்முளரிமகண்முனைமென்றேள்
கூடுவானெழுங்காதற்குரைகடலின்றிரையலைப்ப
வாடுவான்மணிவண்ணன்வைகுண்டநகர்நீங்கித்
தேடுவான்புறம்போந்தான்சிறைக்கருடன்பிடரேறி. (௩௯)

தெண்டிரைவாயமுதுடன்சேர்செந்திருவைமுன்றொருநாள்
வண்டுருவங்கொண்டதனிமாயவனுமரபதனுற்
றண்டுணர்வண்கமலமெலாந்தனித்தனியோரிதழாகக்
கண்டுணரும்படிதெரிந்தான்கவுத்துவமாமணிமார்பன். (௪0)

மாலைமதிமண்டலத்தும்வளங்கெழுமாளிகையகத்துங்
காலைநறுமலர்தொடுத்தகண்ணியினுங்கலன்களினுஞ்
சீலமிகும்வனப்புடையசேயிழையார்திருமுகத்து
ஞாலமதிற்பிறவிடத்துநாடோறுநாடினுன். (௪௧)

பன்னகமாமலர்ப்பாயற்பள்ளிகொள்வான்பண்டொருகாற்
றென்னிலங்கைமேவியதன்சிறைதீர்த்தற்காரணமா
நன்னெறியாற்சேதுவின்பானண்ணுதற்குமுரியளெனு
மின்னுமுகிறவழ்கந்தமாதனமாம்வெற்படைந்தான். (௪௨)

நண்ணியவன்குரம்பெங்குநாடியுழிதருங்காலைத்
தெண்ணிலவுநகைத்திருவுஞ்சிலதியர்கள்சிலர்சூழ
வெண்ணின்மலர்கொய்திடுவாளெதிர்வந்தாளிலம்பாட்டோர்
கண்ணெதிர்பொன்னெனக்கண்டான்காயாமென்மலர்வண்ணன். (௪௩)

மாலுமுளந்தானுகிவரும்பிரிவின்காரணத்தாற்
கோலமிஃதுடன்குறுகிற்குறுந்தொடிதானெடிதோடி
யோலமெனுவரசன்மனையுட்புகுதுமெனநினைந்தான்
போலவொருதிருவுருவம்பூசுரரிற்புரிகுற்றுன். (௪௪)

முண்டகக்கண்முகிழ்ப்பிக்குமுதநிலவின்பரப்பேய்க்குந்
தெண்டிரையபாற்சலதிசேதரநிற்பிரியேனென்
றுண்டகருமுகிலுருப்போர்த்துற்றதுபோலொளிவீசும்
வெண்டிருநீற்றெழில்விளங்கமெய்ம்முழுதும்பொலிவித்தான். (சரு)

கார்த்தசெழும்புயலனையகண்ணனவன்கவினுதன்மே
லேர்த்ததனிப்புண்டரமூன்றிலங்கியிடும்படிசெய்தான்
போர்த்ததிருநீற்றுருவப்புணரியினின்றூர்புள்ளின்
சேர்த்தவிருசிறைக்காலாற்சேணிலெழுந்திரைநிரைபோல். (சசு)

நெருங்குமலர்மகள்கொங்கைஞெமுங்கவணைந்திடுந்தோறுங்
கருங்கணுறுந்தழும்பினிரைகரவாமற்காதலினுன்
மருங்கிலணிந்தொளிநீற்றைமயங்கவிடையிடைவிடுத்த
வருங்கவின்போற்கண்டிகையினலங்கலுரத்தணிந்திட்டான். (சஎ)

பாசடைப்பங்கயமனையாள்பாற்கடல்விட்டகன்றமையான்
மாசுணப்பாய்தனைச்சுருட்டிமணிமார்பின்மிசைநாலத்
தேசுடைத்தோள்வரையேந்திச்செல்வதுபோற்செழுந்தொங்கல்
வீசிடத்தாழுத்தரியவெண்பட்டின்றுகில்புனைந்தான். (சஅ)

மெல்லிதழ்முண்டகக்கோயில்விளங்கிழைமென்கரமதனை
வல்லிதிற்முன்பற்றிடுங்கான்மணமகனுமாயவனீ
யல்லனெனுவகைநிறத்தினடையாளந்தெரிப்பான்போற்
புல்லினுயர்பூங்குசையாற்புரிந்தபவித்திரம்புனைந்தான். (சகூ)

பூவடியாலளந்தபிரான்புரையகன்றோர்புரிந்ததுமுன்
னுவடியிலுலகநடையமைந்தமையாலபிடேகஞ்
சேவடிவார்கொடியவர்பாற்செய்துயிர்கள்சிறப்பெய்தக்
காவடிசேர்கங்கையறல்காமருதோண்மிசைக்கொண்டான். (ருo)

கரவுபயிலுருவமிதுகண்டவர்கண்களிகூரச்
சுரநதிநீர்படிந்துவருந்தூமறையோர்தமைப்போல
வரனதுபேரொழுத்தஞ்சுமடிக்கடியாங்கெடுத்தோதி
வரமிகுசீர்மழைவண்ணன்மலர்மகடன்மருங்கணைந்தான். (ருக)

பங்கயமேல்வீற்றிருக்கும்பணிமொழியும்பார்ப்பானு
மங்கவன்றன்படிற்றெழுக்கமறியாமலயிர்ப்பின்றித்
துங்கமணிமுகுளமுலைத்தோழியருந்தானுமாய்க்
கொங்கவிழ்நன்மலர்கொய்துகுவிபொழிலின்புடைநின்றுள். (ருஉ)

மணிநிறம்வெண்டுகளதனுன்மறைத்தணைந்தமறையவனும்
பணியிலன்போற்பசும்பொழிலின்பயில்வளங்கண்டிடுவான்போ
லணுகியொருகாலவளையகன்றெருருகாற்பன்முறையுந்
துணிபுநிலைபிறிதாகிச்சுழல்சுரும்பினுழிதருவான். (ருங)

தளர்வளையார்மருங்குல்புரைதன்மைபொருதிளந்தளிரின்
வளர்வளையாமலர்கொய்யும்வனசமகடனையங்கண்
விளர்வளையார்முன்கையினைவேட்கையிலார்போன்மெல்லக்
கிளர்வளையார்கரமறையோன்கிட்டியுடன்பிடித்தீர்த்தான். (ருச)

பற்றியமாலகரத்தொளித்தபணிலமுகமழுந்தலினே
மற்றவனைப்பிறனுகமதித்தமனப்பயத்தாலோ
பொற்றெடிமென்கரந்திருகிப்புண்ணியமாநிதிமகடா
னுற்றதுணைப்பாங்கியரோடோலமெனக்கூப்பிட்டாள். (௫௫)

புவியரசாளிந்துகுலப்புண்ணியமாநிதியங்கட்
குவிபொழில்வாயெழுமாதர்கூவுகுரல்கேட்டதனைக்
கவிகைமுழுமதிமாரன்காகளமென்றெண்ணிமுதற்
செவிபுகுதுமெழுத்திசையாற்சேயிழையாரெனத்தெரிந்தான். (௫௬)

தெரிந்தவுடன்விரைந்தேகிச்சேனையொடும்பன்முறைகூ
யரிந்தகுரன்மகடன்னையணைத்தணங்கேயாருன்னை
விரிந்தபொழிலிடைமேவிமென்கரம்வல்லிதிற்பிடித்தார்
பரிந்தழவேண்டியதென்கொல்பகரொன்ருன்பார்வேந்தன். (௫௭)

சரம்பிடித்தசிலைவேந்தன்சாற்றெனலுந்தானிரங்கி
யரம்பிடித்தவயில்பனிப்பவறைந்திடுவாளருமறைநூல்
வரம்பிடித்தநிலையினனுய்வன்மையினல்வந்தெனது
கரம்பிடித்தகள்வனிவன்கண்டுமுணக்கலங்கலிலான். (௫௮)

மாயநிலைபயில்வேடமறையவர்போற்கொண்டுற்ருன்
மேயதருநிழலதன்கண்வெளிநின்ருன்விளைந்தபடி
யாயெனவாருயிரளிக்குமையாமற்றிஃதென்ரு
ளேயெனமன்னவன்சீறியாவனிவனென்னுமல். (௫௯)

பொருக்கெனவப்பூசுரனும்புயல்வண்ணன்றனைப்பற்றி
யருக்கமுடியிராமேசனலயத்துட்கொடுபோகி
நெருக்கியிருகரங்களையுநெடுங்கயிற்ருற்பிணித்தலர்மேற்
றிருக்கொழுநன்வருந்தமன்னன்றெண்டமிகச்செய்வித்தான். (௬0)

அல்லிமலர்ப்பங்கயத்தாளவையிரண்டுமசையாமல்
வல்லியிடுவித்தயலோர்மண்டபத்தின்பாலிருத்திக்
கல்விகலுந்தடந்தோளான்கடிமனையிற்சென்றுமகட்
புல்லிமனந்தேற்றியந்தப்புரத்தினிடையமர்வித்தான். (௬௧)

கருமமிதுநிகழ்ந்தவழிக்கருங்கங்குற்பொழுதணைய
மருமலர்த்தண்சேக்கையின்மேன்மன்னவன்கண்படைகொள்வா
னருமறையோன்றன்னிலையுமரிவையவடன்னிலையு
மொருமைதிகழ்கனவின்கணுள்ளபடியுணர்ந்திடுவான். (௬௨)

வேறு.

ஆயிரம்விளக்கிற்ருேன்றுமவிர்மணிப்படங்கொள்பாந்தண்
மாயிரும்பாயனுப்பண்மகரகுண்டலங்கண்மின்னத்
தூயமாமணிக்கிரீடச்சுடரொளிபரப்பிநேமிச்
சேயமால்வனரயினப்பாற்செறிந்தபேரிருள்கால்சீப்ப. (௬௩)

இளநகைநிலவுதன்சிரோத்துநர்செவ்வாயாம்பற்
றளமுகையவிழ்ப்பமார்பிற்றரளமாலிகைகடாழ
வுளகு* சான்மகதிச்செங்கையோங்குநாரதனைமுன்னுங்
களவிலாமுனிவர்போற்றக்கண்மலர்க்கருணைபொங்க. (௬௪)

---

* உளகு-யாழினெருறுப்பு.

முன்னுசீர்படைத்தசேனைமுதலியார்முதலாராகித்
துன்னுகிங்கரர்கடத்தந்தொழின்முறைமரபினுற்றப்
பன்னுமைம்படைவயங்கப்பண்ணவர்பணிந்துபோற்ற
மன்னவனவனைக்கண்டான்வைகுண்டநாதனுக. (௬௫)

ஆடகவனசமாலையலரொளியளகக்காட்டி
னீடிருள்விழுங்கவங்கணெடுங்குழற்கரியசோதி
சூடியகனகக்கஞ்சத்தொடையலின்வண்ணமுண்ணக்
கூடிளங்கொங்கைமேருக்கொடுமுடிசிறுகவீங்க. (௬௬)

அணிவடமுத்தமாலையம்மமேலமைந்தகாட்சி
திணிவடகிரிமேற்றூங்குஞ்சிறியவெள்ளருவியேய்ப்பப்
பணிவடக்காஞ்சியல்குற்பரித்தபொன்னுடையோடு
தணிவடதளிர்நேருந்தித்தனிச்சுழிநனிதயங்க. (௬எ)

இரவனசங்கள்போலவினைதரும்படிபிடித்த
கரவனசங்கண்மேவுங்கால்வனசங்கள்பூணு
முரவனசங்கொணுமத்தொளிமணியாழித்தோன்றும்
வரவனசங்களாங்கண்மலர்சிழல்வனசமான. (௬அ)

மாமிகுமதாணிதன்னைமற்றையவணிகளாலே
யேமுறவழகுசெய்தாலென்னமெல்லிணரவிழ்த்த
தூமணக்கொம்பர்தன்னைத்தொங்கலாற்சூழ்ந்ததென்னக்
காமர்பொன்மேனிமீதிற்கலன்பலகவின்றிலங்க. (௬௯)

தெளிமதிநாப்பட்செவ்வாய்சேர்ந்தமாயோகந்தன்னைத்
தளிபயில்கமலத்தையறணந்திடாளென்னுந்தன்மை
யளிபயில்வதனநாசியணிதருபதுமராக
வொளிமணிகணிதநூலினுறுபொருட்குண்மைகூற. (எ0)

பண்டுதம்வயிரக்கோடுபொழிமார்பகத்தாற்செற்ற
கண்டகன்றன்னைவென்றோன்காதலியென்னுமன்பா
லண்டர்நாட்டமுதம்பெய்தவாடகத்தசும்பர்கையா
லெண்டிசைக்கரடப்பாய்மாவெடுத்தபிடேகஞ்செய்ய. (எக)

பொன்முகச்சசியினின்றும்புறப்படுமேவன்மாற்ற
நன்முகச்சிகேட்டுள்ளநயப்பொடுமரபினுற்ற
மென்மணிக்கவானரம்பைமேயஞண்டடுத்ததுணி
மன்மலர்கமலப்பொற்றூள்வருடிவானரம்பைவாழ்த்த. (எ௨)

இணையபேரொழிலின்மல்கியாவருமிறைஞ்சியேத்த
வனசமாளிகைசேர்செல்வவண்ணமாமகளைக்கண்டான்
கனவினிற்கண்டவண்ணங்கண்படைநீங்கிக்கங்கு
னனவினுங்கண்டானந்தநங்கைசேரிடத்துநண்ணி. (எ௩)

விடியல்வந்துற்றகாலைவேரியங்கமலக்கோயிற்
கொடியையுமுடன்கொண்டிந்துகுலப்பிரான்வேதியன்பாற்
கடிதுசென்றவனையுந்தான்கனவினிற்கண்டவாகண்
டடிமலர்வணங்கியங்கையஞ்சலித்தேத்தலுற்றான். (எ௪)

கம்பொடுதண்டநேமிகார்முகங்கதிர்வாளேந்து
மம்புயக்கரத்தினனேயரவிந்தநயனத்தானே
யும்பரோடுலகமுண்டவொருவயிற்றுந்திபூத்த
பைம்பதுமத்தின்ஞாலம்படைப்பவன்றனைப்படைத்தாய். (எரு)

விண்டுவென்பொருண்மையாலேவேறிலாதுலகமெங்குங்
கொண்டுடனின்றகோவேகோவலர்குலத்தின்பேறே
மண்டிகல்புரியுந்திண்டோண்மதுவொடுகயிடவப்பேர்
மிண்டுடைவீரராவிவிழுங்கியவென்றியானே. (எசு)

திசைமுகன்மரபிற்றேன்றித்திவினைக்காவல்பூண்ட
தசமுகன்றலைதடிந்தசராசனத்தடக்கையானே
வசைமுகக்கனகனீன்றமகனுயிர்த்தம்பமாகி
யிசைமுகக்கனகத்தம்பத்தெழுநரசிங்கரூபா. (எஎ)

அலர்கதிர்க்கவுத்துவப்பேரணிமணியெறிக்குஞ்சோதி
மலர்வனமாலைமார்பின்வாழ்திருமறுவினனே
கலர்மனங்கரந்துகற்றேர்கருத்திடைக்கரப்பின்முகிப்
பலர்புகழ்பரசியேத்தும்பழமறைப்பொருண்மையானே. (எஅ)

இந்திரைக்கினியகேள்வாவிருநிலமடந்தைகொண்கா
மைந்தனுக்கவிகைத்திங்கண்மகரகேதனனைமுன்னந்
தந்தகேசவனேதாமோதராகராத்தடிந்துதந்தி
முந்துவந்தருளுமாலேமுராரியேமுகுந்தாமாயா. (எகூ)

உடற்சிறைநீக்கியைவர்க்குதவிசெய்திடநடந்த
மடற்சிறைவண்டார்தண்டாமரைப்பதம்வழங்குமுன்னை
யடற்சிறைதன்னில்வைத்தேனபராதமிதற்கென்செய்கேன்
கடற்சிறைத்தெண்ணீர்காயாகருமுகிலன்னகண்ணா. (அ௦)

செய்ததானவர்தங்குற்றந்திருவுளந்தனிலெண்ணும
லுய்திறமருளிநின்றனுருவமுழுதவுமாற்றால்
வெய்தெனப்பற்றிநின்னைவிலங்கிட்டவெய்யனேற்குங்
கைதரவல்லையென்றேகருத்தினுட்கருதுகின்றேன். (அக)

எனப்பலவறிந்தவண்ணமெடுத்திசையேத்தியேந்தன்
மனப்படுமன்பினேடுமாயனைவணங்கிப்பின்ன
ரனப்பெடைகிள்ளைகோங்கமனநடையஞ்சொற்கொங்கைப்
புனப்பசுந்தோகைச்சாயற்பொன்னினைப்புகழ்தலுற்றான். (அஉ)

அகலிடமுழுதுமீன்றுயரியுரத்தமர்ந்தாயார்க்கும்
புகலிடமானாய்காவற்பொறியெனப்புரிவாயன்ப
ரிகலிடரொழியப்பாசமிரித்தியானெனதென்கொள்கை
மிகலிடாதமலஞானவீடுதந்தருளுமின்னே. (அங)

பலமறைவித்தையாகிப்பல்லுயிர்ப்பகுதிக்கெல்லாம்
பொலிவுயர்செல்வங்கல்விபுண்ணியம்புனிதவாழ்க்கை
நலமலிவேட்கைசித்திநன்மதிநவின்றவன்றி
நிலவுசீரொவைக்குமாங்கோர்நிமித்தமாய்நின்றநங்காய். (அச)

வேள்வியாய்வேள்விப்பேறுவிதிப்பவளாகிவேதக்
கேள்வியாய்க்கேள்விதன்னாற்கிட்டுதற்கரியளாகி
நாள்விரிநறுமென்மேரேட்டுநளினபீடிகைமேஞரு
மாள்விழைந்தடித்தொண்டாற்றுமரம்பையர்க்கருளுமாதே. (அரு)

எண்ணிரிசத்திபேதமியாவுமாயெவைக்குமேலாய்க்
கண்ணனனந்தமாகிக்கவுரியேோர்கருணைநாட்ட
வண்ணமாயளப்பில்சோதிவடிவமாய்வரம்பிலாத
தண்ணளியுருவமாகிச்சராசரம்புரக்குந்தாயே. (அசு)

ஊக்கமேயுடையபேறேயுணர்விஞலுணர்வார்சிந்தை
நீக்கமேநிலையொன்ருகிநின்றிடுந்திருவேதூல
சூக்கமேபரையேதொள்ளைத்துவக்குடற்பற்றுநீத்தா
ராக்கமேயாக்கியெல்லாமளித்தழித்தருளுவாளே. (அஎ)

உன்மகவாகுமெல்லாவுயிர்களுமவற்றிலொன்ரு
மென்மகவானேனென்ருயிதுபடிமுனதன்றே
பொன்மகளாகுநாமப்பூவையேமுன்போலென்னை
நின்மகவாகப்போற்றிநீயருளென்றுதாழ்ந்தான். (அஅ)

என்றிவரிருவர்சீர்த்தியிசைத்தபோதிறைவன்பாங்க
ரன்றவர்கருணைகூர்ந்தாராயிடையரசன்றன்னை
மன்றலங்கமலக்கண்ணன்மாயவன்மறித்துநோக்கி
யொன்றிதுகேண்மியாவென்றுவகையாலுரைக்கலுற்ருன். (அகூ)

இந்துவின்குலத்துவேந்தேயெம்மைநீயிறுகக்கட்டி
மைந்துடைவல்லிபூட்டும்வழுவினைமனத்துட்கொள்ளே
லந்தமிலன்பர்யாவரவர்வயத்தினனென்றெம்மைச்
சிந்தைகொண்டிடுமாறிந்தச்செயல்விளையாட்டிற்செய்தேம். (கூ0)

பிடித்ததுன்னேயமெய்யிற்பிணித்ததுபிரசத்தொங்க
லடித்ததுசாத்தும்புட்பவஞ்சலியடியிலிட்ட
கடித்தளைபாதசாலங்கடுஞ்சிறையிருத்துமெல்லை
வடித்தவேலரசேயுன்றன்மனப்பெருங்கோயின்மாதோ. (கூக)

எற்றினுலென்னின்முன்னமெச்சமொன்றிழைத்தாயெம்மேற்
பற்றிஞலதனல்யாமும்பங்கயத்திருவைவாளா
வுற்றதோர்பிரிவுகாட்டியுன்னுழைவிடுத்தேநீயும்
பெற்றதோர்மகவிற்போற்றிப்பெருகுநண்பாலளித்தாய். (கூஉ)

அவடனையளித்தலாலேயகமிகமகிழ்ந்தேநின்பா
லிவடனக்கினியர்தாமேயெமக்குமிங்கினியரொன்றுந்
துவடனிமருங்குற்கஞ்சத்தோகைபாற்சூழ்ந்தகுற்றங்
குவடுறழ்தோளாயென்கட்குமிற்றியகுற்றங்கண்டாய். (கூங)

இருபொருளல்லயாமுமிந்திரைதானும்பூசை
திருவினுக்கிழைத்தால்வேறுசெய்திடவேண்டாமெம்பா
லருகுறீஇயாரும்வன்மையாற்றிடாதளிப்பேனென்று
வொருமொழியுலகமீன்ருளோடுமுன்னுரைத்தாய்மன்று. (கூச)

அறைமொழிவழாமற்போற்றுமரசநின்னிலைமைகாண்பா
னிறைவனைக்கரங்கள்பற்றியீர்த்தனமிவனையெம்மைச்
சிறையிடுவித்துக்கஞ்சத்தேவியையளித்தலாலே
யுறைபெருமகிழ்ச்சியுற்றேமொன்றுநீயஞ்சவேண்டாம். (௯௫)

முறுக்கவிழ்கமலக்கோயின்முதல்விநின்புதல்விதானே
பொறுக்குதல்புரிந்தோமெல்லாம்புண்ணியநிதியேயென்றுன்
மறுக்கெழுதிருவாழ்மார்பன்மன்னனைவதனநாடிக்
கறுக்குமாலோதிமுண்டகாசனைகழறலுற்றாள். (௯௬)

ஆயவடுணைவியாகவரசநீயத்தனுகிச்
சேயெனவென்னைக்காத்தசெய்கையாலுவந்தேன்செங்கண்
மாயனும்யானுநின்பால்வந்தனமெம்பால்வைத்த
நேயநீயுடைமையாகிநிகழ்த்தியமகத்தினாலே. (௯௭)

எந்நிலத்தின்பவாழ்வுமிறைவநின்பாலுண்டாக
முன்னியமுடிகமேலாமுத்தியுமுறைவழாத
நன்னெறிநடையுமெம்பானலங்கெழுமன்புநாளு
மன்னுகவென்றுகூறிமாயவன்மார்பிலுற்றாள். (௯௮)

அல்லியங்கமலக்கோயிலாயிழையடைந்தபின்னர்ச்
சொல்லுவான்மாயன்மன்னுதுணைப்பதத்தெமைநீயிட்ட
வல்லியினோடுஞ்சேதுமாதவனென்னும்பேர்கொண்
டெல்லொளிமதாணிமார்பவீண்டியாமிருத்துமென்றும். (௯௯)

இருப்பதுபுரிதுநாமுன்பிருத்தியசேதுக்காக்கும்
விருப்பதினாலும்வேந்தேவேதனும்யாது* பூத
நெருப்பெனவடராதிங்கேநிலைத்திடுகின்றனீங்கார்
திருப்பயின்மகவான்முன்னுஞ்செழுந்திசையிறைவர்தாமும். (௧௦௦)

ஈசனுமிராமநாதனென்றுலகியம்பும்பேரால்
வாசமதுற்றனிங்கேவையகம்வாழ்வதாக
வாசையோடதனுனுமாவிகட்கிடுக்கண்டீர்க்கு
நேசமோடிருத்தல்செய்கேநிலம்புகழ்நிருபரேறே. (௧௦௧)

நீவிலங்கிடமுன்பூண்டுநின்றருள்சுரக்குநந்தந்
தேவிலங்குருவந்தன்னைச்சேவைசெய்திடுவார்வாழு
மாவிலந்திருவினீடுமற்றவர்மனமெனும்பே
ராவிலந்தெளியுமீற்றிலாவர்நம்மேனியன்னோர். (௧௦௨)

என்னெடுங்கமலையோடுமிருநிலங்காவல்பூண்ட
வுன்னெடுமெண்ணுமூவருயர்கதையுவந்துசொல்வார்
பொன்னெடும்புகழினோடும்புதல்வர்களோடுங்காதன்
மின்னெடுமுலகில்வாழ்வார்மிடியொடுமெலிதலில்லார். (௧௦௩)

வம்பவிழலங்கனிம்பமார்பநீமகிழ்ந்துசொற்ற
வெம்பெருஞ்சீர்த்திகேட்பாரியம்புவாரொழுதுவார்க
ளும்பர்வைகுண்டநீங்காதுறைவரொன்றுனாத்துமாய
னம்புயமடந்தையோடுமாயிடையிருந்தானம்மா. (௧௦௪)

---

* யாது-இராக்கதன்.

மண்ணகமடந்தைகேள்வன்வாரிசமங்கைகொண்கன்
புண்ணியத்தாள்கள்போற்றிப்பூசனைபுரிந்துமீள
வண்ணலாமிராமநாதனடியிணைவணங்கிவாழ்த்தி
யெண்ணருமிரும்பூதோடுமெய்தினனிருக்கைதன்னில். (சoரு)

அந்தநாட்டொடங்கிமன்னனந்தமததடையுங்காறுங்
கந்தமாதனத்தின்வைகிக்கடிமதின்மதுரைகாக்க
மைந்தனைப்பணித்துவீடுமருவினன்மாயும்போதில்
விந்தியாவலியுமாவிமேவினள்வேந்தனோடே. (கoசு)

சேதுமாதவன்றாள்சேவைசெய்பவர்திங்கள்வேணி
யாதிவாழ்கயிலைமேவியகன்றிடாரவனைப்போற்றார்க்
கேதமிலிராமநாதனிருந்திறற்கூற்றஞ்சீறும்
பாதபங்கேருகங்கள்பணிந்திடும்பயனுமில்லை. (கoஎ)

அலைபுனற்கங்கைத்தெண்ணீராடியவேண்டிச்செல்வார்
மலையுறழ்தடந்தோட்சேதுமாதவன்பாதநண்ணிக்
கலைகொள்சங்கற்பங்கூறிக்காதலிற்படருவாரோற்
புலமைசான்முனிவீரந்தப்போக்குமேல்வரத்தையாக்கும். (கoஅ)

வேறு.

வேதமாகமமாதியவாதிநூன் மேவநாடியமேதகுமாதவீ
ரீதுகாதலினுலெவர்கூறுவார் யாவரோதுகர்வாரிருகேள்வியா
னீதியாலவர்நீள்கடன்மேகநேர் நீலமாலமர்நீணகர்மேவுவார்
சேதுமாதவனார்கதைநீரொலாந் தேருமாறினிதோதினம்யாமரோ. (கoகூ)

சேதுமாதவச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம், ௩உoரு.

---

# சேதுயாத்திரைச்சருக்கம்.

---

ஆதிமாதவச்சூதனருமறை, மூதுணர்ந்தமுனிவரைநோக்கியே
பாதகங்களியாவையும்பாற்றிடுஞ், சேதுயாத்திரைசெப்புதன்மேயினன். (க)

சேதுயாத்திரைசெய்பவர்சீதள, பூதநீரிற்படிந்துபுரிகடன்
யாதுமாற்றியெறிகடற்சேதுவின், மாதுபாகனிராமன்மகிழவே. (உ)

ஏதிலாதங்கியைந்திடுமாத்திரம், வேதநூல்கள்விதிமுறையோதிய
தீதிலாதசிறப்புடையந்தணர்க், கோதனம்பரிவோடுமுதவியே. (௩)

பொங்குசோதிப்புனிதவெண்ணீறணிந், தங்கம்யாவுமலங்கெழிற்கண்டிகைத்
துங்கமாலிகைசூடிப்பவித்திரஞ், செங்கைமாமலரங்குலிசேர்த்தியே. (ச)

படியில்சேதுவியாத்திரைபண்ணவே, கடவமென்றுசங்கற்பங்கழறியே
மடியிலாதுமனைநின்றுநீங்கியாங், கொடிவிலஞ்செழுத்தெட்டெழுத்தோதியே.()

பத்தியோடுமௌனம்படைத்துமா, சுத்தமேவித்துறந்துகடுஞ்சினஞ்
சித்தமோடிந்திரியமடக்கியே, நித்தமாற்றுநியமங்களாற்றியே. (௬)

கோலியைந்தகுடைசெருப்போடுதாம், பூலமெண்ணெய்பொய்மாதர்புணர்ப்புவி
டேலுநன்னெறிப்பாலினியைந்துமால், சாலுந்திநெறிதன்னைத்தணந்தரோ. [ட்
உப்பிலுண்டியொருபொழுதுண்டுவீண், செப்பலின்றிச்செழுங்கடற்சேதுவின்
றப்பின்மாக்கதைசாற்றியரியரா, னொப்பில்பூசையுனாற்றியுவப்பினால். (௮)

ஒருவர்பாலினுமொன்றுங்கவர்ந்திடா, தரியவேள்விமுதலனவாற்றியே
கருதுநண்பகற்காணுமதிதியர்க், குரியவன்புடனன்னமுதவியே. (௯)

அறிவுசான்றதுறவர்க்கறுசுவை, நறியவுண்டிவழங்கிநவின்றவிம்
முறைவழாதுமுழங்குகடற்றிரை, யெறியுஞ்சேதுவின்மூலத்திலெய்தியே. (௧௦)

வேறு.

உயர்ந்திடுபிப்பலாதியுதித்துளாயுலகுக்கெல்லாம்
பயம்புரிந்தருள்வாயென்னாப்பகர்ந்திருபாணியேந்தி
யியைந்திடுமோரொன்றாதலேழாதலிரும்பாடாண
நயந்தருமுண்டியாகநவிலருமன்பாலீந்து. (௧௧)

வளர்விசுவாசியாகிமாகிருதாசியாகி
மிளிர்தருவிசுவயோனிவிசாம்பதியாகிவைகு
மொளிமணியாழிப்புத்தேளுறைகுதியிந்தவுப்பின்
றளிகொணீர்க்கடற்கண்ணென்னாச்சந்நிதானம்புரிந்து. (௧௨)

அரியதோர்விண்டுவாகியபாம்பதியாகிமிக்க
விரணியசிருங்கனாகியெழில்விசுவகுத்தனாகித்
திருநதிபதியாய்மேவுந்தென்கடற்றேவேயென்னா
மரபொடுபுகன்றேயன்பால்வருணனைவணக்கஞ்செய்து. (௧௩)

கதிர்விடுமணிகட்கெல்லாங்காரணமாகிக்காம
ரொதிரறுமணிகட்கெல்லாமிடனதாயிலங்குந்தெய்வப்
புதுமணிமயமாய்மன்னும்பொருதிரைப்புனிதத்தெண்ணீ
ருததியேயென்றுநேயத்துரைத்தருக்கியங்கொடுத்து. (௧௪)

அளவிலாவுலகுக்கெல்லாமாதாரமாகிநேமி
வளையொடுதண்டமேந்திவைகியதேவேயிந்தத்
தெளிதருபுனலின்மூழ்கத்திருவருள்செய்தியென்னா
வுளமலியுவகையோடுமுரைத்தனுமதிபெற்றாங்கண். (௧௫)

குடதிசைமயிந்தன்மற்றக்குணதிசையிரவிமைந்தன்
வடதிசைத்துவிதன்றென்பால்வளங்கெழுநளனைநாப்ப
ணிடர்தவிரிராமன்சீதையிலக்குமனனுமன்வென்றி
மிடல்கெழுவாலிதோன்றல்வீடணன்றனைநினைந்து. (௧௬)

நாரதன்பிரகலாதனவைதவிரம்பரீடன்
சீர்மறைவியாதனன்னான்சேயையுநினைந்துஞாலத்
தோர்திகழ்நதிகட்கெல்லாமிடனதாமுததித்தேவே
யார்தருபவங்கணீக்கியருளென்னாவேண்டிப்பின்னர், (௧௭)

இரணியசிருங்கமாதியிசைமனுவிசைத்துவெள்ளைப்
புரிவளையேந்திஞனைப்புதுநிலாமவுலியானைப்
பரவியாங்கிதயக்கோயிற்பாவித்துப்பகர்வேதாதி
யரியமந்திரத்தினுலேயாழ்புனன்முன்னராடி. (௧௮)

இம்முறைபின்னுமூழ்கியெழுந்துசூரியனைநோக்கிச்
செம்மனின்கரங்கடீண்டச்சிறந்தொளிர்தீர்த்தமெல்லாம்
பொய்ம்மைதீரருளாலீங்குப்புனிதநீதருதியென்று
மெய்ம்மைசாலன்பிற்போற்றிமீளவுமுன்போன்மூழ்கி. (௧௯)

குடதிசைநெறியானண்ணிற்குரைகடலாடியங்கட்
படர்தருதருப்பைப்பாயற்பண்ணவற்பரவல்வேண்டும்
வடதிசைமருவுந்தேவிமாபுரமார்க்கநண்ணி
னிடர்கெடநவகற்றீர்த்தத்திப்பரிசிழைத்தல்வேண்டும். (௨௦)

இசைதருமிராமன்சீதையிலக்குமன்பிப்பலாதி
வசையில்கண்ணுவன்மயிந்தன்மாகிருதாந்தனெட்டுத்
திசைபுகழ்சரபன்வேகதெரிசியேகாலின்செம்ம
லசைவின்மன்னியுவேகாளராத்திரியகர்க்கணேசன். (௨௧)

முதுகவியிடபனேடுமொழியும்வித்தியையேவானக்
கதிர்மகன்றுவிதனின்னோர்க்கருதியர்க்கியமுன்றந்து
துதிதருமுனிவர்தேவர்தோமறுபிதிர்களின்னோர்க்
கிதமுறுதர்ப்பணங்களீந்துபின்கரையிலேறி. (௨௨)

நனைதுகில்களைந்துலர்ந்தநற்றுகில்புனைந்தேயாச
மனமதுபுரிந்துதெய்வமாமறைவழியேசாலப்
புனிதமாஞ்சிராத்தமாதிபுரிந்துதொல்லறிவுசான்ற
பனவருக்கிரணியங்கோப்படிமுதற்றுனம்பண்ணி. (௨௩)

பூதலம்புகழுந்தெய்வப்புகழ்தனுக்கோடிதன்னிற்
சேதுமூலத்திற்செய்தசெயன்முறைசெய்துமூழ்க
காதலினடந்துபின்னர்க்காமர்சக்கரதீர்த்தத்தி
லேதமில்விதியினேடுமினிதுவந்தாடியேறி. (௨௪)

சேதுநாயகனும்மன்னுந்திகழ்தருதருப்பைப்பள்ளி
மாதவற்போற்றிமற்றவயங்குசக்கரதீர்த்தத்திற்
காதலிற்குடைந்துபின்னர்க்கவித்தடம்படிந்துசீதை
யேதமில்வாவிமூழ்கியிருணமோசனத்திலாடி. (௨௫)

படிபுகழிலக்குமன்பேர்ப்பைந்தடமருங்கிலெய்தி
முடிமயிர்களைந்தபின்னர்மொழிந்தவத்தடத்தின்மூழ்கி
யொடிவில்சீரிராமதீர்த்தத்துறைதருவிதியினுடிப்
புடவிபொன்முதலதானம்பூசுரர்தமக்களித்து. (௨௬)

பங்கயவாசம்வீசும்பாவநாசத்தின்மூழ்கிக்
சங்கையினுழ்ந்துதெய்வக்காமருகயைநீர்தோய்ந்து
பொங்குசீர்யமுனையாடிப்புரைதவிரந்தணாளர்
தங்களுக்கியைந்தவாறுதானங்களீந்துமன்னே. (௨௭)

வேறு.

சாவித்திரியேசரசுவதிதயங்குகாயத்திரித்தடங்கண்
மேவிக்குடைந்தாங்கனுமகுண்டவியனீராடிவிரைநாறும்
பூவிற்பொலிந்தபிரமகுண்டம்புகுந்துபடிந்துபுகழ்ந்துகவை
நாவிற்றிகழுநஞ்சுமிழ்வாய்நாகதீர்த்தக்கரைநண்ணி. (௨அ)

மன்னுமனந்தாதியரட்டமாநாகத்தால்வகுத்தவிந்நீர்
தன்னிற்கங்கைமுதனீர்கடங்கள்பவநீங்கிடத்தங்கும்
பன்னுபவந்தீர்த்துயர்முத்திபரிவாலளிக்குமதிற்படிந்து
பின்னர்ப்பொதியத்தமிழ்முனிவன்பிறங்குபெருநீர்த்தடமூழ்கி. (௨௯)

முடிவிலாதபாதகங்கண்முழுதுங்கணத்தின்முடித்தருடீக்
கடவுணீரில்விதிமுறையேகாதலோடும்படிந்தாடி
யொடிவிலாதசிராத்தமுதலுதவிமறையின்முடிபுணர்ந்த
புடவியிமையோர்க்கிரணியங்கோப்பூமிமுதலபலகொடுத்து. (௩௦)

முன்னருரைத்தநேமிதடமுதலதீர்த்தமிவையனைத்து
மின்னமுறையேயாதரமக்கியைந்தபடியேதானுதல்
பன்னுமரபிற்படிந்துவஞ்சம்படையாதியன்றபடிபடிகோச்
சொன்னமுதலதானங்கயேமறையோர்க்குதவியபின். (௩௧)

உறைநீராழிசூழிலங்கையுரவோற்கொன்றபழியொழிய
வறைநீரகழிக்கொடிப்புரிசையயோத்திவேந்தனருச்சித்த
பிறவாயாக்கைப்பெரியோனைப்பிறக்குந்தேவர்பெருமானை
யெறிநீர்விரிந்தசடைமவுலியிராமநாதன்றனையிறைஞ்சி. (௩௨)

வையம்பரவும்புகழ்ச்சேதுமாதவனையுமகிழ்ந்திறைஞ்சித்
துய்யவிராமனிலக்குமனைத்தொழுதுசீதைதனைப்போற்றிச்
செய்யபுனல்களுளபிறவுஞ்சிறப்பினுடித்திரும்பவுஞ்சென்
றையனிராமநாதனடியன்பால்வணங்கியதன்பின்னர். (௩௩)

தேசுபயிலுந்தனுக்கோடிதீர்த்தமதனைச்சென்றடைந்து
நேசம்புரிந்துமுறைபிறழாங்கியமத்துடனேபடிந்தாடி
யேசில்சிராத்தமுதலவிழைத்தியன்றபடிவஞ்சகமின்றி
மாசிலாததானங்கண்மறைவேதியர்கடமக்கீந்து. (௩௪)

கோடிதீர்த்தந்தனிலாடிக்கோடுருதங்கியன்றபடி
பீடுசான்றபாற்சுரபிபிறங்குங்கனகந்திலந்தூய
வாடைபூமிமுதலாகவறைந்தபலவாந்தானங்கள்
பாடல்சான்றசுருதிமறைப்பனவர்தமக்குப்பரிந்தளித்து. (௩௫)

வேறு.

அன்னதன்பின்னர்முன்னரயோத்தியர்பெருமான்பூசித்
துன்னருமன்பாற்போற்றுமுமாபதிமிராமநாதன்
சன்னிதிதன்னிலெய்தித்தாழ்ந்தினிதெழுந்துமுக்கான்
மன்னுறுசெம்பொற்கோயில்வலங்கொடுவந்துநின்றே. (௩௬)

முத்தனேபோற்றிமூவாமுதல்வனேபோற்றிபோற்றி
நித்தனேபோற்றிபோற்றிநிமலனேபோற்றிபோற்றி
யத்தனேபோற்றியன்பர்க்கன்பனேபோற்றிபோற்றி
சுத்தனேபோற்றிவானோர்துணைவனேபோற்றிபோற்றி. (௩௭)

ஆதியேபோற்றியாராவமுதமேபோற்றிமங்கை
பாதியேபோற்றியின்பப்பரவையேபோற்றிமேலாஞ்
சோதியேபோற்றிதெய்வச்சுருதியுந்தொடரொணுத
நீதியேபோற்றிகற்ருேர்நிதியமேபோற்றிபோற்றி. (ருஅ)

கவளமாகரியுரித்தகடவுளேபோற்றிமுக்கட்
பவளமாமலேயேபோற்றிபங்கயன்முகுந்தன்றேடுந்
தவளமாநீறுபூத்ததழற்பெரும்பிழம்பேபோற்றி
துவளமேருவைவளேத்ததோளனேபோற்றிபோற்றி. (ருகூ)

ஏனத்தினெயிறுமோட்டியாமையினெலும்புந்தூணின்
முனத்தினுதித்தசிங்கத்தலேயுடன்றரித்தாய்போற்றி
மோனத்தினீங்காருள்ளமுண்டகமலர்நிறைந்த
ஞானத்தண்டேனேபோற்றிநான்மறைப்பொருளேபோற்றி. (சo)

எண்ணலார்புரங்கண்மூன்றுமேமூநாக்கடவுளுண்ண
மண்ணெலாமுண்டுமிழ்ந்துமறிதிரைப்பாலின்வேலேக்
கண்ணிலேகண்படுக்குங்கருநெடுங்கணேவிடுத்த
வண்ணலேபோற்றிபோற்றியநாதியேபோற்றிபோற்றி. (சக)

பாழிவாய்மணிகொள்பாந்தட்பாயனீத்தயோத்திவந்த
வாழிமாவிராமன்றன்பாலாழிநீரகழிலங்கை
வாழிராவணவரக்கன்வலிகெழுபிரமகத்திக்
காழிராதகற்றியாண்டகருணேமாகடலேபோற்றி. (சஉ)

அண்டனேபோற்றியண்டாமுதமுண்டிடவிருண்ட
கண்டனேபோற்றிசெந்திக்கையனேபோற்றிதிங்கட்
டுண்டனேபோற்றிகொன்றைத்தொடையனேபோற்றிகோபச்
சண்டனேர்விழவுதைத்தசரணனேபோற்றிபோற்றி. (சரு)

சூலனேபோற்றிபோற்றிசுராதிபர்மகுடந்தோயுங்
காலனேபோற்றிநேமிக்காளமாமேகமேவும்
பாலனேபோற்றிபோற்றிபண்டைநான்மறைநூலோது
மாலனேபோற்றிபோற்றியம்பலத்தமுதேபோற்றி. (சச)

நேசனேபோற்றிபோற்றிநிமலனேபோற்றிசேது
வாசனேபோற்றிபோற்றிவள்ளலேபோற்றிபோற்றி
தேசனேபோற்றிபோற்றிசீதைகோன்பூசித்தேத்து
மீசனேபோற்றிபோற்றியிராமநாயகனேபோற்றி. (சரு)

கன்றுழைபரசுதாங்குங்கரசரோருகனேபோற்றி
மின்றிகழ்சடையிற்கங்கைமிலேந்தநாயகனேபோற்றி
தென்றிசைக்கணியாந்தேவைத்தேவாதிதேவேபோற்றி
யென்றுபல்புகழ்நாமங்களினீதெடுத்திசைத்துவாழ்த்தி. (சகூ)

வேறு.

எந்தைபிரானேயெமையாளுமிராமநாதன்றனைப்புகழ்ந்தாங்
கந்தண்மலர்ச்சேவடிவணங்கியனேயோன்பூசைதனக்கான
செந்தண்மலர்சந்தனமுதலசிறப்பினளித்துத்திகழுமர
விந்தன்முதலோர்தொழும்புனிதவிடையோனவன்பால்விடைகொண்டு. (சஎ)

பொன்னந்திகிரிப்படையேந்தும்புனிதீர்சேதுமாதவனை
முன்னரிறைஞ்சிப்புகழ்நாமமொழிந்துபோற்றிமற்றவன்றன்
மன்னும்பூசைக்குபகரணம்வழங்கியவன்பால்விடைகொடுமுன்
சொன்னநியமத்துடன்றனதுதொல்லைப்பதியின்பாலடைந்து. (௪௮)

அந்தணாளர்க்கறுசுவையோடன்பாலடிசிலளித்துவகை
வந்ததானமளித்திடுதன்மரபாம்புனிதமாதவத்தி
ரிந்தவாறுபுரிந்தோர்களிராமநாதன்றிருவருளான்
முந்துசூழ்ந்தபவமனைத்துமுடிப்பார்நிரயமூழ்காரால். (௪௯)

கொடியமிடியாமெரியழல்வாய்க்கோடைவெயிலாலுடல்வெதும்பார்
கடியதுயர்நோய்பிணிமேவார்கல்விகனகஞ்சேய்முதலா
வுடையமல்லற்பெருந்திருவோடுவந்துவாழ்வுற்றினிதுறைந்து
முடிவிலாதசிவமுத்திமுடிவிலடைவர்முனிவீர்காள். (௫௦)

இனையசேதுமாதீர்த்தமேகிமூழ்குமியல்பில்லார்
வினைகளனைத்துமகற்றுமிந்தமிக்கசேதுமாக்கதையை
நினைவுபுரிந்துகேட்டுவந்துநிகழ்த்திலனையநிறைதீர்த்த
நனையும்புனிதப்பயனவர்பானண்ணும்பாவநண்ணுதால். (௫௧)

வேறு.

கோதுசேர்புலவேட்டுவர்சாயவேகூரருவருள்வாட்கொடுசாடியே
தீதுதீர்தருமாதவமானதோர்சேயகோன்முறையோச்சுபுதேசுசால்
வேதநூனெறிமார்க்கம்வழாமலேவேள்விநாடதுபோற்றுபுநாளுமே
யேதிலாவரசாட்சிசெய்மாதவீரீதுசேதுவியாத்திரைநீதியே. (௫௨)

சேதுயாத்திரைச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம், ௩௨௫௭.

---

# சேதுபலச்சருக்கம்.

விண்டலம்புகழ்சூதமாமுனிவரன்மீண்டு
மெண்டகுங்கணமுனிவரைநோக்கிநீர்யாருங்
கொண்டவன்பொடுகேண்மினீரெனக்குரைகடல்சூழ்
மண்டலம்புகழ்சேதுவின்வருபலன்வகுப்பான். (௧)

பூதலந்தனிற்புண்ணியதலங்களிற்சேது
மாதலந்தனைநிகர்தலமில்லைமாதவத்தி
ரோதுமன்னதிலுறுசெபந்தவந்தானமோமம்
வீதலுற்றிடாதொன்றதேயநந்தமாய்விளங்கும். (௨)

இனையசேதுவிலிருந்தனுக்கோடியிலொருநா
ணனையிலாயிரமுகமுடைக்கங்கைநன்னதிகு
ழனையகாசியிலொருபஃதாண்டினிதமர்ந்த
புனிதமாம்பெருந்தன்மைசேர்பலனதுபொருந்தும். (௩)

போதுமூன்றிதின்மூழ்கியேபுரிசடையிராம
நாதனரடிபோற்றியச்சேதுவினண்ணிற்
றீதிழைக்குமாபாதகந்தீர்ந்திடுந்தில்லை
மீதிலேந்திருவருடமேவியபலன்மேவும். (ச)

முந்துமாறெழுத்தாயிரத்தெட்டுருமுடியா
விந்தமாபுகழ்ச்சேதுவிலாசையோடிசைப்பார்
புந்தியாலரிபூசனைபுரிந்தமெய்ப்பொருளாஞ்
செந்துகிர்ச்சடையிராமநாயகனடிசேர்வார். (ரு)

மாகமாதமிப்புனிதநீராடின்மாமதுரை
தோகைமஞ்ஞையாடுந்துறைதொல்லைவெண்காடு
மேகமூடியபழமலைவேங்கடவெற்பு
நாகர்போற்றுசேடாத்திரிநைமிசமருணை. (சு)

தேசுசாலருச்சுனவனமறைவனந்தில்லை
யீசர்காழிதென்கயிலையேயரங்கமேயிபக்கா
வாசிலாதமர்வயித்தியபுரமருட்குடந்தை
காசிசேர்ப்பருப்பதங்கமலாலயங்காஞ்சி. (எ)

இப்பெரும்பதிமுதலியவீசன்மால்பொருந்து
மொப்பரும்பதியாவினுமோரியாண்டுறைந்த
வப்பெரும்பலனடையுமென்றுலகன்றுறைநீர்
மெய்ப்பெருந்தனுக்கோடியின்பெருமையார்விரிப்பார். (அ)

இனையசேதுவின்பெருமையையிருடிகாளீன்ற
வனையைநேருநால்வேதமுநான்கிடத்தறையும்
வினையமார்புராணம்மிதிகாசநூன்மிருதி
யெனையவும்மொருவாக்கியமாகவேயியம்பும். (கூ)

இந்தவண்சிலைக்கோடியிலிர்துவைக்கதிரை
வந்துவெம்பனிவௌவுநாண்மூழ்கிடின்மலிசீர்
தந்தகங்கைசேரவிமுத்தமாம்பெயர்த்தலத்தி
லைந்திரட்டியாண்டாடியபெரும்பலனடையும். (க0)

கோடியுற்பவத்துற்றபாதகமெலாங்குலைவுற்
றோடுமெக்கணம்பரிமேதமாயிரமுஞற்றும்
பாடின்மெய்ப்பெரும்பலனதுபொருந்துறும்பரத்திற்
கேடிலாதுணர்ந்தொன்றியேகெழுவுமாதவத்தீர். (கக)

திங்களுற்பவத்தயனத்திலம்புலித்தினத்திற்
றங்குபூரணைதனிலமாவாசியிற்றரணி
யெங்கணும்புகழ்சேதுவைக்காணிலேழ்பிறப்பிற்
றுங்கவெம்பவங்கண்டிடாதெய்திடுஞ்சுவர்க்கம். (கஉ)

உதயவேலையின்மாகத்திலுதகங்களெல்லாங்
குதிகொளுந்தனுக்கோடியின்முத்தினங்குடைந்தா
ரதிகமாயினபவமொரீஇக்கங்கையாமுதி
நதிகடோய்ப்பயன்பெறுகுவர்நாடருந்தவத்தீர். (கங)

வாய்ந்தசேதுவிலுதயத்திலந்துநாண்மாகந்
தோய்ந்திடிற்பரிமேதயாகாதிகடுன்னுஞ்
சாந்திராயணங்கிருச்சிரநோன்புகடரும்பே
ருய்ந்துநான்மறையோதியபேறெலாமடைவார். (௧௪)

அந்தவேளையிலந்தநற்றிங்களிலறைந்த
வந்தநீரிலீனைந்துநாளாடினோரலர்ந்த
வந்தநூற்றிதழம்புயவம்பொனுலயஞ்சே
ரந்தமில்புகழ்ச்சதுர்முகன்மனேவதியடைவார். (௧௫)

இனையகாலையிலினையதோர்திங்களிலினைய
புனிதநீரின்மூவைந்துநாளாடினோர்புளாதிர்
கனகமால்வரைநிறுத்துபுகனைகடல்கடைந்த
வனைதுழாய்முடிக்கடவுள்வைகுண்டத்துவாழ்வார். (௧௬)

இரைத்திடுந்தனுக்கோடியிலிருபதுதினமுன்
னுரைத்ததிங்களிலுதயத்திலாடினோரொலிநீர்
நுரைத்ததும்பியபுனன்முடிமுத்தலைநுதிவேல்
வரைத்தடஞ்சிலைவானவனிடத்தினில்வதிவார். (௧௭)

கூறுதிங்களிலுதயத்திலையைந்துகொண்ட
வீறுநாடனுக்கோடியில்விருப்புடன்படிந்தான்
மாறிலன்புடையிராகவன்பூசனைமகிழ்ந்து
பேறுகந்தருளிராமநாயகனுருப்பெறுவார். (௧௮)

உந்துமிப்புனலுரைத்தவத்திங்களிலுதயத்
தைந்திரட்டிமூன்றுந்தினமாடினோரயோத்தி
வந்துதித்தருளிராகவன்பூசைசெய்மணிசேர்
கந்தரத்திராமேசனேடிரண்டறக்கலப்பார். (௧௯)

ஆகையாலிந்தச்சேதுவிலறிஞரொப்படியு
மோகையாலுயர்மாகமாதத்துதயத்திற்
பாகையார்மொழிப்பதுமைகோன்பரிவிஞற்குயிற்றும்
வாகையார்தனுக்கோடியிற்படிந்திடன்மரபே. (௨௦)

ஆதியாமருத்தோதயமகோதயமலரி
யோதுபானுவெண்மதியுபராகத்தி* லுரைசால்
சேதுமூழ்கினர்கருவுருர்கிரயமுஞ்சேரார்
வேதியக்கொலையாதியபவங்கள்வீட்டுவரோ. (௨௧)

அங்கதன்றியுஞ்சகலசெல்வங்களுமடைந்தே
யிங்கிதந்தருமின்பெலாமிசைந்துவீற்றிருந்தே
பொங்குமிந்திரனுலகமாதியவெலாம்பொருந்தித்
திங்கள்வார்சடைமுடியவன்பதத்தினைச்சேர்வார். (௨௨)

ஆதலாற்கதிர்மதிகளையரவங்கடீண்டிற்
போதமாரருத்தோதயமகோதயம்பொருந்தி
லோதுபுண்ணியகாலங்களாமிகவுவந்து
சேதுமூழ்கிடவேண்டிடுந்திண்ணமாச்சிறந்தே. (௨௩)

---

*உபராகம்-கிரகணம்.

இலங்கைவேந்தனைவதைப்பதற்கிராகவன்முன்னாள்
வலங்கொடேகிருமித்தவிச்சேதுவைவணங்கி
நலங்கொளுந்தெய்வமுனிவரர்பிரமனன்முனிவோ
ரலங்கல்வேந்துமாமுனிவரர்தென்புலத்தமர்ந்தோர். (௨௪)

சித்தர்சாரணர்சிறந்தகந்தருவர்செங்கமல
வத்தனுதியவிமையவர்கின்னரருரகர்
பத்தியோடென்றுமிருப்பர்களாகையாற்பகர்ந்த
நித்தமேவுமிப்புண்ணியசேதுவைநினைந்தே. (௨௫)

யாதொர்தேசத்துநீரிடைமூழ்கினுமியற்றும்
பாதகம்வராசேதுநாப்பண்ணுறைதீர்த்தத்
தோதகன்கரையொருபிடியோதனமுதவிற்
பேதுறும்பிணிபுருணக* முதலியபிரியும். (௨௬)

அராவணைப்புறத்தறிதுயிலொழிந்துவந்தயோத்தி
யிராமன்வண்கரத்தேந்தியதனுவினுற்கிறுந்
தராதலம்புகழ்த்திணைக்கண்டவர்தாம்போய்ப்
பராவுமன்னேயர்கருவுமூர்வைகுண்டம்பதிவார். (௨௭)

நாடரும்புகழ்வீடணன்வேண்டிடநயந்தே
நீடிருந்தனுக்கோடிகொண்டிராமனுநிமலன்
றேடரும்புகழ்படைத்திடக்கிறலாற்செகத்திற்
பீடுறுந்தனுக்கோடியாய்ப்பவத்தையும்பிரிக்கும். (௨௮)

முடிவிலத்தனுக்கோடியில்விதிமுறைமூழ்கிப்
புடவியாடகம்புனைதுகில்பொழிசுவையமுத
மடைகொணன்பசுநறியநெய்வண்டயிர்வெண்பால்
கடிகொள்சந்தனங்கனிதுவர்க்காய்சருக்கரைதேன். (௨௯)

செய்யசாலிநற்றண்டுலந்திலம்பயறுமுந்து
துய்யபோனகம்பண்ணியந்தீம்புனல்சோதி
மெய்கொள்பூண்பலதானியங்காய்பலவிரும்புந்
துய்யசாகினியன்னமோடேனவுந்தொகுத்தே. (௩௦)

மையலின்றியேமறைமுழுதுணர்ந்தவாய்மையராய்
வையகம்புகழ்வழுத்திடுமாமறையோர்தங்
கையிலீந்திடிற்கருதியவளித்திடுமதனு
லுய்வர்தம்பொருளுலோபமற்றுதவுதல்வேண்டும். (௩௧)

நண்ணுமத்தனுக்கோடியினல்கியதானம்
பண்ணிருஞ்செபநியமமோமத்துடன்பயின்றே
யெண்ணருந்தவமாதியொன்றநந்தமாமிதனுற்
கண்ணுதற்பிரான்கரியமால்கஞ்சன்விண்ணுடர். (௩௨)

கேடினுகரோடியக்கர்மாதவர்கள்கிம்புருடர்
நாடுதென்புலத்தவர்மகிழ்நண்ணுவர்நாளும்
பாடில்சேதுவைநோக்கினுன்றன்னெடுபயந்தோன்
றேடுதந்தையுமவற்குறுதந்தையுந்தெரிக்கில். (௩௩)

---

* புருணகம்-கருச்சிதைத்தல்.

பீடதாம்பரிசுத்தமேயாக்குவன்பிழைத்தே
வாடுறுங்கொடுநரகத்தினின்றுதன்மரபை
வீடதாவெடுத்தேற்றுவன்விளங்கிடும்விறல்விற்
கோடிமூழ்கினுற்கோடியைம்பாதகங்குலைந்தே. (௩௪)

கணமதொன்றினிலழிந்திடுநிச்சயங்கவைநாப்
பணவராத்துயிலொழித்திடும்பண்ணவன்பணித்த
குணமதாரும்விற்கோடியைக்கண்ணினுற்குறித்தோன்
குணமிலாக்கிலேசந்தருகருப்பையுட்குளியான். (௩௫)

வேறு.

சீதையாதொருசெந்தழன்மூழ்கினளத்தடந்தினைத்தோர்க்குக்
கோதையார்கொடும்புருணகநூறுபோமக்கணங்குளிர்கஞ்சன்
ருதையாயிடுமிராமனிற்சிறந்ததுசேதுவுந்தனியாழிச்
சீதரன்னெவர்தம்மினுமதிகன்போற்சிறந்ததுதிகழ்கங்கை. (௩௬)

வேறு.

எங்கேனுமியாதொருநீர்மூழ்கிடினுமிப்படியேயெண்ணியாங்கே
கெங்கேகரேராமசேதோவென்றன்பினெடுங்கிளப்பராகிற்
கொங்கேயுமலர்க்கூந்தற்கோகனதைபிரியாதகுழகன்கோலச்
சங்கேந்துமுகில்சேதுக்கிணையாகும்பரகதியுஞ்சார்வர்தாமே. (௩௭)

தடவுவான்றனுக்கோடியிற்படிந்தருத்தோதயந்தனிற்சேது
வடையுமாகந்தமாதனத்ததன்கணாயிரண்டினுமன்பாலே
கடுகுமாத்திரம்பிண்டமீந்திடிலிருகதிருளதினங்காறு
முடையசீர்ப்பெருந்தென்புலவாணர்களுளமகிழ்வுறுவாரால். (௩௮)

அதுவுமன்றியிச்சேதுவிற்பிதிர்களையுன்னியாதரவோடே
முதியவந்தணர்தமைக்கொடுசமித்தளிரளவுமுற்றுறுபிண்ட
முதவுகின்றவன்பாவங்களியாவையுமோட்டுவனவனுற்முர்
வதியும்வெங்கொடுநரகத்தைவிட்டெழீஇத்துறக்கமேறுவர்மற்றும். (௩௯)

அன்னவன்றமராயினோர்கலினெனவறைகழலமரேசன்
சொன்னவின்றிடுபுலவர்சூழ்ந்தேத்திடவிழாவுறுஞ்சுவர்க்கத்தின்
முன்னிருந்திடுமனைவருமகிழ்வொடுமுடிவிலாநிறைசோதி
மெய்ந்நலந்தருபரமவானந்தமாம்விமலவீடடைவாரால். (௪௦)

சீதைமாமணிமார்பகத்தெழினலந்தினைத்தமால்செய்தோங்குஞ்
சேதுமாதலம்புகழ்புருடோத்தமந்திகழ்ந்தகோகரணத்திற்
சீதரன்றிகழ்பதுமநாபந்தனிற்சிறப்புறுஞ்செழுந்தீர்த்தச்
சீதவார்புனற்றிரைக்கடலாடலாந்தினந்தொறுஞ்சேர்ந்தம்மா. (௪௧)

சாற்றுசந்ததிவிருப்பினோன்சனிபுகர்தக்கசேய்தன்னுளிற்
போற்றுசேதுவேயல்லதுபொருகடற்புனல்படிந்திடலாகா
பாற்படுங்கருப்பதீக்கையன்பிரோதகாரியந்தனைப்பண்ணு
மேற்சொல்சேதுவேயல்லதுவேலைநீர்மூழ்குதல்விடல்வேண்டும். (௪௨)

மதிகுலாறுதற்சீதைகோன்வையகம்வாழ்வுறவகுத்திட்ட
முதியவப்புகழ்ச்சேதுவிலுதகத்தின்மூழ்குதன்மொழியுங்கால்
விதிகொளுந்திதிவாரநாண்முதலியநியமங்கள்வேண்டாவாந்
திதமதாகவேதினந்தொறுந்தினந்தொறுமாடலாஞ்சேர்ந்தங்கண். (௪௩)

இருந்துளான்றனைநினைந்துடன்மூழ்கலாமிறந்தவற்கொண்ணாது
பிரிந்துளானுருத்தருப்பையினிழைத்தெழில்பிறங்கியகுசையேபொன்
பொருந்துமால்புனைபவித்திரமேயெனுமந்திரம்புகன்றேத்திப்
பரந்தவித்தனுக்கோடிநீர்படிகுதலவன்படிகுதலென்றே. (௪௪)

வீந்தமற்றவன்றனைநினைந்தவனுருமேதகப்புனைவுற்ற
வாய்ந்தவப்பெருந்தருப்பையைநுனைவிரிமறிதருதிரைமோது
நீந்துமைக்கடலிருந்தனுக்கோடியினிறைதருசெழுநீரிற்
றோய்ந்திடச்செயிலன்னவன்றானுமேதோய்ந்தவனாவானே. (௪௫)

மதிநிறைந்தநாள்வயங்கமாவாசியில்வாரிதிதுதைந்தாடிற்
கதிசெய்புண்ணியந்தானுறுமற்றைநாட்கடலினைத்தொடலாகா
ததிகசேதுவிற்கங்கைசேர்கடலினிற்சிந்துமாநதியார்ந்த
வுததியிற்புருடோத்தமங்கோகன்னத்தென்றுமாடுதலொண்ணும். (௪௬)

இந்தமாபெருஞ்சேதுவின்பெருமையையெடுத்திமையவரோடு
முந்தைஞான்றுயர்முனிவரும்பிதிர்களுங்கேட்டிடமுகுந்தன்றா
னந்திடாவருங்கற்புளநாயகிதன்னொடுநன்காய
புந்திசேரிளையானொடுமிருந்திவைதிடமுறப்புகல்கின்றான். (௪௭)

இனையசேதுநாம்புரிந்ததுகண்டவொமதருளதனாலே
முனமுஞற்றியபவமெலாமக்கணமுடித்துநன்கடைவாரா
லனையசேதுவிலாடினோருலகினிலன்னையருதரத்திற்
செனனமெய்திடாராதலினதன்புகழ்செப்புவதரிதன்றி. (௪௮)

வீறுசேரலைமுழங்கொலிவிரிகடலுடுத்திடும்வியன்ஞாலத்
திறில்சேதுவின்பெருமையுமிராமநாயகன்றனதருளுஞ்சீர்
மாறிலாததோர்பெருமையுமற்றியான்மனமகிழ்வுடனெண்ணி
நூறுகோடிகொள்யாண்டுதானுவலினுநுவலலாந்தகைமைத்தோ. (௪௯)

என்றிராகவன்கூறிடக்கேட்டுளத்திருடிகண்மகிழ்பூத்தார்
நன்றுநன்றெனாவிமையவரவன்மொழிநலத்தினைநயந்தேத்தித்
தென்றிசைத்திகழ்சேதுராமேச்சுரன்றிருவருட்டிறமெல்லா
நின்றுபோற்றினரவர்பெருமகிழ்ச்சியைநிகழ்த்தலாம்படித்தன்றால். (௫0)

போற்றல்செய்திடாநாடொறும்புராரிதன்னாணையாற்புவனத்தி
லேற்றமார்புகழ்ச்சேதுவிற்காவல்பூண்டிருந்தருள்புரிவாராற்
சாற்றுகஞ்சனுந்தேவருமிருகழற்றாங்கியதலையோடு
மூற்றமேவியசேதுமாதவனெனவொருதிருநெடுமாலும். (௫௧)

உரகர்மாதவரியக்கர்கந்தருவர்கிம்புருடரும்பர்களோதுந்
தருமசாத்திரமுயலுநர்கின்னரர்பிதிர்கள்சாரணர்சித்தர்
விரகராம்வித்தியாதரரோனையபூதங்கள்விருப்போடுந்
திரமதாகவேயிராப்பகற்சேதுவிற்சேவைசெய்திருப்பாரால். (௫௨)

இனையசேதுநீராடினுந்தீண்டினுமிதுதனையெஞ்ஞான்று
நினைவுசெய்கினுங்காண்கினுங்கேட்பினுநீங்கிடுந்துயரொல்லா
மனையுமத்தனுமாயிடுமாயவனருள்செயுமச்சேதுத்
தனைநிகர்ப்பதொன்றில்லையாந்தவநெறிதழைக்குமந்தணர்காளோ. (௫௩)

அண்ணலம்புகழ்ச்சேதுவானதிலருத்தோதயத்தடைந்தாடிற்
புண்ணியந்தருமானந்தநிமித்தமாம்பொற்புறுபுளாயோர்க
ணண்ணிடுங்கொடுநரகங்களுசமாங்கரணங்கடமினுடி
யெண்ணரும்பரமுத்தியுங்கொடுத்திடுமெழில்பெறுமுனிவீர்காள். (௫௪)

மகரதிங்கள்வான்பரிதியாம்வானவன்வந்திடுந்திருவோணம்
புகரில்பாந்தளாங்கரணத்தைநீங்கிமேற்புகுந்திடுமமாவாசி
துகளிலாவெதிபாதமோணத்தொடுசுடருதித்திடும்வேளை
நிகரிலாதிவாரத்தினில்வருமருத்தோதயநிகழ்த்துங்கால். (௫௫)

வேறு.

திரையாருங்கடற்சேதுவடைந்தருத்தோதயத்தொருவன்றீர்த்தமாடிற்
பரையாதிநசையறிவுதொழிலைந்தும்வாயிலாப்படைத்தலாதி
வினையாருமலரோன்முன்சிவமீருநொடிப்பளவில்விதித்துமாற்று
முனையாதிகடந்தபரிபூரணத்தோடத்துவிதமுற்றுவாழ்வான். (௫௬)

ஆயிரம்வெதிபாதமொப்போரமாவாசியவ்வமாவாசி
சேயவான்கதிர்வாரத்தில்வந்திடிற்செப்புமாயிரப்பத்தா
மோய்வில்சிரமாவாசியோடுயர்திருவோணம்வந்துற்றக்காற்
றூயவின்னயோகம்புணர்புண்ணியப்பெருமையார்சொலவல்லார். (௫௭)

புகலுமிங்கிவைபொங்கியேவிளங்கிடும்பொருவிலாமாயோகத்
தகைகொள்புண்ணியகாலமிங்கிவைகளிற்றனித்தனியொவ்வொன்றிற்
பகருநானதானஞ்செபமருச்சனைபணினளவிலையென்றுன்
மகிழ்வொடிங்கிவைகூடுநாளாடினல்வருமுத்திதிடமாதோ. (௫௮)

மிக்கநாட்களிலுத்தமஞ்சாலவும்விளங்கியதிருவோணந்
தக்கசீரியதிதிகளிலுத்தமந்தயங்கியவமாவாசி
தொக்கமேன்மையோகங்களிலுத்தமந்துகளிரிவெதிபாதந்
திக்கெலாம்புகழ்வாரத்திலுத்தமஞ்செங்கதிர்த்திகழ்வாரம். (௫௯)

இன்னவாம்பெருநான்கியோகங்களுமிரவிமாமகரந்தான்
மன்னுமாதத்தில்வந்திடிற்புண்ணியகாலமாமற்றந்நாண்
மன்னிராமசேதுவிற்படிந்தோர்பினும்வையகமருளெய்தி
யன்னைதன்வயினிடத்தடையார்கள்சாயுச்சியமடைவாரால். (௬0)

செப்புமித்தொகைசேர்மகரந்தனிற்றிகழத்தவுதயத்துக்
கொப்பதாகவேகாலங்கண்மூன்றினுமுறைத்திடினிலையாமாற்
றப்பிலாவிதுபோலவேமகோதயந்தானுநன்னுளங்நாண்
மெய்ப்பெரும்புகழ்ச்சேதுவிற்றுனமேமிக்கதாம்விளம்புங்கால். (௬௧)

பன்னுதானத்தைப்பரிப்பவனொழுக்கமும்பயிறவத்தனுமாகி
மன்னுமாமறையந்தமும்புராணமும்வழுவறவாராய்ந்து
தன்னைநேரிலாச்சங்கரன்றுள்களுஞ்சங்கரிதன்றுளு
முன்னியேயருச்சனைசெயும்பனவனேமொழிந்தபாத்திரமாகும். (௬௨)

நந்துதற்றிடுஞ்சேதுவிற்றுனமேநல்கினுன்மறையோனு
மிந்தநற்செழும்பாத்திரற்கீகுகவிப்பரிசினனின்றேற்
சிந்தைதவைத்ததுசங்கற்பித்துதகஞ்செய்தூர்தனிற்சென்றீக
வுந்துநற்பலன்விரும்பினேனதமபாத்திரற்குதவிடலாகா. (௬௩)

வேறு.

இதுதனக்கோரிதிகாசமியம்பிடுவொந்தானபாத்திரத்தையெண்ணி
யதிதியருக்கருள்சுரக்குந்திலீபனுமரசனதிலாசைகூர்ந்து
விதிதனக்குமகனுகும்வசிட்டமுனிதனைக்கேட்பவிருப்பினேடு
மதிகமுனிதவவசிட்டனவற்குரைத்ததுத்தமமாமதனைக்கேண்மின். (சுச)

உத்தமனும்பிரமனருளுயர்புரோகிதவசிட்டமுனிவவோங்கு
மத்தமுதலாந்தானமெவர்க்களிப்பதுனக்கடியேனுதலாலே
புத்திமிகவுடையவனேயவையனைத்துமுள்ளபடிபுகல்வாயென்ன
வுத்தமபாத்திரத்துண்மையுரைக்குதுநீகேட்டியெனவுரைப்பதானுன். (சுரு)

ஓதின்மறையாசாரமுடையவனேயுத்தமபாத்திரமதாகு
மோதினவன்றனக்கதிகஞ்சூத்திரவன்னம்புசியாதுற்றுவாழ்வோன்
வேதமொடுமந்திரங்கள்புராணமிவைகைவந்துவிமலன்றன்னைச்
சீதரனைப்பூசைபுரிந்தில்லறத்தில்வறுமையுடன்றிகழ்ந்துவாழ்வோன். (சுசு)

வருணநெறியாச்சிரமநெறிவழுவாதெஞ்ஞான்றுமகிழ்ந்துவாழும்
பொருவிலவன்யாவரினுமுயர்ந்தபாத்திரனென்றேபுகலுநூல்க
ளொருமையுடன்பாத்திரத்தையுற்றுணர்ந்தேயின்னவருக்குதவினுேற்
றருமமுதலாதியெலாமடைந்துபரமாயகதிதன்னைச்சார்வார். (சுஎ)

உத்தமமாந்தலங்களினுமித்தகையோரிடைத்தானமுதவல்வேண்டு
மத்தகையோரில்லையேற்றுட்டபாத்திரர்தங்கையளித்தான்சென்மம்
பத்தொடுமூன்றிரண்டொன்றுகோம்பிகரமண்டூகம்பழிசாலீன
மைத்தகொடுஞ்சண்டாளனுகிப்பின்சூத்திரனுய்வணிகனுகி. (சுஅ)

மன்னுகிமறையவனுய்வறுமைபிணிதனிலுழந்தேவருந்துமண்மே
லன்னுர்கைமுன்னீந்ததானபலந்தன்னுலென்றறிகதான
மென்னுனும்பெறவுதவினிரந்திரந்துமனங்கசிந்தேயியல்பினேங்கிப்
பன்னுளும்புகழ்பெறுசற்பாத்திரன்றன்பாலளிக்கபரிவுகூர்ந்தே. (சுகூ)

உத்தமமாங்குணங்குலவுமித்தகையோர்கைத்தானமுதவல்வேண்டு
மத்தலத்திலவரிலரேனிலத்துதகமளித்தவர்கையளிக்கல்வேண்டுஞ்
செத்தவரோயாயினவர்மகற்களிக்கவவரிறக்கிற்சிவனுக்கீக
வத்தமவைமன்னர்புகழ்திலீபவெனவசிட்டமுனியறைதல்செய்தான். (எ0)

என்றரசன்றனக்குமுனியியம்பியபினன்றுமுதற்றிலீபவேந்தல்
வென்றிபுனையுத்தமபாத்திரர்தமக்கேயளித்துகந்தான்மிக்கதானந்
துன்றுபுரிநூன்மார்பீருத்தமபாத்திரமின்றேற்சொன்னவாறே
மன்றவியற்றிடவேண்டும்புண்ணியமாஞ்சேதுவிடைமரபதாமே. (எக)

சிறந்திடுமோபாத்திரத்தைநினைத்துதகஞ்சேதுவினிற்செய்தவாறே
யுறைந்திடுமூர்தனிற்கொடுக்கவதிற்குறைந்தாலறந்தழையாதூனமாகுந்
திறந்தெரிந்திப்படிபுரியினீங்கரியதுயரமெலாஞ்சேரவோடும்
பிறந்தையுமூர்பரமசாயுச்சியமாம்பெரும்பதத்தைப்பெறுவர்தாமே. (எ௨)

வேறு.

கோதிலாவிருபாக்கநற்கோகனங்கும்பகோணங்காஞ்சி
சோதிசேர்ந்தசாளக்கிராமம்புகழ்த்துவாரகைபிரயாகை
யோதுதென்மதுராபுரிநைமிசமயோத்தியேயுயர்ந்தோங்குஞ்
சேதுவேங்கடம்பதுமநாபந்திகழ்தெண்டகாவனங்காசி. (எங)

இரவிசேர்பருப்பதமிவையாவையும்பாற்கரபுரியாகு
மருவினுன்முடிமயிர்களைத்துண்டியுமன்றுமாந்திடலாகா
திரவியாபிமானத்தினுன்மோகத்தாலிவைசெயாதேதம்மூர்
விரவினல்விரவும்பவமன்றியுமேல்வரும்வெகுபாவம். (எச)

இந்தநற்றலமன்றியிச்சேதுவினிடத்திருடிகளாலே
சிந்திக்குஞ்சிவனுணையாற்செப்பிடுந்தீர்த்தநாலாறேங்குங்
கந்தமாதனத்திலக்குமன்ருன்முன்புகண்டிடுமக்குண்டந்
தந்தகூலமேற்கந்தரமேற்படுமுண்டனந்தான்கொண்டு. (எரு)

முனமுரைத்தவந்நீரினின்மூழ்கியேமுதுமறையவர்தங்கை
மனமுகந்துதக்கிணைகொடுத்தவரருள்வழங்கியபின்பேகிச்
சினவிடைக்கொடியிலக்குமணேசனைச்சேவைசெய்திடுவாரேல்
வினையனைத்தையும்வீட்டியேசங்கரன்மெய்ப்பதம்பெறுவாரால். (எசு)

வேறு.

சேதுவுக்குச்சரியாகுந்தீர்த்தமோரிடத்துமிலைசெவ்விதாக
வோதலுற்றதவமுமதற்கொப்பதிலைபுண்ணியங்கள்யாவுமொவ்வா
காதலிற்சென்றடைவதொருகதியுமதற்கொவ்வாதுகற்றுநன்காம்
போதமுற்றேர்சேதுவருத்தோதயஞ்சென்ருடுவதொப்போதுந்தானே. (எஎ)

உவராகமாயிரத்துக்கொப்பாமோரருத்தவுதயத்தைப்போலப்
பவராகமுறுபாசமறுப்பதொருகருவியதொன்றில்லைபார்மேற்
றவராக்வக்குரிசில்சேதுவருத்தோதயநானந்தான்சாரிற்
சிவராகநூல்களெல்லாமிதற்குநிகரில்லையென்றேசெப்புமென்றும். (எஅ)

வேறு.

ஆயிரந்தலையிட்டநல்லறுபதாண்டருடருமாகங்கைத்
தோயமூழ்கினுலெவ்வளவறமென்றுமுனிவரர்சொன்னுர்க
ளாயநல்லறமாமருத்தோதயமகோதயத்தடைந்தோர்காற்
றூயராமசேதுவிற்படிந்தாலிதுநிச்சயஞ்சொல்லுங்கால். (எகு)

பன்னிடும்மருத்தோதயமகோதயவேளையிற்பவம்யாவும்
வென்னிடும்பிரயாகையிலாயிரமாகநீர்விழைந்தாடிற்
றுன்னிடுந்தருமத்தொகைதுன்னிடுமிராமசேதுவிற்சோதி
மன்னிடுந்தனுக்கோடியிலோர்விசையாடினிச்சயமாதோ. (அ0)

பாயமூன்றுலகத்துளதீர்த்தங்கள்யாவினும்படர்ந்தாடி
னேயபுண்ணியமெத்தனையத்தனையுற்றிடுமெழிலார
மேயகுங்குமக்கொங்கைநற்சீதைகோன்விதித்திடும்விறற்சேதுச்
சேயநல்லருத்தோதயத்தொருவிசைசேர்ந்துமூழ்குறிற்றிண்ணம். (அக)

வேறு.

பிரமவதிவின்றிநன்றிகொன்றுதிரிபாதகராம்பேதையோரும்
பரிவொடுமாபாதகமேசெய்கின்றவன்னியபாதகரும்போகி
யுரமருவுசேதுவருத்தோதயத்தோர்காற்படிந்தாலொழிப்பர்பாவந்
திரமருவுநன்றிபிழைத்தோர்க்கெந்தத்தலங்களினுந்தீர்வேயில்லை. (அஉ)

எந்நன்றிகொன்றார்க்குமுய்வுண்டாமுய்வதிலையிருமையான
செய்ந்நன்றிகொன்றமகற்கென்றுரைக்குநூலேனுஞ்சேதுச்சேர்ந்தே
யந்நன்றிகொன்றவரும்புகழருத்தோதயத்தொருகாலாடினாற்
பின்னின்றுபாவமெலாம்பெயர்ந்தோடும்பரிகாரம்பெறுவர்மாதோ. (௮௩)

யாவர்சிலமானவர்கள்சேதுவருத்தோயத்திலாடலாது
மேவிடுமோகாதியினல்விடுவார்கள்விழியிழந்தார்விழுமாபோலப்
பாவுபெருங்குடும்பமெனும்புணரியுழந்தேபற்றியேறமாட்டா
தோவிலருநரகடைவர்புராணமெனுங்கடல்பருகுமுரவிர்காளோ. (௮௪)

சேதுவின்பாலருத்தோதயத்தாடிற்றினகரமண்டலங்கீண்டேகிப்
பூதலமெண்பிரமபதந்தானடைவர்சேதுவிலப்போதிலாடி
நாதனிராமேசனரிசிதைகதிர்மகன்கவிகணன்காந்தேவ
ரோதமறுமுனிபிதிர்களிவரைநினைந்தருக்கியங்களீகமாதோ. (௮௫)

தமையடைந்தமிடிசாடும்பொருட்டருத்தவுதயமயந்தானுயொன்ரு
விமையடைந்தோர்வணங்குசகநாதனநிருமலனையெண்ணிவேதச்
சுமையடைந்தசேதுவருத்தோதயத்திலருச்சிக்கிற்சுத்தமான
வமையடைந்ததோட்சனகிகணவனகமிகமகிழுமாயுங்காலே. (௮௬)

வருதிதிவாகரகாந்திக்கிருப்பிடமாஞ்சகநாதவணங்குகேன்யான்
வருதிமதிக்கடவுளேமலர்மடந்தைசகோதரனேசுதையின்வைப்பே
சுருதிபகரத்திரிகோத்திரத்துதித்தாயுனைத்தொழுகேன்சுடரினோடுங்
கருதியருக்கியந்தருகேன்கைக்கொண்மினென்றிவர்க்குக்கழறிப்பின்னர். (௮௭)

வெதிபாதமாயோபோதகங்களனைத்தினையும்வீட்டிவேருங்
கதியாரான்மாவினிடங்களினுறைவாயாபிரஞ்செங்கையாயான்செய்
நதியாருமருக்கியத்தைக்கைக்கொள்வாயென்றென்றேநயந்துபோற்றி
வெதிபாதந்தனைவணங்கியருக்கியமிம்முறையன்பால்விளம்பியீந்து. (௮௮)

மதியொடுபொம்பணிந்தபரமேசுரனையெவ்வுயிரும்வயங்கிவாழுங்
கதியின்வழிநடப்பிக்குங்கண்ணுகியேனையவுங்காட்டுவானைத்
திதியொடுநாள்வாரமிவைக்கதிபதியேமாதவுருத்தேவகால
விதவடிவேபணிகுவன்யானுதவுமருக்கியங்கொள்வாயெனவிளம்பி. (௮௯)

இதமாமிவ்வகையருத்தோதயத்தொருவனவரவர்மந்திரத்தினாலே
விதமாரர்க்கியங்கொடுத்துத்திரவியசத்திக்கேற்பவிரிந்தஞாலப்
புதராகுமவர்கள்பொருட்டுபாயனதானத்தினையும்புரிகபோதப்
பதினல்வர்பன்னிருவரொண்மரொழுபேரறுவர்பகருமைவர். (௯0)

மறையவரையலங்கரித்துவெண்கலபாத்திரமாதன்மரத்தினாலே
யுறுவதொருபாத்திரமேயாதல்புதிதாகவமைத்துளவவற்றி
னிறையவிடும்பாற்சொன்றிசருக்கரைநெய்கனியிவற்றாணிறைத்துமுன்ன
மறையுமவர்முன்வைத்தேதக்கிணைதரம்பூலத்தோடளித்துப்பூணூல். (௯௧)

அடியனேன்சத்தியுமிவ்வளவென்றேநயமொழியுமறைந்துதானம்
படியிமையோர்பாலளித்துப்பலயோனியெவற்றினுமேற்படுவதாய்நற்
கடவுளர்தம்முருவொன்ருய்க்காசினிக்குமகிழ்கொடுக்குங்கவின்குழக்கன்
றுடையமனசிறைந்தசுரந்தொழுகியபாற்சுரபியுடனுதவிப்பின்னர். (௯௨)

செகநாதாநாரணநின்சென்மநாளாகுமிந்தத்திருவோணத்தின்
மகிழ்வொடுநான்மறையவர்க்கெவ்வளவேனுநான்கொடுத்தமற்றித்தான
மிகவாகவருள்புரிதியென்றுசெந்தோடவிழுமரவிந்தவீட்டிற்
புகுமாதுகுடிகொள்ளும்பொன்மார்பிற்புத்தேளைப்போற்றிசெய்தே. (கூங)

உடுவாகுமனைத்தினுக்குமதிபதியேசுரர்க்கமுதமுதவுந்தேவே
படர்சோதிரோகிணிக்குநிலவொழுகும்பலகலைக்கும்பதியேயெங்கு
முடையானேயாண்டருளாயுனைத்தொழுகேனெனமதியையுவந்துபோற்றிப்
படியேறுபுகழருக்கன்றனைத்தாழுமுறைமையையும்பகரக்கேண்மின். (கூச)

அடராதுபவமுடைக்குமிருஞ்சுடரோயனுக்கிரகமமர்ந்துவாழு
மிடமாகுமொருபகவாவுன்பாதகமலத்திலெந்தஞான்றுங்
கடன்மேவுசெகநாதாகாலதினநாதனேயெனக்கெக்காலு
முடியாதவன்பருளாயென்றருக்கன்மதிவளைமுடியிற்சூழ்ந்து. (கூரு)

சூரியசந்திரர்க்குரியமகவாகுந்தோன்றலேதொன்மைத்தாய
பாரியநல்வெதிபாதயோகமேயுன்னடிகள்பணிகுவேன்யான்
வாரியுறுசேதுவிலெவ்வளவேனுநான்செய்ததானமன்ற
வேரியல்பாநிறைவேகொண்டிடுதியெனவெதிபாதத்தினையிறைஞ்சி. (கூசா)

சாருமிரவலர்க்குதவுங்கற்பகமேசனார்த்தனரோசரித்துவாழுஞ்
சீரியமாதத்துடனேயிருதயனகாலமுமாம்வாசுதேவே
யோரிலிவ்வக்கீசுரனேயரியேயென்பவமொழித்தியென்றுபோற்றி
யேரியலுமறையவளையிப்படியேயருச்சித்தங்கிறைஞ்சியேத்தி. (கூஎ)

வேறு.

பின்னிரணியசிராத்தம்பிறங்காமசிராத்தமன்ன
மின்னவையுலோபமின்றியியற்றிப்பார்வணவோமத்தைத்
தன்னிகராசான்றன்னைத்தகைபெறவலங்கரித்தே
பொன்னுதிவிம்பங்கோப்பாதுகைகுடைபூசித்துய்க்க. (கூஅ)

இன்னணமிழைக்கிற்சேதுவிடையருத்தோதயத்திற்
பின்னொருதருமம்வேண்டாம்யாவையும்பெற்றோனன்னுன்
றன்னிகர்சேதுவல்லாத்தலங்களினிருந்திட்டாலும்
பன்னுமிம்முறையருத்தோதயந்தனிற்பண்ணல்வேண்டும். (கூகூ)

வேறு.

ஞானமாதவிர்நற்கந்தமாதனத், தானதெண்கடற்றன்னிலயோத்தியர்
மானவேற்படைமன்னன்வகுத்திட்ட, மேன்மைச்சேதுவையுள்ளம்விரும்பியே.

ஓதுநானமுஞற்றிடும்வேளையிற், சேதுசேதுவென்றோதிடிற்செய்திடும்
பாதகம்மொருகோடிபறந்திடுஞ், சோதிசேரழியாப்பதந்துன்னுவார். (க0க)

தேரிலோர்கணஞ்செப்புமறைக்கணம், வாரிசூழுமிச்சேதுவில்வைகுறி
னேரிலந்தகன்றூதர்மற்றேனையோன், பார்வைசென்றிடுமெல்லைபடர்ந்திடார். ()

இராமசேதுவிற்கோடியிராகவ, னிராமநாதன்சனகியிலக்கும
னிராமனன்பன்கவிகதிரோன்மக, னிராவணன்றம்பியென்றிவரன்றியும். (க0ங)

பொன்றிடாவசிட்டன்புகழ்க்காசிபன், றென்றமிழ்க்கலைசேருமகத்திய
னன்றிசேர்தருகோசிகனுரத, னென்றிஞேருமேர்கொண்டசாபாலியும். (க0ச)

வாமதேவனையும்வண்மைராமனுக், காமதேயென்னுமன்பினர்யாளாயு
மேமமாத்தினமெண்ணினிடுக்கணே, போமதன்றியுமுத்திபுகுவரால். (க0ரு)

தேடுசத்தியகேத்திரஞ்சித்திர, கூடமத்திசயிலங்குடந்தையே
கேடில்சாளக்கிராமமரங்கநற், பாடல்சேர்ந்தசுவேதபருப்பதம். (௧0௬)

காசிலாதநற்காஞ்சியரித்தல, மாசின்மோகினிமாபுரங்கோட்டியூ
ரேசிலாதவிடபகிரியெழிற், கேசவன்னுறையுஞ்சுகசேத்திரம். (௧0௭)

வெதரிகாவனமேவுசேடாத்திரி, மதுரைக்கண்ணநகரமலர்த்திருப்
பதுமநாபம்பகர்புருடோத்தமங், கதிவழங்குபுல்லங்கடிகாத்திரி. (௧0௮)

சீனிவாசந்திகழ்பத்தநாதமே, யானசேர்த்தியசிந்தங்குருங்ககம்
வானர்போற்றுமயிந்திரம்வாருண, நானிலம்புகழ்ந்தேத்துநயிமிசம். (௧0௯)

ஆடுறும்பதிமற்றுமரித்தலத், தாடுறும்புன்லாலகலாவக
மூடுறும்புகழ்ச்சேதுவின்மூழ்கினல், வீடுறும்மிதுமெய்மையதாகுமே. (௧௧0)

ஊழிவாய்க்கடுங்காலினுயிர்ப்பெறீஇப், பாழிவாய்நெட்டுடற்பெரும்பாந்தண்மே
லாழிவாய்த்துயினீத்தவனுற்றிட, வாழிமாதவத்தோர்கள்வணங்கிட. (௧௧௧)

வாய்ந்தசேதுவிலாடினர்மாபவர், தேய்ந்துமாய்வதுஞ்செப்புமிச்சேதுவிற்
றோய்ந்திடாதவர்தொல்லைப்பெரும்பவம், வீந்திடாததுமெய்ம்மையதாகுமே.

ஆவிகட்கிதமாமஞ்செழுத்தையு, மோவிலாநமச்சிவாயவென்றோதிடார்
பாவியாருளங்கேளார்பவங்களுந், தாவியோடுமிச்சேதுவினுனத்தால். (௧௧௩)

முந்தையாமெழுத்தோடுநமோவென, நந்திலங்குகைநாராயணயவென்
றிந்தவெட்டெழுத்தாலுருவேற்றலார், சிந்தியார்பவஞ்சேதுவிற்சிந்திடும். (௧௧௪)

மற்றிராமன்மனமகிழ்பூத்திடு, முற்றவாறெழுத்தையுகந்தோதலார்
பற்றிடாருளங்கேளார்பவங்களு, மெற்றுஞ்சேதுவெழின்முனிவோர்களே. ()

நத்திலங்குகைநாரணனுளெனு, மத்தின்த்தவனேன்பிழையார்பவ
முத்திலங்குமுழங்குதிரைக்கடற், சித்திநல்கிடுஞ்சேதுவிற்றீருமே. (௧௧௬)

ஏதின்மாமறைச்சாபாலமேழினு, லாதிநன்முடியங்கங்களெங்கணும்
பூதிமேற்றிரிபுண்டரம்பூசிடார், பாதகங்களுஞ்சேதுவிற்பாறிடும். (௧௧௭)

அறிவினலறியாதவரன்றனைப், பொறிகொண்மார்பனைப்புங்கவர்தங்களை
மறுவில்வேதமரபினிற்பூசியார், செறியும்பாவமுஞ்சேதுவிற்றீருமே. (௧௧௮)

சாபமேருவினுன்றடந்தாமரை, நாபனுதியர்பூசைக்குநற்சந்து
அூபதிபந்துணர்மலர்தந்திடார், மாபவங்களுஞ்சேதுவின்மாயுமால். (௧௧௯)

தவள்மாமதிசூடியசங்கரற், குவமனற்றசீருத்திரமந்திரத்
தவமிலாவபிடேகமளித்திடார், பவமுமாழ்கடற்சேதுவிற்பாழ்படும். (௧௨0)

அரனுமாயனுமாதியதேவர்கள், புரிவுசெய்யும்புருடசூத்தம்முதற்
பரியுமாபாவமானந்திரிமது, திரிசுபன்னந்திகழ்பஞ்சசாந்தியே. (௧௨௧)

இவைகளாலபிடேகமிவர்களுக், குவகையாற்செய்யவுன்னலர்பாவிக
ளவர்கள்பாவமுமாழ்கடற்சேதுவிற், றுவரப்போயறுந்தொன்முனிவோர்களே. ()

பாயுமாநதிச்செஞ்சடைப்பண்ணவன், றூயமாலெனுஞ்சுந்தரன்பொற்றிருக்
கோயில்சூழ்ந்துவணங்கவில்லார்கொடுந், தீயதிமையுஞ்சேதுவிற்றீருமே. (௧௨௩)

வேறு.

ஆரணப்பரியினுனுதியோர்தமை, மார்கழித்திங்கள்வைகறையின்மாபெருஞ்
சீரியற்பூசைசெய்யாததீமையு, நீரலைச்சேதுவினீங்குமாலரோ. (௧௨௪)

மதுவழிந்தொழுகியமாலைக்கொன்றைசேர், புதுமதிச்சடிலனைப்பொறிகொண்
மார்பனைத், துதிதருகிற்றிலர்தொல்பவங்களுங், கதிதருசேதுவிற்கழியுமாலரோ.

நாசமில்செழுஞ்சிவநாபந்தன்னையு, மாசில்சாளக்கிராமத்தையும்மனத்
தாசைகூர்துவாரகாசக்கரத்தையும், பூசியார்பவமுமிச்சேதுப்போக்குமால். ()

களிமிகவுளங்கொள்கங்காமிருத்திகை, துளசிநன்மிருத்திகைதூயநன்னுத
லொளிபெறப்புனைகிலாருடையபாவமுந், தெளிபுனற்சேதுவிற்றீருமாலரோ. ()

கோவிசந்தனத்தினைக்கோடுநெற்றியி, லாவிசேர்நெஞ்சினிலம்புயத்தினிற்
பாவமோசனம்வரப்பரித்திடார்பவ, மோவிடுஞ்சேதுவிலுதகமூழ்கினல். (௧௨அ)

உருத்திரவிழிமணிகளத்துரத்திடாக், கருத்திரவினர்பவக்கணமும்புண்ணிய
சருத்திரமுனிவரர்பெற்றசத்தியத், திருத்திரவியநிகர்சேதுவிற்கெடும். (௧௨௯)

கருக்கிளருயிர்களைக்காத்தளித்திடு, முருக்கிளர்ந்தோங்கியவும்பர்நாயகன்
மருக்கிளர்துழாய்மணிவனைந்திடார்பவர், திருக்கிளர்சேதுவிற்றீருமாலரோ. ()

இரவிறுபிராமியத்தெழுந்துசுத்தனு, யரியரனுமமுந்துதியொடன்னவர்க்
குரியமந்திரமற்றுமுண்மையாமனுத்,திரமொடெண்ணலர்பவஞ்சேதுவிற்கெடும்.

ஆதவனெழுமுனமறலின்மூழ்கியே, வேதமாதாவெனவிமலமுற்றிடுந்
தீதில்காயத்திரிசந்திசெய்துபின், ஞேதிடார்பவங்களுமொழிக்குஞ்சேதுவே. ()

வேறு.

சாயம்பிராதாவுடனவுபாசனமுமாத்தியானிகமுந்
தேயும்பாவமெனப்பிரமயாகம்வைசுவதேவமுட
னேயுமதிதியருக்குச்சிப்பூசையுஞற்குருயர்பூசை
சாயங்காலம்பண்ணியிடார்பவமுந்தனுக்கோடியிற்றவிரும். (௧௩௩)

வேறு.

இச்சியார்பிறந்தையையெண்ணில்வேதத்தின்,முச்சியார்பொருளவாய்முற்றுநீத்
தவ, ருச்சியாம்வேளையிலுற்றபோதவர், பிச்சையாற்றிலர்பவஞ்சேதுப்போக்கு
மால். (௧௩௪)

வடாதுறுகயிலையானிசைத்தமாமறை, விடாதிசையாதவரிசைத்துவிட்டவ
ரிடாதவர்சிராத்தமாளயம்பிதிர்க்கள்பாற், கொடாதவர்பாவமுங்குலையுஞ்சேது
வில். (௧௩௫)

நித்தியமேயெனநிகழ்சிராத்தமுஞ், சத்தியமாகுமட்டகைச்சிராத்தனை [மே.
மித்திகசிராத்தமும்விரும்பிலார்பொருள், வைத்தலோபிகள்பவஞ்சேதுமாற்று

பாயசமுப்பழம்பானகம்முடன், சேயதாம்பூலம்வத்திரஞ்செருப்புட
னயசந்தலர்சருக்கரையொடாதவங், காய்வுறுகுடைகழைகட்டின்மற்றுமே. ()

ஒத்திரைமதியினிலுவாவிற்சித்திர, குத்தருக்கருத்திகொள்பொருட்டுமாமறை
வித்தருக்களித்தலைவிரும்பிடார்பவ, மைத்தடஞ்சேதுவின்மாறுமாலரோ.(௧௩அ)

நல்லனவொழுகிடுநன்மையாளனு, மல்லனவொழுகிடுமன்மையாளனுஞ்
செல்லினம்விழுங்கடற்சேதுமூழ்கினு, லில்லினின்முழுகலிப்பிறப்பிலேறுவார்.()

இல்லிடைமயங்கலென்றிலசக்குஞ்சாகர, வல்லலேயகற்றிமோசையுற்றவன் [ன்.
செல்லெனும்படிவமாரிராமசந்திரன், சொல்லரும்புகழ்த்தனுக்கோடி துன்னுவா

வேறு.

முக்காலுஞ்சத்தியமாவிதமாகச்சாரமதாமொழிகின்றேன்யான்
மைக்காலன்றனேயுதைத்தமலர்க்காலேமனத்திருத்துமாதவத்தீ
ரெக்காலந்தானுமழிவெய்தாதவிருஞ்சேதுவெய்தினோர்க
ளக்காலேயொருக்காலுமழியாதபேரின்பமடைவரன்றே. (கசக)

இப்பொழுதுத்தமசேதுக்கதைமுனிவீருமக்கியாமியம்பினேமா
லிப்பெருஞ்சேதுவின்காதைபடிப்பவர்கேட்பவர்தங்கட்கெய்ந்தநோய்கள்
செப்பரியகொடுந்துக்கந்திக்கனவுகடுத்துஞ்சலாதிதீர்ந்தே
செப்புறுமக்கினிட்டோமமுதலமகமொருங்குளுற்றுஞ்செய்யபேறும். (கசஉ)

எப்புவனங்களுநிறைந்தசகலதீர்த்தமும்படிந்தாலெய்தும்பேறு
மொப்பரியபெருஞ்சாந்திபுண்ணியநால்வேதமுக்காலோதும்பேறு
மெப்பெயரினேருமடையாதபெரும்பீடுகளுமெந்தஞான்றுந்
தப்பறவேயடைந்துசுவர்க்கத்திருந்துபரலோகந்தன்னேச்சார்வார். (கசங)

வேறு.

காவிவாள்விழிக்காமருசானகி, யாவிபோலுமிராமனருச்சித்த
தேவன்வாழுமிச்சேதுபுராணத்திற், ருவிலாதசருக்கத்தொகைதனில். (கசச)

ஒன்றுகூறினர்கேட்டவரொப்பிலாத், துன்றுவேதத்துறைபிறழர்மலே
மன்றவாற்றியவாம்பரிமேதமாம், வென்றியாகவியன்பயன்மேவுவார். (கசரு)

இரண்டுகூறினர்கேட்டவரீறிலா, முரண்டராதமறைமுறைமுற்றிய
வரண்டரும்பசுமேதத்தடைந்திடுந், திரண்டயாகப்பயனதுசேர்குவார். (கசசு)

பத்திசைத்தவர்கேட்டவர்பத்தியாற், குத்திரச்சிறகீர்ந்தகுலிசனே
டொத்தருத்திமிக்கோகையொடன்புறீஇ, யுத்தமத்திருப்பீடத்துறைகுவார். ()

இருபதோதினர்கேட்டவரேருடை, யருணவாளொளியாயிரந்தோடவிழ்
விரைசெய்தாமரையாதனமீமிசை, மருவுவானவனேடுமெருவுவார். (கசஅ)

முப்பதோதினர்கேட்டவர்முண்டகற், கப்பனுளும்வைகுண்டத்தடைந்தவற்
கொப்பவேமகிழ்வோடுமுறைகுவார், செப்பொணுதபெரும்புகழ்த்தீர்த்தரே. ()

நாற்பதோதினர்கேட்டவர்காலிரு, மாற்பெருந்திசைவானவர்போற்றிடுஞ்
சீர்ப்பிறங்குமுருத்திரதேவனே, டேற்புறுந்திருமேவியிருப்பரே. (கரு0)

ஐம்பதும்படித்தன்புடன்கேட்டவ, ரொம்பிறப்பறுத்தாண்டருளெம்பிரா
னும்பர்மாமதிசூடியுமாபதி, சம்புரம்பன்றனேயடைவாரரோ. (கருக)

இவையனைத்துமிசைத்தவர்கேட்டவ, ருவகையுற்றொருகாலுயர்வாகிய
சிவமெனப்பெயர்செப்பிடுகின்றதோர், நவையின்மாசிவலோகத்தைநண்ணுவார்.

வேறு.

இருமுறைகேட்டவரியம்பினோர்கடாம், பொருவிகந்தோங்கியவிமானம்புக்குலா
யருமறையாகமமனைத்துமோதிடுந், திருவளம்பெருகுசாமீபஞ்சேர்குவார். (கருங)

மும்முறைகேட்டவர்மொழிந்துளோர்கடாம்
பொய்ம்முறைவாசகம்புகன்றிடாதநூற்
செம்மறைப்பொருளதாஞ்சிவனுக்கன்பராய்
மெய்ம்முறையவன்றனதுருவமேவுவார். (கருச)

நான்முறைகேட்டவர்நவின்றுளோரருட்
கோன்முறையோச்சியேயண்டகோடிநூற்
பான்முறையாணையினடாத்தும்பால்விடை
மேன்முறையீசனேடொன்றிமேவுவார். (கருரு)

வேறு.

ஒருகவியேதானுதலிதிற்பாதியாதலிந்தவுயர்புராணத்
தொருபதமேதானுதலொருமொழியேதானுதலுண்மைசான்ற
வொருபுனிதவெழுத்தாதலொற்றுதலொருமுறைகேட்டுரைத்தாலந்த
வொருவிசையிலன்றன்றங்குஞற்றுபவமனைத்தினையுமொழிக்குமாதோ. (கருசு)

கஞ்சமகண்மணவாளன்பூசைபுரிசிவன்சேதுக்காதைசெப்பும்
விஞ்சுபுகழ்ப்புராணமிதுபடித்தாலுங்கேட்டாலும்விளம்புமிந்தச்
செஞ்சொல்வளர்புராணவெழுத்தெவ்வளவுண்டவ்வளவுசெனனத்தீய
வஞ்சுபெரும்பாதகமுமஞ்சிவெருண்டக்கணத்திலகலுமம்மா. (கருஎ)

பூதலமெல்லாம்புரக்கும்புண்டரிகக்கண்ணன்முன்புரிந்தவிந்தச்
சேதுவின்மாக்கதைதன்னைப்படிப்பவர்கள்கேட்பவர்கள்சேர்புராணத்
தோதுமெழுத்தெவ்வளவுண்டவ்வளவுசேதுநடுவுற்றநாலா
ருதியதீர்த்தந்தன்னிலடைந்தாடும்பலனனைத்துமடைவரன்றே. (கருஅ)

அதுவன்றிச்சேதுவெனுந்தலநாப்பணன்னியதீர்த்தங்களாக
வதிகின்றதீர்த்தமெல்லாமாடியபேறடைந்திடுவர்மால்செய்பூசைப்
பதியொன்றுசேதுமாக்கதைபடிப்போர்கேட்போர்கள்பரஞானத்தின்
மதியொன்றிப்பிரமதியானத்திருந்துமகிழ்பூத்தமாதவத்தீர். (கருகூ)

ஆர்த்ததிரைக்கடலாடையங்கணிலமெங்கணுஞ்சென்றளப்பிலாத
கீர்த்திதருமெழிலினுக்குங்கிடைப்பரிதாமெழிற்சீதைகேள்வன்போற்று
மீர்த்தபுனன்மதிவேணியிராமேசன்புராணத்தையெழுதுமன்பர்
தீர்த்தலரும்பவந்துடைத்துச்சிவசாயுச்சியபதத்தைப்பெறுவர்திண்ணம். (கசூ0)

இந்தமான்மியமிருக்குமில்லிடமேசேதுவெனவெண்ணியாங்கண்
மந்தனேமுதற்கிரகபீடைவியாதிகளலகைமருள்வேதாள
முந்துமாபயஞ்சோரபயமின்றியொழியுமறுநான்குதீர்த்தங்
கந்தமாதனமயன்மாலிராமநாயகனுளுங்கலந்துவாழ்வார். (கசூக)

பன்னிவெகுவாகவினிக்கூப்பிடிலென்மூவுலகும்பதியுமங்கண்
மன்னுமதிலோர்சருக்கஞ்சிராத்தகாலந்தன்னில்வழுத்தியிட்டா
லன்னதனிலுற்றிடுநல்லாசாரதோடமவையனைத்துநீங்கும்
பின்னர்தமதகந்தன்னிற்பிதிர்க்களுந்தாம்பெருவகைபெறுவர்மாதோ. (கசூஉ)

திருமருவுபருவகாலந்தன்னிற்றிகழ்சீதைமணாளன்போற்று
மொருபெரியகடவுளுளமகிழுமதிலோர்சருக்கமோர்பாட்டேனும்
பொருவரியமறையவர்தம்புனிதவாய்திறந்தினிதுபுகலக்கேட்போர்
வருசுரபிகுழக்கன்றுவளர்மேதிசொரிபாலின்வளங்களேய்வார். (கசூரு)

மடத்திலெழிலாலயத்தின்மலர்ப்பொழிலிற் பெரியோர்கண்மனையிற்பொய்கைத்
தடத்திடத்தினதிக்கரையிற்புண்ணியபூமியிலிருந்துசாற்றலாகும்
விடப்படுமன்னியதலங்கடமிலிருந்துவினவலுறவிளம்பலாகா
கடற்றிரைகள்கதிர்முத்தங்கொழித்தெறியுஞ்சேதுமாக்கதைகற்றோரே. (௧௬௪)

இக்கதையைநியமத்தோடியைந்திட்டுக்கேட்டலுமிப்படியேயென்றும்
பக்கமிருநான்குதனிற்பன்னொன்றிற்பதினன்கிற்பரந்துவைகுந்
திக்குலகெண்ணயனத்திற்றிகழ்தனுச்சிங்கங்கன்னித்திங்கடன்னின்
மிக்குயருமாடுதுலாம்பிறந்திடுநாள்விசேடித்துவிரிக்கமாதோ. (௧௬௫)

மிக்கபுகழ்ச்சேதுமான்மியந்தன்னிற்றீர்த்தங்கள்விளம்பலானு
முக்கணனைமாயவனைமுனிவர்களையிருவினையைமொழிகையானுந்
தொக்கமறைப்பொருடிரட்டிச்சொற்றவியாதனும்விரும்புந்தொன்மையானு
மெக்கதையின்மேலாகுமிதனகத்திற்புண்ணியமாயியம்பலானும். (௧௬௬)

வேந்துமுனிவோர்களையும்பிரமமுனிவோர்களையும்விளம்பலானுந்
தீந்தொடைமாக்கதையிதுதான்பவித்திரமாம்பவப்படைகள்சிதறமோது
மாய்ந்திடுமாசுருதியினுமுழங்குவதாமதனையாய்ந்தறிந்துளோர்க்கும்
வாய்ந்திடுசம்மதமாகும்பலன்விழைந்தோரிதனைவாசித்தல்வேண்டும். (௧௬௭)

இக்கதைகேட்டவர்படித்தோர்தமையரியாசனத்திருத்தியருச்சித்தேத்தி
மிக்கபணிதூசுநிலம்வியன்சுரபிசெம்பொனவைவிருப்பினீந்தான்
முக்கணன்மாலயன்பூசைமுற்றியதாமொழிந்திடின்மூவுலகும்பூசை
யக்கணத்திலியற்றியதாமாதலினாலவனையருச்சிக்கவன்பால். (௧௬௮)

சீருலவுசததளப்பொற்செங்கமலக்கண்ணனுந்திருவுமிக்க
வேருலவுமிலக்குமனுமிக்காதைகேட்டவர்க்குமியம்பினோர்க்கு
நீருலவுகடலாடைநீணிலத்தின்மிகுபோகமளித்துநேர்ந்த
பாருலவுபவமகற்றிப்பரபோகமுத்தியையும்பாலிப்பாரே. (௧௬௯)

போதமிகுவியாதன்முகபுண்டரிகவிதழ்திறந்துபொழிந்ததேனு
மேதமிலிக்காதைதனையெழிற்றருமபுத்திரன்றுனிவரோடுங்
கோதறுந்சேனையொடுந்தவுமியனுங்குரவனருள்கொண்டுகூற
வாதரங்கூர்நியமாசாரத்துடனேகேட்டதுவாமாயுங்காலே. (௧௭௦)

ஆதலினான்முனிவீர்காளிக்காதையருமறைச்சம்மதமேயாகு
மேதமறவிதனுண்மையெடுத்துமக்கிங்கிசைத்திடலாலுணர்ந்தீரிந்தச்
சேதுவின்மாக்கதையோதுநீவிருநும்பாலடைந்ததிகழ்மாணுக்கர்க்
கோதுமினென்றுயர்சூதமாமுனிவனுவப்பினொடுமுரைத்துப்பின்னர். (௧௭௧)

பொருவிகந்தவம்முனிவனுடல்புளகமிகவெழுந்துபோர்ப்பப்பொங்கிக்
கரமலர்கள்சிரங்கூம்பக்கணிப்பரியவானந்தக்கண்ணீர்கால
மருவுமுயர்வியாதனைத்தன்மனத்திடத்துநினைந்துருகிவல்லவாழ்த்திப்
பரவியுவந்தங்கணுயர்பாடலினோடாடலிவைபயின்றானன்றே. (௧௭௨)

உற்றருளுமக்காலமற்றிவன்பேரன்பரமொற்றெல்லையோடிப்
பற்றினனிமீர்த்திடலும்பராசரன்றன்குமரனெனப்பகர்வியாதன்
மற்றிணையில்லாதுயர்ந்தமாணுக்கற்கருள்சுரக்கும்வாஞ்சையாலே
யற்றமிலாமுனிவரொடுஞ்சூதனுறையாச்சிரமத்தடைந்தானன்பால். (௧௭௩)

அடைந்தருளும்பொழுதவனைக்கண்களிப்பமுன்கண்டாதரவின்மிக்குத்
தொடர்ந்தமுனிகணங்களொடுமெதிரொழுந்துபணிந்தந்தத்தொல்வியாதன்
றடங்கமலத்தாள்கடமிற்றண்டமெனத்தாழ்ந்திறைஞ்சித்தகுமானந்தக்
குடந்தருநல்விழிநீராங்குளிர்ந்தபுனலாட்டினன்மெய்க்குணக்குன்றன்னோன். ()

அவ்வேலையன்னையர்தாமிளம்பருவப்பாலகனாயணைக்குமாபோன்
மெய்வேலையருளினொடுசூதமுனிதனைப்பலகால்விருப்பிற்புல்லி
மைவேலைகடைந்தபிரான்கலையுருவாம்வியாதமுனிமகிழ்ந்துபின்னர்ப்
பொய்வேலைகடந்தமுனிவரரளித்தவாதனத்திற்பொலிந்திருந்தான். (௧௭௫)

இருந்ததற்பின்வியாதமுனிசூதனைமாதவரொடுமுன்னிருத்திப்பின்ன
ரருந்தவத்தோர்தமைநோக்கியரியதிருவாய்மலர்ந்தாங்கருள்வானிந்தப்
பொருங்கடற்சேதுவின்காதைநாமறிவதிதுசூதன்புனிதவாக்கா
லொருங்குறச்சொற்றதுவேதாகமப்பொருளுமிதுவேயாமுணாப்பக்கேண்மின். ()

சுருதியொடுமிருதிபுராணுதிசாத்திரமெவைக்குந்தொன்மையாகக்
கருதுமிதிகாசமட்டோமற்றுநூலெவைதமக்குங்கழறொணுத
பொருண்முடிவுமிதுவேயாம்புரையறுமெய்ஞ்ஞானத்திற்புந்திவைத்தே
தெருளுறுவீரிவ்வாறுசிந்தைகொண்மினையமின்றித்தேசுமிக்கீர். (௧௭௭)

என்றெடுத்தாங்கியம்பிப்பினிக்காதைதருமனுக்கெம்மருளினலே
வென்றிதருதவுமியன்முன்விருப்பினெடுமெஞ்ஞான்றும்விளம்பாகிற்ப
னென்றுநீர்படித்திடவுங்கேட்டிடவுமியம்பிடவும்வேண்டுமென்ன
நன்றுரைத்தபரிசிதுவேநன்கிழைத்துமெனமுனிவர்நவின்றிட்டாரோ. (௧௭௮)

வேறு.

என்றிவைமொழிந்துமிக்கவிருடிகட்கருள்வழங்கித்
துன்றியபுகழ்சேர்கின்றசூதமாமுனிவனேடும்
வென்றிசேர்வானுருகவெள்விடைக்கொடியுயர்த்த
கன்றுமான்கரத்தோன்வாழுங்கயிலையையடைந்தான்மாதோ. (௧௭௯)

வென்றிகொளிராமனுளும்விளங்கிடவருச்சித்தேத்துந்
தென்றமிழிராமசேதுத்திகழ்கதைதினமும்போற்றித்
துன்றியமுனிவரோதத்தொடங்கினராதலாலே
யொன்றியபுகழினேடுமோங்கியதுலகமெல்லாம். (௧௮0)

வேறு.

மாதுமலைவளர்காதல்வல்லிவாழ்கமாற்கருள்கூர்சிவராமநாதன்வாழ்க
சேதுவுடன்றனுக்கோடிதீர்த்தம்வாழ்கதிகழ்தீர்த்தமறுநான்குஞ்சிறந்துவாழ்க
நாதனிராமேச்சுரனையருச்சிப்போருநற்றுனந்தலமனைத்துநயந்துவாழ்க
மாதவர்கண்மிகவாழ்கவிராமநாதமாமுனிவனீடுழிவாழ்கமாதோ. (௧௮௧)

சேதுபலச்சருக்கமுற்றிற்று.

ஆ திருவிருத்தம், ௩௪௩௮.

சேதுபுராணமுற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

மெய்கண்டதேசிகன் திருவடிவாழ்க.

---